(2) செய்ய மாலயன் தேவ ரிருடிகள்
துய்ய மாதவர் தும்புரு நாரதர்
கைகள் கூப்பிக் கழலிணை போற்றவே
தையல் பாகன் இருந்த சமயமே.[15]

## சிவன் தோன்றிய காட்சி

விக்கிரமாதித்த வேந்தனுக்கு முன் சிவபெருமான் தோன்றிய காட்சியை ஆசிரியர் அழகுற வருணித்துள்ளார்.

'சிவபெருமான் விடைமீது காட்சியளித்தான். காலனை உதைத்தது அவனது திருவடி. அவனுடைய பாதங்கள் திருமாலினும் பிரமனும் காணமுடியாதவை. அரசன் அத்தகைய திருவடிகளைக் கண்டு களித்தான். அவனது ஒரு கையில் மழு இருந்தது; மற்றொரு கையில் மான் இருந்தது. ஒரு கையில் சூலம் இருந்தது. அவனது உடம்பின் ஒரு பகுதியில் உமாதேவி காட்சியளித்தாள். அவனுடைய கண்கள் மூன்றும் விளக்கமுற்று இருந்தன. அவனது கழுத்தில் விஷக்கறை காணப்பட்டது.' கீழ்வரும் செய்யுள் இவ்வழகிய காட்சியைத் தருவதைக் காண்க :

காலனை உதைத்த தாளும்
　　கையினில் மழுவு மானும்
சூலமுங் கண்கள் மூன்றும்
　　தோகையோர் பாகந் தானும்
நீலகண் டமுமா யீசன்
　　நிற்கவே விடைமேற் கண்டு
மாலயன் தேடிக் காணா
　　வடிவினை வணங்கிச் சொல்வான்.[16]

## நாட்டு வருணனை

இந்நூலில் தென்னாடு வருணிக்கப்பட்டுள்ளது. 'தென்னாட்டில் மணம் பொருந்திய மலர்கள் நிறைந்த சோலைகளுண்டு; வயல்களுண்டு; வாவிகளுண்டு. தென்னாடு, செல்வத்திற்குரிய தேவதையாகிய இலக்குமி இருந்து வாழும் திருநாடாகும்.' இக்கருத்துப்படக் கீழ்வரும் செய்யுளடிகள் காணப்படுகின்றன :

15. நூற்செய்தி, செ. 5, 6.
16. கதை 25, செ. 20

மருமலர்ச் சோலை தானும்
வயலும்வா விகளுஞ் சூழ்ந்து
திருமகள் இருந்து வாழுந்
தட்சிண தேசம்.[17]

### நகர வருணனை

இந்நூலுள் இருபத்தொரு நகரங்கள் ஆசிரியரால் வருணிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு கதையிலும் மூன்றும் செய்யுள் நகர வருணனையாகவே அமைந்திருப்பது குறிப்பிடத் தக்கது. இங்குச் சான்றாக 'விசயம்' என்னும் நகர வருணனையைக் காண்போம்:

'விசயம் என்னும் நகரில் மலர்கள் நிறைந்த குளங்கள் இருக்கின்றன. அவற்றிற் சங்குகள் தவழ்கின்றன; வயல்களில் முத்துக்கள் காட்சியளிக்கின்றன; நீர் வளம் பொருந்திய பெரிய குளங்களும் ஏரிகளும் இருக்கின்றன; மேக மண்டலத்தை அளாவும் சோலைகள் உள்ளன; பெரிய கப்பலைப் போன்ற கூடங்களும் மேடைகளும் இருக்கின்றன; அடியார்கள் வேண்டும் வரங்களையே தரும் தெய்வங்களுறையும் கோயில்கள் நிறைந்துள்ளன.' இவ்வருணனையைக் கொண்டுள்ள செய்யுளைக் கீழே காண்க:

சங்கந் தவழு மலர்வா விகளும்
தரளம் புரளும் மடைசேர் வயலும்
எங்கும் வளமார் குளமே ரிகளும்
எழிலிக் கிணையாய் வளர்சோ லைகளும்
வங்கம் நிகர்கூ டமுமே டைகளும்
வரமே தருகோ யில்களே நிறையும்
அங்கம் விசய மெனுமோர் பதிதான்
அலையார் கடல்சூழ் புவிமீ துளதே.[18]

### கொலு வருணனை

'விக்கிரமாதித்த வேந்தன் தனது நாளோலக்க மண்டபத்தில் அரியணைமீது வீற்றிருந்தான்; அவனைச் சுற்றிலும் வலிமை வாய்ந்த மன்னர் பலர் வீற்றிருந்தனர்; அரண்மனைப் பணிப்

---

17. கதை 24, செ. 3
18. கதை 13, செ. 3

பெண்கள் அரசர் பெருமானுக்குக் கவரி வீசினர்; தமிழ்ப் புலவர்கள் மன்னனைப் போற்றினர்; ஒப்பற்ற கொற்றக் குடை நிழலைத் தந்தது. இவனே தேவேந்திரன் என்று காண்பவர் சொல்லும்படி மன்னன் கொலுவீற்றிருந்தான்.' கீழ்வரும் செய்யுள் இக்கருத்தை உணர்த்துகின்றது:

திண்டிறல் மன்னர் சூழத் தெரிவையர் கவரி வீசத்
தண்டமி ழோர்கள் போற்றத் தனிக்குடை மேனி ழற்ற
அண்டர்கோ னிவனே யென்ன வரியணை மீதி லேயோர்
மண்டபந் தன்னின் மேவி மன்னன்வீற் றிருக்குங் காலை.[19]

## ஆட்சி வருணனை

'விசயம் என்னும் நகரை ஆண்ட தேவு என்னும் அரசன் குடிகளிடம் அன்புடையவன்; தனது அரசப் பதவியை நினைந்து பெருமை கொள்பவன்; தேவர் நாட்டுக் கற்பக தருவைப் போலக் கொடையிற் சிறந்தவன்; குடிமக்களை ஆள்வதில் பெருமை பெற்றவன்; நான்கு வேதங்களில் வல்ல பிராமணரும் பிற இரவலரும் இவன் மேற்சொன்ன நலங்களில் தசரத ராமனை ஒத்தவன் என்று பாராட்டும்படி தனது நாட்டை ஆண்டுவந்தான்.' இக்கருத்துடைய செய்யுளைக் கீழே காண்க:

பரிவா லும்பெரு மையினு லுங்கன
பவுசா லுஞ்சுரர்மா
தருவா லுங்கொடை யதனு லும்புவி
தனையா ளுஞ்செயலால்
இரவோ ருஞ்சது மறையோ ருந்தச
ரதரா மன்தனைநேர்
பெருமா னிங்கென வரசா ளுந்துரை
பெயர்தே வென்பவனே.[20]

## ஆட்சிக் கேட்டின் வருணனை

'ஆட்சியின் நலத்திற்கு மன்னனுடைய நற்பண்புகளே சிறந்த அடிப்படையாகும். அவன் ஒழுக்கம் தவறுவான் ஆயின், அவனிடம் பணிபுரியும் நல்லவர் அவனை நெருங்கார்; அவனது நாட்டில் சிறப்புடைய குடிமக்கள் வாழ மாட்டார்கள்;

19. வரலாறு, செ. 5.
20. கதை 15, செ. 4.

அவனை யாரும் மதியார்; அவனது நலனைப் பற்றி எண்ணார்; அந்நாட்டில் அறநெறி குன்றும்; மன்னன் தன்னைப் போலவே எண்ணித் தன் குடிமக்களைக் காக்கத் தவறின், சூரியனைக் கண்டவுடன் நீங்கும் பனிபோல அவனை விட்டு இலக்குமி நீங்குவாள். உடலை விட்டு நீங்கும் உயிர் போலும், மலரின் மடலை விட்டு நீங்கும் மணம் போலும், கடலை விட்டு நீங்கும் கப்பல் போலும் அவன் சேனைகளெல்லாம் அவனை விட்டுப் போய்விடும்.' இக்கருத்து அமைந்த செய்யுட்களைக் கீழே காண்க:

(1) சேவகர் ஒருத்தர் சேரார்
 சீர்மைசேர் குடிகள் வாழார்
யாவரு மதித்தங் கெண்ணார்
 அறநெறி புவியிற் குன்றும்
காவலன் தன்னைப் போலக்
 காப்பவன் பிறர்தா ரத்தை
மேவிடத் தகாதென் றோத
 மீளவும் பிரதானன் சொல்வான்.[21]

(2) யானைதேர் புரவி காலாள்
 அமைச்சரும் மருங்கு சூழ
ஏனையாஞ் செல்வ மேவி
 இருந்தர சானு மன்னன்
தானதன் மங்கை விட்டுத்
 தாழ்வழி நடக்கை யாலே
பானுவைக் கண்டு நீங்கும்
 பனியெனத் திருவும் போனாள்.

(3) உடலினை விட்டு நீங்கும்
 உயிரது போலும் பூவின்
மடலினை விட்டு நீங்கும்
 மணமது போலு மோதக்
கடலினை விட்டு நீங்கும்
 கப்பலே போலு மாங்கே
அடல்புனை சேனை யெல்லாம்
 அரசனை விட்டுப் போன.[22]

---

21. கதை 17, செ. 35.

22. கதை 24, செ. 5, 6.

### அமைச்சனது சிறப்பு

திருக்குறளில் கூறப்பட்டுள்ள அமைச்சனது இலக்கணம் முழுமையும் இந்நூலுள் ஒரு செய்யுளில் காணலாம். அமைச்சன், தன் மனைவிமீது காமுற்ற மன்னனை நோக்கி அவளை ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினன். அவ்வளவில் அவ்வரசன் அவனை நோக்கி, "நீ எனக்கு அமைச்சன்; மேலும் எனக்கு மகனாகவும் துணைவனாகவும் இருந்து அரசியல் இரகசியங்கள் அனைத்தையும் பாதுகாப்பதில் தலைவனாயிருப்பவன்; வலிய பகைவரைப் போரில் வெற்றி கண்டு என்னை வேந்தனுக்கும் சிறப்புடையவன். அத்தகைய உனக்கு யான் துரோகம் செய்யலாகாது" என்று கூறினன். இக் கூற்றிலிருந்து அமைச்சனது இலக்கணத்தை நாம் நன்கறியலாம்.

மந்திரி யாகி மற்று
  மைந்தனாய்த் துணைவ னாகித்
தந்திர மனைத்துங் காக்குந்
  தலைவனும் நீயே யாகி
வெந்திறற் பகையைப் போரில்
  வென்றெனை வேந்த னாக்கும்
உன்றனக் கிரண்டு செய்கை
  யுலகியல் பலவே யென்றான்.[23]

### போர் வருணனை

வேதாளக் கதையுள் இரண்டு போர் வருணனைகள் இருக்கின்றன. ஒன்று சூரன் என்னும் மனிதனுக்கும் ஓர் அரக்கனுக்கும் நிகழ்ந்த போரைப் பற்றிய வருணனை[24]; மற்றொன்று சீமூத வாகனன் என்னும் அரசனுக்கும் கருடனுக்கும் நிகழ்ந்த கொடிய போரைப் பற்றிய வருணனை.[25] இங்குச் சூரனுக்கும் அரக்கனுக்கும் நடந்த போரைப் பற்றிய செய்திகளைக் காண்போம்:

"'நான் சூரன், தோள் வலியுடையவன்' என்று என்னுடன் வீரப்பேச்சுப் பேசிய நீ யாரடா?" என்று அரக்கன் அதட்டினன்; ஒரு மலையை எடுத்துச் சூரன்மீது வீசினன்.

---

23. கதை 17, செ. 34.
24. கதை 6, செ. 18-21.
25. கதை 16, செ. 51-57.

கருநிறம் வாய்ந்த அரக்கன் எறிந்த மலையைச் சூரன் தன் அம்புகளால் பல துண்டங்களாக்கினன்; வலிமை வாய்ந்த கணைகள் பலவற்றை அரக்கன்மீது மழைபோலத் தூவினன்.

இங்ஙனம் சூரன் எய்த கணைகள் அரக்கன் மார்பில் தைத்தன. அவனது உடலிலிருந்து குருதி வெளிப்பட்டு வழிந்தது. அதனால் சினங்கொண்ட அரக்கன், மேலும் பல மலைகளை எடுத்துச் சூரன்மீது வீசினன்.

சூரன் கணைகளையேவி அம்மலைகளைப் பொடியாக்கினன்; இறுதியில் கூரிய கணையொன்றை ஏவி, அரக்கன் தலையை அறுத்து வீர முழக்கம் செய்தான்.

கீழ் வரும் நான்கு செய்யுட்கள் இவ்விவரங்களைத் தெரிவிப்பதைக் காண்க :

(1) சூர னனென்றும் தோள்வலி யுண்டென்றும்
தீர மென்னுடன் செப்பிய நீயினி
யார டாவென் றரக்க னதட்டியே
வேரோ டேகிரி வாங்கினன் வீசினன்.

(2) அல்லின் மேனி அரக்க னெறிந்திடும்
தொல்லை யோர்கிரி துண்டஞ்செய் தேபினும்
வில்லி னல்மிக வெற்றிகொள் சூரனும்
வல்ல பக்கணை மாரிகள் தூவினன்.

(3) சொற்ப சாரித்துச் சூரனெய் யுங்கணை
யற்பொ ருந்து மரக்கனு ரத்தது
கற்ற னறெனச் சோரியுங் கான்றிட
வெற்பு மேலும் மிகுதியெ றிந்தனன்.

(4) சிலையொன் றக்கணை மாரிகள் சிந்தியே
மலைக ளைப்பொடி யாக்கிம லைந்துதான்
கொலைய ரக்கனைக் கூர்ங்கணை யொன்றினல்
தலைய றுத்தனன் சாகசம் பண்ணினன்.[26]

## காட்டு வருணனை

'இக்காடு மக்கள் எளிதில் நுழைய இயலாதது. இங்கு இரவு என்பது அறிய இயலாதது; அதாவது, இரவும் பகலும்

26. கதை 6, செ. 18-21.

இருள் மயமாகவே இருக்கும். இங்குக் காட்டுப் பன்றிகளும் புலிகளும் வாழும்; இக்காட்டில் இடையிடையே கள்வர் வசிப்பர்.' இப்பொருளைத் தரும் கீழ்வரும் செய்யுள் அடிகளைக் காண்க :

> கானகம் நுழையொ ணாது
> கங்குலே தெரியொ ணாது
> ஏனமும் புலியு மேயும்
> இடையிடைச் சோரர் வாழ்வர்[27]

## மதயானை வருணனை

' யானை ஒன்று, உயர்ந்த உச்சியையுடைய மலைகள் குலுங் கும்படி, நீண்டு வழிந்த மதநீரோடு, தனது நிழலையே பகை யெனக் கருதிச் சினந்து ஓடி வந்தது. அது ஓடிவந்த சோலை, வேடுவர் வேட்டையாடுதற்குரிய சோலையாகும். முருகன் வள்ளியை வயப்படுத்தப் பிள்ளையார் துணையை வேண்டினன். பிள்ளையார் உடனே வள்ளி அஞ்சத்தக்க யானை யுருவத்தில் தோன்றினர். இம் மத யானை அதனை யொத்த தோற்றத்தை யுடையதாய் இருந்தது. அந்த யானையின் வருகையால் நிலம் அதிர்ந்தது. யானை தன் போக்கிலிருந்த மரங்களை ஒடித்தது; கொம்புகளை முரித்தது; மூவகை மத நீரையும் பெருக்கியது. அதன் கோரமான செயல்களால் அச்சோலை சிதைந்தது.' கீழ்வரும் மூன்று செய்யுட்கள் இவ்விவரங்களைத் தெரிவிக் கின்றன:

(1) கோடுகொடி மால்வரை குலுங்கவம ராடி
நீடியமத த்தொடு நிழற்கறுவி யேதான்
தேடிவரு பாவையர்கள் திசைதிசையி லோட
வேடுலவு சோலைநடு வெய்தியதோ ரானை.

(2) கந்தனுயர் வள்ளியுடைக் காதலில்நி னைக்கத்
தொந்திவயிற் றானைவரு தோற்றமது போலும்
அந்தணகு மாரன்மிசை யன்புளவர் போலும்
வந்தமத யானைதனை மங்கையெதிர் கண்டாள்.

---

27. கதை 19, செ. 15.

(3) அதிர்ந்துநில மெங்கணு நடுங்கியரு கேதான்
எதிர்ந்திடு மரங்களை யிறுத்திடை முரித்தே
முதிர்ந்ததொரு மும்மத முழக்கவுயர் காவும்
சிதைந்திட வகன்றுதிசை சென்றதுவே யானை.[28]

**வசந்தகால வருணனை**

சித்திரை, வைகாசி ஆகிய இரண்டு மாதங்கள் வசந்த காலம் என்று சொல்லப்படும். 'அக்காலத்தில் மரங்களில் தளிர்கள் காணப்படும். இனிய குளிர்ந்த தென்றற் காற்று வீசும். சோலைகள் பசுமைக் காட்சி நல்கும். அச்சோலைகளில் இருந்து குயில்கள் கூவும். அன்னங்கள் ஆடும். முல்லை மல்லிகை தாமரை முதலிய மலர்கள் மலர்ந்து மணம் வீசும். வாழை முதலிய மரங்கள் வளமாகப் பயிராகும். மலர்கள் கீழே சிந்தி மணத்தை எங்கும் பரப்பிக்கொண்டிருக்கும்.' இக்கருத்துடைய இரண்டு செய்யுட்கள் இந்நூலுள் இடம் பெற்றுள்ளன.

(1) தருவெலாந் தளிரே காணத் தலைவரை மடவார் கூடத்
தெருவெலாம் நிலவே காயத் தென்றலே மீதிற் பாயக்
குருகெலா மொருங்கு சேரக் குயில்கள்சோ
[லையினிற் கூவ
மருவெலா மலரே சிந்த வந்தது வசந்த காலம்.

(2) முளரிகள் தீடம் ஏந்த முகைவல்மல் லிகைக ளெல்லாம்
தெளியவா லத்தி போலத் திசையெங்கும்
[மலர்ந்து நிற்க
வளரிளங் கதலி யால வட்டமே சுற்றும் வீச
அளவிலா வளமை கண்டாங் கரசனும் வியந்து
[நின்றான்.[29]

**மழை வளம்**

'விரிவானதும் சகரரால் தோண்டப்பட்டதும் ஆகிய கடலில் உள்ள நீரை வானத்திலிருந்து வந்த மேகங்கள் பருகி, மீண்டும் வானத்திற் சென்று மழையைப் பொழிந்தன. அம்மழைநீர் ஆறுகளிலும் குளங்களிலும் ஏரிகளிலும் பெரிய வாவிகளிலும்

---

28. கதை 15, செ. 11, 12, 14.

29. கதை 17, செ. 19, 21.

நிரம்பின; அந்த நீர் எந்நாளும் வற்றவில்லை.' இக்கருத்தமைந்த செய்யுளைக் கீழே காண்க :

விரிவான வகழ்வாரி யெனவானி லுயர்மேக
மிகநாடி யவைகூடியே
கருவாசை புனல்மூழ்கி யதுவாரி மிகுமீது
கனமேரு விதுவாமெனப்
பெருவானில் மழைதூவ வருமாறு குளமேரி
பெருவாவி தொறுமூறலுன்
ஒருநாளும் வடியாத வண்மேவி விளைவான
தொருசேனை நகரானதே.[30]

**காளிகோயிலும் பூசையும்**

'காஞ்சனபுரத்துக் காளிகோயில் மதில்களையுடையது ; உயர்ந்த கோபுரத்தைக் கொண்டது ; பொன் நகைகளையும் மணிகள் பதித்த நகைகளையும் பெற்றது ; எல்லாத் திக்குகளி லும் இருந்த மக்கள் வந்து வழிபடும் சிறப்புடையது ; நாளும் மேள வாத்தியம் முழங்க மகா பூசை நடைபெறுதலை உடையது. அக்கோவிலில் துர்க்கை எழுந்தருளியிருந்தாள்.' இக்கருத் துடைய செய்யுளைக் கீழே காண்க :

தக்கதோர் மணியும் பொன்னுந்
தழுவிய மதில்கள் கோயில்
மிக்ககோ புரந்தே ருண்டாய்
மேளவாத் தியமு ழங்கத்
திக்குளோ ரெல்லாம் போற்றத்
தினமகா பூசை கொள்ளும்
துர்க்கைதன் பாத மாங்கே
தொழுதவ னிருந்த காலை.[31]

'இத்தகைய காளிகோவிலுக்கு எட்டுத் திசைகளில் இருந் தும் மக்கள் வந்தார்கள். கோவிலையடுத்துத் தாமரை மலர்கள் நிறைந்த புண்ணிய தீர்த்தம் இருந்தது. மக்கள் அத்தீர்த்தத் தில் நீராடினர் ; காளியைக் கண்குளிரக் கண்டு போற்றினர் ;

30. கதை 9, செ. 3.
31. கதை 8, செ. 15.

சிலர் அச்செயலால் தம் தீவினைகளை மாற்ற முயன்றனர் ; வேறு சிலர் அம்மனை வரம் வேண்டினர்.'

> எண்டி சைக்குளி னுள்ள பேர்களி
> வியாவ ரும்மிக வந்துதான்
> புண்ட ரீகநல் மலர்சொ ரிந்திடு
> புண்ணிய தீர்த்தம தாடுவோர்
> கண்டு காளியைப் போற்று வோர்மிகு
> கடிய தீவினை மாற்றுவோர்
> அண்டி யேவரம் வேண்டு வோரனை
> வோரு மிப்படி யாயினர்.[32]

**சுடலை வருணனை**

'சுடுகாட்டில் இரவில் இருள் பரவியிருந்தது. நள்ளிரவில் நாய்கள் ஒன்றையொன்று தாக்கின ; நரிகள் கூடி ஊளையிட்டன ; பிணங்களின் கொழுப்பைப் பேய்கள் கவ்வின ; கழுகுகள் பாடி ஆடின ; ஆந்தைகள் அலறின; குறை கொள்ளியுடைய பாடைமீதில் குதித்தும் மிதித்தும் ஏறியும் ஒளித்தும் பேயுடன் நடனமாடும் உருத்திர மூர்த்தியைப் போல விக்கிரமாதித்தன் அச்சுடலையை மிக்க மகிழ்ச்சியோடு கடந்து சென்றான்.' இக்கருத்துடைய இரண்டு செய்யுட்களைக் கீழே காணலாம் :

(1) பாயிருள் பரந்த காலம் பரவிய நடுகே ரத்தில்
நாய்களொன் றொன்றைத் தாக்க நரியினங் கூடிக் கூவப்
பேயினம் பாடை மீதிற் பிணங்களின் நிணங்கள் கௌவக்
காய்சின வெருகு பார்க்கக் கழுகினம் பாடி யாட,

(2) வெளிக்குரல் முழக்கஞ் செய்ய வெய்யகூ கைகளே கூவக்
கொளிக்குறை பாடை மீதிற் குதித்துடன் மிதித்திட் டேறி
யொளித்துடன் பேயொ டாடு முருத்திர மூர்த்தி யென்னக்
களிப்புடன் மயானத் தூடு காவலன் கடந்து போனான்.[33]

**வேதாள வருணனை**

சாந்த சீல முனிவனது விருப்பப்படி விக்கிரமாதித்தன் நள்ளிரவில் வேதாளத்தைப் பிடித்துக் கொண்டுவரச் சென்

32. கதை 7, செ. 6.
33. வரலாறு, செ. 16, 17.

ருன். அப்பொழுது அது இருந்த நிலையை ஆசிரியர் கீழ் வருமாறு கூறியுள்ளார்:

'வேதாளத்தின் தோல், எலும்பு ஆகியவை வற்றிவிட்டன. அதன் துவர்க்குடல் உலர்ந்துவிட்டது. கை கால்களின் நரம்புகள் தேய்ந்துவிட்டன. உலகத்தில் அறநெறி தவறி அதனால் துன்புறும் பாவிகளைப் போல வேதாளம் முருக்க மரக்கிளையில் தலை கீழாகத் தொங்கிக்கொண்டிருந்தது.' இக்கருத்துடைய செய்யுளைக் கீழே காண்க :

*தோலுடன் எலும்பும் வற்றித் துவர்க்குடல் உலர்ந்து கையும்*
*காலுறு நரம்புந் தேய்ந்து கயிறென நான்று நின்று*
*ஞாலமேற் றருமந் தன்னை நலிந்தபா விகளைப் போன்று*
*சாலவே தலைகீ ழாகத் தளர்ந்துவே தாளந் தூங்கும்.*[34]

## கள்வன் வருணனை

அயோத்தி நகரத்தில் பெயர்பெற்ற கள்வன் ஒருவன் இருந்தான். 'அவன் யாரையும் கொல்லத் துணிந்தவன்; எத்தகைய பொருளையும் அபகரிப்பதில் வல்லவன்; கரிய இருளில் திரிபவன்; களவுத் தொழிலில் பெயர் பெற்றவன்; களவு நூலை ஐயம் திரிபறக் கற்றவன்; கிராதகன்' என்று ஆசிரியர் வருணித்துள்ளார். இக்கருத்துடைய செய்யுளைக் கீழே காணலாம் :

*ஆரையுங் கொல்பவ னபகரித் திடுமவன்*
*காரிருள் திரிபவன் களவினிற் பெரியவன்*
*சோரநூ லடைவெலாந் தொலைவறக் கற்றவன்*
*ஊரிலோர் கிராதனென் றுள்ளனோர் கள்வனே.*[35]

## நட்பின் வருணனை

தீர்க்கதரிசி என்னும் அமைச்சன் ஒரு வணிகனுடன் நட்புப்பூண்டிருந்த நிலையை ஆசிரியர் மிகவும் அழகுறக் கூறியுள்ளார்: 'உடலுடன் உறையும் உயிர் போலவும், மடலுடன் உறையும் மணம்போலவும், கடலுடன் உறையும் கப்பல் போலவும் அமைச்சன் வணிகனோடு நட்புப் பூண்டிருந்தான்.'

---

34. வரலாறு, செ. 22.
35. கதை 14, செ. 9.

உண்மை நட்பினை விளக்க இவ்வுவமைகள் பொருத்தமானவை அல்லவா? இப்பொருள் பொதிந்த செய்யுளைக் கீழே காண்க:

உடலுட னேயுறை யுயிரது போலும்
மடலுட னேயுறை மணமது போலும்
கடலுட னேயுறை கலமது போலும்
அடைவுட னங்ஙன மாகி யிருந்தான்.[36]

## மகப்பேறு இல்லாத நிலை

வீரதேவன் என்னும் மன்னன் பிள்ளைப் பேறின்றித் துன்புற்றான் என்பதை ஆசிரியர் பல உவமைகளால் உருக்கமாக விளக்கியுள்ளார். 'கண் பார்வை இல்லாதவர் முகத்தில் பொலிவு இருந்தும் குறையிருப்பது போலவும், பண்பாடு இல்லாதவர் அழகைப் போலவும், இறைவன் திருவடிகளை எண்ணாத உயிர்கள் போலவும், உயர் குலத்தில் பிறந்தும் கல்வியில்லாதவர் சிறப்பிழந்திருப்பது போலவும், அழகிய தனங்கள் இல்லாத அணங்கின் பயனற்ற பெண்மை போலவும், நிலைத்த மணம் இல்லாத மலரின் தன்மை போலவும், பைந்தமிழ் உணர்ச்சியற்றவன் பாடும் பாடல் போலவும்—மன்னன் பிள்ளைப் பேறின்றி இருந்தான்.' இக்கருத்துக்களைக் கீழ்வரும் செய்யுட்கள் உணர்த்துகின்றன:

(1) கண்ணிலார் முகத்திற் காட்சி போலவும்
பண்ணிலார் பவிசுபோல் பரமன் தாள்தினம்
எண்ணிலா வுயிர்கள்போ லியன்ற கல்விநூல்
நண்ணிலார் குலத்தினில் நலத்தைப் போலவும்,

(2) அந்தமாங் குயமிலா வணங்கின் பெண்மைபோல்
சந்தத மணமில்லாப் பூவின் தன்மைபோல்
பைந்தமிழ்ப் பரிவிலான் பாடும் பாடல்போல்
மைந்தரை யின்றியே மன்னன் வாடினான்.[37]

மேலும் ஆசிரியர் பிள்ளைப் பேறு இல்லாமையால் உண்டாகும் துன்ப நிலையை மற்றொரு செய்யுளால் விளக்கியுள்ளார்: 'பிள்ளை யில்லாதவர்க்குச் சிறப்பு இல்லை; பிற மக்களிடத்து அன்பு கொள்ளும் மனமும் இராது; அவர்களுக்கு இவ்வுலகில்

---

36. கதை 13, செ. 18.
37. கதை 9, செ. 6, 7.

புகழும் இராது; மறுவுலகில் நற்பேறும் இராது,' என்று ஆசிரியர் (பெரியோர் வேந்தனிடம் கூறுவதாகக்) குறிப்பிட்டுள்ளார். இக்கருத்துடைய செய்யுளைக் கீழே காண்க :

சீத்தரு மகவிலார் தமக்குச் சீரிலை
வாய்த்ததோ ரன்பிலை மனமு மங்கிலை
கீர்த்தியு மிங்கிலை கதியு மிங்கிலை
பார்த்திப னேயெனப் பழமை கூறினர்.[38]

பெண் வளர்ச்சி வருணனை

இந்நூலாசிரியர் பெண்களின் வளர்ச்சியைப் பல பாக்களில் விரித்து ஓதியுள்ளார். அவை யாவும் படித்து இன்புறத் தக்கன. காட்டாக ஈண்டுச் சில தருதும் :

(1) இரத்தின தத்தன் என்ற வணிகன் மகளான இரத்தினபதி என்பவள் மன்மதனது மெய்யில் விளங்கும் ஆபரணம் போலவும், காம இச்சை பற்றிப் படர்தற்கு ஏற்ற கொழு கொம்பு போலவும், தான் இருக்கு மிடத்துக்கு அருகில் இருக்கும் தவமுனிவர் தம் துறவினை விடுக்கும் எண்ணம் கொள்ளும் படியும், பார்ப்பவர் உள்ளங்கவரும் கட்டழகோடு வளர்ந்தாள். கீழ்வரும் செய்யுள் இதனைக் குறிக்கும் :

வெற்றிசேர் மதனவேள் மெய்யிலா பரணமாய்ப்
பற்றிநல் லாசையே படர்கொழு கொம்பதாய்ச்
சுற்றில்மா தவர்கள்தந் துறவினை விடுப்பதாய்ப்
பற்றுடன் ரத்தின பதிவளர்ந் தாளரோ.[39]

(2) சசிப் பிரபை என்பவள் ஓர் அரசன் மகள். அவள் 'வானத்தில் தோன்றிய மூன்றாம் பிறைச் சந்திரன் வரவர வளர்ச்சியடைவதைப் போலவும், களை நீக்கப்பெற்ற பயிர் செழித்து வளர்வதைப்போலவும், இந்நாட்டில் இவள் இந்திராணியே என்று சொல்லத்தக்க சிறப்புடன் விரைந்து வளர்ந்தாள்' என்று ஆசிரியர் கூறியுள்ளார். இக் கருத்துடைய செய்யுள் கீழே இடம் பெற்றுள்ளது :

---

38. கதை 9, செ. 14.
39. கதை 14, செ. 6.

உசத்தியில் முளைத்தமதி யோங்கியது போலும்
விசைப்பின்களை நீங்கிவிளை வானபயிர் போலும்
திசைக்குளிர்ந்தி ராணியென வேமிகு சிறப்பால்
சசிப்பிரபை யென்பவள் சடக்கெனவ ளர்ந்தாள்.[40]

(3) **அநங்க மஞ்சரி** என்பவள் ஒரு வணிகன் மகள். 'அவள் ஒவ்வொரு நாளும் வானத்தில் வளர்ந்து உயர்ந்து உலவுகின்ற திங்கள் போல் ஒவ்வொரு நாளும் ஒளிபெற்று வளர்ந்துவந் தாள். அவளுடைய வேல் விழிகள் குழைகள் அணிந்த காதுகள் வரையில் தாவிச் சென்றன. அவளது சாயலைக் கண்டு மயில்கள் அவளைத் தம் இனமெனக் கொண்டு விளை யாடின. அவள் தனங்கள் குரும்பைகள் போன்றிருந்தன. மன்மதன் அவள் பக்கத்தில் நின்று அவளுக்கு ஊழியம் செய்துவந்தான். இந்நிலையில் அநங்க மஞ்சரி வளர்ந்துவந் தாள்.' இக்கருத்தினை உணர்த்தும் செய்யுளைக் கீழே காண்க :

தினந்தி னங்களில் வளர்ந்து யர்ந்துலவு
திங்கள் போலொளி திகழ்ந்துதான்
தனங்கு ரும்பையென வீர வேல்விழிகள்
தாவி யேகுழைகள் மீறவே
வனஞ்சி றந்தவள மாக வேமயில்கள்
சாயல் கண்டுவிளை யாடவே
அநங்க வேளருகு சேவை செய்திடவும்
அநங்க மஞ்சரியும் விஞ்சினள்.[41]

(4) தனதத்தன் என்ற வணிகன் மகளான **சுரனை** என்ப வள் மணப்பருவத்தை அடைந்தாள் என்பதை ஆசிரியர் அழகு பெறக் கூறியுள்ளார். 'இவளுடைய கண்களைக் கண்டு கயல் மீன்கள் அஞ்சி ஓடின; பச்சை மூங்கில்கள் இவளுடைய தோளின் அழகைக்கண்டு நாணங் கொண்டன; இவளது குரலைக் கேட்டுக் குயில் தன் இழிநிலை கண்டு இரங்கியது; இவளது முகத்தைக்கண்டு தான் அதற்கு ஒப்பாகாமை கருதிச் சந்திரன் மெலிவடைந்தது. கரிய மேகம் இவளது கருங் கூந் தலைக் கண்டு தான் அதற்கு ஒவ்வாமை கருதி அஞ்சியது.

---

40. கதை 15, செ. 6.

41. கதை 20, செ. 5.

மலைகள் இவள் தனங்களைக் கண்டு ஈடாகாமல் தோற்றன. மன்மதன் இவளைத் தொழுது வாழலானான். இந்நிலையில் சுரனை மணப்பருவத்தை அடைந்தாள்.' இவ்வருணனையைக் குறிக்கும் செய்யுளைக் கீழே காண்க :

விழிகய லொதுங்கப் பச்சை
வேய்புயந் தன்னை நாண
மொழிகண்டு குயிலி ரங்க
முகங்கண்டு மதியுந் தேயக்
குழல்கண்டு மேக மஞ்சக்
குயங்கண்டு வரைகள் தோற்கத்
தொழுதின்ப வேளும் வாழச்
சுரனையும் பருவ மானாள்.[42]

**மாதர் வருணனை**

இந்நூலாசிரியர் பெண்களை வருணிப்பதில் மிகச் சிறந்து விளங்குகிறார். பெரும்பாலும் ஒவ்வொரு கதையிலும் பெண்கள் வருணனை பற்றிய செய்யுட்கள் இடம் பெற்றுள்ளன. காட்டாக இங்கு இரண்டினைக் காட்டுதும் :

(1) மதனசேனை என்பவள் ஒரு வணிகன் மகள். 'அவள் அரம்பை என்னும் தேவ மகள்போல் தோற்ற மளித்தாள் ; நடையில் அன்னத்தை ஒத்திருந்தாள் ; சுவை தரும் கரும்பு போல் விளங்கினாள் ; காமன் விரும்புகின்ற இரதியைப்போல் பேரழகுடன் திகழ்ந்தாள். அம்மனை, கழங்கு, பந்து, இவற்றை ஆடிக்கொண்டே மணப்பருவத்தை அடைந்து, பொலிவுடன் திகழ்ந்தாள்.' இப்பொருளமைந்த செய்யுளைக் கீழே காண்க :

அரம்பை போலவு மன்னமே போலவு மாசைக்
கரும்பு போலவுங் காமவேள் விழைரதி போலும்
விரும்பி யம்மனை கழங்குவந் தாடிமெய்ப் பருவந்
திரும்பி மேடைமேல் மதனசே னையுந்திகழ் வுற்றாள்.[43]

(2) **மலையவதி** என்ற அழகியை ஆசிரியர் இரண்டு செய்யுட்களில் வருணித்துள்ளார். 'அவளது வதனம் திங்களைப் போன்றிருந்தது ; நெற்றி வளைந்த வில்லைப்போன் றிருந்தது ;

---

42. கதை 19, செ. 7.
43. கதை 10, செ. 11.

அவளது கூந்தல் இருளை ஒத்திருந்தது. கொங்கைகள் களபச் சாந்தை அணிந்திருந்தன ; மெல்லிய இடை நூலை ஒத்திருந்தது; அவள் பெண்மை நிரம்பி யிருந்தாள் ; அவளைக் கண்ட சீமூத வாகனன் என்ற அரசன், இவள் அலைமகளோ! தேவர் மகளோ! கலைமகளோ! இரதியோ! மானிடர்மகளோ! நாகர் மகளோ! என்று ஐயுற்றான்.' இவ் விவரங்களைக் கொண்ட இரு செய்யுட்களைக் கீழே காண்க :

(அ) திங்கள்போல் வதனமும் சிலையெனு நுதல்களும்
கங்குல்நே ரளகமும் களபக் கொங்கையும்
இங்கித மானநூ லிடையும் பெண்மையும்
அங்கழ கனைத்துங்கண் டரசன் கூறுவான்.

(ஆ) வாரிதி மங்கையோ வானவர் மங்கையோ
சாரதி யோரதி யென்னுந் தையலோ
பாரினிற் கன்னியோ பன்ன கப்பெணோ
ஊரெது பேரெதிங் குரைசெய் வாயென்றான்.[44]

## காமவேட்கை வருணனை

(1) அநங்கமஞ்சரி என்பவள் ஒரு வணிகன் மகள். அவள் காமவேட்கை கொண்டு தவித்த நிலையை ஆசிரியர் அழகுறக் கூறியுள்ளார் : 'வனப்பும் மேன்மையும் வாய்ந்த தனங்களையுடைய அநங்கமஞ்சரி மன்மதன் விட்ட மலரம்பு களால் தன் உள்ளத்தில் தான் கண்டவனைப்பற்றி நினைவு கொண்டு நெஞ்சுருகினாள் ; வேட்கையால் சோர்வுற்றாள். பணிப் பெண்கள் மலர்கள் விரிக்கப்பெற்ற படுக்கையில் அவளைக் கிடத்தினர் ; வாழையிலையிற் படுக்க வைத்தனர்; குளிர்ந்த சந்தனத்தை இழைத்து அவள் உடம்பிற் பூசினர் ; பனி நீர் வாரி இறைத்தனர். காம வேட்கைக்குரிய தென்றற்காற்று வீசியதால் இவ்வளவு பரிகாரங்களும் பயனற்றுப் போயின.' இக்கருத்துக்களடங்கிய செய்யுட்களைக் கீழே காண்க :

(அ) ..................................................
..................................................
வண்ணமென் முலையி னாளும்
மன்மதன் வாளி யாலே
உண்ணினை வாகி நெஞ்சம்
உருகியே விரகிற் சோர்ந்தாள்.

---

44. கதை 16, செ. 19, 22.

(ஆ) மலர்தனை யணையிற் சேர்ப்பார்
வளமையாய் மற்று வாழை
யிலைதனைப் படுப்பார் சாந்தம்
இழைத்துமேற் பூசி நிற்பார்
நிலவினை மறைப்பார் மேற்பனி
நீர்தனை இறைப்பார் செய்யும்
பலபரி கார மெல்லாம்
பற்றுமோ தென்றற் கென்பாள்.[45]

(2) அரசன் ஒருவன் கொண்ட காமநோயை ஆசிரியர் ஒரு செய்யுளில் வருணித்து, இறுதியில், 'காம நோயை யார் தடுக்க வல்லார்!' என்று அதன் வலிமையைக் கூறியிருப்பது நோக்கத் தக்கது :

'மன்மதன் வந்து அந்திப் பொழுதில் தன்னுடைய ஐங்கணைகளை அரசன்மீது தூவினான். அவ்வளவில் அரசனது உடல் காம வேட்கையால் பற்றி எரிவது போல் இருந்தது. அவன் அவ்வெப்பத்தைப் போக்கச் சந்தனக் குழம்பைத் தன் உடம்பில் தடவினான்; ஆயினும் பயனில்லை. நிலவும் நெருப்பாய்க் காய்ந்தது. மன்னன் தன் வெப்பத்தைப் போக்க வாழையிலையின்மேற் படுத்தான். அவ்விலை தீய்ந்தது. மன்னன் மனம் நொந்தான். காம நோயைத் தடுக்க யாரால் முடியும்!' இக்கருத்தமைந்த பின்வரும் செய்யுள் படிக்கத் தக்கது :

அந்தியிற் பஞ்ச பாணம்
அனங்கனும் வந்து தூவச்
சந்தனக் குழம்பை மெய்யில்
தடவுவன் பொறுக்கா தாகும்
இந்துவும் அனலாம் வாழை
இலையின்மேல் படுப்பன் தீயும்
நொந்தனன் மன்னன் காம
நோயையார் தடுக்க வல்லார்.[46]

**உலாச்சிறப்பு**

மன்னன் தன் பரிவாரங்களுடன் நகரப் பெருந்தெருக்களில் உலா வருதல் பண்டை வழக்கம். இங்ஙனமே திருக்

45. கதை 20, செ. 13, 14.
46. கதை 17, செ. 28.

கோயில்களில் உள்ள மூர்த்தங்கள் விழாக் காலங்களில் தேரிலும் பிற வாகனங்களிலும் உலா வருதலை நாம் நன்கு அறிவோம். இங்ஙனம் உலாவரும் இறைவன்மீதோ அல்லது மன்னன்மீதோ நகரத்திலுள்ள பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்னும் ஏழு பருவப் பெண்களும் காதல் கொள்வதாகக் கற்பனை செய்து பாடப்பெறும் சிறுநூல் உலா எனப் பெயர் பெறும். புலவர் இவ்வாறு தனி நூல் பாடுவதேயன்றித் தாம் இயற்றும் நூல்களில் தனித்த முறையில் உலா வருணனை கூறுவதும் உண்டு. இம் முறையைப் பின்பற்றி இந்நூலாசிரியர் சுகன் என்னும் மன்னன் வசந்த காலத்தில் உலா வந்ததைப் பற்றி இரண்டு செய்யுட்கள் இயம்பியுள்ளார். அவை படித்து இன்புறத் தக்கன.

'மன்னன் யானைமீது அமர்ந்து உலாச்சென்றான். அவனைச்சூழ மகுடவர்த்தனர்கள் சென்றார்கள். குடிமக்கள் தம் மன்னனைப் போற்றினர். பணிப்பெண்கள் கவரி வீசினர். இந்நிலையில் மன்னன் தோரணங்கள் கட்டப்பெற்ற தெருக்கள் வழியே உலாச் சென்றான். பேதை முதலிய ஏழு பருவப் பெண்களும் மன்னனைக் கண்டு காதல் கொண்டனர். அவருட் பலர் தம் கலையையும் வளையையும் இழக்கும் நிலையில் மெலிந்தனர். வேறு பெண்கள் வேந்தனுக்கு ஆலத்தி எடுத்து மகிழ்ந்தனர். பெண்கள் பலர் மன்னனை வணங்கி நின்றனர். இந்த நிலையில் மன்னன் பவனி சென்றான்.' இக்கருத்துக்கள் அமைந்த செய்யுட்கள் கீழே தரப்பட்டுள்ளன :

(1) சீரணி வனத்தில் உள்ள சிறப்பினைக் கண்டு மீண்டு
வாரண மீதில் ஏறி மகுடவர்த் தனர்கள் சூழத்
தாரணி யோர்கள் போற்றத் தையலார் கவரி வீசத்
தோரண வீதி தன்னில் சுகனெனு மன்னன்
[போந்தான்.

(2) பேதையர் முதலா யாங்குப் பேரிளம் பெண்ணீ றுனோர்
காதலாய் நிற்பார் கோடி கலைவளை சோர்வார் கோடி
வீதியா லத்தி காட்டி வேந்தனை யுகப்பார் கோடி
மாதரார் தம்மிற் கூடி வணங்கியே நிற்குங் காலை.[47]

47. கதை 17, செ. 22, 23.

**உவமைகள்**

இந்நூலாசிரியர் இந்நூலுள் பல இடங்களில் பொருத்த மான உவமைகளைக் கையாள்வதில் திறமை பெற்றுள்ளார். ஒவ்வொரு கதையிலும் உவமைகள் கையாளப்பட்டுள்ளன. சான்றாகச் சில உவமைகளை இங்குக் காண்க :

(1) விக்கிரமாதித்த வேந்தன் வேதாளத்தைக் கட்டிப் பிடித்துத் தன் முதுகின்மீது தூக்கிச் சென்றபோது அது இருபத்துநான்கு கதைகளைக் கூறியது; ஒவ்வொரு கதையின் இறுதியிலும் அக்கதை பற்றிக் கேள்வி கேட்டது. அரசன் ஏற்ற விடை புகன்றான். வேதாளம் அவ்விடையைக் கேட்டதும் தனது கட்டை அவிழ்த்துக்கொண்டு மீண்டோடி முருக்க மரத்தில் ஏறிக்கொண்டது. அது இவ்வாறு இருபத்துநான்கு முறை செய்தது. அது இங்ஙனம் ஓடிய செயலுக்கு ஆசிரியர் பல உவமைகளைக் கூறியுள்ளார். அவற்றுள் ஒன்று இங்குத் தரப்படும்.

'நாள்தோறும் முருகன் திருவடிகளைத் தொழுபவரைப் பற்றியிருந்த தீவினை மாயமாய் மறைதல்போல—வேந்தனது முதுகின்மீதிருந்த வேதாளம் திடீரென மறைந்து சென்று முருக்க மரத்தின்மீது ஏறிக்கொண்டது.'

நாவினில் முருகன் பாதம்
    நாள்தொறுந் துதிசெய் வார்மேல்
தீவினை மாயு மாய்கை
    செய்கைபோல் மாய மாகித்
தாவியே யலகை மீண்டுந்
    தருவினி லுற்ற தன்றே.[48]

(2) மதனசேனை ஒரு வணிகன் மகள். அவளைச் சமுத்திரதத்தன் என்பவனுக்கு மணம் முடிப்பதென அவளது தந்தை தீர்மானித்திருந்தான். திருமணத்திற்கு முன்பு தரும தத்தன் என்ற ஓர் இளைஞன் அவளை விரும்பினான். அப்பொழுது அவள், "நான் சமுத்திரதத்தனை மணக்கக் கடமைப் பட்டவள். திருமணம் முடிந்த அன்று இரவு அவரது இசைவு

48. கதை 9, செ. 36.

பெற்று உன்னிடம் வருவேன்" என்று வாக்களித்தாள். அப் பெண்மணி திருமணம் நடைபெற்ற அன்றிரவு தனது கணவனிடம் இதனைக் கூறி, அவனது இசைவுபெற்றுத் தருமதத்தன் மனைநோக்கிச் சென்றாள். வழியில் ஒரு கள்வன் அவளைக் கண்டு காமுற்றான். அவள் தான் செல்லும் நோக்கத்தைக் கூறினாள்; திரும்பி வரும் வழியில் கள்வனைச் சந்திப்பதாகக் கூறினாள். கள்வன் அதற்கு இசைந்தான். பின்பு மதனசேனை தருமதத்தனிடம் சென்றாள். அவளது களங்கமற்ற உள்ளத்தை உணர்ந்த தருமதத்தன் மனம் மாறி, அவளைப் பாராட்டி அனுப்பிவிட்டான். அவ்வாறே கள்வனும் அவளது நற்பண்பினைப் பாராட்டி அனுப்பிவிட்டான். அவள் தன் கணவனிடம் வந்து நடந்தவை அனைத்தையும் நவின்றாள். அவள் அங்ஙனம் மீண்டு கணவனிடம் வந்ததை ஆசிரியர் மூன்று உவமைகளால் விளக்கியுள்ளார். அவை சுவை பயக்கத் தக்கவை.

'உடம்பில் தங்கியிருந்த உயிர் அவ்வுடம்பை விட்டுச் சென்று மீண்டும் வந்து அவ்வுடம்பில் தங்கியது போலவும், மறைந்த பொருள்கள் மீண்டு வந்து தமக்குரிய மனிதனது மடியில் இருந்தாற்போலவும், பசியால் பொங்கியெழுந்த புலியினது வாயில் நுழைந்த ஓருயிர் யாதொரு துன்பமும் இல்லாமல் வெளிப்பட்டாற் போலவும்—காமுகனாகிய தருமதத்தனைக் காணச்சென்ற மதனசேனை தன் கற்புக் கெடாமல் கணவனிடம் மீண்டு வந்தாள்.

> தங்கிய வுயிர்போய் மீளச்
> சரீரத்தி லுறைந்தாற் போலும்
> மங்கிய பொருள்கள் வந்து
> மடியினி லிருந்தாற் போலும்
> பொங்கிய புலியின் வாயில்
> புக்கது மீண்டாற் போலும்
> அங்கவள் சமுத்திர தத்த
> னருகினி லெய்தி நின்றாள்[49]

(3) அருச்சுன சுவாமி என்பவனும் அவன் மனைவியான இரத்தினபதி என்பவளும் மன்மதனும் இரதியும் போல

49. கதை 10, செ. 35.

வும், அறுமுகனும் வள்ளியும் போலவும், இந்திரனும் இந்திராணி யும் போலவும் மனமொத்து வாழ்ந்துவந்தனர் என்று ஆசிரியர் கூறியுள்ளது உள்ளத்திற்கு உவகை ஊட்டுவது.

இங்ஙனம் அவர்கள் மனமொத்து வாழ்கையில், ஓர் அரக் கன் இரத்தினபதியைக் கவர்ந்து சென்றான். கருத்து ஒருமித்த தன் காதலியைப் பிரிந்த காதலனது நிலைமையை ஆசிரியர் நான்கு உவமைகளால் விளக்கியுள்ளார். அவை அவனது துன்பநிலையை நன்கு விளக்கத்தக்கவை :

'தன் மனைவியை இழந்த அருச்சுன சுவாமி—கலைகளை இழந்த சந்திரனைப் போலவும், தனது கைப்பொருளை இழந்து துன்புறும் மனிதனைப் போலவும், ஆற்றில் தனது நிலையை இழந்த தோணி போலவும், உயிரை இழந்த உடலைப் போலவும் துன்புற்றான்.'

கலையி ழந்தமதி யென்ன வும்பொருள்
கையி ழந்தபரி சென்னவும்
நிலையி ழந்தபரி சென்ன வும்முயிரை
நின்றி ழந்தவுட லென்னவும்,[50]

(4) **நாக கன்னிகை** ஒருத்தி ஒரு பொய்கையில் நீராடச் சென்றாள். அவ்வமயம் ஓர் அரக்கன் அவளைப் பிடித்து விழுங்கிவிட்டான் என்பதை ஆசிரியர் மூன்று உவமைகளால் விளக்கியுள்ளார். அவை படிக்கப்படிக்க இன்பம் பயப்பவை; நளன் என்னும் அரசனைச் சனி பற்றிக்கொண்டது போலவும், சூரியனைப் பனி மூடியது போலவும், இராகு சந்திரன்மீது தாவி விழுங்கியது போலவும் அரக்கன் நாக கன்னிகையைப்பற்றி விழுங்கினான்.

அந்நளனைச்சனி யடைந்தபடி போலும்
முந்துபனி யாதவனை மூடியது போலும்
சந்திரனை ராகுவெதிர் தாவியது போலும்
விந்தைநகர் மாதினை விழுங்கின னரக்கன்.[51]

(5) 'கற்புடை மகள் தன் வாழ்க்கைக்குத் தலைவன் தன் கணவன் ஒருவனே என்று கருதுவது போல—நான் முருகன்

---

50. கதை 12, செ. 10.
51. கதை 12, செ. 50.

திருவடிகளையே என் உயிருக்கு உறுதுணையாகக் கொண்டுள்ளேன் ' என்று இவ்வாசிரியர் கூறும் கூற்றில் உள்ள உவமையின் நயம் எண்ணி எண்ணி மகிழ்தற்குரியது :

> .................... பிராண நாயகன்
> ஒருவ னேயெனக் கருது மாதர்போல்
> ..........................................
> சால நம்பினேன் வேலர் பாதமே.[52]

(6) வேதாளம் கேட்ட கேள்விக்கு வேந்தன் விடையளித்தவுடன் அவ்வேதாளம் அவனைவிட்டுச் சென்றமைக்கு ஆசிரியர் அழகிய உவமை ஒன்று கூறியுள்ளார் : ' புலவர்பால் தமிழ் நூற் பொருளைக்கேட்டு அவர்க்குப் பரிசில் கொடாமல் கருங் குரங்கு போல் விழித்து அப்புலவரிடமிருந்து ஓடி மறையும் அற்பர்போல்—மன்னன் விடையளித்ததைக் கேட்ட வேதாளம் திடீரென்று அவனைவிட்டு ஓடி முருக்கமரத்தில் தலைகீழாய்த் தொங்கலாயிற்று.'

> வாகுடன் தமிழ்நூல் கேட்டு
> வாணர்க்குப் பரிசீ யாமல்
> யூகம்போல் விழித்தங் கோடி
> ஒளித்திடும் உலுத்தர் போல
> ஏகியே தருவைப் பற்றி
> இருந்தது தலைகீ ழாயே.[53]

(7) ஆற்றில் திடீரென நீர் பெருகி வெள்ளம் தோன்றும் ; பின்பு அவ்வெள்ளம் வற்றிவிடும். அது போலவே வாழ்க்கையில் திடீரென்று செல்வம் தோன்றும் ; பின்பு அச் செல்வம் வற்றிவிடும், ஆசிரியர் இவ்வுலக இயல்பை ஆற்றுவெள்ளத்தைக் கொண்டு விளக்கியிருத்தல் சால அழகியதன்றோ ?

> பெருகு மாற்றின் பெருக்கது போலவே
> வருமவ் வாழ்வும் வறுமையுந் தொந்தமாய்த்
> தரும வேதியர் தாம்சில நாளெலாம்
> விரிவில் வாழ்ந்து பிடிபினை எய்தினர்.[54]

---

52. கதை 16, செ. 1
53. கதை 18, செ. 24.
54. கதை 22, செ. 7.

**கவி கூற்று**

கம்பராமாயணம், வில்லி பாரதம் போன்ற பெரு நூல்களில் சிறப்பு மிக்க இடங்களில் கவி கூற்ருக (நூலாசிரியர் கூற்ருக) ஓரிரு செய்யுட்கள் இடம் பெறும். அக் கூற்று உலகியலேயோ, இயற்கை நியதியையோ, உள்ளத்து உணர்ச்சியையோ வெளிக்காட்டுவதாயிருக்கும். அத்தகைய கவி கூற்று ஒன்று இந் நூலில் இடம் பெற்றுள்ளது. இக் கூற்று மிகவும் பொருத்தமான இடத்தில் அமைந்திருப்பது எண்ணி எண்ணி மகிழ்தற்குரியது. இந் நூலாசிரியர் மேலே கூறப் பெற்ற பெரு நூல்களை நன்கு படித்த பெரும் புலவர் என்பதற்கு இஃது ஏற்ற சான்ருகும்.

சுகன் என்னும் மன்னன் கார்த்திக புரத்தில் வாழ்ந்தான். அந் நகர வணிகன் மகள் உமாபதி என்பவள். அவள் மிகச் சிறந்த அழகி. வணிகன் அவளை வேந்தனுக்கு மணம் செய்விக்க எண்ணினன். அதற்கு மன்னனும் இசைந்தான்.

அவளது பேரழகைக் கண்ட வேதியர், "நமது அரசன் இவளை மணந்தால், இவளது பேரழகில் மயங்கி ஆட்சியைக் கவனியாமல் இருந்துவிடுவான். ஆதலால் மன்னனுக்கு மனைவியாகும் இலக்கணம் இவளிடம் இல்லை என்று கூறுவதே நல்லது" என எண்ணினர்; அரசனிடமும் அவ்வாறே அறைந்தனர். இறுதியில் வணிகன் அம் மன்னனது அமைச்சனுக்கு உமாபதியை மணம் செய்வித்தான்.

இந்த இடத்தில்தான் கவி நமக்குப் 'பொசிப்பு' என்பது இன்னது என்பதைத் தம் கூற்ருக விளக்கிக் கூறியுள்ளார்:

மனிதர் தம் மமதையால் ஒரு பெண்ணை இவர்க்குக் கொடுக்க வேண்டும்—அவர்க்குக் கொடுக்க வேண்டும் என்று பேசினுலும், பொசிப்பு வந்து கூடுதல் வேறேயாகும். வணிகன் தன் மகளை மன்னனுக்கு மணமுடிக்க வேண்டினன். ஆனல் நடந்ததோ வேறு; மந்திரி அவளை மணந்துகொண்டான். பிரமன் எழுதிய எழுத்தை மாற்ற முடியுமோ? அது என்றும் தப்பாது.

தடுக்கொணு தயனெ மூத்துத்
தப்புமோ தப்பா தென்று
மிடுக்கிலே யொருவர் பெண்ணை
இவர்க்கிவர்க் கென்று பேசிக்
கொடுக்கினும் பொசிப்பும் வந்து
கூடுகை வேறே யன்றோ
மடக்கொடி தன்னை ஏற்று
மந்திரி புணர்ந்து வாழ்ந்தான்.[55]

### அறியத்தரும் செய்திகள்

இந் நூலாசிரியர் இந் நூலில் சிறப்புடைய கருத்துக்கள் சிலவற்றையும், உலகியற் செய்திகள் சிலவற்றையும் ஏற்ற இடங்களில் கூறியுள்ளமை மகிழ்ச்சிக்குரியது. அவற்றுள் சில வற்றை இங்குக் காண்பது நல்லது.

### 1. நல்லரசன் இயல்புகள்

செங்கோல் அரசன் ஏழை மக்களுக்கு நினைத்ததை நினைத்தபடி கொடுக்கும் கற்பக மரமாக இருத்தல் வேண்டும்; கற்றவர் வறுமையைப் போக்குபவனாக இருக்க வேண்டும்; தன்னை அண்டிய பேர்களை வாழ்விப்பவனாக இருக்க வேண்டும்.[56]

### 2. மணமகன் தகுதிகள்

மணமகனுக்கு இருக்க வேண்டும் தகுதிகள் இவை என்று ஆசிரியர் ஓரிடத்தில் குறித்துள்ளார். அவை **நல்ல பரம்பரை, மேன்மை, ஆண்மை, உருவ அமைப்பு, வாய்மை, தூய்மை** என்பவை.[57]

### 3. போனபின் மீளாதவை

உடம்பின் இளமை, ஒருவர் பெற்ற புகழ், உடலை விட்டு நீங்கிய உயிர், ஆற்று நீர்ப் பெருக்கம், கடலில் போட்ட பொன் என்பவை ஒரு முறை சென்றபின் மீண்டு வாரா.

---

55. கதை 17, செ. 18
56. கதை 8, செ. 4.
57. கதை 8, செ. 28.

மேனியி னிளமை தானும்
மிக்கதோர் கீர்த்தி தானும்
ஆனநல் லுயிர்கள் தாமும்
ஆற்றுநீர்ப் பெருக்கந் தானும்
மானனை யார்கள் தாமும்
வாரியிற் போட்ட பொன்னும்
போனபின் மீளு மோதான்
பூவையே புகன்றி டென்றான்.[58]

4. சூள் செய்தல்

(1) தன்னை விரும்பிய கள்வனிடம் மீண்டு வருவதாக மதனசேனை கூறினாள். அவன் அவள் சொல்லை நம்ப முடியாது என்றான். அதற்கவள், "யான் வாக்களித்தபடி உன்னிடம் மீண்டு வராவிடின், பசுவைக் கொன்றவரும், ஒருவர் செய்த நன்றியை மறந்தவரும், சூழ்ச்சி செய்து ஒருவருக்குச் சேர வேண்டிய ஈவை விலக்கின கொடியவரும் அடையத்தகும் நரகத்தை நான் அடைவேனாக," என்று சபதம் செய்தாள்.

இக்கணம் நின்பால் வந்திங்
கெய்திலே னாகிற் கோவைச்
சிக்கென வதைசெய் தோரும்
செய்ந்நன்றி குன்றி னோரும்
விக்கினம் பண்ணி யீவை
விலக்கின மூடர் தாமும்
புக்கதோர் நரகு தன்னில்
புகுதற்குக் கடவே னென்றாள்.[59]

(2) 'பெய்ய வேண்டும் மழை தவறினாலும் பலிக்கத்தக்க மறைமொழி பலியாவிடினும், இராமரால் எய்யப்பட்ட அம்பு செல்ல வேண்டும் இடத்திற்குச் செல்லாமல் திகைக்கினும், யான் பாம்புகளின் உயிரைக் காப்பேன்' என்று சீமூதவாகனன் சூள் செய்தான்.

மாரியே பொய்க்கினு மறைமொழி தப்பினும்
சீரிய ராமர்தம் பாணம் திகைக்கினும்

58. கதை 10, செ. 27.
59. கதை 10, செ. 28.

பாரினிற் புகழதாய்ப் பன்னகா திபர்கள்தம்
ஆருயிர் காப்பனென் றரசனுங் கூறினன்.[60]

### 5. தெளிய அரியவை

மனிதன் இப் பிறப்பில் அநுபவிப்பதற்கு அடிப்படையாக உரிய வினை, பிரமன் ஒவ்வொருவருக்கும் எழுதியுள்ள எழுத்து, நீரினுள் மறைந்துள்ள முள், நீதிமன்றத்தின் வழக்கு முடிவு, மாதர் நெஞ்சு ஆகிய இவை தெளிய அரியவை.

வாறவினை யும்மலரின் மேலயனெ ழுத்தும்
ஊறுபுன லுள்படவு றைந்தருளு முள்ளும்
வீறுமவை யின்குறியும் மெல்லியர்கள் நெஞ்சும்
தேறரிய தென்றரசு சிந்தையினி னைந்தான்.[61]

### 6. கல்வியிலார்க்கு உரியவை

பொன்னாசையும், மண்ணாசையும், பெண்ணாசையும் கல்வியறிவில்லாத மக்களுக்கு உரியவை, என்று ஓர் அரசனைப் பார்த்து அவனது அருமைத் தோழன் கூறுவதாக இவ்வாசிரியர் பாடியுள்ளார் :

'பொன்னி னாசையும் பூதல வாசையும்
கன்னி யாசையுங் கல்வியி லார்க்கலோ.'[62]

### 7. வெல்ல இயலாதவை

'பூளைப்பூ காற்றினை எதிர்த்து நிற்றல் இயலாது; தண்ணீர் நெருப்பினை எதிர்த்து நிற்றல் இயலாது. பசு ஆண் சிங்கத்தை எதிர்த்து நிற்றல் இயலாது. இவை போலவே உயிர்கள் தம்மைப் பிடிக்கவரும் யமனை எதிர்த்து நிற்றல் இயலாது.

காற்றின்முன் பூளையும் கனலின்முன் னீரதும்
ஏற்றின்முன் பசுவது மியமன்முன் னுயிர்களும்
தோற்றியே வென்றிடா.[63]

60. கதை 16, செ. 47.
61. கதை 13, செ. 48.
62. கதை 16, செ. 28.
63, கதை 16, செ. 46.

**பழமொழிகள்**

மனித வாழ்க்கையில் பல நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. அவை பற்றிச் சில மொழிகள் எழுகின்றன. அவை காலப் போக்கில் மக்களது பேச்சு வழக்கில் இடம் பெறுகின்றன. பின்பு நாளடைவில் அறிஞர்களின் நூல்களிலும் இடம் பெறுகின்றன. இங்ஙனம் உலக வழக்கிலும் ஏட்டு வழக்கிலும் நிலை பெறும் இப்பழைய மொழிகள் **பழமொழி** எனப் பெயர் பெறும்.

'அன்னமிட்ட வீட்டில் கன்னமிடலாமா?' என்பது ஒரு பழமொழி. இவ்வாறு ஆயிரக்கணக்கான பழமொழிகள் நமது பேச்சு வழக்கிலும் எழுத்து வழக்கிலும் இருக்கின்றன. புலவர் பெருமக்கள் தம் நூல்களில் ஏற்ற இடங்களில் இவற்றைக் கையாளுதல் மரபு. இந் நூலாசிரியர் அம் மரபினைப் பின்பற்றிச் சில பழமொழிகளை எடுத்து ஆண்டுள்ளார். அவற்றுள் சிலவற்றைக் கீழே காண்க:

(1) "அருச்சுனசுவாமி என்பவனும் அவன் மனைவியான இரத்தினபதி என்பவளும் வசந்த காலத்தில் ஒரு மேடைமீது உறங்கினர். அப்போது ஓர் அரக்கன் அங்குத் தோன்றினன்.

'பெண் என்றால் பேயும் இரங்கும்' என்பது மரபன்றோ? ஆனால் அவ்வரக்கன் அப்பழமொழி பிழைபடும்படி அவளைத் தூக்கிச் சென்றான்," என்று ஆசிரியர் கூறியுள்ளார்.

..........................................................
பெண்ணெ னும்பொழுது பேயு நெஞ்சுருகு
மென்ப தேபிழைய மங்கையைக்
கண்ணில் நோக்கியோர் அரக்கனு மவன்முன்
கண்க ரந்துகொடு போயினன்.[64]

(2) ஒரு குறிக்கோளுமில்லாமல் கண்டவாறு திரிந்து உழல்கின்றவனைக் 'கோவில் மாடு போல் சுற்றுகிறான்' என்று கூறுவது உலக வழக்கு. கோவில்மாடு ஊருக்குப் பொதுவானது. அதற்கென்று உரியவன் ஒருவனில்லை. ஆதலால் அது கண்ட இடங்களில் சுற்றிக்கொண்டிருக்கும். அதைப் போல் சிலர் ஒரு குறிக்கோளுமில்லாமல் வறிதே தம் வாழ் நாட்களைக் கழிப்பர்.

---

64. கதை 12, செ. 7.

'யான் ஒரு குறிக்கோளுமில்லாமல் கோவில் எருதுபோல்
திரிந்து உழலும்படி விடாமல், ஈடேற அருள்புரிவாய்,'[65]
என்று இந்நூலாசிரியர் முருகப்பெருமானை வேண்டியுள்ளார்.

(3) 'ஆசிரியர் மாணவர் உள்ளங்களில் பசுமரத்தாணி போலப் பதியும்படி பாடங்கள் கற்பிக்க வேண்டும்' என்பது கல்வித்துறை விதிகளுள் ஒன்று. இவ்வாக்கியத்தில் வந்துள்ள 'பசுமரத்தாணி போல' என்பது பழமொழி.

தெய்வ சுவாமி யென்பவன் ஒரு சோலையில் மன்னன் மகளைக் கண்டான். அவ்வமயம் வெறி கொண்ட யானை யொன்று அவ்வழியே வந்தது. அதனைக்கண்ட மன்னன் மகள் தெய்வ சுவாமியிடம் அடைக்கலம் புகுந்தாள். அவன் அவளை அணைத்து, அந்த யானையின் தாக்குதலிலிருந்து அவளைக் காத்தான். அவ்விருவரும் ஒருவரை யொருவர் விரும்பினர். ஆயினும் தெய்வசுவாமி அவளை மணக்க முடிய வில்லை. அதனால் அவன் சசி என்னும் தன் நண்பனது உத வியை நாட விரும்பினான்; அவனிடம் நடந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் கூறிக் காமபாணம் பசுமரத்தாணி போலத் தன் உள் ளத்தில் பட்டதையும் பகர்ந்தான்.

சசியெனுந் தோழ னோடுந் தையலைக் கண்ட வாறும்
விசையிலோர் வேழம் வந்த வெற்றியு மின்னு ளஞ்சிக்
கசிவுடன் தழுவு மாறுங் காத்ததுங் காம பாணம்
பசுமரத் தாணி போலப் பட்டதும் பகர்ந்து நின்றான்.[66]

(4) சுகன் என்னும் அரசன் தன் அமைச்சன் மனைவியின் பேரழகைக் கண்டு அவளை விரும்பினான்; தனது விருப்பத் தைத் தன் தோழன் ஒருவனிடம் கூற எண்ணினான்; 'தோழ னோடும் ஏழைமை பேசோணாது' என்னும் பழமொழிப்படி தன் நண்பனிடம் தன் ஆவலைத் தெரிவிப்பது முறையன்று என்று எண்ணினான்.

---

65. கதை 14, செ. 1.

66. கதை 15, செ. 17.

ஈங்கினித் தோழ னோடு
மேழைமை பேசொ ணாதென்
றேங்கிய பெரியோர் சொல்கை
யுன்னினான்.[66A]

**கதைக்குறிப்புக்கள்**

ஒரு நூலாசிரியர் தம் நூலில் தாம் கூறப்புகும் பொருள்களைத் தெளிவுபடுத்தச் சில கதைகளை உவமைகளாகப் பயன்படுத்தல் மரபு ; அம் முறையிலும், சிலரைச் சிறப்பிக்கும் வகையிலும் சில கதைக்குறிப்புக்களைக் கூறுதல் மரபாகும். இந் நூலாசிரியர் அம்மரபைப் பின்பற்றி இந்நூலுள் பல கதைக் குறிப்புக்களைக் குறித்துள்ளார். அவற்றுள் சில இங்குக் குறிக்கத் தக்கவை :

(1) கௌதமன் அகலிகையைச் சபித்தது[67]

(2) முருகன் சூரபதுமனைக் கொன்றது[68]

(3) சம்பந்தரோடு வாது நிகழ்த்திய சமணர் கழு வேறியது.[69]

(4) சிவபெருமான் முப்புரங்களை எரித்தது.[70]

(5) சம்பந்தர் சமணரோடு நிகழ்த்திய புனல் வாதம்[71]

(6) சனி பகவான் நளனைப் பற்றிக்கொண்டது.[72]

(7) பிள்ளையார் உதவியால் முருகன் வள்ளியை மணந்தது.[73]

(8) பாரி வள்ளலின் கொடைத்திறம்.[74]

---

66A. கதை 17, செ. 30.
67. நூற்செய்தி, செ. 20.
68. கதை 6, செ. 1.
69. கதை 9, செ. 1.
70. கதை 9, செ. 21.
71. கதை 12, செ. 20.
72. கதை 13, செ. 50.
73. கதை 15, செ. 12.
74. கதை 16, செ. 8.

(9) சிவன் கையில் ஒட்டிக்கொண்ட பிரம கபாலம் நீங்கப் பெற்ற வரலாறு.[75]

(10) மாம்பழத்திற்காகப் பிள்ளையாரும் முருகனும் தந்தை சொற்படி உலகம் சுற்றி வந்தமை.[76]

**படிப்பினைகள்**

கவிக்களஞ்சியன் என்னும் புலவர் பெருமான் இந் நூலில் பல நீதிகளைக் கூறியுள்ளார் ; அவற்றுள் சிலவற்றைக் கீழே காண்க:

(1) பொது மகளிரிடம் நட்புக் கொள்பவர் வறியவராவர்.[77]

(2) மதங்கொண்ட வாழ்வு அழிந்துவிடும்.
மதமுடன் பாரினில் வாழும் வாழ்வெனும்
அதிகசம் பத்துமே யார்க்கும் நிற்குமோ ![78]

(3) பிறன் மனைவியை விரும்புதல் தவறு.[79]

(4) குருவை இகழ்தல், கோவிலின் சொத்தை அபகரித்தல், மறையவர் சொத்தைக் கவர்தல், அடைக்கலப் பொருள்களைக் கவர்தல் ஆகியவை தவறானவை.[80]

(5) புகழ் என்றும் நிலையுள்ளது.[81]

(6) உதவி பெறத் தக்கவர்க்கு வலுவில் சென்று உதவி புரிதல் போற்றத்தக்கது.[82]

(7) சூதாடுதல் மிகவும் கொடியது.[83]

(8) வித்தியாதானம் புகழைத் தரும்.[84]

(9) ஆசிரியர் மாணவரை நன்கு பரிசோதித்துக் கல்வி கற்பிக்க வேண்டும் ; கோபத்தை அடக்கும் இயல்பையும், கலை

75. கதை 21, செ. 35.
76. கதை 25, செ. 31.
77. கதை 3, செ. 17.
78. கதை 9, செ. 11.
79. கதை 10, செ. 18.
80. கதை 10, செ. 31.
81. கதை 16, செ. 51.
82. கதை 16, செ. 76.
83. கதை 18, செ. 6-8.
84. கதை 18, செ. 15.

உணர்ச்சி இல்லாத மனத்தைச் செம்மைப்படுத்தும் மனப் பண்பையும் அறிவுத்திறனையும் நற்குணங்களையும் பிறவற்றை யும் நன்கு அறிந்தபின்பே ஆசிரியர் மாணவர்க்கு உயர்ந்த பொருள்களை உபதேசிக்க வேண்டும்.

சினத்தையுஞ் சாந்த மாக்குஞ்
செயலையுங் கலையில் லாத
மனத்தையு மொழுக்க மாக்கும்
வளமையும் ஞான மாகும்
கனத்தையுங் குணத்தைத் தானும்
கல்வியு மனித்தர் புத்தி
யனைத்தையுங் குருக்கள் ஆனோர்
அறிந்துபின் னுபதே சிப்பார்.[85]

(10) பாத்திரம் அறிந்து பிச்சையிடுதல் வேண்டும்.[86]

(11) தற்கொலை செய்துகொள்வது தவறு.[87]

(12) தீயவர்க்கு உதவி செய்தல் தீமையையே உண் டாக்கும்.[88]

(13) ஒழுக்கக்கேடு அரசனையும் அழித்துவிடும்.[89]

(14) தன்னைக் கொல்ல வந்த பசுவையும் கொல்வது அறமாகும்.[90]

(15) ஒழுக்கம், அன்பு, வீரம் ஆகியவை மனிதனுக்குத் தேவை. இவை இறைவனையும் இன்புறுத்த வல்லவை.[91]

---

85. கதை 18, செ. 22.
86. கதை 18, செ. 23.
87. கதை 22, செ. 9.
88. கதை 22, செ. 16.
89. கதை 24, செ. 8.
90. கதை 25, செ. 16.
91. கதை 25, செ. 23.

# இந்நூற் கதைகள்

---

## வேதியன் வேதாளமான கதை

வேதஒலி முழங்குகின்ற கயிலாயப் பதியினில் முனிவர்களும், கின்னரர்களும், கிம்புருடர்களும், தேவர்களும், நாரதரும் சூழ்ந்திருக்கத் தம் இடப் பக்கத்தில் உமாதேவியைக் கொண்டுள்ள சிவபெருமான் வீற்றிருந்தார். எல்லாத் தேவர்களும் முனிவர்களும் சிவபெருமானை வாழ்த்தி விடைபெற்றுச் சென்ற பின், உமாதேவி சிவபெருமானைப் பார்த்து, "இந்த ஈரேழு உலகங்களிலும் இல்லாதனவாகிய புதிய வியத்தகு கதைகளைச் சொல்லுங்கள்" என்றாள். சிவபெருமானும், "அங்ஙனமே பலரும் அறியாத பல கதைகளைக் கூறுகிறேன், கேள்" என்று கூறத் தொடங்கினர்.

அப்பொழுது பூசையை முடித்துக்கொண்டு கதவை மூடி வெளியில் அமர்ந்திருந்த வேதியன் செவிகளில் உமையும் சிவனும் பேசிக்கொள்வது விழுந்தது. வேதியன் இறைவன் கூறப்போகும் கதைகளைக் கேட்க வேண்டுமென்று ஆவல் கொண்டு, அங்கேயே அமர்ந்து எல்லாவற்றையும் கேட்டு விட்டு வீட்டுக்குத் திரும்பினன். நீண்ட நேரமாகிவிட்டதால் வேதியன் மனைவி அவன் தாமதித்து வந்ததன் காரணத்தைக் கேட்டாள். அவன் அவளிடம் நடந்தவற்றைக் கூறினன். அவள் சிவபெருமான் கூறிய கதைகளைத் தனக்குக் கூறும்படி வேண்டினள். வேதியன் முதலில் மறுத்தான்; பின்னர் அவள் வற்புறுத்தலால் எல்லாவற்றையும் கூறி, "இக் கதைகளை வேறு யாரிடமும் கூறாதே" என்றான். ஆனல் அவள் தனக்குத் தெரிந்த பலரிடமும் தனித்தனியே, "வேறு யாரிடமும் கூற வேண்டா" என்று சொல்லி அக்கதைகளைக் கூறினள்.

இதனை அறிந்த சிவபெருமான் மிக்க சினம்கொண்டு, மறுநாள் வேதியன் பூசை செய்வதற்காகச் சென்றபோது, அவன் முன்பு தோன்றி, "நான் உமாதேவிக்கு மறை முகமாகச் சொன்ன கதைகளைச் செவிமடுத்ததும் அல்லாமல்,

அவற்றை வெளியில் கூறியதனுல், நீ வேதாளமாகக் கடவாய்" என்ருர். அவன் பதறிப்போய் வணங்கி, "சிவபெருமானே, எப்பொழுது இந்தச் சாபம் என்னை விட்டு நீங்கும்?" என்று கேட்டான். அவர் மனம் இரங்கி, "நீ உச்சைனி மாகாளிப் பட்டணத்துக் காளி கோவிலுக்கு அருகிலுள்ள காட்டில் ஒரு முருக்க மரத்தில் தலைகீழாகத் தொங்கிக்கொண்டு முப்பது ஆண்டுகள் இருப்பாய். அப்பொழுது சாந்தசீலன் என்ற முனிவன் உன்னைக் கைவசப்படுத்தக் காளியிடம் வரம் கேட்பான்; அப்பொழுது உன்னைப் பிடித்துவர விக்கிரம கேசரி என்ற மன்னனை ஏவுவான். அந்த விக்கிரம கேசரி வந்து உன்னைப் பிடித்துக்கொண்டு போவான். அப்பொழுது நீ நான் கூறிய கதைகளை அவனிடம் கூறு. அவன் மூலம் உன் சாபம் நீங்கப் பெறுவாய்" என்ருர்.

மனைவியின் சொல்லைக் கேட்டுத் தவறு செய்ததால் வந்த வினையை நினைத்து வருந்திய வேதியன், அன்றிலிருந்து வேதாள உருவத்துடன் முருக்க மரத்தில் தொங்கிக்கொண்டிருந்தான்.

---

## விக்கிரம கேசரி வேதாளத்தைப் பிடித்த வரலாறு

நிலவுலகில் உச்சைனி என்பது ஒரு நகரம். அது மாட மாளிகைகளாலும் கூடகோபுரங்களாலும் சிறப்புற்றிருந்தது. அதனை விக்கிரம கேசரி என்ற மன்னன் ஆண்டுவந்தான்.

அவன் ஒருநாள் தன் கொலுமண்டபத்தில் இருந்தபொழுது சாந்தசீலன் என்ற முனிவன் அங்கு வந்தான். அவன் கண்ணைக் கவரும் மாதுளங்கனி யொன்றை அரசனுக்குக் கொடுத்தான். அம்முனிவன் இவ்வாறு நாள்தோறும் அரசனுக்கு ஒரு மாதுளங்கனியைக் கொடுத்துவந்தான். இவ்வாறு பத்தாண்டுகள் கழிந்தன. ஒரு நாள் அரசன் முனிவனிடமிருந்து பெற்றுக்கொண்ட மாதுளங்கனியைத் தன் மகனுகிய சிறுவனிடம் கொடுத்தான். ஒரு மந்தி உடனே அதனைப் பறித்துக்கொண்டு வாயில் வைத்துக் கடித்தது. அப்பொழுது

அதனுள்ளிருந்து ஒளிவீசும் இரத்தினங்கள் சிதறின. அது கண்ட அரசன் முனிவன் கொடுத்திருந்த எல்லா மாதுளங் கனிகளையும் வருவித்து உடைத்துப் பார்த்தான். அவற்றி லிருந்து இரத்தினங்கள் வெளிப்பட்டன. அரசன் அவற்றைக் கண்டு வியந்து நின்றான்; மாதுளங்கனிகளைத் தந்த முனி வனைக் காண அவாக் கொண்டான்.

அடுத்த நாள் சாந்தசீல முனிவன் வழக்கம்போல் வந்து அரசனுக்கு ஒரு மாதுளங் கனியைக் கொடுத்தான். அரசன், "முனிவரே, நீர் இங்ஙனம் செய்வதன் காரணம் யாது?" என்று கேட்டான். முனிவன், "மன்னனே, அமரபட்சம் சதுர்த் தசியில் நள்ளிரவில் மயானத்தில் யான் ஒரு வேள்வி செய் வேன். நீ அங்கு வந்திருந்து அதனை முடிக்க வேண்டும்," என்று வேண்டிக்கொண்டான். மன்னன் இசைந்தான்.

முனிவன் குறிப்பிட்ட நாள் இரவில் மன்னன் தனியே வாளுடன் மயானத்துக்குச் சென்றான். முனிவன் மகிழ்ச்சி யடைந்து, "சொல் தவறாத செம்மலே, இதற்குத் தென் திசை யில் உள்ள முருக்க மரம் ஒன்றில் தொங்கும் வேதாளம் ஒன்றைக் கைப்பற்றி இங்குக் கொண்டுவர வேண்டுகிறேன்," என்றான்.

மன்னன் முனிவன் கூறிய இடத்திற்குச் சென்றான்; அவன் குறிப்பிட்ட மரத்தில் தலை கீழாகத் தொங்கிய வேதா ளத்தைப் பார்த்தான். அரசன் அம் மரத்தில் ஏறினான்; வேதாளத்தைக் கீழே பிடித்துத் தள்ளினான்; தானும் இறங்கி னான். மன்னன் இறங்கியவுடன் வேதாளம் பழையபடி மரத்தில் ஏறிக்கொண்டது. மன்னன் மீண்டும் மரத்தில் ஏறினான்; வேதாளத்தைத் தன் முதுகில் இழுத்துக் கட்டிக் கொண்டு, பின்பு மரத்தை விட்டு இறங்கினான். சிவபெருமான் கூறிய சாபம் நீங்கும் காலம் வந்துவிட்டது என்பதை உணர்ந்த வேதாளம் மகிழ்ச்சியடைந்தது. அது அரசனை நோக்கி, "அரசே, வழிநடையின் வருத்தம் தெரியாதிருக்கச் சில கதை களைச் சொல்கின்றேன், கேள்" என்று கூறியது. மன்னன் வாய் திறவாது நடந்தான். வேதாளம் கதை சொல்லத் தொடங்கியது.

---

குறிப்பு : அமரபட்சம் சதுர்த்தசி என்பது அமாவாசைக்கு முதல் நாள் ஆகும்.

# 1. பதுமாபதி கதை

கங்கைநதிக் கரையிலே உள்ள தஞ்சநகர் என்னும் அழகிய நகரத்தைப் பிரதான மகுடன் என்ற அரசன் ஆண்டு வந்தான். அவன் மனைவி சொற்பிரபை என்பவள். அவர்களுடைய மைந்தன் பெயர் வச்சிரமகுடன் என்பது. அரசனுடைய விருப்பத்திற்குரிய அமைச்சன் காரியப்பிரதானன் என்பவன். அவன் மைந்தன் புத்திசித்தன் என்பவன். அரசன் மைந்தனாகிய வச்சிரமகுடனும் மந்திரி மைந்தனாகிய புத்திசித்தனும் ஒன்றுசேர்ந்து பல கலைகளையும் கற்றார்கள்.

இருவரும் மகிழ்ச்சியோடு கலந்து பழகிக் கலைகளைக் கற்றும் விளையாடியும் பொழுது போக்கினர்; பல ஆண்டுகள் சென்றபின் காளைப்பருவம் எய்தினர். ஒரு நாள் இருவரும் சேர்ந்து வேட்டையாடக் காட்டிற்குச் சென்றார்கள். காட்டில் வேட்டையாடி நீர் வேட்கை அடைந்து, நெடுந்தொலை நடந்து, அங்கு இருந்த ஒரு குளத்திலே நீர் பருகி, அதன் அருகில் உள்ள சோலை நிழலில் தங்கியிருந்தார்கள்.

அவர்கள் தங்கியிருந்த சோலையின் வழியாக மிக அழகிய பெண் ஒருத்தி தோகை மயில் போல நடந்து சென்றாள். அவளுடன் தோழிகளும் சென்றார்கள். அப் பெண்ணின் அழகைக் கண்டு இளவரசன் காதல் கொண்டான். மனந் தடுமாறிக் காதலால் வருந்திய இளவரசனுடைய நிலையை அப்பெண்ணும் அறிந்துகொண்டாள். அவள் தன் கூந்தலில் அணிந்திருந்த நீல மலரை எடுத்து முதலில் தன் செவிகளில் வைத்தாள்; பின்பு தன் பல் வரிசைகளில் வைத்தாள்; அதன் பின்பு காலின்மேல் வைத்துப் பிறகு எடுத்து மார்பில் அணைத்துக்கொண்டாள். இவைகளை எல்லாம் மன்னன் மகனும் அமைச்சன் மகனும் கண்டார்கள். அதன்பிறகு அப் பெண்ணனவள் தோழிகளுடன் புனலாடிய பின், தன் வீட்டிற்குச் சென்றாள். மன்னன் மைந்தனும் தன் துணைவனுடன் தன்னூருக்குச் சென்று தங்கியிருந்தான்.

மன்னன் மகன் நாள்தோறும் அப்பெண்ணை நினைந்து நினைந்து வாடி வருந்துவதை மந்திரி குமாரன் புத்திசித்தன் கண்டு தேறுதல் மொழிகள் பல சொல்லிவந்தான். மேலும்

புத்திசித்தன் அரசகுமாரனைப் பார்த்து, "நண்பா, அப்பெண் நீல மலரை எடுத்து முதலில் தன் காதில் வைத்தாளல்லவா? அதன் பொருளை அறிவாயா? அவளுடைய ஊர் கன்ன புரம் என்பதற்கு அவ்வாறு செய்தாள். கன்னம் என்பது காது அல்லவா? அம்மலரை எடுத்துப் பல்லின்மேல் வைத் தாளே, அதன் கருத்து என்ன? அவள் தான் மந்திரியாகிய பல்லவன் மகள் என்பதைத் தெரிவிக்க அவ்வாறு செய்தாள். அந்நாட்டு அரசன் பெயர் காலிங்கன் என்பது. அதனால் மலரைக் காலின்மேல் வைத்தாள். பதுமம் போன்ற தன் பாதத்தின்மேல் வைத்ததனால் அவள் பெயர் பதுமாபதி என் பதை நமக்குத் தெரிவித்தாள். அம்மலரை எடுத்து இறுதியில் அணைத்துக்கொண்டாளே, அதன் பொருள் என்ன? உன்னை அவள் மணந்து அணைத்துக்கொள்ள விரும்புகிறாள் என்பது தான் பொருள்" என்றான்.

இவ்வாறு மந்திரி மகனான புத்திசித்தன் கூறியதைக் கேட்டு அரச குமாரன் மிகுந்த காதலுடையவனாய் மன்மத னுடைய அம்புகளால் வேதனைப்பட்டு வருந்தினான். பின்பு இருவரும் கன்னபுரத்தை நாடி விரைந்து சென்றார்கள். கன்னபுரத்தை அடைந்த காளையர் இருவரும் அப்பெண்ணி னிடத்து யாரைத் தூது அனுப்பலாம் என எண்ணினர். முடிவில் ஒரு முதுமகளைக் கண்டு, அவளிடம் தங்கள் செய்திகளை எல்லாம் சொல்லி, அப்பெண்ணினிடத்துத் தூது போய் வரும் படி கூறினார்கள். கிழவியும் அவர்கள் சொன்னபடியே மந்திரி மாளிகையுள் சென்று சோலையிற் கண்ட அரச குமாரன் வந்திருக்கும் செய்தியைத் தெரிவித்தாள். அதுகேட்ட மந்திரி குமாரியாகிய பதுமாபதி என்பவள் சினம் கொண்டவள் போல் நடித்துக் கற்பூரத்தூளிமேல் தன் கை விரல்கள் பத்தை யும் பதித்து, அக்கிழவியின் மார்பிலே அப்பி அடையாளம் செய்து, திருப்பி யனுப்பினாள். அதனைக் கண்ட மன்னன்மகன் மிகுந்த மனவருத்தம் உற்றான். கூர்மையான அறிவுடைய புத்திசித்தன் அந்த அடையாளத்தின் பொருளை மன்னன் மகனுக்குக் கூறினான்; "தோழனே, இன்னும் பத்துநாள் நிலவு ஒளி வீசிக்கொண்டிருக்கும் ஆதலால் மாளிகைக்குள் வர முடியாது, பத்துநாள் கழித்து வர வேண்டும் என்பதுதான்

அதன் பொருள்" என்றான். இதனைக் கேட்ட மன்னன் பத்து நாள் பொறுத்திருந்தான்.

குறிப்பிட்ட நாள் வந்ததும் இருவரும் முன்போலவே கிழவியைப் பதுமாபதியிடம் தூது அனுப்பினர். கிழவியைக் கண்டவுடன் பதுமாபதி முன்போலவே கோபங் கொண்டவள் போல நடித்துச் சிவப்பு நிறமான சாந்தை மூன்று விரல்களிலே நனைத்து, அக்கிழவியின் மார்பிலே பொட்டு இடுவது போல அடையாளம் செய்து, வந்த வாசல் வழியில் அனுப்பாமல் வேறு வழியிலே அனுப்பினுள். அதனைக் கண்ட புத்திசித்தன் வச்சிரமகுடனைப் பார்த்து, "நண்பனே, இப்பொழுது அவள் அனுப்பிய அடையாளம் தெரிவிப்பது என்ன தெரியுமா? பதுமாபதி மூன்று நாள் தீண்டக் கூடாத தீட்டு உடையவள் என்றும், கிழவி திரும்பி வந்த வழியில் மூன்று நாள் கழித்து வந்தால் நினைத்த காரியம் முடியும் என்றும் தெரிவிக்கிறது" என்றான்.

வச்சிரமகுடன் மூன்று நாள் கழித்துக் குறிப்பிட்ட வழியாகவே சென்று பதுமாபதியைக் கண்டான். இருவரும் மனங் கலந்து பிரிவின்றி இன்பத்தில் மூழ்கி இருந்தனர். இங்ஙனம் பல நாட்கள் சென்றன. ஒருநாள் காலையில் அரச குமாரனுக்குத் தன் துணைவன் புத்திசித்தனுடைய நினைவு வரவே, சிறிது மனங்கலங்கி யிருந்தான். அதனைக்கண்ட பதுமாபதி, "அரசே, ஏன்முகவாட்டமாய் இருக்கிறீர்கள்?" என்று கேட்டாள். அதற்கு அவன் தன் தோழனைப்பற்றிக் கூறினான். அதுகேட்ட பதுமாபதி, மந்திரி குமாரன் இவனை ஒரு வேளை அழைத்துக் கொண்டு போய்விடுவானே என்று ஐயங்கொண்டு, அதனை வெளியில் தெரியாமல் மறைத்து, அரசகுமாரனை நோக்கி, "என் அன்பே, இத்தனை நாள் வரையும் ஏன் என்னிடம் தெரிவிக்காமல் இருந்தீர்கள்? இதோ இப்பொழுது நான் கொடுக்கும் சிற்றுண்டியைக் கொண்டுபோய்க் கொடுத்து அவரை உண்ணச் செய்து ஆறுதல் மொழி கூறி வாருங்கள்" என்று அனுப்பினாள்.

அரசகுமாரனும் அவ்வாறே சென்று புத்தி சித்தனைக் கண்டு மனங் கலந்து பேசிப் பின்பு சிற்றுண்டியையும் அளித்தான். அதனைப் பெற்றுக்கொண்ட புத்திசித்தன், "நண்பா,

நான் வந்திருக்கும் செய்தியை ஏன் கூறினாய்? அவளுடைய களவொழுக்கம் பிறருக்குத் தெரிந்துவிடக் கூடாது என்ற அச்சத்தால் அவள் எதுவும் செய்துவிடுவாள். இதோ பார், இந்தச் சிற்றுண்டியிலும் ஏதோ நஞ்சு கலந்திருப்பதுபோல் தெரிகிறது'' என்று சொல்லி, அவ்வுணவை ஒரு நாய்க்கு இட்டான். அதனை உண்ட நாய் உடனே மயக்கங்கொண்டு அவ்விடத்திலே விழுந்து இறந்தது. அதனைக்கண்ட மன்னன் வெட்கங்கொண்டு முகம் கவிழ்த்து நின்றான்.

மந்திரி குமாரன் அவனைப் பார்த்து, "ஏன் வெட்கப்படுகிறாய்? பெண்களில் சிலரை நம்புதல் கூடாது. எல்லாப் பெண்களும் நல்லவர்கள் என்று நினையாதே'' எனக்கூறி, மேலும் பல நன்மொழிகளையும் எடுத்துச் சொல்லி, "நீ இன்று இரவு அவள் தூங்கும்போது அவளுடைய முத்துமாலையைக் கழற்றி எடுத்துக் கொண்டு வந்துவிடு. அதனோடு அவள் மார்பிலே சூல முத்திரை இட்டதுபோல மூன்று கோடுகள் உன் நகக் குறியினாலே இட்டு வா", என்று கூறினான்.

வச்சிரமகுடனும் அவ்வாறே சென்று பதுமாபதியிடம் முன்போலவே மனங் கலந்து பழகினான். அன்று இரவு அவள் தூங்கும்போது, தன் நண்பன் சொன்னது போலவே, முத்து மாலையைக் கழற்றிக்கொண்டு சூல முத்திரைபோல நகத்தால் கீறி அடையாளம் செய்துவிட்டு வந்தான்.

மந்திரி குமாரனை புத்திசித்தன் மாறுவேடம் பூண்டு சுடலைக்குச் சென்று சாம்பலைப் பூசிக்கொண்டு கடுந்தவம் செய்யும் துறவி போல இருந்தான். அரசகுமாரன் அம்முனிவனுடைய மாணவன்போல வேடம்பூண்டு விளங்கினான். முனிவன் தன் மாணவனைப் பார்த்து, "இந்த முத்து மாலையை எடுத்துக்கொண்டு போய் அரசனுடைய அரண்மனைக்கு அருகிலே சென்று விலை கூறிக்கொண்டு இரு. அரசன் கண்டு விலை கேட்டால் சுடலையில் இருக்கும் என் குருநாதருக்குத் தான் தெரியும் என்று சொல்லி அவனை என்னிடம் அழைத்து வா'' என்றான். அவ்வாறே அரச குமாரனை வச்சிரமகுடன் செய்தான்.

சுடுகாட்டிற்கு வந்த அரசனைப் பார்த்து முனிவர் வேடத்தில் இருந்த புத்திசித்தன், "அரசே, இங்கு நான் இரவு பகலாகக் கடுந்தவம் செய்துகொண்டிருக்கிறேன். நாள் தோறும் நள் இரவிலே ஓர் அழகிய பெண் வந்து நெருப்பில் வெந்துகொண்டிருக்கும் பிணங்களின் குடலைப் பிடுங்கி எடுத்து விழுங்குகிறாள். நேற்று நான் அவளைக் கண்டு தடுத்து, 'நீ யார்? ஏன் இப்படிச் செய்கிறாய்!' என அதட்டிக் கேட்டேன். அவள் விடைசொல்ல முடியாமல் விழித்து, என் கால்களிலே விழுந்து, இதனை யாரிடமும் சொல்ல வேண்டா என்று வேண்டிக்கொண்டு, பரிசாக இந்த முத்து மாலையைக் கழற்றி என்னிடம் கொடுத்தாள். நான் வைத் திருந்த சூலத்தை எடுத்து அவள் மார்பில் முத்திரை இட்டு அடையாளம் செய்தேன். அவள் தன் பெயர் பதுமாபதி என்றும், தான் பல்லவன் என்னும் அமைச்சன் மகள் என்றும் கூறினாள். ஆதலால் நீ அரண்மனைக்குச் சென்றதும் அப் பெண்ணை விசாரித்து உண்மை அறிந்துகொள். பெண் கொலை செய்வது பெரும்பாவம் ஆதலால் அவளைக் கொல்லாது காட்டிலே செல்லுமாறு துரத்திவிடு. அவள் ஊரிலே இருந் தால் நாட்டுக்கே கேடு உண்டாகும்; இந்த முத்து மாலை துறவியாகிய எனக்கு வேண்டா. நீ எடுத்துக்கொள்" என்று கூறி, அவன் கையிற் கொடுத்தான். மன்னன் தன் மந்திரியின் மனைக்குச் சென்று நிகழ்ந்தவைகளைக் கூறினான். அவள் மார்பில் இருந்த சூல முத்திரையைக் கண்டவுடன் இவள் செய்தது உண்மைதான் என்று மன்னனும் பெற்றோரும் ஊர்மக்களும் உணர்ந்தனர். பிறகு அனைவரும் குறைகூறி அப்பெண்ணைக் காட்டிற்குத் துரத்திவிட்டார்கள்.

ஒன்றும் சொல்ல முடியாத பதுமாபதி மனம் வருந்திக் காட்டிலே கவலையோடு தங்கியிருந்தாள். அரசகுமாரனை வச்சிர மகுடனும், மந்திரி குமாரனை புத்தி சித்தனும் காட்டிற்குச் சென்று அவளைக் கண்டு ஆறுதல் கூறி அழைத்துக்கொண்டு தம் ஊருக்குச் சென்றார்கள். பதுமாபதியின் தந்தையும் தாயும் தம் பெண்ணின் நிலையை நினைந்து நினைந்து மனம் வருந்தி விரைவிலே இறந்தனர்.

"பதுமாபதியின் தாய் தந்தையர் இறந்த கொலைப்பாவம் யாரைச் சேருமென்று நீ சொல்" என வேதாளம் விக்கிரமாதித்த

மன்னனைக் கேட்டது; "இதற்கு விடை சொல்லாவிடில் நான் உன்னைத் துன்புறுத்துவேன்" என்றும் கூறியது.

விக்கிரமாதித்தன் ஆராய்ந்து பார்த்து, "மன்னவன் நினைக்கின்ற எண்ணத்தை நிறைவேற்ற வேண்டியது அமைச்சனுடைய கடமை. பதுமாபதி செய்த வஞ்சனைக்கு எதிர்ச் சூழ்ச்சி அமைச்சன் மகன் செய்தான். கன்னிப் பெண்ணைக் காதலித்து அழைத்துச் செல்லுதல் அரச குமாரன் போன்ற காளையர்க்கு உரியதாகும். தான் பெற்ற பெண்ணைத் தீர ஆராயாமல் காட்டிற்கு அனுப்பிய பல்லவ மன்னனே தவறு செய்தவன்" என விக்கிரம கேசரி கூறினன்.

வேதாளம் கட்டவிழ்த்துக்கொண்டு மறுபடியும் முருக்க மரத்திலே ஏறிக்கொண்டது.

---

## 2. மந்திராபதி கதை

பிரமதேசம் என்னும் நகரத்தில் வேதங்களைக் கற்ற மறையவர் குலத்தில் பிறந்த சுவாமி என்பவர் ஒருவர் இருந்தார். அவர் நீண்டநாள் தவம்செய்து அத்தவத்தின் பயனுக ஒரு பெண்ணைப் பெற்றெடுத்தார். அவள் மோகினி போன்ற பேரழகு படைத்து விளங்கினள். தேவர் தலைவனுகிய இந்திரனும் மாநில மக்களும் கண்டு பாராட்டும் அழகு பெற்ற அப் பெண்ணுக்கு மந்திராபதி எனப் பெயரிட்டு அவர் வளர்த்து வந்தார்; அறிவிற் சிறந்த ஒருவருக்கே அப்பெண்ணை மணஞ் செய்து கொடுக்க வேண்டும் என்று விரும்பினர். அப்பொழுது ஒரே நேரத்தில் பிராமணர் மூவர் அப்பெண்ணின்மேல் விருப்பம் கொண்டு தமக்கு மணஞ்செய்து கொடுக்கும்படி அப்பெண்ணின் தந்தையை வேண்டினர்.

அவர்களுடைய கல்வித்திறத்தைக் கண்ட தந்தையார் யாருக்கு இப்பெண்ணை மணஞ் செய்துகொடுப்பது என்பது விளங்காமல் வருந்தினர்; பிறகு அவர்களைப் பார்த்து, "உங்களிலே யார் மற்றவர்களை வெல்லும் அறிவு பெற்றவரோ அவருக்குத்தான் மணஞ்செய்து கொடுப்பேன்" எனக் கூறினர். அப் பெண்ணின்மேல் வைத்த மோகத்தினுலே

'எனக்கு-எனக்கு' என அம் மூவரும் சண்டையிட்டுக் கொண்டு இருந்தார்கள். நெடுநாள் இவ்வாறு சண்டையிட்டுக் கலகம் செய்துகொண்டிருப்பதைக் கண்ட அப்பெண் மனம் வருந்திக் கவலையினாலே இறந்துவிட்டாள்.

தாய் தந்தையர் அழுது அப் பெண்ணின் உடலைச் சுடலைக் குக் கொண்டுபோய்க் கொளுத்திவிட்டார்கள். அந்த மூன்று பிராமணர்களிலே ஒருவன் சுடலையில் வெந்த அப்பெண்ணின் சாம்பலைப் பூசிக்கொண்டு அவ்விடத்திலேயே காவல் காத்துச் சுற்றித் திரிந்தான். மற்றொருவன் அவளுடைய எலும்புகளைப் பொறுக்கி எடுத்துக்கொண்டு கங்கையிலே சேர்க்கச் சென்றான். மூன்றாமவன் வாழ்க்கையை வெறுத்துத் துறவியாகித் தீர்த்த யாத்திரை செய்யச் சென்றுவிட்டான்.

மூன்றாமவன் பல ஊர்களுக்கும் சென்று இறுதியில் ஓர் ஊரை அடைந்தான்; பசி பொறுக்க முடியாமல் அந்தணர் தெருவிலே சென்று மருத்தரசன் என்பவனுடைய வீட்டிலே உணவு கேட்டான். அவனும் உணவு அளிக்க இசைந்து, அங்குத் தங்கியிருக்க இடம் கொடுத்தான்; வந்திருக்கும் விருந் தினர்க்கு விரைவில் உணவு சமை, என்று தம் மனைவியிடம் சொல்லிவிட்டு, மருத்தரசன் சந்தி வணக்கம் செய்ய வெளியிற் சென்றான். அப்பொழுது அவனுடைய மகனான ஒரு சிறுவன் அழுது வீட்டில் தொல்லை கொடுத்தான். அந்த மறையவ னுடைய மனைவி அப்பிள்ளையின்மேல் சினம்கொண்டு, கரும்பை ஒடிப்பது போல அவனை ஒடித்து அடுப்பில் வைத்து நெருப்பு மூட்டிச் சமையல் வேலை செய்துமுடித்தாள்.

இதனைக் கண்ட பிராமணன் மனம் வருந்தினான். அப் பொழுது அப் பெண் அடுப்பில் இருந்த சிறுவன் உடற் சாம்பலைக் கொண்டுவந்து குவித்துவைத்து, அதில் நீர்தெளித்து, அப்பையனை எழுப்பினாள். இவைகளைக் கண்ட விருந்தாளி யாகிய பிராமணன், சாம்பலைக் கொண்டு உயிர் பிழைக்க வைக் கும் வித்தையை அப்பெண்ணிடம் கேட்டுத் தெரிந்துகொள்ள விரும்பாமல், திருட்டுத் தனமாகத் தெரிந்துகொண்டான். உடனே பிரமதேசம் என்ற நகரத்துக்குச் சென்று அந்த ஊர்ச்சுடலையில் இருந்த சாம்பலைக் குவித்து எலும்பையும் கொண்டுவரச்செய்து அதனுடன் சேர்த்து நீர்தெளித்து இறந்த பெண்ணை எழுப்பினான்.

உயிர் பெற்றெழுந்த பெண் முன்பு இருந்ததை விடப் பலமடங்கு பேரழகு பெற்று விளங்கினாள். மறுபடியும் பிராமணர் மூவரும் அந்தப்பெண் 'எனக்கு வேண்டும்-எனக்கு வேண்டும்' என்று சொல்லிச் சண்டையிட்டுக் கொண்டார்கள். "இந்த மூவரிலே யாருக்கு இப்பெண் உரியவள் ஆவாள்?" என வேதாளம் விக்கிரமாதித்த மன்னனைக் கேட்டது.

"எலும்பை எடுத்துக்கொண்டு கங்கையிற் கலக்கச் சென்றவன் அப்பெண்ணுக்கு மகன் முறையாவான். சாம்பலில் நீர் தெளித்து அப்பெண்ணை எழுப்பினவன் அப்பெண்ணுக்குத் தந்தை முறையினன் ஆவான். சுடலையில் இருந்து சாம்பலைப் பூசிக்கொண்டு காவல் காத்துக்கொண்டிருந்தவனே அப்பெண்ணை மணஞ் செய்துகொள்ள உரிமை உடையவன்" என மன்னன் கூறினான். அதுகேட்ட வேதாளம் கட்டு அவிழ்த்துக்கொண்டு மறுபடியும் சென்று முருக்க மரத்தில் ஏறிக்கொண்டது.

---

## 3. கிளிகள் கூறிய கதைகள்

எல்லாவகைச் சிறப்புக்களையும் உடைய உமாபதி என்னும் ஊரிலே நரகேசரிஎன்னும் அரசன் ஒருவன் இருந்தான். அவன் அழகான ஆண் கிளி ஒன்றை வளர்த்துவந்தான். அது முக்கால நிகழ்ச்சிகளையும் நன்றாய் அறிந்து அரசனுக்குச் சொல்லிவந்தது. புதுமைகளை எல்லாம் எடுத்துச் சொல்லிவந்த அந்தக் கிளியைப் பார்த்து அரசன், "எனக்கு எப்பொழுது மணம் ஆகும்; எந்தப் பெண் எனக்கு மனைவியாவாள்? சொல்" என்று கேட்டான்.

"அரசே, ஆகமதம் என்னும் தேசத்தைச் சந்திரலோசனன் என்னும் அரசன் ஆண்டுவருகின்றான். அவன் மகள் சந்தனமாபதி என்பவள். அவள் ஒரு பெண் கிளி வளர்த்து வருகின்றாள். அதுவும் என்னைப் போலவே முக்காலமும் உணர்ந்து அவளுக்கு நல்ல அறிவுரைகளைக் கூறி வருகின்றது. அவள் ஒரு நாள் தன் கிளியைப் பார்த்துத் தன்னை எப்பொழுது எந்த மன்னன் மணஞ் செய்துகொள்வான் என்று கேட்டாள். அந்தக் கிளி உன் பெயரைச் சொல்லி அவனிடம் நீ வலியச்

சென்று மணம் புரிந்துகொள்வாய். அதுவே நடைபெறும் என்று சொல்லியது. ஆதலால் அக்கிளி சொன்ன சொல் தவருது என்பதை உணர்ந்த அரசன் தன் பெண்ணை அழைத்துக் கொண்டு உன் நாட்டை நோக்கி வந்துகொண் டிருக்கிருன். அவர்கள் நாளை இங்கு வந்து சேர்வார்கள். அந்தப் பெண்ணை நீ மணந்து கொள். அப் பெண்ணே உனக்கு மனைவி ஆவாள் என அயன் எழுதிய எழுத்து உன் தலையில் இருக்கிறது" என்று கிளி கூறியது.

கிளி சொன்னபடியே ஆகம தேசத்து அரசன் தன் மகள் சந்தனமாபதி என்பவளை அழைத்துக்கொண்டு மறுநாள் வந்து சேர்ந்தான். அரசன் அவர்களை வரவேற்று முறைப்படி ஒரு நல்ல நாளிலே திருமணம் செய்துகொண்டான்.

மன்னனும் புதுமணப் பெண்ணுகிய சந்தனமாபதியும் மகிழ்ச்சியோடு வாழ்ந்தபோது தாம் வளர்த்துவந்த ஆண் கிளியையும் பெண் கிளியையும் ஒரு கூண்டிலே விட்டு வளர்த்தார்கள். ஆண் கிளியானது பெண் கிளியினிடத்து நெருங்கி வந்து மகிழ்ச்சியோடு உரையாடத் தொடங்கியது. அப்போது பெண் கிளி ஆண் கிளியைப் பார்த்து, "இந்த உலகத்தில் ஆண்களை நம்புதல் கூடாது. நீ என் அருகில் வராதே" என்றது. அதனைக்கேட்ட ஆண் கிளி, "இவ்வுலகத் தில் பெண்களை நம்புதல்கூடாது" என்றது. இவை யிரண்டும் வழக்காடுதலைக் கேட்ட அரசன் அவைகளைப்பார்த்து, "உங்கள் வழக்கு என்ன? கூறுங்கள்" என்ருன். பெண் கிளி, "அரசே, ஆண்களை நம்பக்கூடாது என்பதற்கு நான் ஒருகதை கூறு கிறேன்" என்று பின்வரும் கதையைக் கூறியது.

## 1. பெண் கிளி கூறிய கதை

மக்கள் மனம் மகிழ்ந்து வாழும் வசந்திப்பதி என்னும் ஊரில் தனதத்தன் என்னும் வணிகன் ஒருவன் இருந்தான். அவன் மிகுந்த வல்லமை யுடையவன். அவன் மகன் தத்தன் என்னும் பெயர் உடையவன். அவன் கற்கவேண்டிய கலைகளை யெல்லாம் கற்றுத் தேறினன். தாய் தந்தையர் காலஞ் சென்ற பிறகு மிகுந்த செல்வத்துக்குரியவனுக அவன் விளங்கினன்.

சில ஆண்டுகளில் அவன் தன் செல்வத்தை யெல்லாம் விலை மகளிரோடு கூடி விரைவிலே செலவழித்துவிட்டு மிகுந்த வறுமையுடையவன் ஆனான்; உணவுக்கும் வழியின்றி வறுமை வந்ததனால் சந்தனமாபதி என்னும் ஊரை நோக்கி நடந்தான். அவ்வூரில் இரணிய கர்ப்பன் என்னும் பெயருடைய வணிகன் ஒருவன் இருந்தான். அவன் மிகுந்த செல்வமுடையவன். அவனிடத்தில் தத்தன் என்னும் இவ்வணிகன் சென்று தன்னுடைய ஊர், பெயர், தான் கற்ற கல்வி, தன் திறமை முதலியவைகளைக் கூறினான்; வாணிபத்தில் தனக்கு நிறைந்த திறமை உண்டு என்றும் தந்தையாருடன் சினம் கொண்டு தான் வந்ததாகவும் பொய் கூறினான். அவன் கூறிய மொழிகளைக் கேட்ட இரணிய கர்ப்பன் உண்மை என நம்பித் தனக்கு ஒரு நல்ல துணை கிடைத்தது என எண்ணித் தன்வீட்டில் சேர்த்துக் கொண்டான்; சில நாள் சென்ற பின் தன் மகளையும் அவனுக்கு மணஞ் செய்து கொடுத்தான். தத்தன் தன் மாமனுடன் துணையாய் இருந்து வாணிபத்தை நன்றாய் நடத்திக் கொண்டு சில நாள் வாழ்ந்துவந்தான்.

தத்தன் ஒரு நாள் தன் மாமனைப் பார்த்து, "நான் இங்கு வந்திருக்கும் செய்தி என் தாய் தந்தையர்க்குத் தெரியாது; ஆதலால் நானும் என் மனைவியும் சென்று என்னுடைய தாய் தந்தையரைப் பார்த்துவிட்டு விரைவில் வருகின்றோம்" என்று கூறினான். இரணிய கர்ப்பனும் தன் மகளை அலங்கரித்து அவனுடன் அனுப்பினான்.

போகும் வழியில் தத்தன் தன் மனைவியைப் பார்த்து, "இக் காட்டில் கள்வர் கூட்டம் மிகுதி; ஆதலால் உன் நகைகளைக் கழற்றி என்னிடம் கொடு" என்று கூறி வாங்கி ஒரு துணியில் முடிந்துகொண்டான்; சிறிது தொலைவு சென்றதும் அவளைப் பிடித்து ஒரு கிணற்றில் தள்ளிவிட்டுச் சென்றான். கிணற்றில் விழுந்த பெண் அங்கிருந்த ஒரு கொடியைப் பிடித்துக்கொண்டு நீரில் முழுகாமல் இருந்து அழுதாள். அவ்வழியே சென்ற மக்கள் அவளைத் தூக்கிக் கரையிற் சேர்த்து, அவளுடைய பெற்றோர் வீட்டுக்கு அனுப்பினர்.

தாய் தந்தையர் அப் பெண்ணைப் பார்த்துக் கேட்டபோது, அப்பெண், வழியிலே கள்வர் வந்து தன் நகைகளை யெல்லாம்

கழற்றிக்கொண்டு தன்னைக் கிணற்றில் தள்ளிவிட்டனர் என்றும், தன் கணவனைப் பிடித்துக்கொண்டு போய்விட்டதாக வும் கூறினாள்.

நகைகளை எடுத்துச் சென்ற தத்தன் விலைமாதர்மீது மையல் கொண்டு அவற்றை விற்றுச் செலவழித்து விட்டான்; தன் மனைவி கிணற்றிலே இறந்திருப்பாள் என நினைத்து மறுபடியும் தன் மாமன் வீடு நோக்கி வந்தான். வந்தவன் வீட்டு முன்பக் கத்திலே அப் பெண் இருப்பதைக் கண்டு அஞ்சித் திரும்பி ஓடினான். அந்தப் பெண்ணும் அவனைப் பின் தொடர்ந்து போய்த் தனியே அழைத்து அவன்மீது குற்றம் இல்லாதபடி தான் தன் பெற்றோரிடம் சொல்லியிருப்பதைக் கூறினாள். அதுகேட்ட தத்தன் மகிழ்ந்து மாமனார் வீட்டுக்கு வந்தான்.

அவனைக் கண்ட மாமன் மாமி முதலிய சுற்றத்தார்கள் வாய் விட்டு அழுது அவனுக்கு நேர்ந்த துன்பங்களை நினைத்து வருந் தினர்; அவனுக்கு விருந்து முதலியன செய்தனர். பின்பு அவன் முன்போலவே தன் மாமனுடன் சேர்ந்து வாணிகத்தை நடத்திவந்தான். சில நாள் சென்றதும் அவன் அறிவு தடு மாறி, ஒரு நாள் இரவில் தன் மனைவி தூங்கும்போது அணிகளை எல்லாம் கழற்றி எடுத்துக்கொண்டான்; வாளால் அவள் கழுத்தை அறுத்துக் கொன்றுவிட்டு இருளிலே ஓடிவிட்டான்.

பொழுது விடிந்ததும் உண்மை அறிந்த தாய் தந்தையர் மனம் வருந்தினர்; கவலையினாலே சில நாளில் இறந்து போயி னர். செய்த நன்றியை மறந்தான் தத்தன். ஆதலால் மன் னனே, ஆண்களை நம்பலாமோ? எனப் பெண் கிளி கேட்டது.

அதனைக் கேட்ட ஆண் கிளி அரசனைப் பார்த்து, அரசே, "பெண்களை நம்பக் கூடாது என்பதற்குப் பல சான்று கள் இருக்கின்றன. அவைகளிலே ஒன்றாக இப்பொழுது நான் ஒரு கதை கூறுகிறேன், அதனைக்கேள்" என்றது.

## 2. ஆண் கிளி கூறிய கதை

சோலையும் ஆலயங்களும் நிறைந்து அழகுபெற்ற ஊர் அருட்பதி என்பது. அதனைச் சிறந்த முறையில் தரிமரித் தலைவன் என்னும் அரசன் ஆண்டுவந்தான். அந்நகரத்தில்

செல்வம் மிக்க வணிகர் பலர் இருந்தனர். அவர்களில் தன தத்தன் என்பவன் ஒருவன். அவன் மகள் வசுமதி என்பவள். வணிகன் பொருத்த நிமித்தங்கள் பார்த்து சமுத்திர தத்தன் என்னும் வணிகனுக்குத் தன் மகளை மணஞ் செய்து கொடுத்தான்.

சமுத்திர தத்தன் சில ஆண்டுகள் தன் மனைவியோடு இருந்து இல்லறம் நடத்தி வாழ்ந்தான்; பின்பு திரைகடல் ஓடித் திரவியம் தேட வேண்டும் என்னும் விருப்பத்தினாலே தன் மனைவிக்கு வேண்டிய பொருள் வசதிகளைச் செய்துவிட்டுக் கப்பலேறி வெளிநாடு சென்றான். அப்பெண் வீட்டில் இருந்து வந்தாள்; அப்போது தீவினையினாலே அவள் அறிவு சிறிது கலங்கியது. அதனால் அவ்வூரில் இருந்த அந்தணன் ஒருவனோடு அவள் கள்ள நட்பு உடையவளாய் இருந்தாள். வாணிகத்துக்காக வெளிநாடு சென்றிருந்த கணவனாகிய சமுத்திரதத்தன் சில ஆண்டுகளில் தன் ஊருக்கு வந்து சேர்ந்தான். ஒருநாள் இரவு வணிகன் தன் மனைவியோடு படுத்துத் தூங்கிக்கொண்டிருந்த போது, அவனுக்குத் தெரியாமல் அவள் தன் வேலைக்காரிமூலம் கள்ளக் கணவனை வரவழைத்தாள். வந்தவன் பிறர் அறியாத படி வீட்டின் வெளியில் ஒரு மூலையிலே ஒளிந்துகொண்டிருந்தான். அவனை அவ்வூர்க் காவலர் கண்டு, திருடன் என்று நினைத்து, வாளால் எறிந்து மண்ணின்மேல் தள்ளிவிட்டுச் சென்றார்கள்.

கணவன் துயில்வதைச் சோதித்தறிந்த பெண், அந்தணன் இருக்கும் இடத்திற்கு விரைந்து வந்தாள்; அவன் ஒன்றும் பேசாமல் இருக்கவே, தன்மேற் கோபம் கொண்டு அவ்வாறு இருக்கின்றான் என நினைத்து முகத்தோடு முகம் வைத்து முத்தம் கொடுத்தாள். வாய் திறந்து உயிர்விடும் நிலையில் இருந்த அந்தணன் தன் வாயை மூடும்போது அப்பெண்ணின் மூக்கு அவன் பற்களுக்கு இடையில் பட்டு அறுபட்டுவிட்டது.

மூக்கின் ஒரு பகுதி அந்தணன் வாய்க்குள் அகப்பட்டுக் கொண்டது. உடனே அவள் உடல் நடுங்கி இதற்கு நாம் என்ன செய்யலாம் என நினைத்துத் தூங்குகின்ற தன் கணவனே தன் மூக்கை அரிந்துவிட்டான் என்று ஊரார் கேட்கும்படி கூறி அலறினாள். தூங்கிய கணவன் விழித்து எழுந்து மனைவியைப்

பார்த்து இது என்ன விபரீதம் என்று பெருமூச்சுவிட்டு நின்றான். ஊர் மக்கள் திரண்டு வந்தார்கள். மன்னன் அவர்களை அழைத்துக் கேட்டான்.

மன்னன் வணிகனைப் பார்த்து "குற்றம் ஒன்றும் செய்யாத மனைவியின் மூக்கை நீ இவ்வாறு அரியலாமோ" என்று கூறி, "இவனை வாளால் கொல்லுங்கள்" என்று கொலையாளர்க்குக் கட்டளை இட்டான். அப்பொழுது இரவிற் காவல் காத்த ஊர்க் காவலர் விரைந்து ஓடி வந்தனர். 'அரசே, நேற்று இரவு நாங்கள் காவல் புரிந்த போது இப்பெண்ணின் வீட்டருகில் ஒருவன் மறைந்து நின்றான். அவன் கள்வன் என்று நினைத்து நாங்கள் கொன்று கிடத்திவிட்டுச் சென்றோம். பின்பு இப்பெண் அங்கு ஓடிவந்து அவன் குற்றுயிராய்க் கிடப்பது தெரியாமல் அவன் முகத்தோடு முகம் வைத்து முத்தம் கொடுத்தாள். அவன் வாய்ப்பற்கள் சேரும் நேரமாதலால் அவன் வாயில் இவள் மூக்கு அகப்பட்டுத் துண்டமாகிவிட்டது. இப்பொழுதும் அவன் வாயினுள் இவள் மூக்கு இருக்கிறது; நீங்கள் பாருங்கள்" என்று சொன்னார்கள். இவைகளைக் கேட்ட அரசன் அதிசயித்துத் திகைத்து நின்றான்; பிறகு அப்பெண்ணைத் தண்டிக்குமாறு கொலையாளியிடம் கூறினான்.

இவ்வாறு ஆண் கிளி கதையைக் கூறி, "அரசே, இப்பொழுது யார் செய்ந்நன்றி மறந்தவர் ? சொல்லும்" என்றது.

வேதாளம் விக்கிரமாதித்தனைப் பார்த்து, "இக்கிளிகளில் தோற்றது எது? சொல்லும் " என்றது.

"ஆடவர் எல்லோரும் கெட்டவர் அல்லர். சிலர் தாம் அப்படிச் செய்வர். பெண்களே பாவ வடிவமானவர். அவர்கள் செய்யும் தீமைக்கு அளவு இல்லை; ஆதலால் பெண்கிளியே தோற்றது" என மன்னன் கூறினான். வேதாளம் மறுபடியும் கட்டவிழ்த்துக் கொண்டு ஓடி மரத்தில் ஏறிக்கொண்டது.

---

## 4. வீரபரணன் கதை

சோமப்பதி என்னும் நகரம் மறைநூல் முழக்கமும், வேள்வி யொலியும் கேட்கும் சிறப்புடையது; தேரோடும் திருவீதிகள் பலவற்றையுடையது. அந்நகரத்தைச் சுத்தவிராசன் என்னும் மன்னன் ஆண்டுவந்தான். அவன் சோமப்பிரபை என்னும் தன் மனைவியோடிருந்து அரசாண்டு வந்த காலத்தில் வீர பரணன் என்னும் பெயருடைய வேதியன் ஒருவன் தன்னுடன் மனைவியையும் மகனையும் மகளையும் அழைத்துக்கொண்டு அரசனைக் காண வந்தான். வாயிற் காவலர் உள்ளே சென்று அந்தணனாகிய வீரன் ஒருவன் தன் மனைவி மக்களுடன் வந்திருப்பதாக அரசனிடம் கூறினர். மன்னன் அவனை உள்ளே அனுப்புமாறு கூறினான். கட்டளைப்படி உள்ளே வந்த அந்தணனைப் பார்த்து அரசன், "நீயார்? இங்கு வந்த செய்தி என்ன?" என்று கேட்டான். அந்தணன், "அரசே, நான் மாளுவ தேசத்திலிருந்து உன்னைக் காண இங்கு வந்தேன். நான் சேவகம் செய்வதிலே வல்லவன். நீ எனக்கு நாள் தோறும் ஐந்நூறு பொன் அளித்து வருவாயானால் எந்த வேளையிலும் உடனிருந்து உன்னைப் பாதுகாப்பேன்" என்றான்.

மன்னன் அந்த வீரனுடைய திறமையைக் காணும் அவா வினால் நாள்தோறும் ஐந்நூறு பொன் கொடுக்கும்படி தன் அதிகாரிகளுக்குக் கட்டளையிட்டான்; அவன் குடும்பத்தார் தங்கி யிருப்பதற்கு ஒரு வீடு கொடுத்தான்; அவன் என்ன செய் கின்றான் என்பதை அறிந்து வரும்படி ஒற்றன் ஒருவனையும் ஏவினான். அந்தணன் தான் பெற்றுக்கொண்டு சென்ற ஐந் நூறு பொன்னில் இருநூற்றைத் தேவர்க்கு (ஆலயத்துக்கு)க் கொடுத்துவிட்டான்; அந்தணர், நாவலர், முதலியவர்களுக்கு நூறு பொன்னைக் கொடுத்தான்; தன் வீட்டுக்கு வரும் விருந்தி னர்க்கும் தனக்குமாக எஞ்சிய இருநூறுபொன்னையும் செலவிட் டான்; அவ்வாறே நாள்தோறும் தான் பெற்றுவந்த ஐந்நூறு பொன்னையும் செலவிட்டுவந்தான். இதனை ஒற்றர் மூலம் அறிந்த மன்னன், தான் சொன்ன சொல்லின்படியே நாள் தோறும் ஐந்நூறு பொன் கொடுத்துவந்தான். மன்னன் கொடுத்துவந்த பொருளாலும் அவன் காட்டிய அன்பினாலும் வீரன் அவனை விட்டுப்பிரியாமல் இரவு பகலாகத் துணையா

யிருந்து பாதுகாத்து, மற்றவர்களைக் காட்டிலும் சிறந்த புகழ் பெற்றான்.

ஒரு நாள் நடு இரவில் ஒரு பெண்ணின் அழுகுரல் கேட்டது. மன்னன் அதனை யறிந்து வரும்படி வீரனை அனுப்பினான். வீரன் சென்றவுடன் அவன் என்ன செய்கிறான் என்பதை அறிவதற்காக மன்னன் அவனுக்குத் தெரியாமல் பின் தொடர்ந்து சென்றான். ஊரின் எல்லையை அடைந்ததும் அழுதுகொண்டிருந்த பெண்ணை வீரன் கண்டு, "ஏன் அழுகின்றாய்? உனக்கு என்ன குறை வந்தது?" என்று அதட்டிக் கேட்டான்.

எல்லோரும் தூங்கும் நடு இரவிலே அஞ்சாமல் தனியே வந்த வீரபரணனுடைய வீரத்தை மெச்சினாள் அங்குப் பெண் வடிவில் நின்று அழுதுகொண்டிருந்த காளியம்மன். "வீரா, நான் சொல்வதைக் கேள்: நான் காளியம்மன். இந்த நாட்டை ஆண்டுகொண்டிருக்கின்ற மன்னன் முறையோடு ஆண்டு கொண்டிருப்பதால் நான் மகிழ்ந்து செருக்கோடு இருக்கின்றேன். அவன் செய்த பூசைகளால் மகிழ்ச்சியடைந்தேன். மன்னனுக்கு ஒரு தத்து வருகின்றது. அதனை நினைந்து வருந்துகின்றேன். நீமட்டுமன்று, நானும் அரசனுடைய உதவியாலே வறுமையின்றி வாழ்ந்துகொண்டு இருக்கின்றேன். இனிமேல் நான் யாரிடத்திலே சேர்வேன்" என்றாள். அதனைக் கேட்ட வீரன், "தாயே, இறைவியே, என்னால் அரசனுக்கு வரும் தத்தினை நீக்கமுடியுமா? முடியுமானால் சொல்; நான் செய்கிறேன்" என்றான்.

இறைவி, "வீரனே, கேள்: இன்று இரவுக்குள்ளே உன் மைந்தனைக் கொண்டுவந்து பலியிட்டால் அரசனைப் பிடித்த தீவினை நீங்கிவிடும்" என்றாள். தன் மகனைப் பலியிடுவதே நல்லது என்ற எண்ணத்தோடு விரைந்து வீட்டுக்கு ஓடினான் வீரன். அவன் தன் மனைவியைப் பார்த்து நடந்த செய்திகளையெல்லாம் சொல்லித் தன் மகனைப் பலியிடுவதற்கு அழைத்துச் செல்வதாகவும் கூறினான். அது கேட்ட வீரன் மனைவி, "நம் மைந்தன் அதற்கு ஒப்புக்கொண்டால் அவ்வாறே செய்யலாம்" என்றாள். மைந்தனும், "தாய் தந்தையருடைய விருப்பத்தை நிறைவேற்றிப் புகழ் பெறுவதைவிட ஒரு மைந்தன்

அடையக் கூடிய பேறு வேறு என்ன இருக்கின்றது!" என்றான்.

வீரனும் அவன் மனைவியும் மகனும் மகளும் காளி கோயிலை அடைந்தார்கள். எல்லோரும் நீராடினர். வீரன் தன் மகனுக்கு மலர் சந்தனம் முதலியவைகளை அணிந்து மாகாளி யின் முன்பு நிறுத்தினான். "மாகாளியே, புகழ்மிக்க மன்ன னுடைய தீவினை தீர்த்து அருள்செய். இவனைப் பலியாக ஏற்றுக்கொள்" எனக் கூறி, வீரன் தன் கைவாளால் பால னுடைய தலையை அரிந்தான். அண்ணனுடைய தலையை அரிந்து பலியிட்டதைக் கண்ட தங்கை தானும் உயிர்விட்டாள். பெற்ற தாயும் கவலையினால் உயிர்விட்டாள். இவைகளையெல் லாம் கண்ணுற்ற கண்ட வீரன் காளியை நோக்கிப் பேசத் தொடங்கினான்:

"மாகாளியே, வேந்தனுடைய வினையை நீக்கி அருள் செய்தாய். என் மகனுடனே மகளும் மனைவியும் மரித்தார்கள். என் வீடு இப்பொழுது பாழாய்விட்டது. எனக்கு இனி என்ன வாழ்வு இருக்கிறது! அம்மையே, என்னையும் இப்பொழுது பலி கொள்வாய்!" எனத் தான் தன் தலையை அரிந்துகொண் டான். வீரன் இறந்ததும் ஒளிந்து பார்த்துக்கொண்டிருந்த மன்னன் மாகாளிமுன் ஓடிவந்து, "அம்மையே, என் உயிர் போன்ற வீரனும் அவன் குடும்பத்தாரும் இறந்த பிறகு எனக்கு என்ன வாழ்வு வேண்டியிருக்கிறது! என்னுயிரையும் ஏற்றுக்கொள்" என்று கூறித் தன் கழுத்தில் வாளை வைத் தான். உடனே மாகாளி வெளிப்பட்டு, "அரசே, உன்னால் இங்கு நால்வரும் மரித்தார்கள். நீயும் உயிர்விட்டால் இந்தப் பூவுலகம் என் ஆவது? உனக்குத் தேவையான வரம் கேள்; நான் அதனைத் தருவேன்" என்று மன்னனை நோக்கிக் கூறினாள்.

மன்னன், "எனக்கு வேண்டிய வரம் வேறு என்ன இருக்கின்றது? இங்கு இறந்துகிடக்கும் நால்வரும் உயிர்பெற்று எழும்படி செய்ய வேண்டும்," என்றான். மாகாளி அவ்வாறே வரமளித்தாள். நால்வரும் தன்னைக் காண்பதற்கு முன்னே மன்னன் தன் அரண்மனையை அடைந்தான். இறந்துகிடந்த

நால்வரும் உயிர் பெற்றெழுந்தார்கள்; மாகாளியைப் பணிந்தார்கள். வீரன் மனைவியையும் மகனையும் மகளையும் வீட்டில் இருக்கச் செய்தான். பின்பு அவன் அரண்மனையை அடைந்து அரசனிடத்தில், "இரவு நேரத்தில் இப்படி அழும் பெண்கள் எத்தனையோ பேர் உண்டு. அவர்களில் அவளும் ஒருத்தி; அவளைச் சமாதானப்படுத்தி வந்தேன்" என்றான். வீரனோடு அந்நேரத்தில் அதற்கு மேல் பேசுவது முறையன்று என எண்ணிய அரசன், அவனை வீட்டிற்குப் போகச் சொன்னான்.

மறுநாள் அரசன், அமைச்சர் படைவீரர் முதலியவர்களை அழைத்து, அவை கூட்டி, முதல் நாள் இரவில் வீரன் செய்தவைகளை எல்லாம் எடுத்துச் சொல்லி மிகுந்த பொருளையும், பல்லக்கு பட்டாடை முதலியவைகளையும் அளித்தான்; ஒரு தேசத்தையும் காளிதேவி கோவிலுக்கு அளித்தான். "வீரன் செய்த நன்றிகளை நினைத்தால் அவைகளுக்கு இவை ஈடாகுமா" என்று மன்னனும் மற்றையோரும் கூறினர்.

அங்கு இருந்தவர் அனைவரும் "வீரனைப் போன்ற சேவகர் ஒருவரும் இல்லை" என்றார்கள். மன்னனும் அவனைப் பாராட்டிப் புகழ்ந்தான்.

"அரசன், வீரன் குடும்பத்தார் நால்வர் ஆகிய இவர்களில் சிறந்த குணம் உடையவர் யார் என்று எனக்குச் சொல்" என்று வேதாளம் விக்கிரமாதித்தனைக் கேட்டது. அவன், "வீரனைப் போன்றவர் மன்னனைப் பாதுகாப்பது முதலியன செய்வர். மனைவியானவள் தன் கணவன் சொல்லைத் தள்ளாமல் நடப்பதும் இயற்கைதான். மகன் உயிர்விடத் துணிந்ததுதான் புதுமை" என்றான் மன்னன். ஆம் ஆம், என்று உரைத்துக்கொண்டு அன்புடனே வருபவரைப் போல அரசனுடன் வந்த வேதாளம், அவன் தோளினின்றும் கட்டு அவிழ்த்துக் கொண்டு நீங்கி மறுபடியும் முருக்கமரத்தில் ஏறிக்கொண்டது.

---

## 5. கூர்மக் கதை

வங்க விசயா என்னும் நகரத்தில் விபூஷண சுவாமி என்னும் அந்தணன் ஒருவன் இருந்தான். அவனுக்கு மைந்தர் மூவர் இருந்தனர். அவர்களை அந்தணன் அழைத்து, "நான் ஒரு பெரிய வேள்வி செய்ய விரும்புகின்றேன். அதற்கு ஓர் ஆமை வேண்டும். நீங்கள் கடலுக்குச் சென்று பிடித்து வாருங்கள்" என்றான்.

நெடுநாளாக வேதங்களையும் ஆகமங்களையும் புராணங்களை யும் சாத்திரங்களையும் நன்றாகக் கற்ற மைந்தர் மூவரும் கடலிற் சென்று தேடினர்; மேலே நுரையும், பாசியும் படிந்து உறுப்பை அடக்கிக்கொண்டு கிடந்த ஓர் ஆமையைக் கண்டனர். இளையவன் மூத்தவனைப் பார்த்து, "இந்த ஆமையை வெளியில் எடும்" என்றான். மூத்தவன், "நான் மகளிர் புணர்ச்சியிலே இன்பங் கண்டவன்; ஆதலால் இதனை எடுக்கமாட்டேன்" என்றான். இரண்டாம் மகனைப் பார்த்து அவ்வாறு கூறவே, அவன், "நான் உணவுச் சுவை கண்டவன்; ஆதலால் இதனைத் தொட்டு எடுக்கமாட்டேன்" என்றான். மூன்றுமவனாகிய இளைய வன், "நான் தூக்கத்தின் சுவை கண்டவன்; ஆதலால் இதனைத் தொட்டு எடுக்கமாட்டேன்" என்றான்.

வேதாகமங்களைக் கற்ற மைந்தர் மூவரும் பிறகு விடங்க நகரத்தை ஆளுகின்ற பிரதாபன் என்னும் மன்னனிடத்தில் சென்றனர். தங்கள் தந்தையார் வேள்வி செய்ய விரும்பிய தையும், அதற்கு ஓர் ஆமை பிடித்து வருமாறு தங்களை அனுப்பியதையும், தங்களில் யாரும் அதனை எடுக்க விரும்பா மையையும் எடுத்துக் கூறினர்; தங்களுடைய இன்ப உணர்ச் சியையும் எடுத்து மன்னனிடம் கூறினர்.

அவர்கள் கூறிய மொழிகளைக் கேட்ட மன்னன் அவர் களைச் சோதிக்க வேண்டும் என்று எண்ணி, ஒருநாள் இரவு ஒரு கணிகைப் பெண்ணை அலங்கரித்து மூத்தவனிடத்தில் அனுப் பும்படி செய்தான். அவள் அந்தணன் இருக்கும் இடத்தை அடைந்தாள். அவன் அவளைப் பார்த்து, "உன்மேல் முடை நாற்றம் அடிக்கிறது, வெளியிற்போ" என்று சொல்லி அனுப்பி விட்டான். அப்பொழுது மன்னன் அப்பெண்ணின் வளர்ப்புத்

தாயை அழைத்து, "இவள் எங்கே எப்பொழுது பிறந்தவள்? சொல்" என்று கேட்டான். அவள், "இப்பெண்ணைப் பெற்றவள் உடனே இறந்துவிட்டபடியால் நான் ஆட்டுப்பால் ஊட்டி இப்பெண்ணை வளர்த்தேன்" என்றாள். மன்னன் அதிசயப்பட்டான்.

அரசன் அறுவகைச் சுவை அமைந்த உணவு சமைப்பித்து இரண்டாம் அந்தணனை உண்ணும்படி செய்தான். அவன் அதனை உண்டபின், "உணவில் பிணநாற்றம் அடிக்கிறது. அரிசியில் ஏதோ குற்றம் இருக்கிறது" என்றான். உடனே மன்னன் மந்திரியை அழைத்து விசாரித்தபோது, அந்த அரிசி சுடுகாட்டுக்கு அருகில் உள்ள வயலில் விளைந்த நெல்லிலிருந்து குற்றி எடுக்கப்பட்டது என்ற உண்மையை அமைச்சன் கூறினான். மன்னனும் மற்றையோரும் அதனைக் கேட்டு மகிழ்ந்தனர்.

பின்பு, மன்னன் பட்டுத் துணியால் தைத்த மென்மையான பஞ்சு அணை ஒன்றைத் தந்து, அதன்மேல் மூன்றாம் அந்தணனாகிய நித்திரை இன்பனைப் படுக்கும்படி செய்தான். மறுநாள் காலையில் மன்னன் அந்தணனை அழைப்பித்து, "பஞ்சு மெத்தை எவ்வளவு இன்பமாய் இருந்தது?" என்று கேட்டான். அவன், "அரசே, இரவு முழுதும் நான் தூங்கவில்லை. அந்த அணை என் உடலை இரவெல்லாம் உறுத்தி விட்டது" என்றான். உடனே மன்னன் அப்பஞ்சு மெத்தையைப் பிரித்துச் சோதிக்கச் சொன்னான். பிரித்த பணியாளர் அதனுள்ளிருந்த ஒரு மயிரை எடுத்துக் காட்டினர். உடனே அந்தணன், "இந்த மயிர்தான் இருந்து இரவெல்லாம் என்னைத் தூங்காதபடி உறுத்தித் துன்பம் விளைவித்துவிட்டது" என்றான். கேட்ட மன்னன், "இவர் போன்ற அதிசய மனிதரைக் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை" என்று புகழ்ந்து கூறினான்.

மூவருடைய செயலையும் புகழ்ந்து பாராட்டி மிக நன்று என்று மன்னன் இருந்தான். மைந்தர்களைக் காணாமையால் வருந்தி வேள்வி செய்ய விரும்பிய அந்தணன் இறந்தான். வேள்வியும் நடைபெறாமல் நின்றுவிட்டது. "இவர்களிலே

எவர் கூர்மத்தை எடுக்க உரிமை உடையவர்? தந்தை இறந்த பழியும் பாவமும் எவர்மேற் சேரும்?" என்று வேதாளம் விக்கிரம கேசரியை வினவியது.

"போக சுகத்தை விரும்பும் மூத்தவனும், உணவுச் சுகத்தை விரும்பும் இரண்டாமவனும் மணத்தைக்கொண்டு அறிந்தனர். உடலில் உறுத்திய பஞ்சணையில் மயிரைக் கண்டறிந்தவன் மிகப் பெரியவன் ஆவன். ஆனால் ஆமையை எடுக்க எவர் உரியவர்—எவர் உரியவர் அல்லர் என்று ஆராயாமல் சோதித்துத் தடுத்து வைத்திருந்த அரசன்மேல்தான் பழி சேரும்" என விக்கிரமாதித்த மன்னன் கூறினான். அவன் கூறியவுடன் வேதாளம் அவன் அறிவுத்திறத்தைப் பாராட்டி, அவன் தோளினின்றும் நீங்கிச் சென்று மறுபடியும் மரத்தில் ஏறிக்கொண்டது.

---

## 6. சூரன் கதை

விக்கிரமாதித்தன் மறுபடியும் வேதாளத்தைப் பிடித்துக் கட்டிக் கொண்டுவந்தான். வரும் வழியில் அது ஆறும் கதையை மன்னனிடம் கூறத் தொடங்கியது.

சோலைகளும் குளங்களும் நிறைந்து அழகு பெற்று விளங்குகின்ற உஞ்சை மாநகரத்திலே, புண்ணிய சீலன் என்னும் ஒரு மன்னன் இருந்து அரசாண்டுவந்தான். அவனிடத்தில் உள்ள புரோகிதர்களில் சிறந்தவன் அருச்சுன சுவாமி என்பவன். அவன் புகழ்பெற்று வாழ்ந்த காலத்தில் அவனுடைய வரத்தின் பயனாக அவனுக்குத் தெய்வசுவாமி என்னும் மைந்தன் பிறந்து வளர்ந்தான். அவனுக்குத் தங்கையாக, சோமப் பிரபை என்னும் பெண் கொடி தோன்றினாள். அவள் வளர்ந்து மங்கைப் பருவம் அடைந்தபோது, "இவளை ஞானியாகிய ஓர் அந்தணனுக்கு, அல்லது சூத்திரதாரியாக இருப்பவனுக்கு, அல்லது ஒரு வீரனுக்கு மணஞ் செய்து கொடுப்போம்" என்று கூறிப் பெற்றோர் வளர்த்தனர்.

இவ்வாறு அப் பெண் வளர்ந்த காலத்தில் தென்திசையினின்றும் பகைவர் படையெடுத்துப் புண்ணிய சீலன் என்னும்

மன்னனை வெல்ல வந்தனர். அப்பொழுது மன்னன் மந்திரியை அழைத்து, "பகைவரிடத்தில் நட்போடு பேசி அவர்களைத் திருப்பியனுப்பி நாட்டுக்கு நன்மை செய்ய வல்லவன் யார்?" என்று கேட்டான். அருச்சுன சுவாமியே அத்தகைய திறமையுடையவன் என அருகில் இருந்தவர் கூறினர். அங்ஙனமே அரசன் அருச்சுன சுவாமியை அழைத்து, "நீ விரைவிற் சென்று பகைவரிடம் நன்மொழி பேசி அனுப்பி விடுக" என்றான். அவன் சென்று அவ்வாறே செய்தான். அப்பொழுது ஞானி ஒருவன் வந்து அருச்சுன சுவாமியைக் கண்டு, தன்னுடைய ஊரும் பேரும் கூறி உறவு பேசித் தான் கற்ற மெய்ஞ்ஞானங்களைச் சொல்லி, அவன் பெண்ணைத் தனக்கு மணஞ் செய்துகொடுக்கும்படி கேட்டான். அன்றைக்கு ஏழாம் நாளில் அவனுக்கு மணஞ் செய்துகொடுப்பதாக அருச்சுன சுவாமி கூறினன்.

அருச்சுன சுவாமியின் மைந்தன் தெய்வ சுவாமி என்பவன் ஓர் ஊருக்குச் சென்றிருந்தான். அங்கு ஒரு சூரன் வந்து தன்னுடைய வலிமை யெல்லாங் காட்டி அவனிடம் அவன் தங்கையைத் தனக்கு மணஞ்செய்து கொடுக்கும்படி கேட்டான். அவனும் அதற்கு இசைந்து அன்றைக்கு ஏழாம் நாளில் மணஞ்செய்து கொடுப்பதாகக் கூறினன்.

தந்தையும் மைந்தனும் ஒப்புக்கொண்டது தெரியாமல் வீட்டில் இருந்த பெண்ணின் தாயிடம் ஒரு சூத்திரதாரி வந்து தன் கல்வித் திறத்தைக் காட்டித் தனக்கு அப்பெண்ணை மணஞ்செய்து கொடுக்கும்படி கேட்டான். அவள் அதற்கு ஒப்புக்கொண்டாள்.

ஏழு நாள் சென்ற பிறகு மூவரும் வந்து மணஞ் செய்து கொடுக்கும்படி கேட்டனர். அவர்களுடைய கல்வித் திறத்தை அறிந்த பெற்றோரும் தமையனும் என்ன செய்வதென்று தெரியாமல் விழித்தனர். வந்தவர் மூவரும் பெண் தமக்கே உரியவள் எனத் தனித்தனியே சண்டையிட்டுக்கொண்டனர்.

அந்த வேளையில் பெண் மாயமாய் மறைந்துவிட்டாள். பெண்ணைக் காணமையால் பெற்றோர் மிக வருந்தினர். பெண்ணின் தந்தை, மூவருள் முதல்வனகிய ஞானியைப் பார்த்து,

"பெண் எங்கே சென்றிருக்கின்றாள்? உம் ஞானத்தால் அறிந்து கூறும்" என்றான். ஞானி தன் கல்வித் திறத்தால் ஆராய்ந்து அப்பெண்ணை ஓர் அரக்கன் கொண்டு சென்றிருக்கின்றான் என்று கூறி, அவன் அப்பெண்ணைச் சிறை வைத்திருக்கும் சோலையின் அடையாளத்தையும் கூறினான். உடனே சூத்திரதாரி ஒரு சிறந்த விமானத்தைச் செய்து முடித்தான் சூரன் என்பவன் உடனே விமானமேறிச் சென்று அரக்கனுடன் வாது பேசிப் போர் செய்தான்; அரக்கன் எறிந்த மலைகளை எல்லாம் பொடி செய்து தன் அம்புகளால் அவன் மார்பைத் துளைத்தான்; பின்பு அரக்கனுடைய தலையையும் அறுத்தான்.

அரக்கன் இறந்த பிறகு பெண்ணை அழைத்து விமானத்தில் ஏற்றிக்கொண்டு அவன் உஞ்சைமாநகர் வந்து சேர்ந்தான். மறுபடியும் ஞானி முதலிய மூவரும் பெண் தத்தமக்கு உரியவள் என வழக்குப் பேசி மன்னனிடம் சென்று முறையிட்டனர்.

வேதாளம் விக்கிரமாதித்தனைப் பார்த்து, "இந்த மூவருக்குள் அப்பெண்ணுக்குரியவர் யாவர்?" என்று கேட்டது. "ஞானத்தினாலே அரக்கனும் பெண்ணும் இருக்கும் இடத்தைக் கண்டு கூறிய ஞானியும், அங்குச் செல்ல விமானம் ஒன்று அமைத்துக் கொடுத்த சூத்திரதாரியும் செய்தவற்றைப் பிறரும் செய்வர். அரக்கனோடு போரிட்டு வென்ற சூரனே சிறந்தவன் ஆதலால் அவனுக்கே அப்பெண் உரியவள்" என மன்னன் கூறினான். வேதாளம் மறுபடியும் சென்று முருக்க மரத்தில் ஏறிக்கொண்டது.

---

## 7. தலை வழக்குக் கதை

விக்கிரமாதித்தன் சென்று மறுபடியும் வேதாளத்தைப் பிடித்துக் கட்டித் தோளின்மேல் வைத்துக் கொண்டுவந்தான். அப்போது வேதாளம் ஏழாம் கதையைக் கூறியது.

மலர் நிறைந்த சோலைகளும், செல்வம் நிறைந்த சத்திரங்களும், அழகிய இரத்தின மேடைகளும் நிறைந்து அழகு பெற்ற சோமவேதிகை நகரம் என்னும் ஓர் ஊர் மங்களங்கள்

நிறைந்ததாய் விளங்கியது. ஞானம், மானம், புகழ், புலமை, வாய்மை, கேள்வி, வேள்வி முதலியவற்றிற் சிறந்து விளங்கிய மன்னவனுகிய நீதி வங்கிச சுவாமி என்பவன் அந்நகரத்தை அரசாண்டுவந்தான்.

அந்த மன்னவன் காளிதேவியை வழிபட்டு ஒரு கோயிலையும், கோபுரம், திருவாயில் முதலியவைகளையும் புதியனவாகக் கட்டினுன்; நாள்தோறும் திருவிழாக்களையும் நடத்திவந்தான். நாட்டின் எட்டுத் திசைகளிலும் இருந்து மக்கள் யாவரும் அந்நகரத்துக்கு வந்து புண்ணிய தீர்த்தங்களிலே நீராடிக் காளியை வணங்கிப் பாவங்களைப் போக்கிக்கொண்டார்கள்; பலர் வரம் வேண்டிப் பெற்ருர்கள்.

திருவிழா நடைபெற்ற நாளிலே ஒருவன் தன் குலப் பெண் ஒருத்தியைக் கண்டு, அவள் அழகை வியந்தான்; அவளை மணஞ் செய்துகொள்ளவேண்டும் என்று விரும்பினுன்; மன்மதனுடைய மலர் அம்புகளால் வாடினுன்; தன் ஊருக்குச் சென்று தந்தையாரிடத்திலே தெரிவித்தான். தந்தையும் அப் பெண்ணைப் பெற்ற தந்தையிடம் சென்று, தன் மகனுக்கு அவன் பெண்ணைக் கொடுக்கும்படி கேட்டான். அவ்வாறே பெண்ணைப் பெற்றவன் மணஞ்செய்து கொடுத்தான்.

மணஞ் செய்துகொண்ட மணுளன் பெண்ணை அழைத்துக் கொண்டு தன் ஊர் சென்ருன். அவர்கள் காமனும் இரதியும் போல மகிழ்ச்சியோடு வாழ்ந்துவந்தார்கள். சில மாதங்கள் சென்றபின் பெண்ணைப் பெற்றவன் தன் மைந்தனை அழைத்துத் தன் பெண்ணையும் மருமகனையும் அழைத்து வரும்படி கூறினுன். பெண்ணின் தமையன் அவ்வாறே சென்று தன் தங்கையையும் மைத்துனனையும் அழைத்துக்கொண்டுவந்தான். வரும்போது வழியிலே மூவரும் ஒரு காளி கோயிலில் தங்கினுர்கள்; தாகத்தினுலே மிகவும் வருந்தினுர்கள்.

அப்பொழுது அப் பெண்ணின் கணவன் அவர்களை அங்கேயே இருக்கும்படி சொல்லிவிட்டுத் தான்மட்டும் நீர்கொண்டு வரக் காளிகோவிலுக்குள் சென்ருன். சென்றவனுடைய மனம் மாறியது. ஆதலால் அவன் காளியை வலமாகச் சுற்றிவந்து வணங்கி, அக்காளியின் சந்நிதியிலே வாளை எடுத்துத் தன்

தலையை அறுத்துத் தள்ளினன். அவன் உயிர் அப்பொழுதே நீங்கியது. காளி கோயிலுக்குள் சென்றவன் நெடுநேர மாகி யும் வராமையால் பெண்ணின் தமையன் கோவிலுக்குள் சென்று பார்த்தான். அவன் அங்குக் கண்ட காட்சியால் திடுக்கிட்டான். தன் மைத்துனன் இறந்து கிடப்பதைக் கண்டு வருந்தி, அதனை எப்படித்தன் தங்கையிடம் கூறுவது என வருந்தினன்; அதனல் தன் தலையையும் அரிந்து காளியின் முன்னல் வீசினன்.

கோவிலுள் சென்றவர் இருவரும் வராமையால் அவர் களைத் தேடிக்கொண்டு அப் பெண் கோவிலுள் சென்றாள்; அங்கு அவர்கள் இறந்து கிடப்பதைக் கண்டு வருந்தினள்; அழுதாள்; புரண்டு புரண்டு விழுந்து அலறினள். அவள் பட்ட துன்பம் அளவிட முடியாதது. அவள் தன் முகத்திலும் மார்பிலும் அடித்துக்கொண்டு கதறிக் கதறி அழுதாள். காளி அம்மன் முன்பு சென்று, "அன்னையே, நான் உன்னை நாள் தோறும் வழிபட்டதற்கு இதுதான பலன்? என் அண்ணனை யும் கணவனையும் பலி கொண்டதற்குக் காரணம் என்ன? என் உயிரையும் நீ எடுத்துக்கொள்" என்று கூறித் தன் கழுத்திலே ஒரு கொடியைச் சுற்றி இறுக்கத் தொடங்கினள்.

அப்பொழுது காளிதேவி அவள் கண்முன் தோன்றி, அவள் கையைப் பிடித்துக்கொண்டாள். "காளியே, நான்படும் துயரம் பொறுக்க முடியாது. ஏன் இப்படிச் செய்தாய்?" என அப் பெண் காளி தேவியை நோக்கிக் கேட்டாள். "பெண்ணே, அஞ்சாதே; இவர்கள் உயிர் பெற்றெழ நான் அருள் செய் வேன்; அவர்களுடைய உடல்களிலே தலைகளைப்பொருத்திவை." என்று காளிதேவி கூறினள். வருத்தத்தினல் தன்னை மறந் திருந்த பெண், தலைகளை எடுத்து வந்து, கணவன் உடலிலே அண்ணன் தலையையும், அண்ணன் உடலிலே கணவன் தலை யையும் அறியாமல் மாற்றி வைத்துவிட்டாள். காளியின் அரு ளால் அவர்கள் உயிர் பெற்று எழுந்தார்கள். அவர்கள் தலை மாறி எழுந்த தோற்றத்தைக் கண்டு அப்பெண் வெட்கத்தால் தலை குனிந்து நின்றாள்.

வேதாளம் மன்னனைப் பார்த்து, "இவர்களில் எவன் அப் பெண்ணுக்குக் கணவன்? கூறு" எனக் கேட்டது. "முகத்தின்

அடையாளத்தைக் கொண்டுதான் கூறவேண்டும். ஆதலால் முன்னைய முகமும் மாற்று உடலும் பெற்றவனே, அம்முகத்தைக் கொண்டே கூறவேண்டும்" என மன்னன் கூறினன். வேதாளம் மறுபடியும் சென்று முருக்கமரத்தில் ஏறிக் கொண்டது.

---

## 8. காற்படிகன் கதை

எட்டுத் திசையும் புகழ்பெற்ற விக்கிரமாதித்த மன்னன் வீரத்தோடு சென்று மறுபடியும் வேதாளத்தைப் பிடித்துக் கட்டிக் கொண்டுவந்தான். அப்பொழுது அது, "மன்னனே, எட்டாம் கதையைக் கூறுகின்றேன், கேள்" என்று கூறத் தொடங்கியது.

மலர்ச் சோலை சூழ்ந்த **நாமலிபுரம்** என்பது ஓர் ஊர். அதன்கண் **சண்டசிங்கன்** என்னும் மன்னன் இருந்து, கொடையாற் புகழ்பெற்று விளங்கித் தன் நாட்டை ஆண்டுவந்தான். அவனுடைய படைத்தலைவன் **காற்படிகன்** என்பவன். அவன் வீரமும் தீரமும் உடையவன்; உடலும் உயிரும்போல மன்னனை விட்டுப் பிரியாது உடன் தொடர்ந்து வாழ்ந்தான். அவன் வீமசேனனைப் போன்ற உடல் வலிமையுடையவன். மன்னன் ஒருநாள் சேனைகளைக் கூட்டிக்கொண்டு வேட்டையாடுவதற்குக் காட்டிற்குச் சென்ருன். அவன் தான் ஏறிச்சென்ற குதிரையைத் துரத்தவே, அது வாயு வேகமாக ஓடியது; ஓடும்போது மன்னனைத் தள்ளிவிட்டது; பின்பு வேகமாகத் தனியே ஓடியது. மன்னனும் தனித்துச் சென்ருன். ஓடிய குதிரையின் பின் மன்னனுடன் காற்படிகன் விரைந்து சென்ருன். பிறகு மன்னன் ஒரு காட்டில் நீர் வேட்கையால் வாடித் தளர்ந்து, வாயும் நாக்கும் வறண்டு களைத்துப் படுத்தான். அப்பொழுது உடன் வந்த காற்படிகன் என்பவன் அருமையான நெல்லிக் கனி இரண்டைக் கொண்டுவந்து மன்னனுக்குக் கொடுத்தான்.

மன்னன் நெல்லிக் கனியைத் தின்று தண்ணீர் கேட்டபோது காற்படிகன் காட்டில் பல இடங்களில் ஓடித்தேடி ஒரு சுனையிலிருந்து நீர் கொண்டுவந்து கொடுத்தான். மன்னன் நீர் பருகி வேட்கை நீங்கினன்; பிறகு அவனுடன் தன் ஊர் வந்து

சேர்ந்தான். சேவகன் தனக்குக் காட்டிலே செய்த நன்றியை நினைந்து மன்னன் அவனுக்குத் தேர், யானை, குதிரை, சிறந்த பட்டாடைகள் முதலியவற்றை மக்கள் மன்றத்தைக் கூட்டி அவர்கள் முன்னிலையிலே கொடுத்துச் சிறப்புச் செய்தான். இவ்வாறு மன்னன் மகிழ்ச்சியோடு வாழுங்காலத்தில் ஒருநாள் அச்சேவகனை அழைத்து, "நீ சிங்கள தேசம் சென்று அம் மன்னனுடைய மகளை நமக்கு மணம்பேசி வருக" என்று கூறி யனுப்பினான்.

காற்படிகன் அரசனை வாழ்த்தி வணிகருடன் கப்பலில் ஏறினான். கப்பல் நடுக்கடலில் சென்றபோது புயற்காற்று வீசியது. அதனால் கப்பல் கடலில் மூழ்கியது. அதிற்சென்ற மக்கள் மீன்களுக்கு இரையாயினர். காற்படிகன் மட்டும் கையில் வாள் எடுத்துக்கொண்டு தன்னை விழுங்கவந்த மீன்களை யெல்லாம் கொன்று ஒரு கொடியைப் பிடித்துக் கொண்டு நாகலோகத்தை அடைந்தான்; அங்கு அழகுமிக்கு விளங்கிய காஞ்சன புரத்தைக் கண்டான்; அந்த நகரத்தில் புகழ்பெற்று விளங்கிய துர்க்கை கோவிலை அடைந்து வழிபட்டு அங்குத் தங்கியிருந்தான்.

அங்கு அந்நகரத்து மாதர் பலர் வந்து வணங்கி வழிபாடு செய்து திரும்பிச் சென்றனர். அப்பொழுது தேவர் உலகத்து அரம்பை என்று சொல்லத்தக்க பேரழகு பெற்ற பெண் ஒருத்தி தன் தோழிமாருடன் அங்கு வந்து தேவியை வழிபாடு செய்தாள். அவளைக்கண்ட காற்படிகன் மகிழ்ச்சியடைந்து, பின்பு மன்மதன் அம்பினால் வேதனைப்பட்டு, தான் அவளை மணஞ்செய்து கொள்ள விரும்புஞ் செய்தியை அவளுடைய தோழிப் பெண்களிடம் சொன்னான். அவர்கள் அவனை அங்கிருந்த ஒரு குளத்தில் முழுகச் சொன்னார்கள். அவன் முழுகி எழுந்தபோது தன்னுடைய தாமலி புரத்தில் இருந்தான்.

காற்படிகன் திரும்பி வந்த செய்தியை அறிந்த ஊர் மக்கள் அரசனுக்கு அறிவித்தார்கள்; மன்னன் இட்ட ஆணை யின்படி காற்படிகனை அரண்மனைக்கு அழைத்துச் சென் றார்கள்.

"அரசே, நான் கடலிலே சென்றபோது, அங்குப் புயற் காற்றால் மரக்கலம் உடைந்தது ; அதனால் யாவரும் கடலிலே வீழ்ந்து மீன்களுக்கு இரையாயினர்; நான் மட்டும் உயிர் பிழைத்துத் துன்பங்கள் அடைந்தேன்; பின்பு நீர்த்துறையிலே ஒரு பிலத்துவாரத்தில் விழுந்தேன்; நீர்வழியே சென்ற போது நாகருலகஞ் சேர்ந்தேன் ; அவ்விடத்தில் ஒரு துர்க்கை கோவிலைக் கண்டேன் ; அங்கு வந்த ஓர் அழகிய பெண்ணைக் கண்டேன் ; ஆசை கொண்டேன். பின்பு அவள் தோழிமார் கூறியபடி ஒரு குளத்தில் மூழ்கினேன்; இவ்வூரை அடைந்தேன்" என்று காற்படிகன் கூறினான்.

மன்னன் காற்படிகன் கூறியவற்றை யெல்லாம் கேட்டு, அவன் வந்த வழியே கடலிற் சென்று, பிலத்துவாரத்து வழியாக நாகர் உலகத்தை அடைந்தான்; அங்குள்ள துர்க்கை கோவிலைக் கண்டான்; பின்னர் அங்கு வந்த அழகிய பெண்ணையும் பார்த்தான். மன்னன் அவளைக் கண்டு, "இத்தகைய அழகுடைய பெண்ணை நான் எங்கும் கண்டதில்லையே! " என்று அவள் அழகைப் பாராட்டினான். மலர் மணம் வீசுகின்ற கூந்தலையுடைய பெண்ணும் மன்னனைக் கண்டு காதல் கொண்டாள். காதல் கொண்ட பெண், தன் தோழியை மன்னனிடம் தூது அனுப்பினாள். தோழிப் பெண்கள் கூறிய வார்த்தையை மன்னன் கேட்டு, "அந்தப் பெண்ணை இங்கு அழைத்து வாருங்கள்" என்று கூறினான். தோழிகள் உடனே ஓடி அப்பெண்ணை அழைத்து வந்தார்கள்.

மன்னனைக் கண்ட மங்கை பின் வருமாறு கூறினாள்: "மன்னனே, உன்னைக் கண்டதுமுதல் நான் மிகுந்த மயக்கங் கொண்டு உன்னையே நினைந்து நினைந்து மன்மதன் அம்பினாலே வருந்துகிறேன். அண்ணலே, இந்நாகருலகத்தை ஆளுகின்ற மன்னருடைய மகள் யான்; மிகுந்த காமநோயினால் வருந்துகின்ற என்னைக் காப்பது உனது கடமை. என் தந்தையார் எனக்கு அன்போடு கொடுத்த ஊர்கள் இரண்டு ; அவற்றுள் ஒன்று நாம் விரும்பிய எல்லாப் பொருள்களையும் கொடுக்கவல்லது. மற்றொன்று நாம் நினைத்தபடி பிறப்பை நீக்கி முத்தியளிக்கவல்லது. நீ என்னை மணந்துகொள்ளின் அந்த ஊர்கள் இரண்டையும் உனக்கு அளிப்பேன்" என்றாள்.

அம் மங்கை கூறிய வார்த்தைகளை எல்லாம் கேட்ட மன்னன் பின்வருமாறு அன்போடு பேசினன்:—"இங்கு நிற்கும் இவன் என் உயிர் போன்ற தோழன்; மனம் உருகி எனக்கு நலம் செய்பவன்; நல்ல குலப்பிறப்பு, மேன்மை, ஆண்மை, அழகு, வாய்மை, தூய்மை முதலிய நன்மைகள் உடையவன். நீ இவனை மணஞ்செய்து மன்மதனுடன் சேர்ந்த இரதிபோல வாழ்வாயாக" என்றான். மன்னன் இவ்வாறு கூறிய வார்த்தைகளைக் கேட்டு மாதும் மனம் இசைந்தாள். மன்னன் உடனே காற்படிகனுக்கு அப்பெண்ணை மணஞ்செய்வித்தான். அவன் காற்படிகனை நோக்கி, "நீ அன்று காட்டில் என்னுடன் தொடர்ந்து வந்து இரண்டு நெல்லிக்கனிகள் கொடுத்தாய்; அவற்றிற்குக் கைம்மாறாக நான் உனக்கு உதவிகள் செய்ய வேண்டும். இப்பொழுது ஒரு நெல்லிக்கனிக்கு ஈடாக இப் பெண்ணை அளித்தேன்; மற்றொன்றுக்கு ஈடான உதவியை இன்னொரு முறை செய்வேன்" என்று கூறினன்.

மன்னன் மங்கையை அவனுக்கு மணஞ்செய்து கொடுத்த பின், அங்கிருந்த குளத்தில் மூழ்கித் தன்னூர் வந்து சேர்ந்தான். "காற்படிகன் மன்னனுக்குச் செய்த நன்றியோ, அல்லது மன்னன் அவனுக்குச் செய்த நன்றியோ—யாவர் செய்த நன்றி சிறப்புடையது?" என அலகை விக்கிரமாதித்த மன்னனைக் கேட்டது. "மன்னனுடைய உணவை உண்டு வளர்ந்தவர் அவனுக்காகக் கடலுள் சென்று வருதல் முதலிய எல்லா வேலைகளையும் செய்வர்; அஃது அவர்களுடைய கடமையாகும். ஆனல் தன்னை விரும்பிய மாதை விலக்கித் தன் சேவகனுக்கு மணஞ்செய்து கொடுத்த மன்னனுடைய ஆண்மைச் செயலே பாராட்டத்தக்கது" என விக்கிரமாதித்த மன்னன் கூறினன்.

மன்னன் சொல்லிய விடையைக் கேட்ட வேதாளம், அவன் தோளினின்றும் விலகி ஓடி மரத்தில் ஏறி இறுகப் பற்றிக்கொண்டது.

---

## 9. இரத்திஞபதி கதை

விக்கிரமாதித்த மன்னன் மறுபடியும் சென்று மரத்திலிருந்த வேதாளத்தைப் பிடித்துக் கட்டிக்கொண்டு வந்த போது, அது, "மன்னனே, நான் ஒன்பதாம் கதை கூறுகின்றேன், கேள்" என்றது; பின்பு கூறத் தொடங்கியது.

நிலவுலகத்தில் ஆறு ஏரி குளங்கள் நிறைந்து நீர் வளம் பெற்ற சேனை நகரம் என்பது ஒன்று உண்டு. அதில் **வீரதேவன்** என்னும் மன்னன் ஏழைகளுக்குப் பொருள் கொடுத்து உதவி செய்து செங்கோல் முறையில் அரசாட்சி செய்துவந்தான். அவன் மனைவி பெயர் **உமாபதி** என்பது. அவர்கள் இருவரும் பிள்ளைப்பேறில்லாமல் மிகவும் வருந்தினர்கள். அவர்களுடைய வாழ்க்கை, கண் இல்லாத முகம்போலவும், இறைவனை நாள் தோறும் வழிபடாதவர் மனம் போலவும், கல்வி யில்லாதவர் வாழ்க்கை போலவும், மணமில்லாத மலர் போலவும் பொலிவு இழந்து இருந்தது.

ஒரு நாள் மன்னன் அவ்வூரிலிருந்த வேதியர்களை அழைத்தான்; "பிள்ளை யில்லாதவர் சென்று அடையும் கதியையும், மைந்தனைப் பெற்றவர் அடையும் சிறப்புக்களையும் நீங்கள் எடுத்துக் கூறுங்கள்" என்றான்.

"மன்னனே, ஒருவன் மிகுந்த சேனைகளையும் செல்வங்களையும் இந்திரனுடைய கற்பக மரம் முதலியவற்றையும் உடையவனாக இருந்தாலும், அவனைக் காணும் மக்கள் 'உனக்கு மைந்தன் உண்டோ?' என்று கேட்பார்கள். இந்த உலகத்தில் மனிதருடைய வாழ்வும் செல்வமும் நிலைத்து நிற்க மாட்டா; சூரிய சந்திரர் உள்ள வரையில் மைந்தர் செல்வமே நிலைத்து நிற்கும் என்று கூறுவார்கள். தாய் தந்தையர் இறந்த பிறகு அவர்களுக்குப் பிள்ளைகள் நீர்க்கடன் செய்தால்தான், அப்பெற்றோர் நற்கதி அடைவார்கள். பிள்ளையுடையவனைத்தான் உலகம் புண்ணியவானென்று கூறும். அவர்களுக்கு நல்ல கதி யுண்டாகும். இந்தப் பூமியுள்ள நாளெல்லாம் புகழ் உண்டாகும். பிள்ளையில்லாதவர்க்குச் சிறப்பு, அன்பு, புகழ் முதலியவை இல்லை." என்றனர். இவ்வாறு மறையவர் கூறிய மொழிகளைக் கேட்ட அரசன், "நீங்கள் நூல்களை

ஆராய்ந்து பார்த்து எனக்கு இப்பிறவியில் மைந்தன் பிறப்பானோ, இல்லையோ என்பதை எடுத்துக் கூறுங்கள்'' என்றான்.

"மன்னனே, நீ துன்பக் கடலில் வருந்தவேண்டா. நீ அந்தணர்களைக் கொண்டு வேள்வியும் செபமும் செய்ய வேண்டும். நீயும் இறைவனை நோக்கித் தவம் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால் மைந்தர் உனக்குப் பிறப்பர்'' என்று மறையவர் கூறினர்.

மைந்தன்மேல் வைத்த ஆசையினால் மன்னன் இப்பூமியை ஆட்சி செய்யும் ஆசையைக் கைவிட்டு, அரசாட்சியை மந்திரிபால் ஒப்படைத்துவிட்டுத் தானம், வேள்வி முதலியன செய்து சிவபெருமானை நோக்கித் தவஞ் செய்தான். மன்னன் நெடுங்காலம் தவஞ்செய்தலை நோக்கிய சிவபெருமான், ஒரு நாள் காளைவாகனத்தின்மேல் அவன் கண்முன் தோன்றினன்.

மன்னன் இறைவனை நோக்கி வழிபட்டான். இறைவனும் அவன் எண்ணம் அறியாதவன் போல, "மன்னனே, உன் எண்ணம் யாது?'' என்று கேட்டான். "எனக்கு மைந்தன் பிறக்கவேண்டும்'' என்று மன்னன் கூறினன். சிவபெருமான் "உனக்கு மைந்தன் பிறப்பான்'' எனக்கூறிச் சிவலோகம் சென்றான்.

சிவபெருமானிடத்து வரம் பெற்ற மன்னன் தன்னுடைய மாநகரத்தை அடைந்தான்; இறைவன் தன் கண்முன் தோன்றிப் புகன்ற மொழிகளை எல்லாம் எல்லோருக்கும் சொன்னன். பின்னர் நல்ல முறையில் ஆட்சி செய்து வாழ்ந்த காலத்தில் மன்னனுக்கு மைந்தன் ஒருவன் பிறந்தான். சில ஆண்டுகள் சென்ற பின் அரம்பை என்னும் தேவமகள் போன்ற அழகிய ஒரு பெண்ணும் பிறந்தாள்.

வீரதேவன் என்ற அம்மன்னன் தன் மைந்தனுக்குச் சூரதேவன் என்று பெயர் சூட்டினன்; பெறுதற்கரிய சிறந்த மகளுக்கு இரத்தினபதி என்ற பெயரைச் சூட்டினன். மன்னன் தன்னுடைய மகளின் அழகைக் கண்டு வியந்தான்; "இப்பெண்ணை, கல்வி, ஆண்மை, பேரழகு, வீரம் என்னும் நான்கிலும் சிறந்தவர்க்கே கொடுப்பேன்'' என்று சொன்னன்.

சில ஆண்டுகள் கழிந்த பின், ஒரு நாள் மன்னன் ஒருவன் அங்கு வந்தான். வந்தவன் தனக்கு அப்பெண்ணை மணஞ் செய்து கொடுக்கும்படி மன்னவனைக் கேட்டான். வீர தேவன் தான் முன் குறித்தபடி, "கல்வி, ஆண்மை முதலிய நான்கு பண்புகளும் உடையவனுக்கே கொடுப்பேன்" என்றான். வந்த மன்னன் தன்னிடம் அவை நான்கும் ஒரு சேர இல்லாமையால் திரும்பி வாளா சென்றான். அதன் பிறகு அந்தணர் முதலிய நால்வகை வருணங்களையும் சேர்ந்த நால்வர் வந்தனர். அவர்களில் மறையவன் முதலில் வந்து தன்னிடத்து அரசன் குறிப்பிட்ட நான்கு குணங்கள் இருத்தலையும் அதனுடன் தான் வேதம் நான்கும் கற்றிருத்தலையும் தெரிவித்தான். அவற்றைக் கேட்ட மன்னன் அதிசயித்து நின்றான்.

அரசர் குலத்திற் பிறந்த மற்றொருவன் வந்து மன்னனைக் கண்டு, "நான் கல்வியில் வல்லேன்; நல்ல குலத்திலே பிறந்தேன்; ஆண்மையும் உடையேன்; சாந்தம், நீதி, ஞானம் முதலியவற்றையும் உடையேன்; உன் பெண்ணை எனக்கு மணஞ் செய்துகொடு" என்று கேட்டான். மன்னன் அவனுடைய திறமைகளைக் கண்டு வியந்தான்.

வணிகர் குலத்திற் பிறந்த ஒருவன் வந்து, "மன்னனே, நான் ஓவியத் தொழிலிலே வல்லமையுடையேன்; நீர் குறிப்பிட்ட நான்கு குணங்களும் நிறையப் பெற்றுள்ளேன்; போரில் பகைவரை வெல்வதிலும், கல்வியைக்கொண்டு சொற்போர் புரிவதிலும் வல்லமையுடையேன். ஆதலால் உன் பெண்ணை எனக்கு மணஞ்செய்து தருக" என்றான்.

நான்காம் குலத்தில் பிறந்த ஒருவன் வந்தான். அவன், "மன்னனே, நான் கல்வியிலும் ஞான நூல்களிலும் வல்லேன்; இவ்வுலகில் உள்ள அசையும் பொருள் அசையாப்பொருள்களாகிய யாவும் பேசுகின்ற மொழிகளையும் குரல்களையும் அறிவேன்; நீ குறிப்பிட்ட நான்கு குணங்களும் நிறையப் பெற்றுள்ளேன்; ஆதலால் எனக்கே உன் பெண்ணை மணஞ்செய்து கொடுக்கவேண்டும்" என்று கூறினன்.

மேற்கூறிய நால்வரும் தம்மைப்பற்றிக் கூறிய மொழிகளைக்கேட்ட மன்னன், "இவர்கள் நால்வரும் திறமையுடையவர்

களாய் இருக்கின்றனரே! இவர்களில் யாருக்கு நான் கொடுப்பேன்!" என்று எண்ணி, முடிவில் மந்திரிகளிடம் கேட்டான்; அவர்கள் கருத்து யாது என்பதை அறிய விரும்பினன். வேதாளம், இந்த நால்வரில் சிறந்தவர் யார் என்று விக்கிரமாதித்தனைக் கேட்டது.

வேதாளம் சொன்ன வினவைக் கேட்ட மன்னன், "எவ்வளவுதான் கல்வி கற்றிருந்தாலும் ஒத்த குலத்திற் பிறவாதவர் பெண்ணுக்கு உரியவர் ஆகமாட்டார். மற்றவர்களைவிட மன்னர் குலத்திற் பிறந்தவனே அப்பெண்ணுக்கு உரியவன் ஆவான்" என விடை கூறினன்.

விக்கிரமன் கூறிய மொழிகளைக் கேட்ட வேதாளம் அவன் கூறியதே சரி என்று ஒப்புக்கொண்டது. முருகன் திருவடிகளை நாவினல் வாழ்த்தி நாடோறும் துதி செய்யும் அடியாருடைய தீவினை அவர்களைவிட்டு மாயைபோல நீங்கிவிடும். அந்த மாயையைப்போல வேதாளம் மன்னனுடைய தோளிலிருந்து விலகி ஓடி, மறுபடியும் மரத்தில் ஏறிக்கொண்டது.

---

## 10. மதனசேனை கதை

விக்கிரமாதித்த மன்னன் மறுபடியும் சென்று வேதாளத்தைப் பிடித்துக் கட்டிக் கொண்டுவந்தான். அப்பொழுது அது, "பத்தாவது கதை கூறுகின்றேன், கேள்" என்று சொல்லத் தொடங்கியது.

கோபுரங்களும் மதில் சூழ்ந்த செம்பொன் ஆலயங்களும் நவ மணிகள் பதித்த மேடைகளும் உடையதாய் வேறு எதுவும் ஒப்பு இல்லை என்று சொல்லும்படி மகரம் என்னும் பெயருடைய நகரம் ஒன்று விளங்கியது.

காலமும் இடமும் அறிந்து கூறவல்லவனும், காரியங்களைத் திறமையோடு செய்பவனும் ஆகிய மன்னன் ஒருவன் அந்நகரத்தில் சிறப்போடு விளங்கினன். அவன் நீதியும் கொடைத் தன்மையும் உடையவன்; பகைவர்க்குச் சிங்கம் போன்றவன். அவன் பெயர் வீரன் என்பது.

அந்நகரத்தில் அத்திதத்தன் என்னும் பெயருடைய வணிகன் ஒருவன் இருந்தான். அவன் கல்வி கேள்விகளிலும் செல்வத்திலும் சிறந்து விளங்கினான். அத்திதத்தனுக்கு அவன் தவப்பயனால் குணதத்தன் என்னும் பெயருடைய மைந்தன் ஒருவனும், மதனசேனை என்னும் பெயருடைய பெண் ஒருத்தியும் பிறந்தனர். மன்னன் தன் மைந்தனையும் பெண்ணையும் அருமையாக வளர்த்துவந்தான்; தன் மகள் மதனசேனையைச் சமுத்திரதத்தன் என்னும் வணிகனுக்கு மணஞ் செய்து கொடுக்க இசைந்தான்.

சில நாட்கள் சென்றபின் குணதத்தனுடைய தோழனாகிய தருமதத்தன் என்பவன் குணதத்தனது இல்லத்திற்கு வந்தான். அவனும் குணதத்தனும் மலரும் மணமும் போலவும், தேனும் பாலும் போலவும், உடலும் உயிரும் போலவும் ஒற்றுமையுடையவராய்க் கலந்து வாழ்ந்தனர்; பள்ளியிற் படித்தும், பலகலை நூல்களைப் படித்தும், வணிகத் துறையிலே பயிற்சி பெற்றும், பதினாறு வயதுடைய இளைஞர்களாய்த் துள்ளி விளையாடினர். தோழனாகிய குணதத்தனுடைய வீட்டுக்குத் தருமதத்தன் இரவு பகல் என்னாது எப்பொழுதும் வந்து போகும் பழக்கம் உடையவனாய் இருந்தான்.

அப்பொழுது மதனசேனை இளமை அழகு பெற்று விளங்கினாள்; அரம்பை போலவும், அன்னம் போலவும், விரும்புங் கரும்பு போலவும், காமவேளின் துணைவியாகிய இரதி போலவும் விளங்கினாள்; அம்மனை, கழங்கு, பந்து முதலியன விளையாடிப் பொழுது போக்கினாள். அப்பொழுது ஒரு நாள் தருமதத்தன் மதன சேனையைக் கண்டு, அவள் அழகினை வியந்து மதி மயக்கங் கொண்டான். அப்பொழுது மதன சேனையும் அவனைக் கண்டாள். அதனால் மனம் மெழுகுபோல் உருகித் தருமதத்தன் விரக நோயினால் வருந்தினான். பலவிதமான பரிகாரங்களைத் தோழர்கள் செய்தனர்; சந்தனத்தைப் பனிநீரில் குழைத்து உடம்பிற் பூசினர். அவன் எல்லாச் செயல்களையும் மறந்து பஞ்சணையிற் கிடந்தான். பிறகு தோழனாகிய குணதத்தன் வந்து வேண்டிய உதவிகள் செய்தும் பயன் தரவில்லை. மறுநாள் தருமதத்தன் மதன சேனையைத் தனியே கண்டு, "நீ என்னோடு சேர வேண்டும்" என்று வேண்டினான்.

அவன் கூறியதைக் கேட்ட மதனசேனை, "நீர் குலத்திற்குப் பொருந்தாத மொழி கூறுகின்றீர்; என்னுடைய தந்தை யிடம் கேட்டு நீர் மணஞ்செய்து பிறகு என்னைச் சேர்வீராக. என்னை என் தந்தை முன்பே சமுத்திரதத்தனுக்கு மணஞ் செய்து தருவதாகக் கூறியிருக்கிறார். ஆதலால் ஒருவர் மனைவியை மற்றவர் மருவ நினைப்பது தவறு அல்லவா?" என்று கூறினாள். தருமதத்தன் அவளைப் பார்த்து, "அவை யிருக்கட்டும். நீ இங்கு வா", என அவள் கையைப் பிடித்தான்.

உடனே மதனசேனை அஞ்சி, நடுங்கி நின்று, "என்னை என் தந்தை சமுத்திரதத்தனுக்கு மணஞ்செய்து கொடுக்கும் முதல் நாள் இரவில் அவனை மருவுவதற்கு முன்பு உன்னை வந்து மருவுவேன்; இது உறுதி" என்று கூறினாள். தருமதத்தன் அதற்கு இசைந்தான்.

தருமதத்தன் அவ்வாறு இசைந்து அகன்று சென்ற பிறகு, சில நாட்கள் சென்றன. பிறகு செல்வம் நிறைந்த சமுத்திரதத்தன் வந்து அவளை மணஞ் செய்துகொண்டான். கன்னியாகிய மதன சேனை தன் கணவன் முன்பு சிறிதும் மறைக்காமல் பின்வரும் மொழிகளை உரைத்தாள் :—

"என்னை முன்பு ஒரு நாள் தருமதத்தன் நெருங்கி வந்து கையைப் பிடித்தான். அப்பொழுது நான் ஓர் உறுதிமொழி கூறியிருக்கிறேன். 'என் தாய் தந்தையர் சமுத்திரதத்த னுக்கு மணஞ்செய்து கொடுக்கும் அன்றிரவு நான் முதலில் வந்து உன் விருப்பத்தை நிறைவேற்றுவேன்' என்று கூறியிருக்கிறேன். நான் இந்த வாய்மொழி தவறாமல் இருக்க நீ உதவி செய்ய வேண்டும்" என்று கூறினாள்.

இவற்றைக் கேட்ட சமுத்திரதத்தன், "இந்தப் பெண் உண்மையை என்னிடம் ஒளியாமல் கூறுகின்றாள். இவள் மனத்தில் கள்ள எண்ணம் இல்லை" என்று நினைத்தான்; பின்பு அவளை நோக்கி, "நீ கூறியபடியே தருமதத்தனிடம் சென்று வா" என்று கூறியனுப்பினான். அவளும் அவ்விரவில் தனியே அன்னம்போல் நடந்து சென்றாள்.

அப்பெண் இரவில் மின்னற் கொடிபோலச் செல்வதை வழியில் சர்வசுவாமி என்னும் பெயருடைய கள்வன் ஒருவன்

கண்டான். அவன் ஓடிவந்து அப்பெண்ணைப் பார்த்து, "நில்" என்று கூறினன். அவனைப்பார்த்த மதனசேனை, "இந்த நகைகளை உனக்கு வேண்டுமாயின் கொடுக்கிறேன்; வாங்கிக்கொண்டு செல்" என்று கூறினள். பெண்ணினுடைய அழகையும், அணிவகைகளையும் கள்வன் கண்டான்; 'இவள் திருமகளோ, தேவருலகத்துப் பெண்ணோ, இப் பூமியில் உள்ள பெண்ணோ, இவள் யார்!' என்று தன் மனத்துள் எண்ணினன்; பின்னர் அவளைப் பார்த்து, "இச்செம்பொன்னால் பயன் என்ன? என்னை நீ மருவ வேண்டும்" என்று கூறினன்.

உடனே மதனசேனை அவனைப்பார்த்து, "முன்பு ஒரு நாள் தருமதத்தன் என்னும் வணிகன் என்னை விரும்பினன்; அப்பொழுது நான், மணஞ் செய்துகொண்டதும் முதலில் அவனை மருவுவதாகக் கூறினேன். ஆதலால் முதலில் அவனிடம் சென்று மருவிப் பின்பு இங்கு வந்து உன் விருப்பப்படி நடப்பேன்" என்றாள்.

"உடம்பின் இளமை அழகும், புகழும், உயிர்களும், ஆற்று நீர் வெள்ளமும், பெண்களும், கடலிற் போட்ட பொன்னும் சென்றபின் மீண்டு வருமோ? சொல்" என்று கள்வன் கூறினன்.

"தருமதத்தனை மருவிய மறுகணமே உன்னிடம் வந்து உன் விருப்பத்தை நான் நிறைவேற்றாவிடில், உலகத்தில் பசுவைக் கொன்றவரும், செய்ந்நன்றியை மறந்தவரும், ஒருவர் கொடுக்கும் கொடையைத் தடுத்தவரும் புகும் நரகத்தில் சேரக்கடவேன்" என்று மதனசேனை கூறினள்.

அவள் கூறிய மொழிகளைக் கேட்ட கள்வன் சிந்தனை செய்து நம்பினன்; அப்பெண்ணைப் பார்த்து, "நீ போய் மீண்டு வருக" என்றான். மதனசேனை அப்போது நடந்து சென்று தருமதத்தனை அடைந்தாள்.

தருமதத்தன் அப்பொழுது பஞ்சணையிற் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தான். மதனசேனை அவனை எழுப்பி, "இன்று மணம் நடந்தது; இன்று முதல் நாள் ஆதலால் நான் முன்பு உன்னிடம் கூறியபடி இங்கு வந்தேன்" என்றாள்.

தருமதத்தன் அப் பெண்ணைப் பாராட்டி அவளை அன்புடன் நோக்கி,

"குருவை இகழ்தலும், அடைக்கலமாக ஒருவர் வைத்த பொருளும், அரசனுக்குத் தீங்கு நினைத்தலும், நம்பினவர்க்குக் குற்றம் செய்தலும், ஒருவர் மனைவியைக் கூடுதலும், மனத்தினாலும் நினைத்தல் கூடாதவை.

"நீ இருள் என்றும் நினையாமல் தனியே வந்தாய். நீ வந்ததே, நீ சொன்ன சொல்லைக் காப்பாற்றும் உண்மையுடையவள் என்பதற்குச் சான்றாகும்; ஆதலால் நீ சத்தியத்தைக் காப்பாற்றிவிட்டாய்; நீ விரைந்து உன் கணவன்பால் செல்க" என்றான்.

அப்பெண் அவன் கூறியதைக் கேட்டு அவ்விரவிலேயே கள்வனிடம் வந்தாள். அவள் கள்வனை நோக்கி, "நான் தருமதத்தனிடம் சென்றேன். அவன் 'பிறர் தாரத்தை மனத்திலும் நினையேன்' என்றான். நான் அதன்பிறகு இங்கு வந்தேன்" என்று கூறினாள்.

மதனசேனை சொன்ன சொற்களையும், அவள் சென்ற போது தருமதத்தன் மருவாமல் 'போய்வா' என்றதையும், சொன்ன சொல் தவறாமல் மதனசேனை தன்பால் வந்ததையும், கள்வன் நினைத்துப் பார்த்தான்; பிறர் மனைவியைச் சேர்தல் குற்றம் என்று உணர்ந்தான்; அதனால் 'போய்வா' என்று கூறி அனுப்பிவிட்டான்.

மதனசேனை தன்னை மணந்த கணவனாகிய சமுத்திரதத்தனிடம் மீண்டு சென்று சேர்ந்தாள். அது, உடம்பை விட்டு நீங்கிய உயிர் மறுபடியும் அவ்வுடம்பை அடைந்தது போலவும், காணாமற்போன பொருள்கள் மறுபடியும் மடியில் வந்து தங்கியது போலவும், புலியின் வாயில் புகுந்தவர் மீண்டு வந்தது போலவும் இருந்தது.

தருமதத்தன் தன்னை மருவாமல் கூறிய மொழிகளையும், கள்வன் தருமதத்தன் கூறிய நீதியை நினைத்துத் தானும் மருவாமல் அனுப்பியதையும் மதனசேனை தன் கணவனிடம் விளக்கமாகக் கூறினாள். சமுத்திரதத்தன் மலைபோல் வந்த இந்தத் துன்பங்களெல்லாம் சிவபெருமானுடைய திருவரு

ளாலே நீங்கியதை உணர்ந்தான்; 'இவளே கற்புடையவள்' என்று நினைத்து மகிழ்ந்தான்.

"மனம் ஒப்பித் தன் மனைவியாகிய மதனசேனையைத் தருமதத்தனிடம் அனுப்பிய சமுத்திரதத்தன், அல்லது, பிறர் தாரத்தை விரும்பாத தருமதத்தன், பெண்ணையும் பொருளையும் வேண்டா என நீத்த கள்வன் ஆகிய இவர்களில் சிறந்தவர் யார்?" என்று வேதாளம் விக்கிரம கேசரியைக் கேட்டது.

"மதனசேனை சிறிதும் மறைவு இல்லாமல் தன்னிடம் சொல்லியதனால் கணவனாகிய சமுத்திரதத்தன் 'தடுப்பது அரிது' என்று மனம் ஒப்பி அவளை அனுப்பினான். தரும தத்தன் ஞானமுடையவன் ஆதலால் பரதாரத்தை வெறுத்தான். ஆதலால் இவர் இருவரையும் சிறந்தோர் என்று கூறுதல் கூடாது.

"நாள்தோறும் தவறாமல் பிற உயிர்களை வதைத்துக் களவு செய்து வயிறு வளர்க்கும் கள்வன் அப்பெண்ணையும் பொருளை யும் கொள்ளாது அனுப்பினான்; அதனால் அவனே சிறந்த வன்" என்று மன்னன் கூறினான்.

வேதாளமும் ஆம் என்று ஒப்புக்கொண்டு, காமங் கொண்ட வேசையருடைய மனம் மாறுவது போலவும் மாயை போலவும் மன்னன் தோளிலிருந்து ஓடி மரத்தில் ஏறிக் கொண்டது.

---

## 11. மிருகாங்கபதி கதை

முருக்க மரத்திலே இருந்த வேதாளத்தை மறுபடியும் பிடித்துத் தன் தோள்களில் தூக்கிக்கொண்டு மன்னன் செல் கையில், அவனிடம் வேதாளம் பதினோராவது கதையைக் கூறத் தொடங்கியது.

தாமரை மலர் நிறைந்த வாவியும், பூங்கா வனங்களும், பொன்னாலாகிய மதிலும் சூழ்ந்த விஞ்சை நகர் சிறந்து விளங் கியது. அந்நகரத்து அரசன் வங்கிசத்துவன் என்பவன். அவன் ஆட்சியில் மக்கள் நல்வாழ்வு வாழ்ந்தனர். புலியும் மானும் ஒரே துறையில் நீர் பருகின.

அவனுக்கு இந்திரரேகை, தாரவல்லி, மிருகாங்கபதி என்னும் மூன்று மனைவியர் இருந்தனர். அவன் அம்மூவருடன் மிக்க மகிழ்ச்சியுற்று வாழ்ந்துவந்தான். இங்ஙனம் இன்பமாக வாழ்ந்து வருகையில் மக்கள் அனைவரையும் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்தும் இளவேனிற் பருவம் வந்தது. நாடெங்கும் மக்கள் உல்லாசமாகக் களித்திருந்தனர். மன்னனும் தன் தேவியருடன் இன்பமாகக் களித்திருந்தான்.

மன்னன் ஒரு நாள் இனிய மாலைக் காலத்தில் மென்மையான தென்றற் காற்று வீச, அருகில் இந்திரரேகை இருக்கப் பொய்கையொன்றின் மருங்கே வீற்றிருந்தான். இருவரும் தங்களை மறந்த நிலையில் உரையாடிக்கொண்டிருந்த வேளையில் இந்திரரேகை கூந்தலில் சூடியிருந்த மலர்களில் வண்டு சென்று அமர்ந்து தேனுண்டது. அந்நிலையில் கூந்தலிலிருந்த மலரொன்று அவள் தொடைமேல் விழுந்தது. மலர் தொடையில் விழுந்தவுடன் அவள் வலி தாங்காமல் துடித்தாள். உடனே பணிப் பெண்கள் அங்குவந்து அவளை எடுத்துச் சென்று அவள் வலி நீங்கும் வண்ணம் பணிவிடை செய்தனர்.

அடுத்து மன்னன் தாரவல்லி மனைக்குச் சென்றான்; அங்கு அவளுடன் சென்று மேடையில் அமர்ந்தான். அப்போது நிலவு தன் கதிர்களை வீசி ஒளி பரப்பிக்கொண்டிருந்தது.

அந்த ஒளியின் வெம்மையை அவளால் தாங்க முடியவில்லை. நிலவின் ஒளி, உடலில் பட்டவுடனே கொப்புளங்கள் தோன்றின. அவள் வேதனை தாங்காமல் துடித்தாள். அவளுடைய பணிப்பெண்கள் பனிநீர் வீசி அவளது வேதனையைத் தணித்தனர்.

முதலிரண்டு மனைவிகளிடம் சென்ற போது ஏற்பட்ட நிகழ்ச்சிகளை எண்ணி வியந்தவாறே அரசன், மூன்றாம் மனைவியான மிருகாங்கபதி இருந்தவிடம் சென்றான். அவன் அவளுடன் இன்பமாக உரையாடிக்கொண்டிருந்தபோது எங்கோ உலக்கை குற்றும் ஓசை கேட்டது. அந்த ஓசை கேட்டவுடனே மிருகாங்கபதியின் மாந்தளிர் போன்ற மென்மையான விரல்கள் கன்றிவிட்டன. அதனைக் கண்ட மன்னன் வியப்பெய்தினான். ஏனையோர் இப்புதுமையான நிகழ்ச்சியைப்

பற்றிப் பேசிக்கொண்டனர் என்று கூறிக் கதையை முடித்த வேதாளம் மன்னனை நோக்கி,

"இங்ஙனம் மூவரும் மூன்று விதத்தில் துன்பமுற்றனர். மலர் தொடைமேல் வீழ்ந்ததால் வலியால்துடித்த இந்திரரேகை, நிலவு தழலாய் எரித்தமையால் உடலில் கொப்புளங்கள் தோன்றித் துன்பப்பட்ட தாரவல்லி, உலக்கை குற்றும் ஓசை கேட்டவுடனேயே கரம் கன்றிப்போன மிருகாங்கபதி ஆகிய இம்மூவரில் மிக்க சுகி யார்?" என்று வினவியது. அதற்கு மன்னவன் வேதாளத்தை நோக்கி,

"மலர் தொடைமேல் வீழ்ந்ததால் நொந்த மங்கையும், நிலவு எரித்ததால் உடலில் கொப்புளங்கள் தோன்றி வருந்திய மங்கையும் தங்கள் உடலின்மேல் முறையே மலரும் நிலவும் பட்டதால் இவ்விதம் துயருற்றனர். ஆனல் மூன்ரும் மனைவியான மிருகாங்கபதியோ உலக்கை குற்றும் ஓசையைக் கேட்டவுடனேயே விரல்கள் கன்றித் துன்பப்பட்டாள். எனவே, அவளே மூவரில் மிக்க சுகி" என்று விடை கூறினன். அது கேட்ட வேதாளம் உடனே சென்று மரத்தில் ஏறிக்கொண்டது.

---

## 12. அருச்சுன சுவாமி கதை

விக்கிரமாதித்த மன்னன் மறுபடியும் ஊக்கத்துடன் சென்று மரத்திலிருந்த வேதாளத்தைப் பிடித்துக்கொண்டு வந்தான். அப்பொழுது அது மன்னனை நோக்கி வழித்தொலை தெரியாதிருக்கப் பன்னிரண்டாம் கதையைச் சொல்லத் தொடங்கியது.

இந்த உலகத்தில் வாரணசி என்னும் நகரம் ஒன்று உள்ளது. அது பாவ வினைகளை நீக்கி நல்ல பதம் அளிக்கின்ற கங்கைக் கரையிலுள்ளது. அந்த நகரத்தை அடைந்தாலும், அடைந்தவரைக் கண்டாலும், அந்த நகரத்தைப் புகழ்ந்தாலும் அது பாவ வினைகளைப் போக்கவல்ல சிறப்பு உடையது. அந்த நகரத்தில் பைந்தமிழ்ப் புலவர்களும் மன்னர்களும் மண்டலத் தலைவர்களும் விஞ்சையர்களும் விரும்பி வாழ்ந்தனர். நான்கு

மறைகளையும் புராணங்களையும் மறைநூல் தொடர்பான ஆறு அங்கங்களையும் கற்ற அந்தண அறிஞன் ஒருவன் அந்நகரத்தில் வாழ்ந்துவந்தான். அவன் பெயர் தெய்வ சுவாமி என்பது. அவனுக்கு அருச்சுன சுவாமி என்னும் பெயருடைய மைந்தன் ஒருவன் இருந்தான்.

தெய்வ சுவாமி தன் மைந்தனுக்குப் பதினறு வயது வந்த போது மேனகைக்கு நிகரான அழகுடைய இரத்தினபதி என்னும் பெண்ணை மணஞ்செய்து வைத்தான். மன்மதனும் இரதியும் போலவும், ஆறுமுகனேடு வள்ளி போலவும், இந்திராணியோடு இந்திரன் போலவும், இரத்தினபதியும் அருச்சுன சுவாமியும் மிகுந்த மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர். அவர்கள் இருவரும் வசந்த காலத்தில் ஒருநாள் மேடைமீது துயின்றனர்.

செல்வம் கிடைத்தபோது உண்ணுமலும் உடுத்தாமலும் இருக்கும் அற்பர் சிலர் உண்டு. அவர்கள் தாம் சேர்த்த பொருளை மண்ணில் புதைத்து வைத்தபோது திருடர் அதனை எடுத்துக்கொண்டு போய் விடுவதுபோல இரத்தினபதி என்னும் பெண்ணை ஓர் அரக்கன் வந்து எடுத்துக்கொண்டு மறைந்து போயினன்.

இராவணன் சீதையைத் தூக்கிக்கொண்டு சென்றபோது இராமன் தேடிச் சென்று வருந்தியதுபோல இரத்தினபதியைத் தேடிக்கொண்டு அருச்சுன சுவாமி சென்று அலைந்து வருந்தினன். அருச்சுன சுவாமி காதலினல் வருந்திய நிலை இரங்கத் தக்கதாய் இருந்தது. தாய் தந்தையர் அவனைப் பலவாறு தேற்றியும் அவன் தேருதவனய் அவளைத்தேடி அலைந்தான்; துயரத்தில் மூழ்கி வாடினன்; ஒளி இழந்த சந்திரன் போலவும், கையில் இருந்த பெரும்பொருளை இழந்தவன் போலவும், பதவி இழந்த மனிதனைப் போலவும், உயிர் நீங்கிய உடல் போலவும், தலையில் கை வைத்துக்கொண்டு புலம்பினன்; பல ஊர்களிலும் சென்று தேடினன்; மலைகளிலும் காடுகளிலும் தேடித் தேடிப் பார்த்தான்.

அவன் பல திசைகளிலும் தேடி வருத்தத்தோடு அந்தணபுரம் என்னும் ஓர் ஊரை அடைந்தான். அவ்வூரில் பத்மநாபன் என்னும் வேதியன் ஒருவன் வேள்வி செய்தான். அங்குச்

சென்ற அருச்சுன சுவாமி, "என் பசியைத் தணிப்பீராக" என்ருன். பத்மநாபன் என்னும் அந்தணன் பக்கத்திலிருந்த தன் மனைவியைப்பார்த்து, "இவனுக்கு அமுது படை" என்று கட்டளை இட்டான்.

அவள் அன்னம் கறி முதலியவற்றை விரைவாகச் சமைத்தாள். அருச்சுன சுவாமி அவளை நோக்கி, "நான் குளத்தில் குளித்து நாட் கடன்களை முடித்தபிறகே உணவு கொள்வேன். ஆதலால் எனக்கு உணவினைக் கட்டிக்கொடுத்து விடுக" என்ருன். அவளும் அதற்கிணங்கிப் பலா இலையில் உணவைக் கட்டிக் கொடுத்தாள். அவன் விரைந்து வாங்கிச் சென்ருன்.

அருச்சுனசுவாமி வழியில் ஒரு குளத்தைக் கண்டான்; அதன் கரையில் ஒரு மரத்தின் நிழலில் உணவை வைத்தான்; திருமாலை நினைந்து வாழ்த்தி வழிபட்டுக் குளத்தில் குளித்தான்; பிறகு தான் செய்ய வேண்டிய நியமங்களை யெல்லாம் செய்து முடித்தான்.

அவன் பிறகு கரையில் வைத்திருந்த சோற்று மூட்டையை அவிழ்த்து நீரை அதன்மீது சிறிது தெளித்து மிகுந்த பசியினுல் விரைந்து உண்ணத் தொடங்கினுன். இளமைப் பருவத்தில் வந்த நோய் போலவும், ஒன்று நினைக்க மற்ருென்று வந்ததுபோலவும், இளம் பெண்களின் வார்த்தையை நம்பிய புருடர்போலவும் அவனுக்கும் தெரியாமல் ஒரு தவறு அங்கு நிகழ்ந்தது.

மிகுந்த பசியினுல் வருந்திய கருடன் ஒன்று ஒரு நாகத்தைப் பற்றி எடுத்து அந்த மரத்தின்மேல் வைத்துக்கொண்டு, அப்பாம்பின் படத்தைக் கொத்தியது. அப்பொழுது பாம்பு பதைத்து வருந்தித் தன் வாயினுல் விடத்தை உமிழ்ந்தது. அந்த விடம் அரச மரத்தின் அடியில் உணவருந்திக்கொண்டிருந்த அருச்சுன சுவாமியின் உணவில் விழுந்தது.

அவன் தன் உணவில் விடம் விழுந்ததை அறியாமல் பசியினுல் விரைந்து உண்டான். அந்த விடமானது அவனுடைய உடலிற் புகுந்து தலையில் ஏறியது. அவன் பழைய வினையின் பயனுல் உடனே உயிரை நீத்தான்.

வேதாளம் விக்கிரமாதித்தனைப் பார்த்து, "மன்னனே, அருச்சுனசுவாமி உணவோடு விடத்தையும் புசித்து இறந்தான். அந்தப் பாவம் யாரைச் சேரும்? உணவு கொடுக்கச் சொன்ன மறையவனைச் சேருமா? உணவு சமைத்துக் கொடுத்த அவன் மனைவியைச் சேருமா? அல்லது அந்தப் பாம்பைச் சேருமா? கருடனைச் சேருமா? விடை கூறு" என்று கேட்டது.

"ஒருவர் வந்து உணவு கேட்டால் கொடுக்கச் சொல்வது அறமே யாகும். ஆதலால் மறையவன்மீது குற்றம் இல்லை. உணவு சமைத்துக் கொடுத்த அவன் மனைவி செயலும் நன்றே யாகும். கருடன் இரைதேடிச் சென்று பாம்பை எடுப்பதும் குற்றம் ஆகாது. பாம்பு தன்னுயிர்க்கு இறுதி வருந் துன்ப நிலையில் விடத்தைக் கக்கும். ஆதலால் ஒருவர்மீதும் அந்தப் பாவம் சேராது. யார்மீதாவது ஒருவர் பழி சுமத்தினால் அவரையே அந்தப் பாவம் சேரும்" என்று மன்னன் விடை கூறினான்.

மன்னன் கூறிய விடை மிகப் பொருத்தமாய் இருந்ததைக் கண்டு வேதாளம் வியந்தது. மதுரையில் முன்பு திருஞான சம்பந்தர் சமணர்களோடு வாதிட்டபோது தேவாரம் எழுதிய ஏடு ஒன்றை வைகையாற்றிலே இட்டார். அது நீரிலே எதிரேறிச் சென்றது. அதுபோல இந்த வேதாளம் மீண்டும் சென்று மரத்தில் ஏறிக்கொண்டது.

---

## 13. தீர்க்கதரிசி கதை

விக்கிரமாதித்தன் மரத்திலிருந்த வேதாளத்தை மறுபடியும் பிடித்துக் கட்டிக் கொண்டுவந்தான். அப்பொழுது அது, "மன்னனே, பதின்மூன்றாம் கதை கூறுகின்றேன், கேள்" என்று கூறத் தொடங்கியது.

சங்குகள் தவழ்கின்ற மலர் நிறைந்த குளங்களும், முத்துக்கள் புரள்கின்ற நீர் நிறைந்த வயல்களும், வளம் நிறைந்த ஏரிகளும், மேக மண்டலம்வரை வளர்ந்த சோலைகளும், மாட

கூடங்களும் கோயில்களும் நிறைந்த **விசயம்** என்னும் பெயர் கொண்ட நகரம் ஒன்று உண்டு.

அந்த நகரத்தில் **வங்கிய கேதுவன்** என்னும் பெயர்கொண்ட மன்னன் ஒருவன் இருந்தான். அவன் புலவர்களை ஆதரித்தான்; திருமகளும் தன் உறைவிடமாக அதனைக் கொண்டாள். அறிவு பொறுமை முதலியவற்றிற் சிறந்த நல்லோரும் அங்குக் குடிகொண்டிருந்தனர்.

அம்மன்னனுடைய மனைவியின் பெயர் **சந்திரவதனை** என்பது. அவள் திலோத்தமையைப் போன்று அழகுபெற்று விளங்கினாள். மன்மதனைப் போன்று அழகுபெற்று விளங்கிய மன்னன், தன் மனைவியின் பேரழகில் ஈடுபட்டு, அவளைவிட்டுப் பிரியாது, எப்பொழுதும் அவளுடனேயே தங்கி இன்பந் துய்த்துக்கொண்டிருந்தான். அவன் தன் அரசியலைச் சிறிதும் கருதாது இருந்தான்; அரண்மனைக்கு வந்த வரிப்பொருள்களையும் திறைப் பொருள்களையும் கணக்குச் செய்யாது இருந்தான்; நாட்டில் நடைபெற்ற நன்மை தீமைகளை எண்ணிப்பாராது இருந்தான்; தனக்குப் புகழ் உண்டாகத்தக்க செயல்களையும் செய்யாது இருந்தான்; பக்கத்து நாடுகளில் இருந்த மன்னர்கள் எவற்றைச் செய்தனர் என்பதைக் காணாமலும், நினையாமலும் இருந்தான்.

அம்மன்னனுக்கு அமைச்சன் ஒருவன் இருந்தான். அவன் நாட்டைக்காக்கும் முறைகளையும், இடம் காலம் முதலியவற்றை அறியும் திறமையும் உடையவன்; **தீர்க்கதரிசி** என்னும் பெயர் பெற்றவன். அவனே மந்திரிகளுக்குள் தலைமைபெற்று விளங்கினான். அவன் மன்னனுடைய கட்டளையின்படி நாட்டை ஆண்டுவந்தான்.

பகை மன்னரும் மதிக்கும்படி நாட்டை ஆண்டுவந்த அமைச்சன், நாட்டுக் குடிமக்கள் துன்பங்களால் வருந்தியபோது உடனிருந்து உதவிசெய்தான்; மன்னனுக்குச் சிறிதும் தீமை எண்ணாது இருந்தான். உலகத்திலிருந்த மக்கள், "அமைச்சன் தீர்க்கதரிசி மன்னனை மூலையில் தள்ளி வைத்துத் தானே மன்னன்போல இருந்து ஆளச் சூழ்ச்சி செய்துள்ளான்" என்று அவன்மீது பழி சுமத்திப் பேசினார்கள். உலக மக்கள் கூறிய

சொற்களை அமைச்சன் கேட்டு, "மன்னனும் இப்படி இருக்கின்றான்; நான் முறையாக ஆண்டாலும் எனக்குப் பழிச் சொல்லே வருகின்றது. பின்னர் ஒரு வேளை மன்னனே நம்மீது பழி கூறுதலும் கூடும்" என்று பயந்தான்; "நாடுகளில் அமைச்சர்கள் எத்தனையோ பேர் உண்டு. மன்னன் இல்லாத வேளையில் அவர்கள் முறையாக நடந்தாலும் அவர்களுக்குக் கிடைப்பது இத்தகைய பழிதானே? சங்கரனே!" என்று சொல்லி மனந்தளர்ந்தான். "நன்மைகளே செய்தாலும் அமைச்சர்க்கு வருவது இத்தகைய பழிச்சொல்லாகுமாயின், நாம் இங்கிருந்து ஆட்சி செய்வது முறையன்று" என்று கூறி, அமைச்சன் தன் நாட்டைவிட்டு வெளியேறி, வெளிநாடு கட்குச் சென்றான்.

மந்திரி சென்றுவிட்டதைக் கேள்வியுற்ற அரசன் மனக் கவலை கொண்டான்; பின்பு தனக்கு விருப்பமான மற்ற அமைச்சர்களை வைத்து நாட்டை ஆளும்படி செய்தான். வெளியேறிச் சென்ற முதல் அமைச்சன் பல நாடுகளுக்கும் சென்று முடிவாகக் கடற்கரை அருகில் உள்ள ஒரு பெரிய நகரத்தை அடைந்தான். அவ்வூரில் வணிகரிலே சிறந்த **வர்த்தகன்** என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவனுடன் அமைச்சன் நட்புக்கொண்டு சில மாதங்கள் தங்கி யிருந்தான். உடலில் தங்கிய உயிர் போலவும், மலரில் தங்கிய மணம் போலவும், கடலில் தங்கிய கப்பல் போலவும் வணிகனிடம் அமைச்சன் நட்புக்கொண்டு பிரியாது வாழ்ந்துவந்தான். இவ்வாறு இணைபிரியாது வாழ்ந்துவரும் நாளில் ஒரு நாள் வணிகன் அமைச்சனைப் பார்த்து, "நான் கப்பலேறிக் கடல் கடந்து சென்று வெளிநாட்டில் வாணிகம் செய்து பின்பு வருவேன். நான் வரும் வரையும் நீர் இங்குத் தங்கி இருப்பீராக" என்றான். அதுகேட்ட அமைச்சன், "நண்பரே, நானும் உம்முடன் வந்து அந்நகரங்களையெல்லாம் காண விரும்புகின்றேன்" என்றான்.

வணிகன் ஒப்புக்கொண்டு கப்பலை அமர்த்தினான். இருவரும் கடலிற் சென்றனர். காலையிலும் மாலையிலும் மனம் கசிந்து வேலனை வழிபடுகின்றவருடைய நல்வினைபோல நல்ல காற்று வீச வீச, மிக்க மகிழ்ச்சி யுண்டாகும்படி கப்பல்

நன்கு சென்றது. கப்பல் நடுக்கடலில் சென்று ஒரு தீவை அடைந்தது. அந்தத் தீவில் உமாதேவியின் கோவிலின் முன்பு மர நிழலிலே, ஒரு கட்டிலின்மேல் ஓர் அழகிய பெண் தூங்கிக்கொண்டிருந்தாள். அவளை அமைச்சனும் வணிகனும் கண்டனர். "இவள் கடற் கன்னியோ! தேவருலகத்துப் பெண்ணோ! தேவேந்திரனுடைய மகளோ! அல்லது ஒரு மோகினியோ! திருமகளோ! யாரோ இவள்!" என்று அமைச்சன் கூறினான். உடனே வர்த்தகன் என்னும் வணிகன் அமைச்சனைப் பார்த்து, "நாங்கள் பலமுறை கப்பலேறி இந்தத் திசையில் வருவது உண்டு. வரும்போதெல்லாம் அழகிய ஒரு பெண் இங்கு இருக்கின்றாள் எனக் கேள்விப்பட்டிருக்கிறோம்" என்றான்.

அமைச்சன், "இது புதுமையாய் இருக்கிறது. இத்தகைய அழகிய பெண்ணை நாங்கள் கண்டதும் இல்லை; கேட்டதும் இல்லை" என்று கூறி மகிழ்ந்து, மறுபடியும் கப்பலேறித் தன் ஊரை அடைந்தான்; பின்பு அரசனைக்கண்டு அவன் முன் வாய் மூடிக் கைகுவித்து நின்றான். மன்னன் அவனைக் கண்டு மகிழ்ந்தான். தன்னை விட்டுப் பிரிந்த அமைச்சன் மறுபடியும் தன்னை வந்து அடைந்தது அவனுக்கு மிக்க மகிழ்ச்சியைத் தந்தது. கண்ணிலிருந்து நீங்கிய விழி மறுபடியும் கிடைத்தது போலவும், வழியில் தவறி விழுந்த பெரும் பொருள் மறுபடியும் கிடைத்தது போலவும், உடலைவிட்டு நீங்கின உயிர் மறுபடியும் வந்து அவ்வுடலிற் கூடினது போலவும், விலகிச் சென்ற அமைச்சன் மறுபடியும் தன்னை வந்தடைந்ததாக மன்னன் நினைத்து மகிழ்ந்தான்.

"என்னுடைய இளமைந்தன் போலவும், என்னுயிர் போலவும், துன்பம் நீங்கும் தோழன் போலவும் இருந்த நீ என்னைத் தனியே விட்டு அன்பில்லாதவர் போலச் செல்லலாமா? அவ்வாறு பிரிந்து செல்ல உனக்கு நேர்ந்த துன்பம் என்ன? கூறு," என்றான் அரசன்.

"அரசே, கேள்: நீயும் ஆட்சி முறையைச் சிறிதும் சிந்தியாது இருந்தாய்; உலகோரும் என்மீது பழிச்சொல் பகர்ந்தனர். நீ நான் சொன்ன நல்லுரைகளையும் கேட்கவில்லை.

ஆதலால் தலைவன் இல்லாத நாட்டில் இருப்பது தவறு என்று கருதி நான் சென்றுவிட்டேன். இங்கிருந்து சென்ற பிறகு நான் வணிகன் ஒருவனுடன் கப்பலேறி வெளிநாடு சென்றேன்; சென்ற இடத்தில் ஒரு தீவில் ஒரு கன்னியைக் கண்டேன். அவள் மிக்க அழகுடையவள். அந்தத் தீவில் ஒரு காளி கோவில் இருக்கின்றது. அக்கோவில் முன்பு ஒரு மரத்தின் அடியில் அரியணையில் அந்தப் பெண் இருக்கின்றாள். இது இந்த உலகத்தில் ஒரு புதுமை" என்று அமைச்சன் கூறினான். மேலும் அவன், "வணிகன் கப்பலில் அத்தீவுக்குச் செல்லு கின்றபோதெல்லாம் அப்பெண்ணைப் பார்ப்பது உண்டாம். அப்பெண்ணை, அரம்பை முதலான தேவருலகப் பெண்களுக்கு உவமையாகக் கூறுவது பொருந்தாது. இப்படிப்பட்ட அழகுடைய பெண்ணை யாரும் கண்டிருக்க முடியாது. இது புதுமையிலும் புதுமை" என்று கூறினான்.

அமைச்சன் கூறிய சொற்களைக் கேட்ட அரசன் தன்னை மறந்தான்; அப்பெண்ணைப் பார்க்க வேண்டும் என்று பேராவல் கொண்டான்; தன் நாட்டை அமைச்சர்களிடம் ஒப்படைத்துவிட்டுத் தான் அப்பெண்ணின் அழகை நினைந்து கொண்டே, வர்த்தகன் என்னும் வணிகன் இருந்த இடத்தை அடைந்தான்.

அரசன் வணிகனைக் கண்டு, அமைச்சன் தன்னிடம் கூறிய செய்திகளையெல்லாம் சொல்லி, அவ்வணிகனை அழைத்துக் கொண்டு தீவை அடைந்தான்; அந்தத் தீவில் பொன்னால் செய்யப்பட்ட உமாதேவி கோவிலின் முன்பு ஒரு மர நிழலில் இருந்த அந்தப் பெண்ணைக் கண்டான்; அவள் அழகைக் கண் குளிரக் கண்டு வியந்தான்; "இந்திரனும் இந்தப் பெண்ணைக் கண்டால் இவ்விடத்தைவிட்டு நகர்ந்து செல்வானோ? இவளைப் பார்த்த பிறகு இவ்விடம்விட்டு நீங்கி நம்மிடம் வந்த அமைச் சனே மனவுறுதி உடையவன்" என்று கூறி, அங்கிருந்த அம்மன் கோவிலினுள் சென்று வழிபட்டான்; "அம்மையே, எனக்கு அப்பெண்ணை மணஞ்செய்து கொடுக்க வேண்டும்" என்றான். "அரசனே, உனக்கு அப்பெண்ணைக் கொடுத் தோம். மணஞ் செய்து இன்புற்று வாழ்க" எனத் தேவி அருள் புரிந்தாள். பின்பு வேந்தன் மிகுந்த காதலோடு அப்பெண்

ணின் அருகில் சென்ருன். அவன் முகத்தைப் பார்த்தவுடன் அப்பெண் நீரில் பாய்ந்து விரைந்து சென்ருள்; சென்றவள் தன்னுடைய பன்னகபுரத்தை அடைந்தாள்; அங்குத் தன்னுடைய வீட்டில் பெரிய கட்டிலில் ஏறியிருந்து புதிய சித்திரம் அமைந்த ஆடையால் தன் முகத்தை மூடிக்கொண்டாள்; தூங்குபவள் போலப் படுத்திருந்தாள். காளியம்மையின் அருள்பெற்ற அரசன் அந்த வலிமையினுல் தானும் நீரிற் குதித்து ஒரு சுருங்கை வழியாகச் சென்று நாகருலகத்தை அடைந்து, பன்னக புரத்திலிருந்த அவள் வீட்டிற்குச் சென்ருன்; அங்கு அவள் இருந்த நிலையைக் கண்டான்.

அவன் அவள் முகத்திலிருந்த ஆடையை எடுத்துவிட்டு, "மலர் மகளைப் போன்ற பெண்ணே, உன்மீது நான் கொண்ட காதல் மிகப்பெரிது; என்னை அக்காதல் நோய் வாட்டுகின்றது; என் துன்பத்தைப் போக்குவாய்" என்ருன். மலர்மாலை அணிந்த அப் பெண்ணும் ஓம் என ஒப்புக்கொண்டாள். அவன் முடி சூடி மாநிலத்தை ஆளும் மன்னன் என்பதை அறிந்தவுடன், "அட்டமியும் பௌர்ணமியும் நீங்கின பிற நாட்களில் நீ இங்கு வந்து சேர்" என்ருள். அவனும் இசைந்தான். இரண்டு பாம்புகள் போலவும், அன்றிற் பறவைகள் போலவும், அப்பெண்ணேடு கூடி மன்னன் பல நாள் உறவு கொண்டிருந்தான்; பின்பு பௌர்ணமி நாளன்று அவளை விட்டு விலகி யிருந்தான். "பௌர்ணமி நாளிலே இப்பெண் என்ன செய்கின்ருள் என்பதை நாம் அறிவோம்" என்று எண்ணி மன்னன் இருந்தான். அப்பொழுது அவள் நீராடுவதற்காக ஒரு குளத்திற்குச் சென்ருள்.

"மனிதனுக்கு வரப்போகும் வினை நிகழ்ச்சிகளும், பிரமதேவனுடைய தலையெழுத்தும், நீருள் மறைந்திருக்கும் முள்ளும், மன்னருடைய வெற்றியின் முடிவும், பெண்களின் மனமும் யாராலும் கண்டுபிடிக்க முடியாதவை" என்று மன்னன் நினைத்தான். வாளை உருவிக்கொண்டு அப்பெண்ணுக்குத் தெரியாமல் மன்னன் அவளைப் பின் தொடர்ந்து சென்றபோது, மிகுந்த தோள் வலிமைபெற்ற சலதுட்டன் என்னும் அரக்கன் அப்பெண்ணை வளைத்துப் பிடித்தான்; நளனைச் சனி தேவன் பிடித்தது போலவும், பனி சூரியனை

மூடிக்கொண்டது போலவும், சந்திரனை இராகு என்னும் பாம்பு விழுங்கியதைப் போலவும் அப்பெண்ணை அரக்கன் எடுத்து விழுங்கினான். உடனே மன்னன் விரைந்து சென்று அரக்கனை வாளால் வெட்டி, அவன் வயிற்றிலிருந்து பெண்ணை வெளியில் எடுத்தான். உடனே அப்பெண் அச்சம் நீங்கி மன வலிமை யுடையவளாய்த் தன் சாபம் நீங்கப்பெற்றாள்; மன்னனை நோக்கித் தன் சாப வரலாறு கூறினாள்:

"தேவர் உலகத்தில் இந்திரனுடைய சபையில் இருக்கும் வித்தியாதரர்களில் **மிருகாங்க தத்தன்** என்பவனுடைய மகள் யான். என்னுடன் பிறந்த ஆண்மக்கள் ஆயிரவர். எந்தை என்மீது மிக்க விருப்பம் உடையவர். எந்நாளும் நான் உடனிருந்து உணவு உண்டால்தான், தாமும் உணவு உண்ணுவார்.

"அவர் ஒரு அட்டமிநாளிலே பார்வதியை நோக்கி விரதம் இருந்தார்; அன்று உணவு உண்ணும் நேரத்தில் நான் இல்லாமையால் என்னைப் பல முறையும் தேடினார்; என்னைக் காணாமையால் அன்று தாமும் உணவு உண்ணாமல் பட்டினியாய் இருந்தார்; மறுநாள் நான் வந்த போது பார்த்து மிகுந்த கோபம் கொண்டு, 'உன்னை ஓர் அரக்கன் விழுங்குவான்' என்று சாபம் இட்டார். அவர் சாபம் இட்டவுடனே நான் மிகவும் நடுங்கி, 'இந்தச் சாபம் எப்பொழுது என்னைவிட்டு நீங்கும்?' என்றேன். உடனே தந்தை மனம் இரங்கி, 'வங்கிச கேதுவன் என்னும் மன்னன் உன்னுடன் சேர்ந்து வாழும் நாளில், வலிமை வாய்ந்த அரக்கன் உன்னை விழுங்குவான். அப்பொழுது அம்மன்னன் வந்து உன்னைக் காப்பாற்றுவான்; அப்பொழுது இந்தச் சாபம் உன்னைவிட்டு நீங்கும்' என்றார். அவர் சொன்னபடியே எல்லாம் நிகழ்ந்தன. என் பெயர் **சாரங்கவதனை** என்பது" என்றாள். இவற்றை யெல்லாம் கேட்ட மன்னன் மிகவும் அதிசயங்கொண்டான். பின்பு இருவரும் விரதம் இருந்து, ஒரு குளத்தில் முழுகி, விசயம் என்னும் நகரத்திற்கு வந்து சேர்ந்தனர்.

மன்னன் தன்னுடைய விசய நகரத்துக்குச் சாரங்கவதனை என்னும் மனைவியோடு வந்தபோது, மந்திரிகளும் ஊர் மக்களும் வரவேற்றார்கள். மன்னன் தான் சென்று தங்கி

யிருந்து பின் திரும்பிவந்தவரையில் நடந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் அவர்களுக்குக் கூறினன்.

முன்னரே காமுகனுயிருந்த மன்னன், தேவ கன்னியாகிய சாரங்கவதனை வந்த பிறகு, முன்னைவிட எண் மடங்கு காமமுடையவனுய்க் களித்து வாழ்ந்தான்; தீர்க்கதரிசி என்னும் மந்திரியை அழைத்து முன்போல் அரசியல் நிகழ்ச்சிகளைக் கவனிக்கும்படி கட்டளையிட்டான். இவ்வாறு மறுபடியும் மன்னன் காமுகனுய் இருப்பதையும், தன்னிடமே அரசியல் பொறுப்பு முழுதும் வந்ததையும் எண்ணித் தீர்க்கதரிசி என்னும் அமைச்சன் மனம் வருந்தி, விடத்தை அருந்தி இறந்தான்.

வேதாளம் விக்கிரமாதித்தனைப் பார்த்து, "மன்னனே, தீர்க்கதரிசி என்னும் மந்திரி ஏன் உயிர்விட்டான்? வெளிநாடு சென்ற அரசன் வந்துவிட்டானே என்ற எண்ணமா? அல்லது தான் கண்ட பெண்ணை இவன் கொண்டுவந்து விட்டானே என்ற மனச் சலிப்போ? காரணம் கூறு" என்றது. உடனே அரசன், "சிறியவர்கட்கு இனிமைப் பொருளைக் காட்டியதுபோல, அறியாத மன்னனுக்கு நாம் பெண் இருக்குமிடம் தெரிவித்தோமே என்று எண்ணி மனம் வருந்தி மந்திரி விடம் குடித்து இறந்தான்" என்ருன்.

உலுத்தர் ஒரு பொருளைத் தருகின்றேம் என்று சொல்லி விட்டுப் பிறகு மனம் மாறிவிடுவார்கள்; அதுபோல வருவதாகப் போக்குக் காட்டிய வேதாளம் மன்னனுடைய தோளிலிருந்து விலகி ஓடி மரத்தில் ஏறிக்கொண்டது.

---

## 14. கள்வன் கதை

மறையவரும் அடியார்களும் கொடைவள்ளல்களும் வாழும் சிறப்புடையதும், உயர்ந்த மதில்களால் சூழப்பெற்றதுமாகிய **அயோத்தி** என்னும் நகரம் ஒன்று உள்ளது. அதன்கண் **வீரகோ** என்னும் அரசன் ஒருவன் இருந்தான். அவன் பண்பு, கல்வி, வெற்றி, கடவுள்பக்தி முதலியவைகளில் சிறந்து விளங்கினன். அந்நகரத்தில் செல்வம் மிகுதியாகப்பெற்ற வணிகரில் சிறந்தவனுக **இரத்தினதத்தன்** என்பவன் இருந்தான்.

அவன் நெடுநாள் தவஞ்செய்து ஒரு பெண் மகவைப் பெற்றான்; அப்பெண்ணுக்கு இரத்தினபதி என்று பெயர் சூட்டினன். அப்பெண் இரதியைப் போன்ற அழகு உடையவளாய் வளர்ந்துவந்தாள். அவளுடைய அழகைக் கேள்வியுற்று நேரில் வந்து கண்ட வணிகர் பலர், "பொருள் மிகத் தருகின்றோம். இப் பெண்ணை எமக்கு மணஞ்செய்து தருக" என வேண்டினர். வணிகன் அவர்களைப் பார்த்து, "பெண் மனஞ் சம்மதித்தால் யான் மணஞ் செய்து தருவேன்" என்றான். இரத்தினபதி தன்னை மணஞ் செய்ய விரும்பி வந்தவர் யாரையும் விரும்பாமையால் அவர்கள் வெறுத்துச் சென்றனர். அதனால் அவள் தன் வீட்டில் தனித்தே இருந்து வந்தாள்.

அந்த ஊரில் கள்வன் ஒருவன் இருந்தான். அவன் களவு செய்வதில் மிகவும் வல்லமையுடையவன்; யாரையும் கொல்லு வான்; வழிப்பறி செய்வான்; களவு நூல் முழுதும் நன்றாகக் கற்றவன்; ஊர் மக்களால் கொடியவன் என்று வெறுக்கப் பட்டவன். அவன் கரிய நிறத்தவன்; புதர் போல் வளர்ந்த தலைமுடியுடையவன்; கள்வருக்கெல்லாம் அவனே தலைவன்; மன்னர்களுடைய அரண்மனைகளிலும், மண்டல அதிகாரி களின் வீடுகளிலும், அறைக்குள் அறை வைத்திருந்தாலும் குறி தவறாது சென்று திருடும் ஆற்றல் உடையவன். அவன் பல நகரங்களிலும் சென்று களவுத் தொழில் புரிந்து வந்த நாள்களில் நகர மக்கள் பலரும் மன்னனிடத்தில் முறை யிட்டார்கள். ஒருநாள் மன்னன் மாறுவேடம் பூண்டுகொண்டு நகர் சோதனைக்காக வந்தான். அப்பொழுது வழியில் கள்வர் தலைவன் மன்னன் முன்பு வந்து சேர்ந்தான். அப்பொழுது மன்னன் அவனைப்பார்த்து, "நீயார்? எங்கு வந்தாய்? ஏன் இந்த இரவிலே இப்படி உலாவுகின்றாய்?" என்று கேட்டான்.

உடனே கள்வன், "யான் காளி தேவியினுடைய மகன்; அத்தேவி என்னைப் பார்த்து, 'நீ இந்த ஊரில் இரவில் காவல் காத்து உலாவிக்கொண்டிரு' என்றாள். அதனால் நான் இங்கு வந்து உலாவுகின்றேன்" என்றான். பின்பு மன்னன் அவனைப் பார்த்து அவன் யார் என்று தெரிந்துகொண்டான்; "நீ என்னுடன் வந்து என் வீட்டில் காவல் காத்துக்கொண்டிரு; உனக்கு வேண்டும் பொருள் தருகிறேன்" என்றான். கள்வன்

ஒப்புக்கொண்டு மன்னனுடன் அரண்மனைக்குச் சென்று வெளியிற் காவல் காக்கும் வேலையில் அமர்ந்தான். மன்னன் தன்னுடைய அரண்மனையுள் சென்ற பிறகு கள்வன் தன் கூட்டத்தாரை மறைவாக அழைத்து, "இன்று இரவு மன்னனை நாம் கொன்று விடலாம்" என இரகசியமாகக் கூறினன். இவற்றை யெல்லாம் மறைவில் இருந்து கண்டிருந்த பணிப் பெண் ஒருத்தி உடனே அரண்மனையுள் சென்று அரசனிடத்தில் இரகசியமாக இவற்றைக் கூறினள். உண்மை தெரிந்த அரசன் உடனே தன் வீரர்களை அழைத்துக்கொண்டு வந்து, அக்கள்வர் கூட்டத்தைச் சுற்றி வளைத்துப் பிடித்துக் கொண்டான். கள்வர் தலைவனும் பிடிபட்டான்.

மன்னன் கள்வர் பலரையும் கொலை செய்வித்தான்; கள்வர் தலைவனாய் இருந்த அவனைப் பிடித்து, "இவனை இந் நகரத்து மக்கள் எல்லோரும் அறியும்படி ஊரைச் சுற்றி அழைத்துக்கொண்டு போய்க் கழுவில் ஏற்றுங்கள்" எனக் கட்டளை இட்டான். அப்பொழுது அக்கால வழக்கப்படி அக் கள்வன் உடம்பில் சந்தனம் பூசி, மார்பிலே பூமாலையை அணிந்து ஊரைச்சுற்றி வலமாக அழைத்து வந்தார்கள். அப் பொழுது ஒரு நிகழ்ச்சி நடந்தது.

வணிகர் வீதியில் அக்கள்வன் வந்தபோது இரத்தினபதி என்னும் பெண் அவனைப் பார்த்துக் காதல்கொண்டு அவனை மணஞ்செய்துகொள்ள விரும்பினள்; உடனே தன் தந்தையிடம் சென்று, "இந்தக் கள்வனே எனக்குக் காதலனாக வேண்டும். வேறு யாரையும் நான் மணஞ் செய்துகொள்ள மாட்டேன். ஆதலால் இவனை விடுதலை செய்து கொண்டுவந்து எனக்கு மணமகனாக்குக" என்றாள்.

மகள் கூறிய சொற்களைக் கேட்ட தந்தை மிக வருந்தினன்; "யாரேனும் கள்வனுக்கு உறவாகுவார்களோ? மன்னன் கள்வனை விடுதலை செய்வானோ? இவற்றை யெல்லாம் நினைத்துப் பார்த்துக் கூறு" எனத் தன் மகளிடம் பேசினன்.

"கள்வனே என்னுடைய கணவன்; நான் வேறு யாரையும் மணஞ் செய்துகொள்ள மாட்டேன். நீர் எப்படியாவது அவனை விடுதலை செய்விக்க வேண்டும். இல்லையெனின் நான் நெருப்பில் மூழ்கி இறப்பேன்" என்றாள் இரத்தினபதி.

வணிகன், "இது முறை அன்று; கள்வன் நமக்கு உறவினன் அல்லன்; அவன் முன்பு நமக்குப் பழக்கமான

வனும் அல்லன். அவன் நமக்கு நண்பனும் அல்லன். யாருக்கு யார் உதவி செய்வார்கள்? இப்பெண்ணும் வருந்துகின்றாள். நாம் என்ன செய்யலாம்?" என்று நினைந்து அரசனிடம் சென்றான்; விலை மதிக்க முடியாத கோமேதகம் என்னும் ஒரு மணியை அவன் காலின்முன் காணிக்கையாக வைத்துப் பின்பு தான் வந்த காரியத்தையும் கூறினான்.

"அரசே, பெருந்தவம் செய்து யான் பெற்ற பெண்கொடி இரத்தினபதி என்பவள். அவள் தன்னை விரும்பி வந்தவர்களுக்கு எல்லாம் மாலை அணியவில்லை; கள்வனையே விரும்புகின்றாள். ஆதலால் அவனை விடுவித்துக் காப்பாற்ற வேண்டும். நான் வேண்டிய அளவு பொருள் தருகின்றேன். கள்வனைத் தாங்கள் காப்பாற்றாவிடில் தான் நெருப்பில் மூழ்கி இறப்பதாக என் மகள் கூறுகின்றாள். கடவுள்மேல் பாரத்தைச் சுமத்தி, நீர் அவனை விடுதலை செய்ய வேண்டும்" என்று வணங்கி வேண்டினான்.

"வணிகரே, வேறு எது வேண்டுமாயினும் நான் தருவேன்; இந்நகரத்தில் பலமுறை கொள்ளையிட்ட கள்வனை விடுதலை செய்யலாமோ? கள்வனுக்கு உறவினரும் கள்வரே யாவர். அறிவில்லாதவர் போல நீர் என்னிடம் வந்தீர். நீரும் ஒரு வேளை அக்கள்வர் கூட்டத்தைச் சேர்ந்தவரோ என்று நான் நினைக்கின்றேன். விரைவில் அப்பால் விலகிச் செல்வீராக" என்று அரசன் சினங்கொண்டு கூறினான்.

வணிகன் மன்னனுடைய மனக்கருத்தை அறிந்து வேறு ஒன்றும் பேசாது தலை வணங்கிச் சென்றான்; வீட்டிற்குச் சென்று தன் மகளைப் பார்த்து நடந்தவைகளைக் கூறினான். தந்தையின் உரைகளைக் கேட்ட இரத்தினபதி மனக் கவலை கொண்டு, "கள்வன் பின் செல்வேன்" என்றாள். வணிகன் எப்படித் தடுத்தும் அவள் கேளாமல், பல ஆண்டுகள் மகிழ்ந்து கூடிய கணவனைப் போல நினைத்துக் கவலைகொண்டு, கண்களில் கண்ணீர் ஆறுபோல் பெருக, அக்கள்வனைத் தேடிக்கொண்டு தெருக்களில் ஓடினாள்.

ஓடிய பெண்ணைச் சுற்றத்தாரும் ஊர்மக்களும் பலவாறு தடுத்துப் பார்த்தனர். அவள் நில்லாமல் ஓடினாள், வாடினாள், அழுதாள், வயிற்றில் அடித்துக்கொண்டாள்; கள்வனைப் பின் தொடர்ந்து சென்றாள். ஊர் மக்கள் அவளுடைய நிலையைக்

கண்டு வருந்தினர். தந்தை அளவற்ற துன்பத்தை அடைந் தான். கள்வனும் மக்கள் கூட்டமும் முன் செல்லப் பெண் இரத்தினபதி பின் செல்லத் தந்தையும் வருத்தமுடையவனாய்ப் பின் தொடர்ந்து சென்றான்.

அரசன் ஆணைப்படி கொலைகாரர் கள்வனைக் கழுவில் ஏற்றினர். அப்போது அவன் வணிகனையும் பெண்ணையும் பார்த்து நகைத்தான்; பின்பு அழுதான். உடனே அவன் உயிர் அடங்கியது. கள்வன் உயிர்விட்டதைக் கண்ட பெண் வருந்தினாள்; பின்பு தூய்மையான கௌரி நோன்பினை முறையாக மேற்கொண்டாள்; தீயை வளர்த்து அதனை வல மாகச் சுற்றி வந்தாள். அப்பொழுது சிவபெருமான் காளை வாகனத்தின்மீது வானத்தில் தோன்றி, "பெண்ணே, நீ ஏன் இந்த நெருப்பில் விழுகின்றாய்? உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்; தருகின்றேன்" என்றார்.

உடனே அவள், "இறந்து கிடக்கும் இவன் உயிரைத் தர வேண்டும்" என்றாள். இறைவனும், "தந்தேன்" எனச் சொல்லி அவ்விடத்தினின்றும் மறைந்தார். கள்வனும் கழு மரத்தினின்றும் இறக்கப்பட்டான்; உயிர்பெற்றெழுந்தான். இரத்தினபதி அவனை மணஞ்செய்துகொண்டு தன் இல்லத்தில் இன்ப வாழ்வு வாழ்ந்தாள்.

நகரமாந்தர் அனைவரும் இதனை அறிந்து அதிசயித்தனர்; மன்னன், "இது என்ன புதுமை!" என வியந்து, அவனைத் தன் சேனைக்குத் தலைவனாக்கினான். கள்வன் அப்பெண்ணால் உயிரும் பதவியும் பெற்றான்.

வேதாளம் விக்கிரமாதித்த மன்னனைப் பார்த்து, "மன்னனே, கள்வனைக் கழுவிலேற்றியபோது அவன் ஏன் நகைத்தான்? ஏன் அழுதான்? விடை சொல்" என்றது.

"நமக்கு முன் பழக்கமில்லாத இப்பெண் இவ்வாறு வருந்துகின்றாளே என்று நினைத்துக் கள்வன் முதலில் நகைத் தான்; பின்பு அப்பெண்ணின் தந்தை பட்ட துயரத்தைக் கண்டு அழுதான். இவையே காரணம்" என்றான் மன்னன். அப்பொழுது வேதாளம் மன்னனிடமிருந்து தப்பி ஓடி மறுபடி யும் முருக்க மரத்தில் ஏறிக்கொண்டது.

---

## 15. தெய்வ சுவாமி கதை

விக்கிரமாதித்த மன்னன் வேதாளத்தை மறுபடியும் பிடித்துக் கொண்டுவந்தபோது அது பதினைந்தாம் கதையைக் கூறியது.

அழகு செய்யப்பெற்ற பல வீடுகளில் கொடிகள் கட்டப்பட்டிருந்தன. "இங்கு அன்னம் அளிக்கப்படும்; பசியாறுவோர் இங்கு வருக" என அழைப்பதற்கே அக்கொடிகள் கட்டப்பட்டிருந்தன. இத்தகைய தான தருமங்கள் நிறைந்ததும் அழகு மிக்கதுமாகிய **விசயம்** என்னும் நகரம் ஒன்று இருந்தது. அந்த நகரத்தில் இருந்து தேவு என்னும் அரசன் ஆண்டுவந்தான். அவன் அன்பு, பெருமை, செல்வ வளம் முதலிய நலங்கள் எல்லாம் அமையப் பெற்றவன்; கற்பக தருவைப் போலக் கொடை புரிதலிலே சிறந்தவன். அவன் தசரத மைந்தனாகிய இராமன் போல அரசாண்டுவந்தான். அந்த மன்னனுடைய மனைவி மிக்க பேரழகு பெற்றவள்; **உரோம வல்லி** என்னும் பெயர் உடையவள்.

அவர்கள் தவத்தினால் பிறந்த மகள் மயில் போன்ற **சசிப் பிரபை** என்பவள். சந்திரன் வளர்ந்தது போலவும், களை நீக்கிய பயிர் விளைந்தது போலவும், இந்திராணியைப் போன்ற மிக்க சிறப்புடைய சசிப் பிரபை அழகோடு வளம்பெற்று வளர்ந்தாள். அவள் அழகைக் கண்டு ஆடவர் மனம் உருகினர். அவள் வசந்த காலத்தில் தன் தோழிப் பெண்களுடன் கூடிக்கொண்டு ஒரு பூஞ்சோலையில் விளையாடினாள். அவள் சோலையில் விளையாடிய அழகைக்கண்டு மயில்கள் அவளைத் தம் இனமென நினைத்துச் சேர்ந்தன.

சூரியனைப் பூசை செய்வதற்காகத் **தெய்வ சுவாமி** என்னும் அந்தணன் மலர் கொய்ய அந்த நந்தவனத்திற்குச் சென்றான்; அங்கு இருந்த சசிப்பிரபை என்னும் பெண்ணைக் கண்டு மகிழ்ந்தான்; இவள் இரதியோ என்று ஐயங்கொண்டான். அவன் அவளைக் கண்டவுடன் மன்மதன் ஒரு தாமரை மலரை அவன் மீது எய்தான். அப்பெண்ணும் தன் கண்களால் அந்தணனை விரும்பிப் பார்த்தாள். அதனால் அவன் அளவில்லாத மயக்கங்கொண்டு நின்றான். அந்தப் பெண்ணும் அவனைக்

கண்டு காமுற்று நின்ருள். அப்பொழுது ஒரு மதயானை அங்கே வந்தது. அது மிகுந்த மதங்கொண்டு, தன் நிழலையே கோபித்துக்கொண்டு வந்தது. அதனைக் கண்ட பெண்கள் திசைக்கொருவராக ஓடினார்கள். அப்பொழுது அந்த யானை சசிப்பிரபை என்ற பெண் இருந்த பக்கம் வந்தது. கந்தப் பெருமான் வள்ளியை மணஞ்செய்ய விரும்பிய போது வந்த யானையைப் போலவும், அந்தண குமாரனிடத்தில் அன்பு உடையது போலவும் வந்த மத யானையை மங்கை தன் கண்ணெதிரே கண்டாள்; யானை மிகுந்த கோபத்தோடு ஓடி வரும் நிலையையும் தான் மறைந்துகொள்வதற்கு இடமில்லாமல் இருக்கும் நிலையையும் கண்டாள். அப்பொழுது அந்தண குமாரன் அங்கு நின்றுகொண்டிருந்தான். "நான் உனக்கு அபயம்' என்று சொல்லி அவள் அவனிடம் நெருங்கி ஓடினாள். "அஞ்சாதே" என்று சொல்லி அவன் அவளை அணைத்துக் கொண்டான்.

நிலம் நடுங்கி அதிரும்படி வந்த யானை தன் எதிரில் கண்ட மரங்களை எல்லாம் முறித்துக்கொண்டு, மதத்தால் முழக்கமிட்டுக்கொண்டு, சோலை முழுதும் அழியும்படி விரைந்து வேறு திசை நோக்கிச் சென்றது. மோகங்கொண்ட இருவரும் மனவுறவு கொண்டு கலந்து மகிழ்ந்திருந்தனர். அந்தணனைத் தன் மார்புறத் தழுவிக்கொண்ட சசிப்பிரபை என்ற மங்கை நெடுநேரஞ் செல்லவே, மனம் வருந்தித் தன் மனைக்குச் சென்ருள்.

அந்தணனாகிய தெய்வ சுவாமியும் தன் வீட்டிற்குச் சென்று சூரியனைப் பூசித்த பின்பு அந்தப் பெண்ணை மறவாது காதல் கொண்டு மன்மத பாணத்தினுல் நொந்தான்; தன் ஊரின் அருகில் இருந்த மூலதேவனார் என்னும் முனிவருடைய மைந்தனும் தன் தோழனுமாகிய சசி என்பவன் இருக்கும் இடத்தை அடைந்தான்; அவனிடம் தான் பூஞ்சோலையில் ஒரு பெண்ணைக் கண்டதையும், அப்பொழுது ஒரு மதயானை கோபம் கொண்டு அங்கு வந்ததையும், அப்பொழுது அந்தப் பெண் பயந்ததையும், தான் அவளைத் தழுவிக்கொண்டதையும், அவளைத் தான் காத்ததையும், காமபாணம் பசுமரத்து ஆணிபோலத் தன் உள்ளத்தில் பதிந்ததையும் கூறினுன்.

"தோழனே, மன்மதபாணம் மலர் என்று கூறுவர். ஆனல் அந்த மலர் அம்புக்குத் தப்புவது மிகவும் அரிதாய் இருக்கிறது. அதனல் வரும் துன்பம் பொறுக்க முடியாததாக இருக்கிறது" என்று கூறி வருந்தினன். சசி தன் நண்பன் தெய்வசுவாமி என்பவனை அழைத்துக்கொண்டு தன் தந்தையிடம் சென்று நடந்ததைக் கூறினன்.

மூலதேவன் என்னும் முனிவன் தன் மைந்தன் கூறியவை களை யெல்லாங்கேட்டு, மிகவும் மனம் இரங்கி, குளிகை என்னும் மருந்து மாத்திரை ஒன்று செய்தான். அது எப்பொழுதும் கரையாது; முழு உருவமுடையதாகவே இருக்கும். அதை வாயிலிட்டுக்கொண்ட ஆடவர், பெண் உருவத்தை அடைவர். அந்தக் குளிகையை வெளியில் உமிழ்ந்துவிட்டால் மறுபடியும் அவர் ஆண் உருவத்திலேயே விளங்குவர்.

அத்தகைய குளிகை ஒன்றைச் செய்தவுடன் அதனை எடுத்துத் தெய்வ சுவாமி என்னும் அந்தணனிடம் முனிவன் கொடுத்தான்; அதன் இயல்பையுங் கூறினன். அந்தணன் அதனை வாங்கித் தன் வாயில் இட்டு அடக்கிக்கொண்டான். உடனே அவன் ஒரு பெண் உருவத்தோடு விளங்கினன். மூலதேவன் அவனை அழைத்துக்கொண்டு அரசனுடைய சபையை அடைந்தான்.

"மன்னனே, நான் சொல்வதைக் கேள்: இங்கு என் னுடன் அழைத்து வந்திருக்கும் இப்பெண் என்னுடைய மகள். நான் தீர்த்த யாத்திரையாகப் பல இடங்கட்கும் செல்வேன். நான் திரும்பி வரும் வரையில் இவளை உன் மகளுடன் தங்கி யிருக்கும்படி செய்ய வேண்டும்" என்றன். மன்னன் முனிவன் சொல்லை மறுக்காமல் ஒப்புக்கொண்டான்; தன் மகளை அழைத்து, "இப்பெண்ணை உன்னுடன் வைத்து மகிழ்ச்சி யோடு விளையாடு. அந்தணன் வந்த பிறகு இவளை அனுப்ப லாம்" என்றன். அவளும் ஒப்புக்கொண்டு தன் தோழிகளில் ஒருத்தியாகச் சேர்த்துக்கொண்டாள்.

மறுநாள், பெண்வடிவில் வந்திருந்த தெய்வ சுவாமி சசிப் பிரபை என்னும் மங்கை நல்லாளைத் தனியிடத்தில் பார்த்து, "நீ ஏன் ஒருவாறு மனம் சோர்ந்து முகம் வாடியிருக்கிறய்?

உன்னுடைய சொல் வேறு-செயல் வேறு-மனம் வேறாக இருக்கிறதே! என்ன காரணம்? " என்று கேட்டான். வேந்தனுடைய மகள் முதலில் சொல்ல மறுத்தாள்; பின்பு வேதியன் மகள் தொடர்ந்து கேட்கவே, மறைக்க முடியாமல் உண்மையைச் சொன்னாள் ; " நான் சில நாட்களுக்குமுன் பூஞ்சோலையிலே ஓர் அந்தண குமாரனைக் கண்டேன் ; அவன்மீது காதல் கொண்டேன் ; அவன்மீது கொண்ட ஆசை என் உள்ளத்தை விட்டு நீங்காதிருக்கின்றது. நான் அவனைக் காணாமல் வருந்துகிறேன் " என்றாள். உடனே முனிவன் மகள், " நீ அவனைக் காணில் தெரிந்துகொள்வாயோ? அவனை நான் இங்கு அழைக்கின்றேன்." என்றாள். வேந்தன் மகள், "அறிவேன் " என்றாள். பெண் வடிவில் இருந்த தெய்வ சுவாமி என்பவன் தன் வாயில் இருந்த குளிகையை உமிழ்ந்தான்; உடனே ஆண் வடிவத்தோடு காட்சியளித்தான். அவனைக் கண்ட சசிப்பிரபை மனம் மிக மகிழ்ந்து அவனைக் கட்டியணைத்துக் கொண்டாள்.

தாங்கள் மனத்தில் நினைத்தது நிறைவேறிவிட்டது என்று இருவரும் நெஞ்சங்கலந்து மகிழ்ந்து, இரவும் பகலும் அன்றிலும் பேடும்போல ஒன்றி வாழ்ந்தார்கள். பகலில் தெய்வசுவாமி குளிகையை வாயில் அடக்கிப் பெண் வடிவத்தோடு இருந்தான். இப்படி இருக்கும்போது மன்னன் மகள் வயிற்றில் கருப்பம் உண்டாகி வளர்ந்துவந்தது. அதனை அறிந்து இருவரும் மனக்கலக்கம் கொண்டிருந்தனர்.

வேந்தன் ஒரு பெரிய வேள்வி செய்ய எண்ணினான் ; அதற்காக மறையவர் பலரை வரவழைத்தான் ; மன்னர் பலரையும் வரவழைத்தான். மன்னன் தூதர் மூலம் எட்டுத் திசைகளிலும் உள்ளவர்களுக்கெல்லாம் சொல்லியனுப்பவே, எல்லோரும் அவன் நகரத்தில் வந்து சேர்ந்தார்கள். வேள்விக்கு வந்த அந்தணர்களுக்கும் அரசர்களுக்கும் மற்றவர்களுக்கும் மன்னன் உணவு, இடம் முதலிய வசதிகளை எல்லாம் செய்து கொடுத்தான் ; அந்தணர்களை நோக்கி வேள்வி நடத்தும்படி கட்டளை இட்டான் ; வேள்வியின் சிறப்பைக் கண்டு களிக்கும்படி தன் பெண்ணையும் முனிவர் மகளையும் அழைத்துவரச் செய்தான். அவர்களும் வேள்விச் சாலையில் வந்து தங்கியிருந்தார்கள்.

வேள்விக்கு வந்திருந்த அமைச்சருள் ஒருவன் அரசன் மகளோடு பெண் வடிவில் இருந்த தெய்வசுவாமியைப் பெண் என நினைத்து, "அந்த அந்தணப் பெண்ணை எனக்கு மணஞ் செய்து கொடு" என்று அரசனிடம் கேட்டான். மன்னன் அந்த அமைச்சனுக்கு அப் பெண்ணை மணஞ்செய்து கொடுக்க இசைந்தான். அந்தணன் மகள் மன்னனைப் பார்த்து, "உன்னிடம் அடைக்கலமாக வந்தவளை நீ மணஞ்செய்து கொடுக்கலாமோ?" என்றாள். மன்னன் அவளை நோக்கி, "இந்த நிலமும், பொன்னும், செல்வமும் எல்லோருக்கும் பொதுவானவை. அவை போலப் பெண்ணும் பொதுவானவள். அவளை யாருக்கும் கொடுக்கலாம்" என்று சொன்னான்; பின்னர் அப்பெண்ணை மந்திரிக்கு மணஞ்செய்து கொடுத்தான்.

மன்னன் வேள்வியைச் சிறப்பாக நடத்தி முடித்தான். எல்லோரும் மகிழ்ச்சியடைந்தார்கள். தேவர்களிடம் வரம் பெறுவதற்காக மன்னன் பல தானங்களையும் செய்தான்; வேறு மன்னர்களுக்கும் பல பரிசுகள் அளித்து விடை கொடுத்து அனுப்பினான்.

முனிவர் மகளையும் மந்திரியுடன் அனுப்புவித்தான். மந்திரியும் பெண்ணின் அழகைக்கண்டு மனங்களித்தான்: அவள் உண்மை நிலை என்ன என்பதை அறியாது, மடியில் நெருப்பைக் கட்டிக்கொண்டு போகின்றவரைப்போல அப் பெண்ணைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு சென்றான்; வீட்டுக்குச் சென்றதும் அப்பெண்ணுக்கு மிருகாவதி என்ற பெயரைச் சூட்டினான். ஒருநாள் இரவில் அவன் அப்பெண்ணைத் தன்னுடன் கலந்து உறவாட அழைத்தான். அவள் விலகி அப்பாற் சென்றாள்; அவனை நோக்கி, "நீர் என்னை மருவ வேண்டுமாயின், ஒன்பது தீர்த்தங்களிலே நீராடிவிட்டு வரவேண்டும். அவ்வாறின்றி என்னை நீர் தீண்டுவீராகில் உடனே இறந்துவிடுவேன்" என்று கூறினாள். அது கேட்டு அமைச்சன் அவ்வாறே செய்ய ஒப்புக்கொண்டான்.

இவ்வாறு இவர்கள் இருந்து வந்தபோது தீர்த்த யாத்திரைக்குச் சென்ற முனிவன் திரும்பி வந்து மன்னனைப் பார்த்து, "என் பெண் எங்கே? அவளை இங்கு அழை" என்றான்.

அரசன் முனிவனை நோக்கி, "உன் பெண்ணை மந்திரி ஒருவருக்கு மணஞ்செய்து கொடுத்திருக்கிறேன்" என்றான். முனிவன் தன் கண்களில் நெருப்பெழக் கோபித்து நின்று, "நீ என் பெண்ணை எப்படி மந்திரிக்கு மணஞ்செய்து கொடுக்கலாம்? நீ எனக்குக் கொடுமை செய்ய நினைத்துவிட்டாய். அப்படியாயின் உன் பெண்ணை என் மகனுக்கு மணஞ் செய்து கொடு" என்று மன்னனை நோக்கிக் கூறினான்.

அரசன், "நாம் தவறு செய்துவிட்டோம். ஒருவர் பெண்ணை நாம் மற்றொருவருக்கு மணஞ்செய்து கொடுத்தது தவறுதான். இந்த முனிவர் சொல்கிறபடி நாம் செய்யவில்லை என்றால் ஒரு வேளை அவர் நம்மைச் சபிக்கவும் கூடும். ஆதலால் மறுக்காது இப்பொழுதே மணஞ்செய்து கொடுப்பதுதான் நன்று" என்று எண்ணி, முனிவன் மகனுக்குத் தன் பெண்ணைக் கொடுக்க ஒப்புக்கொண்டான்; பின்பு மணஞ் செய்வித்தான்.

முனிவன் மைந்தன் தனக்கு மன்னன் மகள் கிடைத்த செய்தியைத் தன் தோழனாகிய தெய்வசுவாமியிடம் சென்று கூறினான். தெய்வசுவாமி, "நாம் செய்த சூழ்ச்சிகள் கைகூடி விட்டன" என்று மகிழ்ந்து, "அந்தப் பெண்ணை என்னிடம் கொடுத்துவிடு" என்று கூறினான்; பின்பு முனிவனைப் பார்த்து, "அன்று குளிகையைக் கொடுத்து, அப்பெண்ணை நான் சேரும்படி செய்தாய். அதனால் மன்னன் மகள் கருப்பங் கொண்டு இருக்கின்றாள். இன்று ஒரு வழக்குப்பேசி அப் பெண்ணை இங்குக் கொண்டுவந்திருக்கின்றாய். ஆதலால் உன் திருவடியை நான் வணங்கத் தகுதியுண்டு. அப் பெண்ணை எனக்குக் கொடு" என்று கேட்டான்.

முனிவன் மகன் மிகுந்த கோபங்கொண்டு தன் தந்தையைப் பார்த்து, "மநு நீதி முறைப்படி மன்னன் எனக்கு மணஞ்செய்து கொடுத்தான். இனிமேல் இவள் என்னுடைய மனைவியாவாள்" என்றான். முனிவன் இருவர் பக்கமும் பேச முடியாமல் தலை வணங்கி நின்றான்.

தெய்வசுவாமி முனிவனைப் பார்த்து, "நான்தான் முதலில் அப் பெண்ணைச் சேர்ந்தேன். முன் பின் என்ற முறை கூட இல்லையா? எனக்கே இப்பெண் உரியவள்" என்றான்.

இவ்வாறு அவர்கள் வழக்குப் பேசிக்கொண்டிருந்தார்கள். "அவர்களில் யாருக்கு அவள் மனைவியாகத் தக்கவள்? விக்கிரமாதித்த மன்னனே, விடை கூறு" என்று வேதாளம் கேட்டது.

"அரசன் மகளைக் களவினால் சேர்ந்தவன் அவளுக்குக் கணவன் என்று சொல்ல முடியுமோ? முடியாது. பலரும் அறிய மணஞ் செய்துகொண்ட முனிவர் மகனே கணவன் என்று சொல்லத் தக்கவன் ஆவான்" என்றான் மன்னன்.

மன்னன் விடை கூறியவுடன், ஏழைகள் தேடிய பொருள் மறுபடியும் அவர்களை விட்டு நீங்குவதுபோல, வேதாளம் மன்னனைவிட்டு நீங்கி மறுபடியும் மரத்தில் ஏறிக்கொண்டது.

---

## 16. சீமூதவாகனன் கதை

மலர்த்தாது சிந்தும் சோலைகளும், வண்டுகள் மொய்க்கும் மலர் நிறைந்த குளங்களும், மாடகூடங்களும், கோபுரவரிசைகளும் உடைய **காஞ்சனபுரம்** என்னும் நகரம் ஒன்று உள்ளது. அந்த நகரத்தில் **சீமூதவாகனன்** என்னும் மன்னன் ஒருவன் இருந்தான். அவன் செல்வம் கொடை வெற்றி முதலிய பண்புகளையுடையவன்; மன்னருள் இந்திரன் போன்ற சிறப்புடையவன்; நாவலர் தம் செல்வம் என்று கருதப்பட்ட பெருமையுடையவன். அவன் மனைவி **கயாபதி** என்னும் பெயர் உடையவள். மன்னன் தன் மனைவியுடன் கூடித் திருமகளும் திருமாலும் போல வாழ்ந்தான். அவன் செய்த தவத்தின் பயனாகத் தேவருலகத்தில் இருக்கும் கற்பக மரத்தில் ஒன்று, அவனிடம் வந்து சேர்ந்தது.

சீமூதவாகனன் என்னும் மன்னன் அம்மரத்தின்கீழ் நின்று வேண்டினால் அது அவன் நினைத்த செல்வம் முதலிய எல்லாவற்றையும் அளிக்கும். "உலகத்தில் மனையும் மைந்தரும் தேடிய செல்வமும் உடலும் யாருக்கும் நிலைக்கமாட்டா" என்று எண்ணி மன்னன் தான தருமங்களை மிகுதியாகச் செய்து எல்லோரும் மகிழும்படி வாழ்ந்தான்; 'இந்தப் பூமியில் இவனைப் போன்ற கொடையாளர் ஒருவரும் இல்லை'

என்று உலகோர் சொல்லும்படி வாழ்ந்தான்; தன்னிடம் வந்தவர்களையெல்லாம் வருக, வருக என்று அழைத்துப் பாரி வள்ளலைப்போலச் செல்வத்தை வாரி வழங்கினன். இவ்வாறு அவன் அளித்துவரும் நாட்களில் நான்கு மனிதர் ஒன்று கூடிப் பேசி மன்னனிடம் சென்றனர்; அவனிடம் உள்ள கற்பக தருவைத் தருமாறு கேட்டனர்.

"கேட்டவர் கேட்டவற்றையெல்லாம் இல்லை என்று சொல்லாமல் கொடுப்பதே கொடையாளரின் சிறப்பியல்பு" என்று எண்ணிய மன்னன், அவர்கள் கேட்டபடியே கற்பக தருவைக் கொடுத்தான்; பூமியில் இருந்த புலவர் யாவருக்கும் அவரவர் விரும்பின பொருள்களைக் கொடுத்தான்; மூவுலகமும் புகழும் பெருமை பெற்றான். மன்னன் கற்பக தருவைப் புலவர்களுக்குக் கொடுத்துவிட்டான் என்பதை அறிந்தவுடன் பகைவர் யாவரும் ஒன்று சேர்ந்து அவன்மீது படையெடுத்து வந்தனர் "இது வரையில் யானை, குதிரை, தேர் முதலிய வற்றையும் சேனைகளையும், செல்வங்களையும் நமக்கு அளித்துப் போரிலே வெற்றியடையச் செய்த கற்பகதரு நம்மிடத்தில் இல்லை. பகைவர்தாம் இப்பொழுது போரிலே வெல்லுவர். இது உறுதி" என மன்னன் எண்ணினன்; இவ்வாறு நினைத் துத் தன் விதியை நொந்துகொண்டு, தன் மனைவியோடு ஊரைவிட்டுப் புறப்பட்டு, மாதவர் வாழ்ந்த கானகத்தை அடைந்தான்.

அவன் காட்டிற்குச் சென்றவுடன் **தாரன்** என்னும் முனிவனுடன் நட்புக்கொண்டு வாழ்ந்துவந்தான். மன்னவன் ஒருநாள் காட்டில் உலாவினபோது, அங்கே ஒரு காளி கோயிலை யும் சோலையையும் ஒப்பில்லாத ஒரு பெரிய குளத்தையும் கண்டான். அங்கு ஓர் அழகிய பெண் இருந்தாள். அவள் தவமுனிவருடைய கண்களும் மனமும் உருகும்படி மகிழ்ச்சி யோடு உருத்திர வீணை என்னும் ஒரு வீணையை மீட்டி இசை யெழுப்பினள். அந்த இசையைக் கேட்டு மரங்களெல்லாம் தழைத்தன.

வீணையின் ஓசையும் அப் பெண்ணின் பாடலும் அப் பெண்ணினுடைய கண்களிலிருந்து வரும் ஒளியும் உறுப்பு அசைவுகளும் அரசன் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன.

மன்னவன் மனங்கசிந்து உருகினன். சந்திரன் போன்ற முகமும், வில் போன்ற புருவங்களும், இருள் போன்ற கூந்தலும், சந்தனம் பூசிய மார்பும், இன்பந்தரும் நூல் போன்ற இடையும், பெண்மைத் தன்மையும், அழகும் கண்டு அரசன் வியந்து பாராட்டினன். "மண்ணிற் பிறந்து பயன் என்ன? மன்னன் ஆனல் என்ன? புண்ணியங்கள் செய்தால்தான் என்ன? புகழ் படைத்தால்தான் என்ன? பெண்ணெனப் பிறந்து விளங்கும் பேரழகியாகிய இவளுடன் கலந்து பழகா விடில் நாம் மனிதப் பிறப்பு எடுத்தும் என்ன பயன்?" என்று மன்னன் மனம் வருந்தினன்.

இவ்வாறு மன்னன் கூறிக்கொண்டே கோயிலின்முன் நின்ற பெண்ணின் அருகில் சென்ருன்; அப் பெண்ணைப் பார்த்து, "நான் ஒன்று கூறுகிறேன், கேள்" எனப் பேசத் தொடங்கினன். "நீ கடற்கன்னியோ? அல்லது தேவருலகத்துப் பெண்ணே? இரதிதேவியோ? இப்பூவுலகப் பெண்ணே? நாகருலகத்து மகளோ? உன் ஊர் எது? உன் பெயர் என்ன? சொல்லுவாய்" என்ருன். மான் போன்ற அப் பெண் ஒன்றும் பேசாதிருந்தாள். அப்பொழுது மன்னன் அருகிலிருந்த தோழிப் பெண்களைப் பார்த்து, "ஏன் இவள் பேசாதிருக்கின்ருள்?" என்ருன்.

தோழிகள் மன்னனைப் பார்த்து, "அரசே, உன்னுடைய ஒளி முகத்தைக் கண்டு உன்மீது விருப்பங்கொண்டு நாணமுற்றதனல் இப்பெண் பேசவில்லை. இவளுடைய ஊரும் பேரும் நீ அறிய வேண்டுமாயின் யாம் கூறுகின்ரேம்" என்று கூறினர்.

"வானுலகத்தில் வாழும் விசுவாவசு என்னும் வித்தியாதரனுடைய பெண் இவள்; இசை பாடுவதிலும், வீணை மீட்டுவதிலும் தும்புரு என்னும் இசை முனிவரைப் போன்றவள். இவள் பெயர் மலையவதி என்பது" என்றனர். பின்பு மலையவதியும் தோழிகளும் தம்முடைய மாளிகையை அடைந்தார்கள். மன்னன் அப் பெண்ணின்மேல் உள்ள ஆசையினல் மிகவும் வருந்தினன். அப்பொழுது அவனுடைய தோழன் மதுகரன் என்பவன் மன்னனைத் தேற்றினன்; "மன்னனே, பொன் ஆசையும், மண் ஆசையும், பெண் ஆசையும் கொண்டு கல்வி

யில்லாதவர் அன்றோ வருந்துவர். கலைகள் யாவும் கற்ற நீ இவ்வாறு வருந்துதல் தகுமோ?'' என்று கூறினான்.

மாளிகைக்குச் சென்ற மங்கை மலையவதியும் மாரன் அம்புகளால் வருந்தி, "நான் மன்னனை விரைவில் மணந்துகொள்ள வேண்டும்; இல்லையானால் யான் இவ்வுயிர் கொண்டு வாழமாட்டேன்; இறப்பேன்'' என்றாள். தோழிகள் பலவகை உபசாரங்கள் செய்தனர்; செய்தும் பயன் இல்லை. அவள், அவர்கள் பலவாறு தடுத்தபோதும் விலகி நில்லாமல் நேரே காளி கோயிலை அடைந்தாள்; "அம்மையே, நான் வருந்தும்படி நீங்கிச் சென்றான் மன்னன். அவன் என்னை மணந்து கொள்ளாமல் இருக்கின்றான். அடுத்த பிறவியிலாவது நான் அவனை மணக்கும் புண்ணியத்தை எனக்கு அருள்வாய்'' என்றாள்; இவ்வாறு கூறித் தன் உயிரை மாய்த்துக்கொள்வதற்காக ஒரு பூங்கொடியை எடுத்துத் தன் கழுத்திலே சேர்க்கத் தொடங்கினாள். அப்பொழுது காளி வெளிப்பட்டு வந்து அவள் கையைப் பிடித்துக்கொண்டாள்; பின்பு அப் பெண்ணை நோக்கி, "நீ விரும்பிய மன்னனை உனக்கு அளித்தேன்; பெற்று மகிழ்க'' என்று கூறி மறைந்தாள். இவற்றை மறைந்து கண்டுகொண்டிருந்த மதுகரன் என்னும் தோழன், மன்னனிடம் விரைந்து ஓடி நடந்தவைகளைக் கூறினான்; பின்னர் மன்னனும் காளி கோயிலுக்கு வந்து தேவியை வழிபட்டான். தேவியும் மன்னனுக்கு அருள் புரிந்து, "மன்னனே, நீ மலையவதி என்னும் அப் பெண்ணை மணந்து மகிழ்ந்து வாழ்வாய்'' எனக் கூறினாள்.

மன்னன் உடனே மகிழ்ந்து பெண்ணின் தந்தையிடம் சென்றான்; மலையவதி என்னும் அப்பெண்ணைத் தனக்கு மணஞ் செய்து கொடுக்கும்படி கேட்டான். தந்தையும் மன்னனுக்கு அவளை மணஞ்செய்து கொடுத்தான். பிறகு மன்னனும் மலையவதியும் இன்பக் களிப்பில் மூழ்கினர். மன்மதனும் இரதியும் போல இருவரும் களித்து வாழ்ந்த நாளில், ஒரு நாள் மைத்துனனுடன் வனத்தைச் சுற்றிப் பார்ப்பதற்காக மன்னன் சென்றான். காடு முழுதும் சுற்றிப் பார்த்த பொழுது ஓரிடத்தில் பாம்பினுடைய எலும்புகள் மலைபோல் குவிந்து கிடந்தன. அவற்றைக் கண்ட மன்னன் தன் மைத்துனனைப் பார்த்து, "இப்படிக் கிடக்கக் காரணம் என்ன?'' என்று கேட்டான்.

அப்பொழுது மைத்துனன், "இங்கே நாகங்கள் மிகுதியாக வாழ்கின்றன. அவைகளை யெல்லாம் நாடோறும் பசியால் வாடி வருந்தும் கருடன் கொன்று தின்பது வழக்கம். அதனல் இங்கு எலும்புகள் கிடக்கின்றன" என்ருன்; பின்னர், "என் தந்தை என்னைத் தேடுவார்; நீயும் வருக" என்று கூறி அழைத்தான்; மன்னன் வராதிருக்கவே, தான் மட்டும் தன் வீட்டிற்குச் சென்ருன்.

பிறகு சீமூதவாகனன் எலும்புக் குவியலின் அருகே சென்ருன். அப்பொழுது கருடன் வந்தான் என நினைத்து ஒரு பாம்பு தன் மகனுகிய சங்கு சூடன் என்னும் மற்ருெரு பாம்பை ஒளித்துவைத்தது. மன்னன் அதனைக் கண்டு, "நீங்கள் அஞ்சவேண்டா. நான் உங்களில் ஒருவன்" என்று கூறினன். "நான் இந்தக் காட்டில் வாழும் கருடன் அல்லன்; உலகில் முடி சூடி ஆளும் மன்னன்; சீமூதவாகனன் என்பது என் பெயர்; உங்களோடு நட்புக்கொண்டு உங்களைப் பாது காத்து வாழ்வேன்" என்று கூறினன்.

"பாம்புகளெல்லாம் கருடனுக்கு இரையாயின. நாங்களும் இன்ருே நாளையோ அக் கருடனுக்கு இரையாகப் போகின்ருேம். எங்களோடு உனக்கு என்ன உறவு வேண்டியிருக்கிறது! நாங்களோ யமலோகத்தை எட்டிப் பார்த்துக்கொண்டிருக்கிருேம்" என்று சங்கு சூடன் என்னும் பாம்பு கூறியது. மன்னன் அவற்றைக் கேட்டு, "அஞ்சாதே; நான் காப்பாற்றுகிறேன்" என்று கூறினன். "பெரிய கருடனே வந்தாலும், எமன் சினந்து வந்தாலும், தேவர் கூட்டமே வந்தாலும், நான் உங்களைப் பாதுகாப்பேன்; என் உயிரையும் கொடுப்பேன். நீங்கள் அஞ்சவேண்டா" என்று மன்னன் மேலும் கூறினன்.

"மன்னனே, காற்றின்முன் பஞ்சும், நெருப்பின்முன் நீரும், ஆண் சிங்கத்தின்முன் பசுவும், யமன்முன் உயிர்களும் எதிர்த்துநின்று வெல்ல முடியுமோ? பசியோடு வரும் கருடனை எதிர்த்துநிற்க உன்னல் முடியுமோ?" என்று சங்கு சூடன் கூறியது. "மழை பெய்யாது தவறினுலும், வேதமொழி தவறினுலும், இராம பாணம் தடுமாறினுலும், இந்தப் பூமியில் பாம்புகளை நான் பாதுகாப்பேன்" என்று மன்னன் சபதம் கூறினன். இவ்வாறு சபதங் கூறிய மன்னனைப் பார்த்து

"ஏழைகளுக்குக் கற்பக தருவை ஈந்த மன்னனே, புகழ்பெற்ற வனே, எங்களை நீ காப்பாற்று" எனச் சங்கு சூடன் கூறி யது. மன்னன் சங்கு சூடனைப்பார்த்து, "நீ அஞ்சாது வெளி யில் வந்து நில்" என்று கூறிப் பாறைமேல் நின்றான். அப் பொழுது கருடன் புயற்காற்றுப்போல முழக்க மிட்டுக்கொண்டு வானத்திலே பறந்தான்; மலையும் காடும் சிறைக்காற்றி னால் நிலைகுலைந்து அலையும்படி செய்தான்; தன் மார்பில் அணிந்த விலை மதிக்க முடியாத இரத்தினாபரணம் ஒளி வீச, வடவை நெருப்பு வருவது போலக் கோபித்தான்.

பாறையின்மேல் நின்றுகொண்டிருந்த சீமூதவாகனன் என்னும் மன்னன், "என்றைக்கிருந்தாலும் இறப்பது திண் ணம்; ஆதலால் புகழை நிலைநிறுத்த வேண்டும்" என்று எண்ணி, வில்லை வளைத்தான்; நாணை இழுத்துக் கட்டினான்; மலையின்மேல் விழுகின்ற விடா மழைபோலக் கோடி கோடி யாக அம்புகளைச் செலுத்தினான்; கருடன் மார்பின்மீது அம்புகள் சென்று படும்படி வீசினான்.

கருடன் மன்னனைப் பார்த்து, "என்னோடு போர் செய்ய வந்த நீ யாரடா? பூமியில் வாழும் மன்னனோ? அல்லது வீரனோ? சூரனோ?" என்று அதட்டி அவன் எய்த அம்பு களை யெல்லாம் தன் சிறகினால் மோதி வீசித் தள்ளினான். அப் பொழுது மன்னன் கருடனைப் பார்த்து, "நான் இப்பூமியில் உள்ள மன்னன்; பாம்புகளை எல்லாம் காவல் புரிய வந்தேன். என் ஆண்மையைப் பாரடா. நீ கொடுமை செய்தால் என் கையிலுள்ள வாளினால் உன்னை அழிப்பேன்" என்றான்.

"தேவர் தலைவனாகிய இந்திரனை வென்று, தேவருலகத்தி லிருந்த அமிர்தத்தை யான் கொண்டுவந்த நாளில் என் சிறகு கொண்டு பகைவரை அடித்துத் துரத்தினேன். அவர்கள் அஞ்சி ஓடினர். அவ்வாறிருக்க, நீ எனக்கு ஒரு எதிரியோ?" என்று கருடன் கூறினான். உடனே மன்னன் மேகம்போல் அம்புகளைத் தூவினான்; வசைமொழிகள் கூறினான்; மனம் சீறினான்.

எட்டுத் திசைகளிலும் மண்ணிலும் விண்ணிலும் கடல் ஏழிலும் எட்டு மலைகளிலும் முட்டிப் பரவிச் செல்லுகின்ற

சூரியனை மூடி மறைக்கும் பனிபோல் மன்னன் கோடிக் கணக்கான அம்புகளைச் செலுத்திக் கருடனை மறைத்தான்; பின்பு வில்லை வளைத்து எதிரில் அதட்டி ஓட்டிவந்து போரிட்டான். அந்த மன்னனுடைய வீரச்செயலை விரும்பிக் கருடன் பார்த்துத் தன்னுள், "வில்லைக் கையில் எடுத்துப் போர் புரியும் வீரர் யாவராயினும், இம்மன்னன்முன் வந்தால் தோல்வியடைவார்கள்; இது திண்ணம்; வெற்றிகொள்ள முடியாது. பாம்புகள் ஒன்றுகூடி இவனை நமக்கு எதிரியாக அனுப்பியிருக்கின்றன," என்று எண்ணிக் கோப நகை செய்து, பல்லைக் கடித்தான். பிறகு மன்னன் அனுப்பிய பல அம்புகளையும் தன் சிறகுகளால் தட்டிவிட்டான்.

கருடன் மன்னன் விட்ட அம்புகளால் உண்டாகும் வேதனையைப் பொறுக்க முடியாமல் எதிர் நின்று கோபித்து, பூமியில் விரைந்து வந்தான்; மன்னனுடைய வில்லை முறித்தான். உடனே அரசன் இடியேறு போல முழங்கித் தன் வாளை உருவிக் கையில் எடுத்துக்கொண்டு, முடுகிச் சென்று, வீரம் நிறைந்த கருடனுடைய மார்பின்மீது வெட்டினன். கருடன் மன்னனுடைய வாளைப் பறித்து வீசிக் குட்டைமீனை நாரை கவ்விச் செல்வதுபோல அவனை எடுத்துக்கொண்டு வானத்திற் போய்க் கொத்தினன். அப்பொழுது மன்னன் தலையில் இருந்த முடி விலகிச்சென்று மன்னன் மனைவியாகிய மலையவதியின் மடியில் விழுந்தது.

சங்கு சூடன் தன் உயிர்த்துணைவனாகிய மன்னனைக் கருடன் எடுத்துச் செல்வதைக் கண்டு அலறித் தன் தாயாரிடத்தில் சொல்லி விட்டு வானத்திற் சென்று கருடனிருந்த இடத்தை அடைந்தது; "நீ என்னை இப்பொழுது தின்று இம் மன்னனை விட்டுவிடு" என்று கூறியது. பாம்பு முன்பு ஒளிந்துகொண்டதையும், பின்பு வெளியில் வந்ததையும் கண்டு கருடன் சினம் கொண்டான். உடனே கருடன் மன்னனைக் கொன்று தின்னத் தொடங்கினன். அப்பொழுது மன்னன், "ஒருவரைக் காப்பதற்காக நம் உயிரைக் கொடுத்தோம்" என்று நினைத்து மகிழ்ந்தான்; ஒருவர் மற்றொருவர்க்காக உயிர்கொடுத்தால், வானத்திலே விளக்கம் பெறுவார்கள். அவர்களுக்கு வீர சுவர்க்கம் உண்டு; இனிமேல் பிறப்பு

இல்லை; மேன்மையான கதி அடைவார்கள். ஆதலால் கருடனே, நீ எனது இரத்தத்தைக் குடித்து, என் உடல் தசைகளைத் தின்று பசியாறுவாயாக'' என்று நன்றி புரியும் எண்ணத்தோடு கூறினன்.

மன்னன் மனைவி மலையவதி என்பவள் தன் மடியில் வந்து விழுந்த முடியை எடுத்துச் சென்று தன் தந்தையின் முன்பு வைத்து அழுது அவன் தாளிணைகளிற் பணிந்தாள்; "என் கணவனைக் கருடன் எடுத்துச் சென்றுவிட்டானே! என்ன காரணமோ தெரியவில்லையே! ஒன்றும் நான் அறியேனே!'' என்று கூறி அழுதாள்.

இவ்வாறு தன் பெண்ணாகிய மலையவதி அழுவதைக் கண்டு தந்தை மனம் இரங்கிக் காட்டினிடையே தேடிக் கொண்டு சென்றான். அப்பொழுது தன் கணவன் இறந்த அடையாளங்களை மலையவதி கண்டாள்; விழுந்து அழுதாள்; புரண்டாள்; அலறினள்; தன்னையும் மறந்தாள்; "வேந்தனே, வேந்தனே'' என்று கூறிப் புரண்டு புரண்டு அழுதாள்; "நான் நெருப்பில் விழுந்து இறப்பேன்'' எனத் தந்தையிடம் கூறினள். "கணவனை இழந்தபின் இந்நில வுலகத்தில் தனித்திருந்து வாழமாட்டேன். எனக்கு நெருப்பு வளர்த்துத் தருக'' எனத் தந்தையிடம் அவள் கூறி வேண்டி னள். தந்தையும் மனம் இரங்கி நெருப்பை வளர்த்துக் கொடுதான்.

மலையவதி தன் கணவனுடைய எலும்புகளை வாரி எடுத்துத் தன் மார்பின்மீதும் முகத்திலும் அணைத்துக்கொண்டு, தன் கண்முன்பு தோன்றிய காளிகோயிலைப் பார்த்து, தலையின் மேல்கை குவித்து வணங்கி, "அன்று இக்கணவனை எனக்கு அளித்து என் துன்பம் போக்கினவளும் நீயே; இன்று இவன் இறக்கும்படி செய்து என்னை வருத்துபவளும் நீயே; நான் ஒன்றும் அறியேன். இவை உன் மகிமையே'' என்று சொல்லிக் காளியை வெறுத்துப் பேசினள்; பிறகு அக் காளியை வழிபட்டுக் கௌரிநோன்பு நோற்றாள்; பின்பு நெருப்பை வலமாக வந்து கைகுவித்து வணங்கினள்.

அப்பொழுது காளி தேவி புறப்பட்டு வெளியில் வந்து மலையவதியைத் தடுத்து நிறுத்தினள். அங்கு வந்த காளியை

மலையவதி வணங்கினாள். உடனே காளிதேவி சீமூதவாகனனை எழுப்பினாள்; பின்பு மறைந்தாள். "பெண்ணினுடைய இரக்கமும், அவளுடைய கற்பும், நெருப்பை வலமாக வந்ததும், காளிதேவி வந்ததும், அரசன் உயிர் பெற்று எழுந்ததும், ஆகிய இவை யெல்லாம் நாட்டில் புதுமையாக இருக்கின்றனவே!" என்று சொல்லிக் கருடன் மகிழ்ந்தான். கருடன் மன்னனைப்பார்த்து மகிழ்ந்து, "நான் உன்னோடு நட்புறவு கொண்டேன். உனக்கு என்ன வரம் வேண்டும்? இங்கு உரை" என்றான். வேந்தனும் மகிழ்ந்து நன்று என்றான்.

"முதலில் இங்கு இருக்கும் பாம்பின் எலும்புகள் எல்லாம் உயிர்பெற்று எழும்படி செய்யவேண்டும்; இன்று முதல் பாம்புகளை நீர் காப்பாற்ற வேண்டும்" என்று மன்னன் வரம் வேண்டினான். கருடன் வரம் கொடுத்துச் சென்ற பின்பு நாகங்கள் எல்லாம், "மன்னனே, உன்னால் நாங்கள் உயிர் பெற்றோம்; வாழ்வு பெற்றோம்" என்று கூறி வாழ்த்தின; பின்னர் விடைபெற்றுச் சென்றன. பின்னர் மன்னன் தன் மனைவி மலையவதியோடு சென்று தன் வீட்டை அடைந்தான். மன்னன் விட்டு நீங்கியிருந்த கற்பக தருவும் காளிதேவியின் அருளால் வந்து சேர்ந்தது. மன்னன் தன் பழைய மாநகரமாகிய காஞ்சன புரத்தை அடைந்து நீதியோடு ஆண்டு வந்தான்.

"நாகமோ, அல்லது பறவை அரசனாகிய கருடனோ, சீமூதவாகனனாகிய மன்னனோ, காளிதேவியோ, மலையவதி என்னும் பெண்ணோ, இவர்களில் யார் நல்ல குணம் உடையவர்? நீ உரை" என்று வேதாளம் விக்கிரமாதித்த மன்னனைக் கேட்டது.

"நாகங்களைக் காப்பாற்றச் சென்று தன் கணவன் உயிர் விட்டானே என்று வருந்திக் கணவனுடன் மனைவி உயிர் விடுதல் இயல்பு; காளிதேவியும் முன்பு தான் கொடுத்த மன்னன் இறந்ததனால், மறுபடியும் எழுப்பித் தந்தாள்; கருடனும் இந்தப் பெருமையை அறிந்து வந்து நட்புக் கொண்டான். ஆதலால் இவர்கள் செயல்களை உதாரம் என்று கூற முடியுமோ? தானே வலிந்துசென்று நாகங்களைக் காப்பாற்றத் தன்னுயிர் கொடுத்த சீமூதவாகனன் என்னும் மன்னனே சிறப்புடையவன்" என்று மன்னன் கூறினான்.

---

## 17. உமாபதி கதை

மன்னன் மீண்டும் மரத்தின்மேல் ஏறி வேதாளத்தைப் பிடித்துக்கொண்டு வரும்போது, அது பதினேழாம் கதையைச் சொல்லத் தொடங்கியது.

இப்பூவுலகில் **கார்த்திகபுரம்** என்றோர் ஊர் உண்டு. அவ்வூரில் சிவனடியார்களும், அவ்வடியார்கள் தொழுதேத்தும் கோவில்களும், பாக்கள் பாடவல்ல கவிஞர்களும் இருந்தனர். பொன்னாலாகிய மேடைகளும் இருந்தன. இத்தகைய சிறப்பு மிகுந்த ஊர் புவிமிசை புகழ் பெற்று விளங்கியது.

இங்ஙனம் மேலுலகமும் நிலவுலகமும் புகழும் சிறப்புடைய கார்த்திகபுரத்தை ஒருகாலத்தில் **சுகன்** என்னும் அரசன் ஆண்டு வந்தான். அவன் முருகனையும் தசரதன் மைந்தனை இராமனையும் ஒத்த வள்ளன்மை உடையவன். பிலதரன் என்பவன் அவனுக்கு அமைச்சனாய்த் திகழ்ந்தான். அம் மன்னன் ஆட்சியில் வலியார் எளியாரைத் துன்புறுத்தாமல் அனைவரும் ஒற்றுமையுடன் வாழ்ந்தனர். காட்டு விலங்குகளான புலியும் மானும் தங்கள் பகை மறந்து ஒரே துறையில் நீர் பருகி மகிழ்ந்தன. இவ்வாறு நாட்டில் மக்களேயன்றி விலங்குகளும் துன்பமின்றி இன்ப வாழ்வு வாழ்ந்தன. பிலதரனுடன் பரிவாரமும் துணை செய்யச் சுகன் நாட்டை நன்முறையில் ஆண்டான்.

சுகனின் ஆட்சிக்குட்பட்டிருந்த அந்த நன்னகரில் எப்போதும் மாறாத வளமுடைய வாழ்வு நடத்திய வணிகர் தலைவன் ஒருவன் இருந்தான். அவன் செய்த மாதவத்தின் பயனால் செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமியை யொத்த ஒரு பெண் மகவு அவனுக்குப் பிறந்தது. அப் பெண் குழந்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தது. உறுப்பு நூல்கள் கூறும் இலக்கணப்படி அக்குழந்தையின் உடலின் உறுப்புக்கள் வளர்ச்சி பெற்றன. பிரமன் தன் படைப்பாற்றலால் பண்புடை ஒருத்தியைப் படைத்தான் என்று புகழத் தக்க முறையில் அப்பெண் அழகும் அறிவும் பெற்று விளங்கினாள். வள்ளல் தன்மையிற் சிறந்த வணிகனும் அப் பெண்ணிற்கு **உமாபதி** என்று பெயர் சூட்டினான்.

அப்பெண், செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள் வளர்வது போலவும், மதியானது நாள்தோறும் வளர்ந்து கொண்டே வருவது போலவும் வளர்ந்து, கரும்பு வில்லையுடைய காமன் பணிசெய்ய, அவ்வூரில் உள்ளோரெல்லாம் அன்பு செலுத்த, மிக்க மகிழ்ச்சியுடன் வளர்ந்துவரலானாள்.

இங்ஙனம் வளர்பிறைபோல் வளர்ந்துவந்த மங்கையின் அழகுநலனைக் கண்டு களித்த தந்தை, அவளுக்கேற்ற காதலனைத் தேட விரும்பினான்; அரசனே தன் மகளுக்கு ஏற்ற மணாளன் என்று எண்ணினான். "இவ்வுலகிலுள்ள மகளிர் அனைவரிலும் எழில் மிக்கு விளங்கும் என் ஒரே மகளை மிக்க மகிழ்ச்சியுடன் நான் உனக்களிக்க விரும்புகின்றேன்" என்று வேந்தனுக்கு வணிகன் உரைத்தான்.

அதனைக் கேட்ட மன்னன் வேதியரை அழைத்து, "நீங்கள் சென்று அப் பெண்ணின் வாழ்வு நலன்களைச் சோதியுங்கள்" என்று கூறினான். அவ்வேதியர் அவன் கூற்றினையேற்று, வணிகன் வீடு சென்று, அப் பெண்ணைக் கண்டனர். மலரை யொத்த மென்மை நலங்கனிந்த மேனியும், மேகம் போன்ற கரிய கூந்தலும், நீலோற்பல மலரன்ன அழகிய விழிகளும் உடைய உமாபதியைக் கண்டவுடன் 'ஓவியமோ இவள்' என அவர்கள் வியந்து நோக்கினர்; அவளுடைய துடியிடையையும் பிற உறுப்புக்களின் வனப்பையும், பெண்மை நலனையும் கண்டு உவந்தனர்; 'இத்தகைய அழகமைந்த பெண்ணை மன்னன் சுகன் மணந்து கூடினால், அவன் புவியை ஆளும் எண்ணத்தை மறந்துவிடுவான். பெரிய காமுகனாக மாறிவிடு வான்' என்று எண்ணினர்; 'நம் மன்னர்க் கேற்றவள் இவளல்லள்' என்று முடிவு செய்தனர்; இதைக்கூற வேந்த னிடம் சென்றனர்; அங்குச் சென்று மன்னனிடம், "நாங்கள் ஆராய்ந்தோம். தாங்கள் அந்தப் பெண்ணை மணந்து வாழ்வது பொருத்தமாகாது. இனித் தங்கள் உள்ளத்தில் தோன்றியபடி செய்க," என்று கூறி வேந்தனிடம் விடைபெற்றனர்.

வேதியர் கூற்றைக் கேட்டு, மன்னவன் மனம் மாறினான்; அப்பெண்ணின்மேல் வைத்த ஆசையை நீத்தான்; அதனை அறிந்த வணிகன் வருத்தமுற்றான்; பின்னர்த் தன் புதல்விக்

கேற்ற கணவன், அமைச்சனை பிலதரனே எனத் துணிந்து, அவனுக்குத் தன் மகளை மணஞ் செய்துகொடுத்தான். அரசனைக் கணவனுக அடைய வேண்டியவள் அமைச்சனைக் கணவனுகப் பெற்ருள். பிரமன் விதித்த விதியை யாரால் தடுக்க முடியும்! அவன் எழுதியபடியே அனைத்தும் நடைபெறும் என்பது அனைவரும் அறிந்ததன்ரே ?

சித்திரை, வைகாசி மாதங்களே வசந்த காலம் (இளவேனிற் காலம்) எனப்படும். இப்பருவம் மக்களை மகிழ்ச்சியில் திளைக்கச் செய்யும். காமன் தன் படைகளின் துணை கொண்டு போர் தொடங்கும் காலம் இதுவாகும். இளமை நலம் வாய்ந்த ஆண் பெண்கள் காமன் படையினல் மோதுண்டு காதலால் கட்டுண்டு களித்திருக்கும் காலமும் இளவேனிற் காலமேயாகும். இப்பருவத்தில் மரங்களிலெல்லாம் பட்டுப் போன்ற மெல்லிய அழகிய தளிர்கள் தோன்றிப் பார்ப்போரைப் பரவசப்படுத்தும். நிலவு தன் கதிர்களைப் பாரெங்கும் பரப்பி ஒளி பொழிந்துகொண்டிருக்கும். இனிமை மிகுந்த பொதியமலைத் தென்றல் மெல்லென வீசி மக்களை மகிழ்விக்கும். சோலைகளில் குயில்கள் தங்கள் பேடைகளுடன் இணைந்து களித்துப்பாடும். குருகினங்கள் மகிழ்ந்து விளையாடிப் பின்பு களைத்து மலர்களின் அருகே சென்று ஒடுங்கும். மலர்கள் எங்கணும் சிந்தி மணம் வீசிக்கொண்டிருக்கும். சோலைகளில் மகளிர் ஆடவருடன் இன்பமாகப் பொழுது போக்குவர். காமனின் மலரம்புக்குத் தப்பிச் செல்ல அவர்களால் இயலாது. இவ்வாறு வசந்தகாலம் நாடெங்கும் மகிழ்ச்சி துள்ளி ஆடிக் கொண்டிருக்கச் செய்யும்.

ஆடவரும் மகளிரும் இணைந்து இன்பம் காணும் இவ் வசந்த காலத்தில் ஒரு நாள் மன்னன் சோலை யொன்றிற்குச் சென்ருன். அவனைக் கண்டவுடன் மயில்கள் முருகனென மயங்கிச் சூழ்ந்துகொண்டன ; அன்னங்களும் சூழ்ந்தன. பல் வேறு வகையான மரங்கள் தனித்தனி நெடிதுயர்ந்து நிற்கும் காட்சியைக் கண்டு அவன் மகிழ்ந்தான்.

தாமரை மலர்கள் தீபம் ஏந்த, மல்லிகை முகைகள் ஆலத்தி எடுப்பதுபோல் மலர்ந்து திசையெங்கும் மணம் பரப்பி நிற்க, இளமையான வாழை ஆலவட்டம் போல் சுற்றும் வீச, வள

மெல்லாம் நிறைந்து விளங்கும் அச்சோலையின் வனப்பைக் கண்டு அரசன் வியந்து நின்றான். இங்ஙனம் சோலையழகைக் கண்டு சுவைத்த மன்னன் பின்பு பட்டத்து யானைமீதேறிப் பிற அரசர்கள் புடைசூழ, மக்களெல்லோரும் வாழ்த்திப் போற்ற, பணிப்பெண்கள் இருபுறமும் கவரி வீசத் தோரண வீதி வழியே உலா வந்தான்.

அவன் வரவை அறிந்த பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்ற ஏழு பருவ மகளிரும் அவனைக் காண விரும்பினர். அவனிடத்துக் காதல் கொண்டோர் பலர். அவன்மேல் கொண்ட காதல் காரண மாகக் கைவளை நெகிழ்ந்து கீழே விழும் வண்ணம் மேனி வாட்ட மடைந்தோர் பலர்; வீதியில் ஆலத்தி காட்டி வேந்தனை விரும்பினோர் பலர்; மகளிர் அனைவரும் ஒன்று கூடி மன்னனை வணங்கினர். இவற்றை யெல்லாம் பார்த்துக்கொண்டே யானைமீது அமர்ந்து அவனியை ஆண்ட மன்னவன் பவனி வந்தான். அவன் பவனி வந்ததைப் பிலதரன் என்னும் அமைச்சனுடைய மனைவியான உமாபதியும் கண்டாள்; 'இவ் வரசன்தானே நம்மை மணக்க மறுத்தான்' என்றெண்ணி யதும் அவள் முகத்தில் புன்முறுவல் அரும்பியது; நவமணிக ளால் ஆகிய அணிகலன்களை அணிந்து பொலிவுடன் விளங்கிய அவள் அழகைக் கண்ட அரசன் பலவாறு எண்ணினான்.

"செந்தாமரை மலரில் வதியும் திருமகளோ! அன்றித் தேவ லோகத்துத் தலைவனான இந்திரனின் மனைவியான இந்தி ராணியோ! அல்லது அழகு மிகுந்த தேவலோகத்து நடன மகளோ! இவ்வழகிய நெற்றியையுடைய பெண் யார்?" என்று பலவாறு எண்ணி மன்னன் வியந்தான்; "நமக்கேற்ற துணைவி யல்லள் என்று வேதியர் கூறிய பெண் இவள்தானோ?" என ஐயமுற்றான்; அருகிருந்தோரை வினவினான்.

அரசனின் அருகில் சென்றுகொண்டிருந்தோர், "ஆம். இப்பெண் அவள்தான்" என உரைத்தனர். அதுகேட்ட வேந்தன் அவள்மீது காதல் கொண்டான். "இவளை அடை யும் பேறு நமக்கில்லாமல் போயிற்றே!" என்று மனம் நொந்து தன் அரண்மனை சென்றான்.

அரண்மனையை அடைந்த மன்னன் தன்னுடன் வந்திருந்த மன்னர்களுக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டு, உமாபதியைக் குற்றம் சொன்ன வேதியரை அழைத்தான்; அவர்களை நோக்கி, "அந்தப் பெண்ணைப் பற்றித் தவறாகக் கூறி நான் அவளை மணக்க இயலாமல் செய்துவிட்டீர்களே," எனக்கொதித்துச் சீறினான்; அவளிடத்துக் கொண்ட காதலால் துன்புற்று வருந்தினான்; அவளை எண்ணி எண்ணி உறங்காமல் வாடினான்.

இப்படி உணவும் விரும்பாமல் உறக்கமும் இல்லாமல் மன்னன் தவித்துக்கொண்டிருக்கையில், காமன் அவனை மேலும் வருத்துவான் போல் தன் மலர்க்கணைகளை ஏவினான். உமாபதியை நினைந்து வாடும் அவன் நிலையைக் கண்டு ஏவலாளர் அவன் உடலில் சந்தனக் குழம்பைப் பூசினர். அவர்கள் பூசிய அச்சந்தனமும் அவனுக்குத் தணலாய் எரிந்தது. நிலவும் அவனுக்கு அனலாகியது. இப்படித் தீயில் விழுந்தவன் போல் துடித்த அவன், தன் வெம்மை தீரும் பொருட்டு வாழை இலையின்மேல் படுத்தான். இருப்பினும் காமநோயால் வருந்திய அவனுள்ளம் அமைதி பெறவில்லை.

அரசன் அவளுடைய சிறந்த அழகினைப் பாராட்டிப் போற்றினான்; அவள் பேசும் மொழி கரும்பினும் இனிமையுடையதாக விளங்குமோ என ஐயுற்றான்; மதியே அவள் முகமாக இலங்குகிறதோ என வியந்தான்; காமனும் அவளுக்கு ஏவல் செய்து வாழ்பவன்போலும் என எண்ணினான். "இத்தகைய வனப்பினையுடைய அவள் நகைபூத்த முகத்துடன் நின்று என்னை அவள்பால் ஈர்த்துவிட்டாளே! அவளையே நினைந்து நினைந்து ஏங்குமாறு செய்துவிட்டாளே!" என்று பலவாறு எண்ணி வருந்தினான். இங்ஙனம் வருந்தியதால் ஓர் இரவு நூறு யுகங்கள் போல் அவனுக்குத் தோன்றியது.

"தோழனோடும் ஏழைமை பேசேல்" என்ற பெரியோர் முதுமொழி அவன் நினைவிற்கு வந்தது. ஆயினும் அவன், தன் உள்ளத்தின் வேதனையை யாரிடமாவது கூற விரும்பினான்; எனவே, தன் தோழன் ஒருவனிடம் தன் மனத்தில் இருப்பதை இயம்பி, "நான் அவளை அடைய முடியுமோ?" என வினவினான்.

மன்னனின் சொற்களைக் கேட்ட தோழன் அவனை நோக்கி, "மன்னன் தவறிழைத்தால் மாரி பொய்க்கும்; வளப்பம் பொருந்திய நிலங்களில் விளைவு குன்றும்; வேதங்களில் கூறியுள்ளவை நடைபெரு. பிறர் மனைவியை நயத்தல் மிகப் பெரிய தவருகும். எனவே, அந்தத் தவற்றைத் தாங்கள் மனத்தாலும் நினைத்தல் கூடாது," என்று அறிவுரை புகன்ருன்.

நண்பன் உரைத்த நற்கருத்துக்களை ஏற்றுக்கொண்ட வேந்தன் நன்னெறியில் நிற்க விரும்பினன்; ஆயினும் முடியவில்லை. அவன் உமாபதியை நினைந்து ஏங்கித் துன்புற்ருன். இந்நிலையைப் பிலதரன் அறிந்தான்.

மன்னன் துயர் அறிந்த பிலதரன் அதனை நீக்க விரும்பி, அவன் மனைநாடிச் சென்ருன்; காமன் கணைக்காற்ருது உமாபதிமேல் கொண்ட காதலால் மன்னன் வாடியுள்ள நிலையைக் கண்டான். அவன் அரசனை நோக்கி, "அரசே, ஒரு பெண்ணின் பொருட்டுத் தாங்கள் இவ்வாறு நலிதல் நன்றன்று; தாங்கள் விரும்பின் இப்போதே அவளை அடைந்து மகிழலாம். நான் அவளை மனமுவந்து உங்களுக்களிப்பேன்," என்ருன்.

அதனைக் கேட்ட அரசன், "நீ எனக்கு அமைச்சனுகவும், மைந்தனுகவும், என்னைக் காக்கும் தலைவனுகவும், போரில் பகைவரை வென்று எனக்கு வெற்றியைத் தரும் வீரனுகவும் விளங்குகின்ருய். உனக்கு நான் தீங்கு செய்தல் உலகியல்புக்கு ஒவ்வாதது. பிறன்மனை நயத்தல் பெருங்குற்றம்; அவளை அடைதல் அதனினும் பெரிய தவருகும். நான் அப்படிச் செய்தால் குடிகள் நல்வாழ்வு வாழமாட்டார்கள். என்னை ஒருவரும் மதிக்கமாட்டார்கள். என்னிடம் பணிபுரிய மக்கள் விரும்பார். அறநெறி நாட்டில் நிலைக்காது. 'அரசன் எவ்வழி அவ்வழிக் குடிகள்' என்ருற் போல் மக்களும் பிறன்மனை நயத்தல் என்னும் குற்றத்தை அச்சமின்றிச் செய்வர். நன்மக்கள் துன்புறுவர்," என்று பிறன்மனை நயத்தலால் வரும் கேடுகளை எடுத்துரைத்துப் பிலதரன் கூறிய யோசனையை மறுத்துவிட்டான்.

அரசன் உரைத்தவற்றைக் கேட்ட பிலதரன் தன் கருத்தை மீண்டும் கூறத் தொடங்கினன்: "எனது செல்வமும்,

இப்பெண்ணுடன் நான் வாழும் இல்லற வாழ்வும் என் உயிரும் அரசராகிய தங்களுடையனவே அல்லவா? எனவே, தாங்கள் அவளை யெண்ணி ஏங்கி வாடாமல் அவளைக் கூடி இன்புறுக" என்று மீண்டும் அரசனை வேண்டிக்கொண்டான்.

அமைச்சன் கூற்றை அரசன் மறுத்துவிட்டான். அவன் நெறியற்ற முறையில் வாழ விரும்பவில்லை; அவளிடத்துக் கொண்ட காதல் நினைவால் படிப்படியாக மெலிந்து, நிலவானது தேய்ந்து செல்வது போல் உடல் இளைத்து, இறுதியில் ஒரு நாள் இறந்தான்.

அரசன் இறந்த செய்தி கேட்டு வருந்தி அமைச்சனும் இறந்தான். இதனைக் கூறிய வேதாளம், தன்னைச் சுமந்து வரும் மன்னவனை நோக்கி, "தான் மணந்த பெண்ணை அரசனுக்கு அளிக்க விரும்பிய அமைச்சன், அன்றி அமைச்சன் விரும்பி மனமுவந்து கொடுத்த போதும் ஏற்றுக்கொள்ளாமல் உயிர் துறந்த மன்னன் ஆகிய இருவரில் யார் சிறந்தவர்?" என வினவியது.

இவ்விதம் வேதாளம் கேட்டதும், மன்னவன், "அமைச்சனது செயல் அவனது உயர்ந்த பண்பை உணர்த்துகிறது. ஆயினும், பிறன் மனை விரும்பி ஏற்காத அரசனே போற்றற்குரியவன்" என உரைத்தான்.

நல்லவர் அறிவற்றவர்க்கு எத்தகைய அறநெறியை உரைத்த போதும் அவ்வறிவிலார் தம் போக்கிலேயே போதல் போல் வேதாளம் வேந்தனை விட்டுச் சென்று மீண்டும் முருக்க மரத்தில் ஏறிக்கொண்டது.

---

## 18. இந்திரசாலக் கதை

விக்கிரமாதித்த மன்னன் சலிப்பின்றி மறுபடியும் சென்று வேதாளத்தைப் பிடித்துக் கொண்டுவந்த போது, அது பதினெட்டாம் கதையைக் கூறத் தொடங்கியது.

சங்குகள் உலாவுகின்ற வயல்களும், தாமரை மலர்ந்த குளங்களும் நிறைந்து, மக்கள் கண்டு மகிழும் சிறப்பு வாய்ந்தது

உஞ்சை மாநகரம். அந்நகரத்தில் தங்கியிருந்து நாட்டையாண்ட மன்னன் சந்திரப் பிரபை என்பவன். அம்மன்னனுடைய அரண்மனைப் புரோகிதரில் முதன்மை பெற்று வேத நூல்களைக் கற்றவன் தெய்வசுவாமி என்னும் வேதியன்; அவனுடைய மைந்தன் தன்மசுவாமி என்பவன். அவன் அந்தண குமாரனாய்ப் பிறந்திருந்தும் மறை நூல்களைக் கற்காமல், தனக்குரிய புரோகிதத் தொழிலையும் மறந்து, தரகு வேலை செய்பவனாய்ச் சூதாடி, மதங்கொண்டு வீண் ,பொழுது போக்கி வந்தான்; பலருடன் கூடிச் சூதாடிப் பல பந்தயங்களில் மிகுதியான பொன்னைத் தோற்றான்.

பிறகு அவன் தன்னிடம் பொன் இல்லாமையால் கடன் சொல்லிச் சூதாடினான். அதிலும் அவன் தோற்றுவிடவே, பொன்னைக் கொடுக்கும்படி அவனுடன் சூதாடியவர் அவனைக் கேட்டு வற்புறுத்தித் துன்புறுத்தினர்; அவனுடைய கைகால்களைக் கட்டி நன்றாக உதைத்தனர்; புளியமரத்து மிலாறினால் மோதி அடித்தனர். அப்பொழுது தன்மசுவாமி உடல் நடுங்கி, ஓலம் என்று கூவி மயங்கி விழுந்தான். அவன் வாயில் நுரை நின்றது. அவன் தளர்ந்து தள்ளாடி மூர்ச்சித்து விழுந்தான்; உயிர் நிலை சோர்ந்தான். அவன் நிலைகண்டு அவர்கள் அவனை மேலும் துன்புறுத்தாமல் விட்டனர்; அரசன் இதனை அறிந்தால் நம்மைத் தண்டிப்பான் என்று பயந்து ஓடிப் போயினர்.

அவர்கள் ஓடிப்போன பிறகு, மயங்கி வீழ்ந்து கிடந்த தன்மசுவாமி நெடுநேரஞ் சென்று மயக்கம் தெளிந்து எழுந்தான்; மிகுந்த பசியினால் வேதனைப்பட்டு ஒரு துர்க்கை கோயிலை அடைந்தான்; அங்கு முனிவன் ஒருவனைக் கண்டான். தன்மசுவாமி அந்த முனிவனை வழிபட்டு, "பரமனைப் போன்ற பெருமை உடையவரே, நான் பசியினால் வருந்துகின்றேன். என் பசியை நீக்கி அருள் செய்யும்" என்றான். முனிவன் உடனே செபம் செய்து ஒரு நகரத்தை அவன்முன் காண்பித்து, "அங்குப்போய் அமுது அருந்து," என்றான்.

தன்மசுவாமி முனிவன் காட்டிய நகரத்தினுள் சென்றான். மாதர்கள் அவனை அங்கு வரவேற்று அழைத்துப் போயினர்;

பிறகு நல்ல நீரால் நீராட்டிப் பசிக்கு வேண்டிய உயர்வகை உணவுகளை அளித்தனர்.

அவன் அங்கிருந்த மங்கையரோடு இரவிற் கூடி மகிழ்வது போன்ற காட்சிகளைக் கண்டான். பொழுது விடிந்த பின்பு அந்தப் பிராமணன் கண் விழித்துப் பார்த்தான்; அங்கு ஒன்றுங்காணமல் முனிவனிடம் விரைந்து வந்தான்; வணங்கினன்; "முனிவரே, இது என்ன மாயம்! எனக்குச் சொல்ல வேண்டும்," என்று விரும்பிக் கேட்டான். முனிவன், "இது இந்திரசாலம் எனப்படும்; இது சிவனுடைய பெருமை," என்றான்.

"முனிவரே, நீர் நேற்று இரவில் எனக்குக் காட்டிய காட்சி போல இந்தப் பகலிலும் காட்டவேண்டும்" என்று தன்மசுவாமி வேண்டினன். முனிவன் முன்போலவே செபித்து அவனுக்கு அக்காட்சிகளைக் காட்டினன். அவன் அவைகளைக் கண்டு அதிசயித்தான். பின்னர் அவன், "நீர் இந்த வித்தையை எனக்குக் கற்பிக்க வேண்டும்" என்று சொல்லி வணங்கினன்.

முனிவன் தன் மனத்தில் ஆராய்ந்து அந்தணனை நோக்கி, "ஐந்து புலன்களையும் அடக்கி, அவாவை நீக்கினவர்களுக்கு அல்லாமல் மந்திரம் நான் சொல்லுதல் கூடாது; சொன்னலும் அது பலியாது" என்றான். தன்மசுவாமி, "நான் பாவத்தையும் அவாவையும் நீத்துச் செபம் செய்வேன்; எனக்கு மந்திரம் சொல்லித்தர வேண்டும்" என்று கூறி முனிவன் கால்களில் விழுந்து வணங்கினன். 'இந்தப் பூமியில் வித்தியாதானம் மிகச் சிறந்தது' என்று முனிவன் நினைந்து, அந்த மறையவனுடைய செவியில் இந்திரசாலச் செபமந்திரத்தை உபதேசம் செய்தான்.

முனிவன் சொல்லிக்கொடுத்த மந்திரத்தின் முறையைச் சோதித்துப் பார்க்க விரும்பி, அந்தணன் நீரில் மூழ்கி மூச்சை அடக்கி ஈசன் திருவடியை நினைந்து யோக முறைப்படி கண்ணை மூடிக்கொண்டு செபித்தான். அப்பொழுது அவன் ஒரு காட்சி கண்டான். இந்தப் பூமியில் ஒரு சத்திரம் போலவும், தன் மனைவி போலவும், தன் மைந்தர் போலவும் சில காட்சிகளைக் கண்டான்; பிறகு நெருப்பைக் கண்டான்; தான் அந்த

நெருப்பில் மூழ்குவது போன்ற ஒரு காட்சியைக் கண்டான்; தன் உடம்பு எரிந்து சாம்பலாவதையும் கண்டான்; பின்பு தன்முன் ஓர் அழகிய உலகம் தோன்றக் கண்டான்; அதில் இரணியபுரம் என்னும் ஓர் ஊர் தன்முன் தோன்றக் கண்டான்; அந்த நகரத்தில் தான் சென்று புகுவது போலக் கண்டான்; அங்கே இரதி போன்ற அழகுடைய சசிப்பிரபை என்னும் பெயருடைய பெண் இருந்தாள். அவள் அவனிடம் காதல் கொண்டு வந்து கூடுவதைக் கண்டான்; அப்பெண்ணினிடத்தில் ஒரு மைந்தன் பிறத்தலைக் கண்டான்; அப்பெண் மலர் கொய்வதற்கு ஒரு சோலையில் செல்வதைக் கண்டான்; அவளை அங்கு ஒரு பாம்பு தீண்டியது. உடனே அவள் மரித்தாள். உடனே இவன் தன் ஆயுளில் பாதியை அவளுக்குத் தந்து எழுப்பினான். அவன் இவ்வாறு நினைக்கவும் முடியாத பல தீய நிகழ்ச்சிகளைக் கண்டான்.

பின்பு அவன் முனிவனிடம் சென்று தான் கண்ட காட்சிகளைக் கூறினான். இம்மண்ணுலகத்தில் பொய்யும் பல தவறுகளும் செய்பவன் என்ற கெட்ட பெயரே அவனுக்கு நிலைத்தது. அன்று முதலாக முனிவனுக்கும் அந்த இந்திரசால மந்திர செபம் பயன்படாமற் போயிற்று.

வேதாளம் விக்கிரமாதித்தனைப் பார்த்து, "மன்னனே, முனிவனுக்கும் அந்தண குமாரனுக்கும் மந்திரம் பலியாமற் போகக் காரணம் யாது?" என்று கேட்டது. "கோபத்தைத் தணித்துச் சாந்தமாக்குகின்ற செயலையும், கல்வியில்லாத மனத்தை ஒழுக்கம் அடையச் செய்யும் திறமையையும், ஞானத்தையும், நற்குணங்களையும், கல்வியையும், மற்ற அறிவுரைகளையும் ஆசிரியர் மாணவர் தன்மையை ஆராய்ந்து பார்த்துப் பின்பு கற்பிப்பார்கள். தன்மசுவாமி என்பவன் வேதியனாய்ப் பிறந்தும் தீயகுணங்களைப் பெற்று, தீச்செயல்களையே செய்து, சாந்தம் மன அமைதி முதலியன சிறிதும் இல்லாமல், தாய் தந்தையர் உரையையும் கேளாமல் வெளியில் வந்தவன். முனிவன் அவற்றை விசாரித்து அறியாமல் முழுமூடனுக்கு வித்தை கற்பித்ததால் அவ்வித்தை ஒருவருக்கும் பயன்படாமற் போயிற்று. ஆகையால் முனிவன்மீதுதான் குற்றம் சேரும்" என்று வேதாளத்தைப் பார்த்து மன்னன் கூறினான்.

தமிழ் நூல்களைக் கற்று வாழும் புலவர்களுக்குப் பொருள் ஈயாமல் கருங்குரங்குபோல் விழித்து ஓடி ஒளித்துக்கொள்ளும் கீழ் மக்களைப்போல வேதாளம் ஓடி மரத்தைப் பற்றித் தலை கீழாகத் தொங்கியது.

---

## 19. பிண்டப் பிரதான கதை

விக்கிரமாதித்தன் விரைந்து ஓடி வேதாளத்தைப்பிடித்து மறுபடியும் கட்டிக்கொண்டு வந்தான். வரும் வழியில் அது பத்தொன்பதாங் கதையைக் கூறியது.

கந்த நகரம் என்பது மாட கூடங்களும், தோரண வீதி களும், சந்திரோதயம் போன்ற அழகுமிக்க கோபுரங்களும் உடையது; வேத முழக்கம் நிறைந்தது. அதில் **சூரியப்பிரபை** என்னும் மன்னன் சிறப்போடு வீற்றிருந்து தன் நாட்டை அரசாண்டான். அவன் வீரம், கேள்வியறிவு, செயல்திறமை, ஆராய்ச்சி முதலிய சிறப்புக்களை யுடையவன்.

அவன் ஆட்சிபுரிந்த காலத்தில் அந்நகரத்தில் சிறந்த வணிகர் பலர் இருந்தனர். அவர்களில் **தனதத்தன்** என்னும் வணிகன் சிறப்புடையவன். அவன் மனைவி **இரணியவதி** என்னும் பெயருடையவள். வணிகனும் அவன் மனைவியும் நெடுநாள் புத்திரப் பேறின்றி வருந்தினர். பின்பு அவர் களுடைய தவத்துக்கு இணங்க இறைவனருளால் ஒரு மகள் பிறந்தாள். அப்பெண்ணின் பெயர் **சுரனை** என்பது.

அவள் பெற்றோர்களின் ஆசைத் துளிர்போல வளர்ந் தாள். அவள் வளர்ந்து நாளடைவிலே மணப் பருவத்தை அடைந்தாள். அவள் கண்களுக்குக் கயல் மீன்கள் தோற்றன; பச்சை மூங்கில்கள் தோள் அழகைக் கண்டு நாண முற்றன. அவள் மொழியின் இனிமை கண்டு குயில்கள் ஒடுங்கின; முகத்தின் அழகு கண்டு மதியம் தேய்ந்தது. கூந்த லின் அழகைக் கண்டு மேகங்கள் அஞ்சி ஓடின. அவள் இத் தகைய அழகு பெற்று விளங்கினாள்.

சுரனை என்னும் அப்பெண்ணினுடைய அழகைக் கண்டு, மன்னர் பலர் தத்தமக்கு மணஞ்செய்து கொடுக்கும்படி தந்தையாகிய வணிகனைக் கேட்டனர். அவன் மணம் பேசி வந்த மன்னர் ஒவ்வொருவர்மீதும் ஏதாவது ஒரு குற்றங் கூறிப் பழித்துத் திருப்பி யனுப்பினான். அதனால் எல்லோரும் திரும்பிச் சென்றனர். கிளியைக் கூண்டில் வளர்ப்பதுபோல, அப்பெண்ணைப் பருவத்தில் மணஞ்செய்து கொடுக்காமல் காலந்தாழ்த்திவந்த வணிகன், தன் வாழ்நாள் முடிந்து இறந்தான்.

வணிகன் இறந்த பிறகு, அவ்வீட்டார்மீது பகைமை கொண்ட வணிகர் பலரும் ஒன்று கூடி மன்னனிடம் சென்றனர்; "வணிகன் வீட்டில் நிறையப் பொன் இருக்கிறது. அதனைப் பாதுகாப்பவர் ஒருவரும் இல்லை. ஆதலால் அதனை அரசாங்கத்திற்கு எடுத்துக்கொள்ளலாம்" என்று கூறினர். வணிகர் இனத்தைச் சேர்ந்தவர்களே இவ்வாறு கூறியதனாலும், அப்பெண்களுக்கு வேறு யாரும் துணை இல்லாமையாலும், மன்னன் பொருளாசை கொண்டு அவர்களைத் துன்புறுத்திப் பொருள் முழுவதையும் கவர்ந்துகொண்டான். தாயும் மகளும் அணிந்திருந்த அணிகள் மட்டுமே எஞ்சி நின்றன. அவர்கள் அந்த நகைகளைக் கழற்றி மறைத்துக் கொண்டு மறு நாள் இரவில் ஒருவருக்கும் தெரியாமல் நடந்து சென்றனர்.

அவர்கள் சென்ற வழியில் இருளில் ஒரு கழுமரத்தில் கள்வன் ஒருவன் கழுவேற்றப்பட்டு இருந்தான். அவனுடைய கால் அவ்வழியே சென்ற பெண்ணினுடைய தலையில் பட்டது. அப்பொழுது அப்பெண், "நீ யார்?" என்று கேட்டாள்.

கள்வன் அவர்களை நோக்கி, "முன்பு, பிரமதேவன் எழுதிய தலையெழுத்தினாலும், நான் முன் பிறவிகளில் செய்த பாவத்தாலும், இப்பிறவியில் களவுத் தொழில் புரிந்ததனாலும், கன்னம் இட்டதனாலும் 'கள்வன்' என்று பெயர் பெற்றுக் கழுவில் ஏற்றப்பட்டேன்," என்றான்; மேலும், "பெண்களே, இந்தக் காடு மனிதர் செல்லமுடியாத கொடுமையுடையது; இந்த இருட்டோ அச்சத்தைத் தருகிறது; இங்குப்

பன்றியும் புலியும் எப்பொழுதும் உலவிக்கொண்டிருக்கும். இடையிடையே திருடரும் இருப்பார்கள். நீங்கள் சிறிதும் அச்சங்கொள்ளாமல் தெய்வமகளிர்போல இங்கு வந்த காரண மென்ன? கூறுங்கள்,'' என்றான்.

வணிகன் மனைவி, தான் கடல் போன்ற பெருஞ் செல்வத்தில் வாழ்ந்த விதமும், கணவன் பின்பு இறந்ததும், பகைவர் சினங்கொண்டு செய்த சூழ்ச்சிகளும், மன்னன் தங்களது செல்வத்தை எடுத்துக்கொண்டதும், மன்னனுக்கு அஞ்சி இருளிலே ஓடிவந்ததும் ஆகிய செய்திகளைக் கூறினாள். "இந்தப் பெண் யார்?'' என்று கள்வன் தாயைக் கேட்டான். அவள், "இப்பெண் என் மகள். இவளுடைய செல்வத்தையும் அழகையும் கண்டு மன்னர் பலர் வந்து மணம் பேசினர். என் கணவன் யாருக்குமே பெண்ணைக் கொடுத்து மணஞ் செய்யாது இறந்துவிட்டார். எங்கள் தலையில் எழுதிய எழுத்து இது,'' என்றாள்.

கள்வன், "நீங்கள் இக்கழுமரத்திலிருந்து என்னை இறக்கி விட்டால் நான் பிழைத்துக்கொள்வேன்; உங்கள் பொருள் போய்விட்டதே என்ற கவலை உங்களுக்கு வேண்டா. என்னிடத்தில் பெருஞ்செல்வம் இருக்கிறது. அதனை நான் ஓரிடத்தில் மறைத்து வைத்திருக்கிறேன். நான் அப்பொருள் முழுவதையும் உங்களுக்குக் கொடுத்துவிடுகிறேன். நீ இப் பெண்ணை எனக்கு மணஞ்செய்து கொடு'' என்றான்.

தாயும் மகளும் சேர்ந்து கள்வனைக் கழுமரத்திலிருந்து இறக்கினார்கள். கள்வன் தான் ஒளித்து வைத்திருந்த செல்வம் முழுதையும் கொடுத்தான். பின்பு தான் சொன்ன படி கள்வனுக்குத் தன் பெண்ணைத் தாய் தாரை வார்த்துக் கொடுத்தாள். மணஞ் செய்துகொண்ட பின்பு கள்வன் இறந்தான். அப்பெண்கள் கள்வன் உடலை நெருப்பிலிட்டுக் கொளுத்தினர்; பின்பு அவனது செல்வத்தை எடுத்துக் கொண்டு வேறு ஒரு நகரத்தை அடைந்தனர்; அச்செல்வத் துடன் நல்வாழ்வு வாழ்ந்தனர்.

அந்த நகரத்தில் மறையவர் குலத்தில் பிறந்து மிக்க அழகு பெற்று மன்மதன்போல ஒருவன் விளங்கினான்.

அவன் பெயர் சோமசுவாமி என்பது. அவன் அந்தத் தெரு விலே அடிக்கடி வந்து போனான். வணிகன் மகள் அவனைக் கண்டு காமங்கொண்டாள். வணிகன் மனைவி தன்மகள் காம நோயால் வருந்தும் நிலைகண்டு இரங்கி, அந்தச் சோமசுவாமியை அழைத்து, "இந்தப் பெண்ணோடு கூடிவாழின் பொருள் மிகத் தருவேன்" என்று கூறினாள். அவன் பெண்ணின் பருவத்தையும் அழகையும் பொருளையுங் கண்டு ஒப்புக்கொண் டான்.

பொன்னைப் பெற்றுக்கொண்டு மறையவன் அப்பெண் ணுடன் தொடர்பு கொண்டு வாழ்ந்தபோது, அப்பெண்ணின் வயிற்றில் கருப்பம் உண்டாயிற்று. தாய் அதனைக் கண்டு அஞ்சிப் பெண்ணை ஒரு நிலவறையிலே மறைத்து வைத்திருந் தாள். பின்பு அப்பெண்ணுக்கு ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. "இந்தக் குழந்தையை வெளியார் கண்டால், 'இக் குழந்தை ஏது? இதன் தந்தை யார்?' என்று கேட்பரே" என அஞ்சிய தாய், பக்கத்து வீட்டில் இருந்த யானைப்பாகனை அழைத்து, மறைவாகப் பேசினாள்; "இக்குழந்தையைக் கொண்டுபோய் யாரிடமேனும் கொடுத்துவிடு" என்று கூறிச் சிறிது பொன் கொடுத்தாள்.

யானைப்பாகன் பொன்னைப் பெற்றுக்கொண்டு, அப் பெண்களுக்குத் தேறுதல் மொழிகள் கூறினான்; மறுநாள் இரவு நடு நேரத்தில் குழந்தையைத் தொட்டிலோடு எடுத்துக் கொண்டு போனான்; குழந்தையில்லாமல் வருந்திய அரசனது அரண்மனை வாயிலில் வைத்துவிட்டு மீண்டான். மறுநாள் பொழுது விடிந்ததும் மந்திரி வந்து பார்த்து மன்னனிடம் கூறினான். மன்னன் அக்குழந்தையைக் கொண்டுவரச் செய்து பார்த்து மகிழ்ந்தான்; அரண்மனைப் பெண்களிடத்தில் அப்பிள்ளையைக் கொடுத்து வளர்க்கச் சொன்னான்.

"மன்னன் மைந்தரில்லாமல் வருந்தித் தவம் கிடக்கின்றான்; வரம் பெறும் நேரத்தில் இப்பிள்ளை கிடைத்தது" என்று கூறி, அக்குழந்தையைப் பெண்கள் அன்போடு வளர்த்தனர். சிறு வன் ஐந்து வயது முதல் கல்வி கற்றான்; ஏழாம் வயது முதல் குதிரை யேற்றம் முதலியவைகளைக் கற்றான்; பின்பு படைக் கலப் பயிற்சி பெற்றான்; இங்ஙனம் பதினாறாண்டுகள் நிறையப்

பெற்றான். மறையவர் கூடி அவனுக்குச் சந்திரப் பிரபன் என்று பெயர் சூட்டினர். மன்னன் மகிழ்ந்து அவனைத் தன் பிள்ளையாக ஏற்றுக்கொண்டு இளவரசனாக முடி சூட்டினான்.

சந்திரப் பிரபன் இளவரசனாக இருந்து ஆட்சி செய்யும் முறையை மன்னன் கண்டு மகிழ்ந்தான்; பின்னர் அவனை மன்னனாக்கினான்; வேண்டிய அறிவுரைகளைக் கூறினான்; தவம் செய்யக் காட்டிற்குச் சென்றான். கானகத்திற் சென்ற மன்னன் தவமுனிவர் பலருடன் கூடித் தவம் செய்து, தீங்கு சிறிதும் இன்றிச் சிவனருள் பெற்று, விண்ணுலகு அடைந்தான்.

மன்னன் பரகதி அடைந்த செய்தியைச் சிலர் கண்டு வந்து நகரத்தில் இருந்த அவன் மைந்தனிடம் கூறினர். மைந்தன் அரசனுக்குச் செய்யவேண்டிய இறுதிக்கடன் செய்வதற்குக் கங்கைக் கரையை அடைந்தான்; மறையவர் கூறியபடி இறந்த மன்னனுக்காக நெய், தயிர், பால் முதலியவற்றைத் தேடி எடுத்துக்கொண்டு போய்க் கங்கைக் கரையிலே பிண்டம் கொடுக்கத் தொடங்கினான்.

அப்பொழுது அந்தணாளர் மறை ஓதினர்; வந்த வீரரும் மன்னரும் மக்களும் சடங்கு நடைமுறைகளைப் பார்த்து நின்றனர். கங்கைக் கரையிலே மைந்தன் தன் கையில் பிண்டத்தை எடுத்து நீட்டினான். முதலில் ஒரு கை வெளியில் வந்தது. அது காயம் பட்டுக் கருநிறமுடையதாய் இருந்தது. மைந்தன் அதனைக் கண்டு அஞ்சினான். அந்தக் கையில் ஆயுதம் அழுந்திய தழும்பும் இருந்தது. அந்தக் கை தனக்குப் பிண்டம் ஈயும்படி முதலில் நீண்டு வந்தது.

'இந்தக் கை ஏது?' என்று நினைந்து அரசகுமாரன் திகைத்தான். அப்பொழுது இரண்டாவதாக ஒரு கை வெளியில் வந்தது. அது பஞ்சாங்கத்தைப் பிடித்திருந்தது; தர்ப்பைப் புல்லினால் ஆகிய மோதிரம் அணிந்திருந்தது; அது தனக்குப் பிண்டம் கொடு என்று கேட்பதுபோல் நீண்டு வந்தது.

மூன்றாவதாக ஒரு கை, முன்பு தோன்றிய இரண்டு கைகளையும் தள்ளிவிட்டு முன் வந்தது. அது விரல்களில் மோதிரம்

அணிந்திருந்தது ; இரத்தினமணிக் கடகத்தையும் அணிந்திருந்தது. அது, 'எனக்குப் பிண்டம் கொடு' என்பது போல முன்புறம் நீண்டு நின்றது.

மூன்று கைகள் இவ்வாறு முறையே வெளியில் வந்ததைக் கண்ட மன்னன், பிண்டத்தைத் தன் கையில் வைத்துக் கொண்டு, வேதியர்களைப் பார்த்து, " நான் எந்தக் கையில் பிண்டம் இடவேண்டும் ? சொல்லுங்கள்," என்றான். மறையவர் விடை சொல்ல முடியாமல் திகைத்தனர்.

வேதாளம் விக்கிரமாதித்தனைப் பார்த்து, "அரச குமாரன் பிண்டத்தை எந்தக் கையில் இட வேண்டும்? நீ கூறு" என்றது.

"கள்வன் பிறர் அறியாமல் களவாகவே வணிகன் மகளைத் தாரையேற்றான் ; உடனே இறந்தான். அந்தப் பெண்ணை அவன் தழுவி மகிழவில்லை. ஆதலால் அவனைச் சிறுவனுக்குத் தந்தை என்று கூறுதல் தவறு.

"பொன்னை வாங்கிக்கொண்டு தழுவியதனாலே மறையவனையும் தந்தையென்று கொள்ளாது தள்ளிவிடலாம். தாய்போல் வளர்த்துத் தன் நாட்டையும் கொடுத்து ஆளும்படி செய்த மன்னனே பிண்டத்தை ஏற்றுக்கொள்ளும் முறையுடையவன்" என்று விக்கிரமாதித்த மன்னன் கூறினான்.

மன்னன் கூறிய மொழிகளைக் கேட்ட வேதாளம், தலையசைத்து 'ஆம்' என்று கூறிப் பழையபடியே மரத்திற்குத் திரும்பி ஓடி அதனைப் பற்றிக்கொண்டது.

---

## 20. அநங்கமஞ்சரி கதை

விக்கிரமாதித்தன் மறுபடியும் சென்று வேதாளத்தைப் பிடித்துக்கொண்டு வந்தான். அஃது அப்பொழுது இருபதாம் கதையைக் கூறியது.

விசால நகரம் என்பது ஏரிகளும், நீர் நிறைந்த குளங்களும், குயில் உலாவும் சண்பகச் சோலைகளும், சாளரங்கள் நிறைந்த மாட மாளிகைகளும் உடையது. அந்நகரத்தில் நந்தன் என்

னும் பெயர் கொண்ட வணிகன் ஒருவன் இருந்தான். அவன் மிகுந்த செல்வம் உடையவன். அவன் தனக்கு மைந்தன் பிறக்காமையால் உமாதேவியை நோக்கித் தவம் செய்தான்; பிறகு அத்தேவியின் அருளால் ஒரு பெண் குழந்தையைப் பெற்றான்; அக்குழந்தைக்கு அநங்கமஞ்சரி என்று பெயர் சூட்டினன்.

அநங்கமஞ்சரி நாள்தோறும் வளர்ந்து திங்கள் போல் முகம் ஒளிவீச அழகு பெற்று விளங்கினள்; பின்னர் மங்கைப் பருவம் அடைந்தாள். அவளது சாயலைக் கண்டு மயில்கள் அவளோடு கூடி விளையாடின. மன்மதன் அவள் அருகிலிருந்து சேவை செய்தான்.

அப்பெண்ணின் அழகை வியந்து வணிகர் பலர் வந்து மணம் பேசினர். தந்தையாகிய தத்தன் வந்தவர்களை நோக்கி, "என் பெண்ணை மணஞ் செய்வோர் இரவு பகல் எப்பொழுதும் நீங்காமல் அவளிடம் இருத்தல் வேண்டும். அப்படி வாழ விருப்பம் இல்லாதவர்களுக்கு நான் பெண்ணைக்கொடேன்" என்றான். வந்த வணிகர் அனைவரும் 'அஃது இயலாத செயல்' எனக்கூறிப் போயினர். பிறகு தாம மாலிகை என்னும் பெயர் கொண்ட வணிகன் ஒருவன் வந்தான். "நான் இப்பெண்ணுடன் இரவு பகல் எப்பொழுதும் கூடி வாழ்வேன்; பிரிந்து செல்ல மாட்டேன்; எனக்கு இப்பெண்ணைக் கொடுப்பாயோ?" என்றான். பெண்ணின் தந்தையும் இசைந்து, அவளை அவனுக்கு மணஞ் செய்துகொடுத்தான்.

அறத்தின் வடிவம் போன்ற அநங்கமஞ்சரியும் தாமமாலிகை என்பவனும் திருமாலும் திருமகளும் போலவும், அன்றிற் பறவைகள் போலவும், மன்மதனும் இரதியும் போலவும் ஒருவரைவிட்டு ஒருவர் பிரியாமல் சேர்ந்து வாழ்ந்தனர்.

அப்பெண்ணை விட்டுப் பிரியாதிருந்த வணிகன் ஒரு நாள் தன் தொழிலைப் புதுப்பிக்க நினைந்தான்; தன் இனத்து மக்களோடு கூடிச் சென்று ஓர் ஊரை அடைந்தான்; வாணிகம் செய்தான்; அப்பொழுது தன் மனைவியை மறந்திருந்தான்.

அநங்கமஞ்சரி, தன்னை விட்டுப் பிரியாத வணிகன் பிரிந்து சென்றான் என்று வருந்தி, "என்னை வேண்டிவந்து சேராத

வனை, மனத்தினாலும் இனி நான் நினையேன்" என்று கூறித் தன் வீட்டில் உலாவிக்கொண்டிருந்தாள். அவளுடைய காற் சிலம்பு ஓசையைப் பக்கத்து வீட்டில் இருந்த மறையவன் கேட்டான் ; பின்னர் அப்பெண்ணைப் பார்த்தான். அவளுடைய சிலம்பு அணிந்த கால்களும், காதில் தாக்குகின்ற இரண்டு கண்களும், சந்திரன் போன்ற முகமும், இளைஞர் செய்த பாக்கியம் என்று சொல்லத்தக்க வடிவமும் அழகும் கண்டு மயங்கி நின்றான்.

காமகமன் என்னும் பெயர்கொண்ட அந்த அந்தணன், விரக வேதனையுற்றான் ; அப் பெண்ணும் மறையவனைப் பார்த்தாள் ; அவன் வடிவத்தைக் கண்டு மயங்கினாள். இருவருடைய கண்களும் சந்தித்தன. அந்தணாளன் மனந் தளர்ந்து, பெண்ணின்மேல் மயக்கங்கொண்டு திரும்பிச் சென்றான்.

அநங்கமஞ்சரியும் மன்மதனுடைய அம்புகளால் தாக்கப்பட்டு வேதனை அடைந்து சோர்ந்தாள். அப்பெண் வருந்துவதைக் கண்டு தோழிகள் மலர்களைப் படுக்கையில் பரப்பினர் ; வாழையிலையை விரித்து அதனில் அவளைப் படுக்கவைத்தனர் ; சந்தனம் முதலிய நறுமணப் பொருள்களை அரைத்து அச் சாந்தை உடம்பின்மேல் பூசினர் ; நிலவின் ஒளி உள்ளே புகாதபடி மறைத்தனர் ; அவள் மேல் பனி நீரைத் தெளித்தனர் ; பல வகை உபசாரம் செய்தும் தென்றல் வந்து அவளை வருத்தியது. அப்பெண் இவ்வாறு வருந்தும்போது, மன்மதனுடைய கணையால் வருந்திய மறையோனும் அப்பெண்ணின் வீட்டுக்கு வந்தான் ; 'பெண் எங்கே இருக்கின்றாள் ?' என்று கேட்டான் ; அவளும் மயக்கந் தீர்ந்து 'அவரை அழையும்' என்று தன் தோழிகளிடம் கூறினாள்.

மாதர் ஓடி வந்து அழைத்தபோது மறையவன் உள்ளே சென்றான். அவனது வருகை, வாடிய பயிர்க்குப் பெய்யும் மழைபோல இருந்தது. தேடிச் சென்ற மருந்துக்கொடி காலிற் சிக்கியது போல மறையவன் வந்தானென்று மகிழ்ந்து, அவள் அவனை அன்போடு தழுவிக்கொண்டாள் ; அப்பொழுதே அப்பெண்ணின் ஆவி அவள் உடலை விட்டுப் பிரிந்தது. அவள் ஆசையை நாம் எவ்வளவென்று சொல்ல முடியும் ! மறையவன்

இதனைக் கண்டு, தாங்கமுடியாத வருத்தங்கொண்டு, மிகுந்த காதல் உடையவளாய்த் தானும் இறந்தான்.

பொழுது விடிந்த பின்பு கணவன் வந்து பார்த்து, அப் பெண்ணின்மேல் வைத்த ஆசையினாலே தானும் இறந்தான். மூவரும் இவ்வாறு இறந்ததைக் கண்டு உமாதேவி அவர்களை எழுப்பினாள். மூவரும் தூங்கினவர் எழுந்து வந்ததைப்போல உயிர்பெற்று எழுந்தனர்.

வேதாளம் விக்கிரமாதித்தனைப் பார்த்து, "மன்னனே, இறந்த மூவருள் யார் இறந்தது சிறப்பான செயல்?" என்று கேட்டது.

"மறையவனும் மங்கையும் இருவரும் தழுவிக்கொண்டே, இன்பத்தால் அன்போடு இறந்தனர். அது புதுமையன்று. சிறிதும் அன்பில்லாத மங்கைக்காக, அவள் இறந்ததைப் பார்த்தவுடனே மனம் உருகிக் கணவன் உயிர்விட்டான். அதுவே உலகிற் புதுமையாகும்" என்று மன்னன் கூறினான். உடனே வேதாளம் திரும்பி ஓடி மரத்தில் ஏறிக்கொண்டது.

---

## 21. பிரமராட்சதன் கதை

விக்கிரமாதித்தன் மனம் சலிக்காமல் மறுபடியும் சென்று மரத்திலேறி வேதாளத்தைப் பிடித்துக் கட்டித் தோளில் வைத்துக்கொண்டு வந்தான். வரும் வழியில் வேதாளம் இருபத்தோராவது கதையைக் கூறியது.

சித்திரகூடம் என்ற நகரில் சந்திரலோசனன் என்னும் பெயர்கொண்ட மன்னன் ஒருவன் இருந்தான். அவன் பகை வேந்தர் பலரும் திறைசெலுத்தி வணங்கச் சிறப்போடு நாட்டை ஆண்டுவந்தான்; அவன் பல கலை நூல்களையும் பாராட்டினான்; சுமதி என்னும் அமைச்சனைத் துணையாகக் கொண்டு அவன் சொல்லிய நல்லுரைகளைக் கேட்டு நடந்துவந்தான்.

அம்மன்னன் ஒரு நாள் தேர், குதிரை, யானை முதலிய சேனைகள் சூழ வேட்டையாடக் காட்டிற்குச் சென்றான். அப்

பொழுது மன்னன் ஏறியிருந்த குதிரை மருண்டு வேகமாகத் தனியே ஓடியது; நெடுந்தொலை சென்ற பிறகு ஒரு பூஞ்சோலை யின் அருகே நின்றது. மன்னன் குதிரையிலிருந்து இறங்கிச் சோலையினுள்ளே சென்று ஒரு குளத்தைக் கண்டான்; தன் தாகவிடாய் தீர அங்கிருந்த குங்கும மணம் வீசும் நீரைக் குடித் தான்; பின்னர் ஒரு மர நிழலிலே களைப்பாறி யிருந்தான்.

அப்பொழுது ஒரு பெண் அக்குளத்தில் நீராட வந்தாள். அவள் பேரழகி. அவளுடைய பணிப்பெண்களும் உடன் வந்தனர். மன்னன் அப்பெண்ணைக் கண்டான்; மகிழ்ந்தான்; "இப்பெண் தேவருலகத்துப் பெண்ணோ! பூவுலகத்துப் பெண்ணோ!" என்று வியந்தான்; அவளுடன் வந்த பெண் களைக் கேட்டான்; அவர்களுள் ஒருத்தி, "இப்பெண் இக்காட் டில் உறையும் தெய்வமுனிவர் மகள்; சந்திரப்பிரபை என்னும் பெயர் உடையவள்" என்றாள்.

மன்னன் முனிவரிடம் சென்று, "இப்பெண்ணை எனக்கு மணஞ்செய்து தருக" என்றான். முனிவரும் அவளை அவனுக்கு மணஞ்செய்து கொடுத்தார். மன்னன் அப்பெண்ணுடன் தன் நகரத்தை அடைந்தான்; "ஒரு தெய்வம் சிறந்த பெண்ணை எனக்கு மனைவியாக அளித்தது" எனக்கூறி, அந் தணர்களை வரவழைத்துப் பலவகைத் தானங்களைச் செய்தான். மணம் நிறைந்த சோலையில் மலர்ப்படுக்கையில், தென்றல் வீச, திங்கள் நிலவொளி காய, அந்தப் பெண்ணுடன் மன்னன் இரவில் பொருந்தி வாழ்ந்தான். ஒரு நாள் ஓர் இராக்கதன் அங்கு வந்தான். அவன் நெருப்புப் போல் சுழலும் கண்களை உடையவன்; செம்மயிரும் பிறை போன்ற பற்களும் உடையவன். அவன் மிகுந்த கோபம் கொண்டு பசியினாலே வேதனைப்பட்டு, இருவரும் இருந்த இடத்தை நெருங்கினான். மன்னன் அவர்களைக் கண்டு வணங்கி, "உனக்கு வேண்டிய உணவைக் கேள். கொண்டுவந்து தருகிறேன்," என்று கூறினான்.

இராக்கதன் மன்னனைப் பார்த்து, "நீ என்னை வணங்கிய தனால் உன் உயிரை உனக்கு அளித்தேன்; எனக்கு வேண்டிய உணவைக் கூறுகின்றேன், கேள்: ஐந்து வயதுடையவனாய், அந்தணகுமாரனாய் இருக்கும் ஒரு சிறுவனைத் தாயும் தந்தை

யும் சம்மதித்துக் கொடுத்தால் பெற்றுக்கொள்வேன்" என்று கூறினன். மன்னன் அவ்வாறே கொடுப்பதாகக் கூறிச் சென்ருன்.

மறுநாள் பொழுது விடிந்ததும் அவன் தன் அமைச்சர்களை அழைத்து, இரவில் நடந்தவை அனைத்தையும் ஒன்றும் ஒளியாமல் கூறினன். அப்பொழுது விவேகி என்னும் அமைச்சன் அரசனை நோக்கி, "வேதியர்கள் வறுமையால் வாடினும் தாம் பெற்ற பிள்ளையை விற்கமாட்டார்கள்; அவ்வாறு விற்ருலும் கொல்வதற்கு மனம் சிறிதும் இசையமாட்டார்கள். சிவபெருமான் தன் அடியார்களின் மனத்தை அன்பினல் சோதிப்பது போல ஒரு வேளை இராக்கதன் நம்மனத்தைச் சோதிப்பதாக இது இருக்கலாம்" என்று கூறி, ஒரு சிறுவன் வடிவத்தைச் செம்பொன்னல் செய்யும்படி கட்டளையிட்டான்.

மந்திரி பொன்னல் செய்த சிறுவன் சிலையை எடுத்துக் கொண்டு வேதியர் தெருவிலே சென்று, "உங்களில் யாரேனும் ஒருவர் பாலகன் ஒருவனைக் கொடுத்து, அவனைப் பலியிடுவதற்கும் இசைவீர்களாயின், நீங்கள் சொன்ன விலையை நான் கொடுப்பேன்" என்ருன்.

வேதியர் எல்லோரும் அமைச்சன் கூறிய சொல்லுக்கு இசையவில்லை. ஆயினும், நாள்தோறும் வறுமையால் வாடி வருந்திய மறையவன் ஒருவன் அந்நகரில் இருந்தான். அவன் தன் மனைவியை நோக்கி, "பெண்ணே, நாம் இருவரும் வறுமையால் வாடுகின்ருேம்; நாம் பசியால் வருந்தி இறந்த பிறகு இச்சிறுவனைக் காப்பாற்றுவோர் யார் இருக்கின்றனர்? நாம் உயிருடன் இருந்தால் மைந்தரைப் பெற்றுக்கொள்ளலாம்" என்ருன். அவன் மனைவியும் அதற்கு இசைந்தாள். மனைவியும் கணவனும் தம் மைந்தனை அழைத்துக் கேட்டனர்; "வேந்தன் உயிர் பெற்று வாழவும், நீங்களும் வறுமை நீங்கி நலம் பெற்று விளங்கவும் வாய்ப்பு ஏற்படுமாயின், இதைப் போன்று நான் உயிர் தரத் தக்க நேரம் வேறு ஏற்படுமோ! ஆதலால் இப்பொழுதே என்னை அமைச்சரிடம் விற்றுவிடுங்கள்," என்று மைந்தன் கூறினன். தாயும் மகனும் இசைந்தது கண்ட தந்தை விரைந்தோடி, அமைச்சனை அழைத்துத் தான் தன் பிள்ளையைக்

கொடுப்பதாகக் கூறினன். மந்திரி பொன்னல் செய்த பால கனையும் வேறு நகைகளையும் கொடுத்து அச்சிறுவனை அழைத்துக்கொண்டு சென்றான்.

மந்திரி அரசன் முன் நின்றான். தாயும் பிள்ளையும் தந்தையும் பின்னே நின்றார்கள். அவர்களைக் கண்டு மன்னன் மனம் மகிழ்ந்தான் ; அன்று இரவு பிரமராக்கதனுக்குப் பலி கொடுக்கத் துணையாக அவர்களையும் அழைத்துச் சென்றான்.

அரசன் நடு இரவிலே சென்று, பிரமராக்கதனை அழைத்து, "நீ கூறியபடி நான் பலிகொண்டு வந்திருக்கிறேன் ; ஏற்றுக் கொள்க" என்று கூறினன். பிரமராக்கதன் மன்னனைப் பார்த்து, "உன்னைப் போன்ற பெரியோர் இவ்வுலகில் உண்டோ ? நீ மறையோன் பெற்ற சிறுவனை அழைத்து வந்தாய். மிக நன்று," என்றான். பிரமராக்கதன் அந்தப் பிள்ளையைப் பலியாக ஏற்றுக்கொள்வதற்கு மரத்தின்மேல் ஏறி நின்றான். தாய் மைந்தனைப் பிடித்து நின்றாள். மந்திரி தன் கையில் வாளை எடுத்துக்கொண்டு மைந்தனைப் பலியிட வந்தான். சிறுவன் இவைகளை யெல்லாம் கண்டு நகைத்தான்.

சிறுவன் நகைத்ததையும், மன்னன் சொன்ன சொல் தவறாமல் நடந்ததையும், தாய் தந்தையர் மைந்தனை விலைக்கு விற்றதோடு இங்கு வந்து மைந்தனைப் பிடித்திருந்ததையும், அமைச்சன் சிறுவனுடைய கழுத்தை அரியக் கையில் வாள் பிடித்திருந்ததையும் பிரமராக்கதன் கண்டான் ; "மன்னன் சொன்ன சொல் தவறாமல் பலி கொண்டுவந்தான் ; தாய்தந்தையர் சிறுவனை விற்றனர் ; அமைச்சன் சிறுவனைக் கொல்ல வாள் கொண்டுவந்தான். ஆதலால் இவையே எனக்குப் போதும். சிறுவனை நான் மன்னித்து விட்டுவிட்டேன்," என்று கூறினன்.

வேதாளம் விக்கிரமாதித்தனிடம் இவற்றை எல்லாம் எடுத்துக்கூறி, "அமைச்சன் தன்னை வெட்ட வந்தபோது சிறுவன் ஏன் நகைத்தான் ? பிரமராக்கதன் மன்னித்து விட்டது ஏன் ?" என்று கேட்டது.

மன்னன் நிகழ்ச்சிகளை ஆராய்ந்து, "வறுமையினால் தந்தை யும் தாயும் தன்னை விற்றனர். வேந்தன் உயிர்க்குப் பதிலாகத் தன்னை விலைக்கு வாங்கினான். அமைச்சன் ஆசையினாலே தன்னைக் கொல்ல வந்தான். இம்மூவருடைய செயலையும் கண்டு சிறுவன் வெறுக்கவில்லை. சிரித்ததற்கு வேறு காரணம் உண்டு. 'சென்ற பிறவியிலே செய்த பாவத்தினால் பேயினத்தில் ஒன்றாகிய பிரமராக்கத வடிவம் இவற்குக் கிடைத்தது. இப்பொழுதும் ஒரு கொலையைச் செய்தால் இந்த இராக்கதன் என்ன பாடு படுவானோ!' என்று நினைத்தே சிறுவன் நகைத் தான்," என்று அரசன் கூறினான்.

சிவபெருமான் பிச்சை எடுத்தபோது திருமால் பெண் வடிவத்தோடு வந்து பலியிட்டான். அப்பொழுது சிவனுடைய கையில் ஒட்டியிருந்த பிரமகபாலம் என்னும் ஓடு கையைவிட்டு மறைந்து சென்றது. அதுபோல வேதாளம் வேந்தனைவிட்டு விலகி ஓடி மரத்தில் ஏறிக்கொண்டது.

---

## 22. சிங்கத்தின் கதை

மன்னன் ஓடி மரத்தின்மீது ஏறி வேதாளத்தைப் பிடித்துக் கொண்டு வரும்போது வேதாளம் இருபத்திரண்டாம் கதையைக் கூறத் தொடங்கியது.

நல்ல கிராமமொன்றில் அக்கிரகாரம் ஒன்றுண்டு. அக்கிர காரம் என்பது அந்தணர்கள் வாழுமிடம். அவ்வந்தணர்களுள் விட்டுணு சுவாமி என்பவன் ஒருவன். அவன் சக்கிரா யுதத்தைக் கையிலே உடைய திருமாலை நாள்தோறும் வணங்கி வந்தான்.

அவன் தன் மனைவியுடன் இருந்து இன்பமாக இல்லறத் தில் வாழ்ந்துவந்தான். அவ்விருவரும் செய்த மாதவத்தினால் அவர்களுக்கு நான்கு புதல்வர் பிறந்தனர். அவர்கள் நால்வரும் முறைப்படி கல்வி கற்று, மாமறை ஓதிப் பூசைகள் செய்வதிலும் வல்லவராகத் திகழ்ந்தனர். இங்ஙனம் அனைவரும் வாழ்ந்து வருகையில் அவர்களின் தந்தை விண்ணுலகு எய்தினான்.

தந்தையைப் பிரிந்த மக்கள் மிகவும் வருந்தினர்; தந்தைக்குச் செய்ய வேண்டிய நீர்க் கடன்களைச் செய்து முடித்தனர்; வேதியர்க்கு அளிக்க வேண்டிய தானங்களை அளித்தனர்; அக்கிராமத்திலேயே தொடர்ந்து வாழ்ந்துவந்தனர்.

ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்துச் செல்லும்போது நீர் நிறைந்து ஓடும்; பிறகு வற்றிவிடும். அதுபோல அவர்கள் சில காலம் வளமான வாழ்வு வாழ்ந்தனர்; பின்னர் வறுமையால் பிணிக்கப்பட்டுத் துயருற்றனர். நால்வரும் வறுமைப் பிடியில் சிக்குண்டு தவித்தபோது, அந்நால்வரில் ஒருவன் வறுமையின் கொடுமையைத் தாள முடியாமல் உயிர்விடத் துணிந்தான். அவன் எண்ணத்தை அறிந்த மற்ற மூவரும் அறிவுரை கூறினர்; "தவம் செய்து இயற்கையாக மரணம் அடைந்தவர் வீடுபேறடைவர். தற்கொலை செய்துகொள்பவர் வீட்டை அடைய முடியாது. எனவே, நினது தீய கருத்தை மாற்றிக் கொள்," என உரைத்தனர். இதனைக் கேட்ட அவனும் தன் கருத்தை மாற்றிக்கொண்டான்.

வறுமையிலிருந்து மீள முடியாமல் தவிக்கும் அவர்கள் ஒன்று கூடி ஆலோசித்துப் பல தேசங்களிலுள்ள புண்ணிய தீர்த்தங்களில் நீராடிவிட்டு வர முடிவு செய்தனர்; உடனே தீர்த்த யாத்திரையாகப் புறப்பட்டனர்; ஐம்பத்தாறு தேசங்கட்கும் சென்று அங்குள்ள தீர்த்தங்களில் நீராடி மகிழ்ந்தனர்; சென்ற விடமெல்லாம் பல்வேறு வித்தைகளைக் கற்றுக் கொண்டனர். இறுதியாக நால்வரும் ஒரு நல்ல இடத்தை அடைந்து தங்கினர்; நால்வரும் ஒன்றுகூடிய பிறகு ஒவ்வொருவரும் தாம் கற்ற வித்தைகளைக் கூறிக்கொண்டனர்; பின்னர்த் தாங்கள் கற்ற வித்தைகளைச் சோதித்துப் பார்க்க விரும்பினர்.

அவருள் ஒருவன், நீண்ட நாட்களுக்கு முன்பு இறந்த சிங்கம் ஒன்றின் எலும்புகளை ஒன்றாகக் கூட்டி உறுப்புக்களை அமைக்கத் தொடங்கினான். மற்றொருவன் முன்னவன் அமைத்த உறுப்புக்களில் நரம்பமையுமாறு செய்தான். மூன்றாமவன் சிங்கம் முன்பு எப்படியிருந்ததோ அஃதேபோல் தோலமைத்து உருவமும் உண்டாக்கிவிட்டான். நான்காம்

சகோதரன், முழு உருவமாக அமைந்த அந்தச் சிங்கத்திற்கு உயிர் கொடுத்தான்.

உடனே சிங்கம் உயிருடன் எழுந்து நின்றது; அஃது அங்கிருந்த நால்வரையும் கண்டது. மிக்க பசியால் வாடிய அது, அந்நால்வரையும் கொன்று தின்றது. பின்பு அது வனத்தை நாடிச் சென்றது. தீயவருக்கு நன்மை செய்யின் அதனால் தீமையே விளையும். தீய விலங்கான சிங்கம், தனக்கு உயிர் கொடுத்தவர்களையே கொன்றது. "அம்மறையவர் கொலைக்குக் காரணம் யார்? அப்பாவம் யாரைச் சேரும்?" என வேதாளம் வேந்தனை வினவியது.

இங்ஙனம் வினவிய வேதாளத்துக்கு மன்னன், "பூசுரர் நால்வரும் தாங்கள் கற்ற வித்தையின் உதவியால் மாண்ட சிங்கத்திற்கு மீண்டும் உயிரளித்தனர். ஆனால், நன்றியற்ற விலங்கு நால்வரையும் கொன்றது. எலும்புகள் அனைத்தையும் ஒன்று கூட்டிச் சிங்க உருவமாய் அமைத்தவனும், நரம்பு அமைத்தவனும், தோல் அமைத்தவனும் ஆகிய இம் மூவரும் குற்றவாளிகளல்லர். மாண்ட சிங்கத்திற்கு உயிர் கொடுத்து அதனை நடமாட விட்டவனே குற்றவாளியாவான். பாவம் அவனையே சேரும்" என்று விடை கூறினான்.

இதனைக் கேட்டவுடன், வேதாளம் மன்னனிடமிருந்து தப்பி மீண்டும் முருக்க மரத்தின்மீது ஏறிக்கொண்டது.

---

## 23. கூடுவிட்டுக் கூடு பாய்ந்த கதை

மன்னன் காரிருள் சூழ்ந்த இரவு நேரத்தில் வேதாளத்தைப் பின் தொடர்ந்து சென்று, பிடித்து வந்தான். அது இருபத்து மூன்றும் கதையைக் கூறத் தொடங்கியது.

கலிங்க தேசத்திலுள்ள ஓர் ஊரில் செல்வமும் பண்பும் வள்ளன்மையும் உடைய அந்தணன் ஒருவன் வாழ்ந்தான். அவன் பெயர் சோம சுவாமி என்பது. அவனும் அவன் மனைவி கோமதியும் இல்லறமென்னும் நல்லறத்தை இனிது நடத்திவந்தனர். இந்நிலவுலகில் அவர்கள் செய்த நற்காரியங்களின் பயனாக அவர்களுக்கொரு புதல்வன் பிறந்தான். அவனை இருவரும் மிக்க அன்புடன் வளர்த்துவந்தனர்;

அவனை அலங்கரித்து மகிழ்ந்தனர். மகனுக்கு ஐந்து வயதான போது அவன் தந்தை கல்வி கற்பித்தான்.

தந்தை கற்பிக்க மகன் செந்தமிழ், கிரந்தம், ஆரியம், கன்னடம், தெலுங்கு, முதலிய மொழிகளைக் கற்றான்; இவையன்றி வேறு பல கலைகளும் பயின்றான். இங்ஙனம் அவன் கலைகளனைத்தையும் பயின்று சிறந்திடும் நாளில் சிறு வயதிலேயே இவ்வுலகவாழ்வை நீத்தான். அவன் இறந்ததைக் கண்டு பெற்றோர் வருந்தினர்; அழுது அரற்றினர். அவனுடன் படித்த அவனையொத்த சிறார்களைக் கண்டபோது அவர்கள் உள்ளம் அனலிடையிட்ட மெழுகாயிற்று. இறந்த அவனுடலைக் கொண்டுபோய்ச் சுடலையில் கிடத்தினர்; செய்யவேண்டிய சடங்கெல்லாம் செய்தபின்னர், அவ்வுடலுக்கு நெருப்புவைக்க முயன்றனர். இந்நிலையில் அங்கு ஒரு முனிவன் வந்தான்.

அம்முனிவன் முக்காலமும் உணர்ந்தவன் ஆதலால், அச்சிறுவனின் ஆயுள்காலம் இன்னும் முடிவடையவில்லை என்பதை அறிந்தான். 'அவன் நூறு வயதுவரை வாழவேண்டும் என்பது பிரமன் விதித்த விதி' என்பதை அறிந்த முனிவன், அவனை எழுப்ப நினைந்தான்; உடனே தான் கற்ற மந்திரங்கள் சிலவற்றைக் கூறி, அச்சிறுவன் உடலில் தன் உயிரைப் புகச் செய்தான்; அச்சிறுவனின் உயிரைத் தன் உடலுக்குள் செல்லுமாறு செய்துவிட்டான். இறந்துகிடந்த சிறுவன் உடனே துள்ளிக் குதித்து எழுந்தான்; தந்தை தாயரைக் கண்டான்; மகிழ்ச்சியால் ஆடினான். தந்தையும் மகிழ்ந்தான். அதே சமயம் முனிவன் வருந்தி அழுதான்.

வேதாளம் மன்னனைப் பார்த்து, "மன்னனே, அச்சிறுவன் ஏன் மகிழ்ச்சியுடன் ஆடினான்? அம்முனிவன் அழுததற்குரிய காரணம் யாது?" என வினவியது.

இதைக் கேட்ட மன்னன் நகைத்து வேதாளத்தை நோக்கி, "முனிவனுடைய உயிர் முதுவுடலை விட்டுச் சிறுவன் உடலில் புகுந்ததால் அச்சிறுவன் களித்து ஆடினான். சிறுவன் உயிர் முதுவுடலைச் சென்றடைந்தமையால் முதியவன் அழுதான்" என்று விடை கூறினான். அதுகேட்ட வேதாளம் மன்னனை விட்டுச் சென்று பழையபடி மரத்தின்மீது ஏறிக்கொண்டது.

---

## 24. முறை தெரியாக் கதை

மன்னன் ஒவ்வொரு முறையும் வேதாளம் இங்ஙனம் ஓடி மரத்தில் ஏறுகிறதே என்று எண்ணி மனம் வருந்தினன் ; மரத்தின்மீதேறி அதைக் கட்டிப் பிடித்து இழுத்துவந்தான். அப்போது அது இருபத்து நான்காம் கதையைக் கூறியது.

தட்சிண தேசம் என்பது மருமலர்ச் சோலைகளும் வாவிகளும் வயல்களும் சூழ்ந்தது ; திருமகள் இருந்து வாழும் சிறப்புடையது. அத்தேசத்தில் நெடிய மதிலையுடைய காமபுரம் என்ற ஊரைத் தருமன் என்னும் அரசன் ஆண்டுவந்தான். அம்மன்னனின் மனைவி சந்திரவதனை என்பவள். அவள் மிக்க அழகுடையவள். அவர்களுக்கு இந்திராணியை யொத்த வனப்புடைய மகள் ஒருத்தி இருந்தாள். அப்பெண்ணின் பெயர் இலாவணபதி என்பதாகும்.

நாட்டில் நால்வகைப் படைகளும் தத்தம் பணிகளைச் செவ்வனே செய்துவந்தன. யானை, தேர், புரவி, காலாட் படை வீரர்களும், அமைச்சரும் பிறரும் மருங்கிருக்க அரசன் நாட்டை நன்கு ஆண்டுவந்தான். இங்ஙனம் ஆண்டுவந்த அரசன் நன்னெறியிலிருந்து விலகியமையால் அரச போகம் சூரியனைக் கண்டு நீங்கும் பனிபோல் அவனை விட்டு நீங்கியது.

உடலினை விட்டு நீங்கும் உயிர் போலவும், பூவின் மடலினை விட்டு நீங்கும் மணம் போலவும், கடலினை விட்டு விலகும் கப்பல் போலவும் படைகள் அவனை விட்டு நீங்கின. இளமைக் காலத்தில் ஒதுங்கி இருந்த பிணிகள் முதுமைக் காலத்தில் வீறு கொண்டு எழுந்து உடலை வாட்டும். அதுபோல் அரசன் சேனையுடன் இருந்தபோது அவனுடைய பகைவர் அடங்கியிருந்தனர்; சேனைகள் அவனை விட்டு நீங்கியதும் நகரைக் கைப்பற்றினர். நாடு அந்நியர் ஆட்சிக்கு உட்பட்டமையால், மன்னன் நிலைமை தாழ்வுற்றது. மன்னன் உண்ணும் உணவுக்கும் உடுக்கும் உடைக்கும் வழி இன்றித் துயருற்றான்.

இந்நிலையில் அரசன் தன் துணைவியை நோக்கி, "நாம் வறுமை யடைந்தோம். பிழைக்க வழியில்லை. நாம் நம் நாட்டில் விறகினை வெட்டி விற்றால் நாட்டு மக்கள் நம்மை எள்ளி நகையாடுவர். ஆதலால் வேற்று நாட்டுக்குச் சென்று பணி

செய்து உண்டு வாழ்வோம்" என உரைத்தான். அரசனது தவறான ஒழுக்கம் அவனை மட்டுமன்றி அவன் மனைவி மக்களின் நல் வாழ்வையும் இங்ஙனம் அழித்துவிட்டது.

அரசி மன்னன் கூற்றை ஏற்றுக்கொண்டாள். அதன் படி மன்னனும் தேவியும் மகளும் வேற்று நாடு நோக்கிச் சென்றனர். செல்லும் வழியில் ஒரு காட்டில் அம்மூவரையும் கள்வர் வளைத்துக்கொண்டனர். அக்கள்வர் அவர்களிடம் வேறு பொருள் இல்லாமை கண்டு, அவர்கள் அணிந்திருந்த ஆடைகளைப் பறிக்கத் துணிந்தனர். மன்னன் அவர்கள் செயலை எதிர்த்தான். அப்போது ஏற்பட்ட போரில் மன்னன் கொலையுண்டான். கள்வர் அத்துடன் அமையாது, அரசியும் அவள் மகளும் உடுத்திருந்த உடைகளைப் பறித்துக் கொண்டு ஓடிவிட்டனர்.

அரசியும் அவள் மகளும் குறையாடையை உடுத்துக் கொண்டு கள்வரிடமிருந்து தப்பிப் பிழைத்து ஒரு காட்டு வழியே சென்றனர்.

அங்ஙனம் சென்றபொழுது, அரசி, தான் மன்னன் மனைவியாயிருந்த நிலையையும், வாழ்ந்த வாழ்க்கையையும், பகைவர் நாட்டைக் கைப்பற்றியமையால் ஏற்பட்ட இழிநிலையையும், வழியில் கள்வரால் மன்னன் இறந்ததையும் எண்ணி வருந்தினாள்; தங்கள் விதியை நொந்தபடி நடந்து அங்கிருந்த சோலையொன்றில் தன் மகளுடன் தங்கினாள்.

அரசியும் அவள் மகளும் சென்ற வழியில், சண்டசிங்கன் என்ற அரசனும் அவன் மகனும் தம் பரிவாரங்களுடன் காட்டில் வேட்டையாட வந்தனர்; வந்தவர் அம்மகளிர் சென்ற காலடிச் சுவடுகளைக் கண்டனர்; அக் காலடிச் சுவடுகள் சிறியவையாயும் பெரியவையாயும் இருவகையாக இருக்கக் கண்டனர். மகன் அப்பொழுது தந்தையை நோக்கி, "சிறிய காலடி உடையவளை நான் மணப்பேன். பெரிய காலடி உடையவளை நீ மணந்துகொள்" என்றான். தந்தையும் அக் கருத்தை ஏற்றான். பின்பு இருவரும் அந்த அடிச் சுவடுகளைப் பின் பற்றி, அவற்றுக்குரியாரைக் காணச் சென்றனர்.

இவ்வாறு முடிவு செய்துகொண்டு சென்ற தந்தையும் மைந்தனும் அரசியையும் அவள் மகளையும் கண்டனர். சிறிய பாதச் சுவடு தாயினுடையதாயும் பெரிய பாதச்சுவடு மகளுடைய

தாயும் இருத்தலை அறிந்தனர்; முன் ஏற்பாட்டின்படி, சிறிய பாதச் சுவட்டுக்குரிய அரசியை மகன் ஏற்றுக்கொண்டான். பெரிய பாதச்சுவட்டுக்குரிய மகளைத் தந்தை தன் மனைவியாக்கிக் கொண்டான். பின்னர் நால்வரும் அரண்மனைக்குச் சென்றனர். அரசியும் அவள் மகளும் தத்தம் கணவருடன் இனிது வாழ்ந்தனர்.

இங்ஙனம் மகிழ்ச்சியுடன் வாழ்ந்துவரும் நாளில் அவர்கள் இருவரும் பிள்ளைகளைப் பெற்றனர். "இங்ஙனம் பிறந்த பிள்ளைகளுக்குள் என்ன முறை அமையும்? அவர்கள் என்ன முறையில் ஒருவரை யொருவர் அழைத்துக்கொள்வர்" என வேதாளம் மன்னனை வினவியது.

அது இவ்வாறு கேட்டவுடன் வேந்தன் யாது கூறுவதென்று அறியாமல் மயங்கினன். அரசியும் அவள் மகளும் தங்கள் கண்முன் தெரிவதற்கு முன்பே இம்மாதிரி ஒப்பந்தம் செய்துகொண்டு அதற்கேற்பச் சண்டசிங்கனும் அவன் மகனும் மணம் செய்துகொண்ட முறையை மனத்தாலும் நினைக்க முடியாமல் மன்னன் திகைப்புற்றான்.

மன்னன் ஒன்றும் கூறமுடியாமல் தயங்குவதைக் கண்ட வேதாளம் அவனை நோக்கி, "ஆண்மையிலும், வழக்கினை ஆராய்ந்து அறியும் திறமையிலும், மிகுந்த அறிவுடைமையிலும் உனக்கு ஒப்பாகக் கூடியவர் இவ்வுலகில் வேறு யாருமிலர். முனிவராலும் தேவராலும் இம்முறைவைப்பைக் கூற முடியாது. எனவே, அவர்களால் முடியாத ஒன்று உன்னாலும் முடியாது", என்று இறுதியாகக் கூறியது; பின்பு வழக்கம் போல் ஓடி முருக்க மரத்தில் ஏறிக்கொண்டது.

---

## 25. விக்கிரம கேசரி கதை

மன்னன் மறுபடியும் வேதாளத்தைக் கட்டிக் கொண்டு வந்தபோது, வேதாளம் அவன் தன்மைகளைப் பாராட்டியது; தன்னைப் புவியின்மீது விடுமாறு வேண்டினது; இனிமேல் நிகழப்போவது என்ன என்பதை அவனிடம் கூறத் தொடங்கியது:

"மிக்க தவத்துடன் வேள்விசெய்யும் இம்முனிவன் வித்தியாதரர் பதத்தை அடைவதற்காக என்னைக் கைப்பற்ற விரும்புகிறான்; அதனால்தான் என்னைப் பிடித்து வரும்படி உன்னை ஏவினான். நாம் அங்குச் சென்றவுடன் முனிவன் நம்மை எதிர்கொண்டு உபசார வார்த்தைகள் பேசுவான்; உன்னால்தான் தன் வேள்வி நிறைவேறியது என்று அவன் ஆதரவுடன் பேசுவான்; உன்னை ஒரு குளத்தில் மூழ்கிவருமாறு கூறுவான்; பின்னர் வேள்வியை வணங்கச் சொல்வான்; அங்ஙனம் நீ வணங்கும்போது உன்னைப் பலியிட நினைக்கின்றான். இங்ஙனம் உன்னைப் பலிகொடுத்து அவன் வேள்வியை முடித்துக் கொண்டால், உடனே பிரமன் திருமால் சிவன் ஆகிய தேவர்கள் தோன்றி அவனுக்கு உயர்பதவி தருவார்கள். அதன் பயனாக அவன் என் தோள்மீது அமர்ந்து பதினான்கு உலகங்களிலும் சுற்றுவான். இதற்காகவே அவன் வேள்வி செய்கிறான்" என்றது.

"தீயவனாகிய அம்முனிவன் செய்யும் சூழ்ச்சியில் சிக்கி நீ உன் உயிரை இழக்காமல் இவ்வுலகத்தைத் தொடர்ந்து ஆள்வாயாக! இனி நீ நடந்துகொள்ள வேண்டும் முறையைக்கேள்: முனிவன் உன்னைக் குளத்தில் மூழ்கச் சொல்வான். நீ 'மூழ்கும் முறை அறியேன்' என்று சொல்லிவிடு. உடனே அவன் மூழ்கிக் காட்டுவான்; பின்பு நீ மூழ்கு; மூழ்கி வந்தவுடன் உன்னைத் தன் வேள்வியை வணங்கச் சொல்வான். நீ தெரியாது என உரைப்பின், அவன் வணங்கிக்காட்டுவான். நீ அப்போது வலிய வாளைக்கொண்டு அவன் தலையை வெட்டி வீழ்த்து; அவன் அடைய விரும்பும் உயர்பதம் உனக்குக் கிடைக்கும்" என வேதாளம் எடுத்துக் கூறியது.

தன்னுடன் வரமாட்டேன் என்று கூறி அடிக்கடி மரத்தில் ஏறிக்கொண்ட வேதாளம் இம்முறை அவ்வாறு செய்யாமல், இனிமேல் நடக்கப்போகும் காரியங்களைக் குறிக்கின்றதே என மன்னன் வியந்தான்; முனிவன் சொற்படி நடந்தால் தனக்கு அழிவு நேரும் என்பதனை உணர்ந்தான்; அவன்மீது கொண்ட மதிப்பை விட்டுவிட்டான்; உண்மையை உணரத் தொடங்கினான். அவன் வேதாளத்துடன் நெருங்கிய உறவி

னன்போல் பேசிக்கொண்டு வேள்விக்குழிக்கு முன்வந்து சேர்ந்தான்.

இவ்வாறு முன்னே மன்னன் வர, அவன் பின்னே வேதாளம் வருவதைக்கண்ட முனிவன் மகிழ்ந்தான். அவன் மன்னனைப் பலவாறு பாராட்டிப் புகழ்ந்த பின்னர், வேள்வியை முடிக்க முயன்றான். அவன் சுடுகாட்டில் பிணச்சாம்பலைக் கொண்டு கோலமிட்டான்; நெருப்பில் வேகாத பிணத்தின் சதையை அகலாக வைத்து இரத்தத்தை நெய்யாகக் கொண்டு விளக்கு ஏற்றினான்; பிணத்தின்மீது இருந்து கொண்டு வேள்விக்குரிய ஆகுதியைக் கொடுத்தான். இவ்வாறு முனிவன் மூன்று சாமம் வேள்வி செய்தான். நான்காம் சாமத்தில் வேதாளம் அவன்முன் வந்து நின்றது. அதனைக்கண்ட பின்னர் முனிவன், "உன்னால்தான் இந்த வேள்வி சிறப்புற நடந்தேறியது" என வேந்தனைப் பாராட்டினான்; மன்னனைப் புனலில் மூழ்கச் சொன்னான்.

முனிவன் புனலில் மூழ்குமாறு கூறியவுடன் அரசன் வேதாளம் கூறியது உண்மை என்பதை உணர்ந்து, அதன் அறிவுரைப்படி நடக்கலானான்; "புனலில் மூழ்குவது எப்படி என்பதை நானறியேன்" என்று முனிவனிடம் கூறினான். உடனே முனிவன் எழுந்து நீரில் மூழ்கி, அரசனை நோக்கி, "இப்படித்தான் முழுகவேண்டும்" என உரைத்தான். அரசனும் அவன் சொன்னபடியே மூழ்கி வந்தான். பின்னர் முனிவன் வேள்வியை விழுந்து வணங்குமாறு கூறினான். மன்னன், "அதனையும் அறியேன்" என்றான். அவனுக்கு வணங்கும் முறையை அறிவிக்க வேண்டி, முனிவன் விழுந்து வணங்கினான். அச்சமயம் 'தன்னைக் கொல்ல வந்த பசுவையும் கொல்வது முறையாகும்' என்று பெரியோர் கூறிய விதியினை வேந்தன் மனத்தில் எண்ணினான்; அதனால் தன்னைக் கொல்லச் சூழ்ச்சி செய்த முனிவனை வெட்டி அவனது மார்பினைப் பிளந்தான்; அவனது ஈரலை இரத்தத்துடன் எடுத்துப் பலியிட்டான். மன்னன் இங்ஙனம் வேதாளம் சொன்னபடியெல்லாம் செய்து வேள்வியை முடித்தான்.

அவ்வளவில் தேவர் பூமழை பொழிந்தனர். சிவபெருமான் ஆனேறுமீதும், திருமால் கருடன்மீதும், இந்திரன் ஐராவதத்

தின்மீதும், பிரமன் அன்னத்தின்மீதும் அங்குத் தோன்றினர். ஏனைய தேவர்களும் அங்கு வந்தனர். அரசன் அனைவரையும் பார்த்து மிக்க மகிழ்ச்சியுடன் நின்றான்.

இங்ஙனம் மும்மூர்த்திகள், இந்திரன் முதலியோரைக்கண்ட காவலன் உடல் பூரித்து, மெய்சிலிர்த்து, விழிநீர் சோர, மிகுந்த மகிழ்ச்சியுடன் அவர்களை வணங்கினான்; அலகையைத் துதித்தான்; வேள்வியைப் பார்த்தான்; தன்னைப்போல் பேறு பெற்றவர்கள் இவ்வுலகில் வேறு யாருமில்லை எனத் தன்னைப் பாராட்டிக்கொண்டான்; சிவபெருமான் காட்சி கொடுத்ததை எண்ணினான். காலனை உதைத்த தாளும், கையினில் மழுவும் மானும், சூலமும், கண்கள் மூன்றும் உடைய சிவபெருமான், உமாதேவியை இடப்பாகத்தில் கொண்டு காட்சியளித்தான். ஈசனைக் கண்ட வேந்தன் அப் பெருமானைப் பலவாறு போற்றி வணங்கினான்.

வேந்தன் அத்துடன் அமையாது, அங்கு வந்திருந்த மால், அயன் முதலான தேவர்கள் அனைவரையும் வணங்கினான். அவனுடைய ஒழுக்கம், அன்பு, பணிவு முதலியவற்றை நோக்கிய சிவபெருமான் அவனுக்கு அருள் செய்தான். "பொன் போன்ற உயர்ந்த குணமும் மிக்க புகழும் வாய்மையும் பழுதில்லா மொழியும் உடையவர் உன்னைப் போல் உலகில் வேறு யாரேனுமுண்டோ? எனவே, நிருபனே, நீ வேண்டும் வரம் யாது?" என்று ஈசன் அரசனை வினவினான். இதனைக்கேட்ட வேந்தன் இறைவனை நோக்கி, "உயர் தவ ஞானத்தில் உயர்ந்த முனிவரும் எளிதில் அணுக முடியாத உன்னை நான் கண்டேன்; உன் பதம் பணிந்தேன். நான் செய்த புண்ணியத்தின் பயனால் அயனையும் திருமாலையும் கண்டேன். எனவே, இவற்றினும் மேலாக நான் விரும்பக் கூடியது ஒன்றுமே யில்லை," என்று பணிவுடன் பகர்ந்தான்.

அரசன் கூற்றைக் கேட்டவுடன் அயன், மால் முதலிய விண்ணவர் அவனைப் புகழ்ந்து நல் வரங்கள் பல ஈந்தனர். சிவபெருமான் வேதாளத்தை நோக்கி, "இவ்வரசனுக்குப் பழமையான உலகங்களைக் காட்டி அழைத்துவா," என ஆணையிட்டான். பின்னர் அப்பெருமான், தூய்மை மிகுந்த முனிவர் போற்ற, சுரரெல்லாம் ஒருங்கு திரண்டு சூழ, மாமறைகள் முழங்கச் சிவகணத்தவர்கள் வாழ்த்தச் சிவலோகம் சேர்ந்தான்.

இப்படிச் சென்ற இறைவனை வேந்தன் கண்களை இமைக்காமல் கண்டு, குவித்த கரங்களை நீக்காமல் வணங்கி, அண்டரைத் துதித்து வாழ்த்தி, அன்பினால் பணிந்து போற்றினான். "பண்டு செய்த தவத்தின் பயனே இன்று நாம் பரமனைக் கண்டு பணிந்தோம்" என வேந்தன் கருதி இறும்பூதெய்தினான்.

பின்பு வேந்தன் வேதாளத்தை நோக்கி, "தேவர்களையும் மும்மூர்த்திகளையும் யான் கண்டு வழிபடும்படி செய்த பெருமை உனக்கே உரியது. உன் சொற்படி நடந்ததால்தான் இப்பேறு எனக்குக் கிடைத்தது" என்று கூறி, வேதாளத்தைத் தழுவிக்கொண்டான். உடனே வேதாளம் வேந்தனை நோக்கி, "ஒவ்வொரு கதைக்கும் நீ விடை கூறியவுடன் நான் உன்னைவிட்டு ஓடி மரக்கிளையில் தொங்கினேன். நீ மீண்டும் வந்து என்னைப் பிடித்துத் தூக்கிச் சென்றாய். நான் இங்ஙனம் பல முறை உனக்குத் துன்பத்தைக் கொடுத்தேன். நீ அதனைப் பொறுத்தருள்," என்று கூறி வேந்தனைத் தழுவிக்கொண்டது.

வேதாளம் சிவபெருமான் ஆணைப்படி வேந்தனைத் தன் தோள்மீது எடுத்துக்கொண்டு ஈரேழு உலகங்களையும் சுற்றி வரப் புறப்பட்டது. விக்கிரமாதித்தன் பல உலகங்களைச் சுற்றினான்; ஒவ்வோர் உலகத்திலுமுள்ள அரியனவற்றை எல்லாம் வேதாளம் காட்ட, வேந்தன் பார்த்துக்கொண்டே வந்து இறுதியில் பைந்தமிழ் புகழும் பண்டைப் பதிட்ட மாநகரம் வந்து சேர்ந்தான். இது வேந்தனின் தலைநகரமாகும்.

இவ்வாறு தலைநகரில் வேந்தனைக் கொணர்ந்து சேர்த்த வேதாளம், அவனைப் பல்லாண்டு வாழ்ந்து இப்புவியினைப் புரந்து பின்னர்ச் சிவலோகத்தை அடையுமாறு வாழ்த்தித் தன்னைப் பற்றிச் சில கூறத் தொடங்கியது. சிவன் கோவில் குருக்களாக இருந்த தான் ஈசனின் சாபத்தால் வேதாளமான வரலாற்றை அது வேந்தனுக்கு உரைத்தது. பின்னர் வேதாளம், "என்னுடைய இக்கதைகளைப் படிப்பவரும் பிறர்க்கு அறிவிப்பவரும் நலம் பெறுவர்" என்று உரைத்து, வேந்தனைப் புகழ்ந்தது. வேதாளம், "என்னுடை வினைப்பயன் நீங்கியமையால் இனி நான் செல்கின்றேன். வள்ளலாகிய நீ பதினான்கு உலகங்களிலும் வாழ்ந்து, நாத தத்துவத்திற்கு மேற்பட்ட சிவலோக பதவியை அடைவாய்," எனவுரைத்து வேந்தனிடம் விடை பெற்றது.

---

# வேதாளக் கதை

## அவையடக்கம்

1. சீரி தாகவித் தேசத்திற் றிங்கண்மும்
மாரி பெய்யவே மறைவி ளங்கவே
யாரும் வாழ்க வறங்கள் தழைத்திடப்
பாரி லிக்கதை பாடலுற் றுமரோ.

2. பெருக்க மாகிய தோர்பெருங் காற்றினை
உரக்க வாயினி லூதுகை போலவே
தருக்க நாவலர் சந்நிதி தன்னில்யான்
பொறுக்கெ னச்சொலும் புன்சொலு மாமரோ.

3. சீரு டன்தளை யாவுஞ் சிதைகினும்
பாரில் நாவலர் பன்ன வழக்கதோ
பேரு மிங்கிது பேய்க்கதை யாகலால்
யாரு மிங்கி தறிந்திக ழார்களே.

4. புவிக்கு ளெண்புதுப் பாகைமந் திராபதி
கவிக்க ளஞ்சியன் சொல்லுங் கதையிது
நவைச்சொல் லாயினு நன்றல வாயினு
மெவர்க்குங் கேட்க இயம்புவென் புன்சொலே.

## அருஞ்சொற் பொருள்

1. திங்கள் - மாதம், மாரி - மழை. மறை - வேதம். அறம் - நல்லது. பார் - உலகம்.

3. பன்ன - சொல்ல. இகழார் - குறைகூறுர்.

4. புதுப்பாகை - இந்நூலாசிரியரின் ஊர். கவிக்களஞ்சியன் - நூலாசிரியரின் விருதுப்பெயர்- நவை - குற்றம். புன்சொல் - அற்பமாகிய சொல்.

## நூற் செய்தி

### கயிலாய நிகழ்ச்சி

### வேதியன் வேதாளமான வரலாறு

5. வேத வோசை மிகுந்து முழங்கவே
கீத யாழுடன் கின்னரர் பாடவே
பூத வேத கணம்புடை சூழவே
ஆதி யான்கயி லாயத்தி ருந்தனன்.

6. செய்ய மாலயன் தேவ ரிருடிகள்
துய்ய மாதவர் தும்புரு நாரதர்
கைகள் கூப்பிக் கழலிணை போற்றவே
தையல் பாகன் இருந்த சமயமே.

7. நடன மேபுரி நாதனும் அற்றைநா
ளிடம தாக விருந்த சபைதனில்
கடவு ளோரைக் கருணையி னோக்கியே
விடைகொ டுக்க விரைந்தவ ரேகினர்.

8. ஆதி யந்தமில் லாத வரும்பொருள்
வேத நாயகன் வெள்ளிப் பொருப்பிலே
பேதை பாகன் பிரதாபச மோனமாய்ப்
பாதி நேரம் பராக்கற் றிருந்தனன்.

*9. மைக்க ணாளெழு ஞாலமு மீன்றதாய்
முக்க ணார்செம் முகந்தனை நோக்கியே
யக்க ணந்தனில் வேளைய றிந்துதான்
தக்க தோர்மொழி தானுரை செய்தனள்.

10. கார ணாகைலைக் கியானவி னோதசம்
பூர ணாநற் பொழுதது போகவே
பாரில் நாவலர் பண்டறி யாக்கதை
யார ணாசொல் லறிந்தில னென்றனள்.

11. சங்க ரன்சிவ காம சவுந்தரி
யங்கு ரைத்தசொல் லாமென வெண்ணியே
மங்கை யன்பில் மனங்களி கூர்ந்திடக்
கங்குல் முற்றக் கதைவிரித் தானரோ.

12. பண்டு பாரில் பலரறி யாததாய்
உண்டு நல்லதிங் கோர்கதை கேளென

* இப்பாடல் வேறு ஓர் ஏட்டில் இல்லை.

அண்டர் போற்றும் அரனுமை யாளுக்குக்
கண்ட நீதிக் கதைசொலும் போதிலே,

13. பூசை தான்பண்ணிப் போனபின் கோவிலுள்
வாசல் முன்னில் மறைவிலோ ரந்தணன்
ஈசனு ருமைக் கோத விடுங்கதை
ஆசை யால்நின் றடைவுடன் கேட்டனன்.

14. மூண்ட தோர்கதை முற்றிய போதினில்
மீண்டு வேதியன் வீட்டினில் வந்துதான்
ஆண்ட தோர்மனை யாளுட னக்கதை
பூண்ட னேகம் பொருள்விரித் தோதுவான்.

15. ஓது மக்கதை யொன்றொன் றின்பொருள்
பேதி யாமலிப் பேதையும் கேட்டபின்
ஏது மோர்பின்னு மெண்ணமில் லாமலே
மாது மற்ற மக்ளிர்க்குக் கூறினள்.

16. நாரி எங்கும் நவின்ற பொருளெல்லாம்
சேர வேயுமை சேர்ந்து சிவனுடன்
யாரு மிங்கறி யாரென் றீ ரிக்கதை
பாரி லெங்கும் பகர்வது மேதென்றாள்.

17. யாரு லாதிவை யாரு மோர்கிலார்
தானென வானசந் தேக மாகியே
மான னர்க்கு வருமிங்கி தேனென
ஞான நீதியால் நாடி யறிந்தனன்.

18. அந்த ணன்பொருட் டாலறிந் தானென்
முந்தி யேசிவன் மூண்டெழு கோபமாய்
வந்து பூசை செய்மறை யோன்தனைத்
தந்த சாபம் பிடியெனச் சாற்றினன்.

19. சாற்றி யேகதை தான்சொலக் கேட்டபின்
தூற்றி யெங்கணும் சொன்னப ராதத்தால்
ஏற்ற பேயுரு வெய்தி வனத்திலே
வீற்றி ருந்திடு வேதிய போவென்றான்.

20. அன்று தானவ் வகலிகை யாள்தனை
கன்றி யிட்ட கவுதமன் சாபம்போல்
நின்று வேதியன் நெஞ்சினி லெண்ணியே
என்று போம்சிவ னேயென் றிறைஞ்சினன்.

21. மறைவல் லோன்மன மஞ்சி வணங்கிடச்
சருவ சீவ தயாபர ஞனவன்
சருவ சீற்றம்விட் டேகித் தயவுடன்
பெறுவ தோர்மொழி பேசலுற் றனரோ.

22. வேந்த ருக்குளோர் விக்கிரம கேசனைச்
சாந்த சீலன் தனியிர வில்விட
ஆய்ந்த விக்கதை யத்தனை யுஞ்சொல
ஈந்த சாபம்விட் டெய்துவை யீங்கென்றான்.

23. மனையி லாள்சொலால் வாடித் தீர்ந்திடும்
வினையில் லையென வேதிய னெண்ணியே
யனைய போதி லலகை யுருவமாய்த்
தனியே ஓர்வனச் சார்பி லெய்தினன்.

24. மாறி லாமல் வளர்ந்த முருக்கின்மேல்
வீறி லாமல் மெலிந்துவே தாளமாய்த்
தேறி லாசிக்கி யேநெடு நாள்வரை
யீறி லாம லிருக்கலுற் றனரோ.

அருஞ்சொற்பொருள்

5. ஆதியான் - முதற் கடவுள், சிவபெருமான்.

6. அயன் - பிரமன். துய்ய - தூய்மையான. கழல் இணை - இரண்டு பாதங்கள். தையல் - உமாதேவி.

7. அற்றை நாள் - அந்நாள். கடவுளோர் - தேவர்.

8. பொருப்பு - மலை. பேதை - உமாதேவி.

9. மைக்கணாள் - உமாதேவி. கணம் - நேரம்.

10. விநோதம் - புதுமை. சம்பூரண - நிறைவு பெற்றவனே.

12. பண்டு - முற்காலம். அண்டர் - தேவர்.

15. பேதை - அர்ச்சகன் மனைவி.

16. நாரி - அர்ச்சகன் மனைவி. நவின்ற - சொன்ன.

18. சாற்றி - சொல்லி. அந்தணன் – சிவன் உமாதேவியிடம் கூறிய வேதாளக்கதையை மறைந்திருந்து கேட்ட பிராமணன்.

19. அபராதம் - குற்றம். வேதிய - பிராமணனே.

20. இறைஞ்சினன் - தொழுதான்.

21. சருவசீவ தயாபரன் - எல்லா உயிர்களிடத்தும் இரக்கம் உடையவன்.

22. விக்கிரமகேசன் - விக்கிரமாதித்தன்.

23. அலகை - பேய்.

24. வேதாளம் - பூதம். ஈறு - முடிவு.

## வரலாறு

முருக வணக்கம்

1. சிந்துவிற் றிசைக ளெங்குஞ் செப்புமீ காமன் போலும்
அந்தணர் தமக்கு நல்லோர் அறநெறி யுரை..........லும்
வந்துமுன் னடந்தென் னுவில் வண்டமிழ் திருத்த வேணும்
கந்தனே யுனைத்து திப்பேன் கதைக்கொரு விருத்தந்
[தானே.

2. புத்தியி னுலீ ரேழு புவனமும் படைத்த நாளில்
இத்தலந் தன்னில் முன்னே யெழில்பெற வலங்க ரித்துப்
பத்தியின் வைக்கை யாலே பதிட்டமா நகர மென்னும்
மெத்தவே யுலகிற் பேருய் விளங்குமெய்ப்
[பதியொன் றுண்டே.

3. மாடகூ டங்கள் வேறு மணிமதில் மண்ட பங்கள்
மேடைகள் கோபு ரந்தேர் வீதிகள் நவம தாகி
நீடுகண் காட்சி யாலே நிலமகள் போல்பொன் னுடல்
பாடலே நிறைந்து மேவும் பதிட்டமா நகர மாதோ.

4. வாய்த்தவந் நகரை யாளும் வழிவழி மன்னர் தம்மில்
கீர்த்தியா பரண விக்ரம கேசரி யொருவன் தோன்றிச்
சீர்த்தியாய் மண்ட லீகர் திறையிடக் குறைவில் லாமல்
நாற்றிசை யெங்குஞ் செங்கோல் நடத்தியே வாழு நாளில்.

5. திண்டிறல் மன்னர் சூழத் தெரிவையர் கவரி வீசத்
தண்டமி ழோர்கள் போற்றத் தனிக்குடை மேனி ழற்ற
அண்டர்கோ னிவனே யென்ன வரியணை மீதி லேயோர்
மண்டபந் தன்னின் மேவி மன்னன்வீற் றிருக்குங் காலை.

மாதுளங்கனிகள்

6. ஒருகையில் பாய்சு ருட்டி உயர்தவ வேட மாகிப்
பெருகிய ஞான முற்றிப் பீலியும் பிரம்பும் பற்றி
அருகரில் சாந்த சீலன் அரசனைத் தினமும் காண
வருகைநாள் தோறும் ஆங்கோர் மாதுளங் கனியை யீவான்.

7. ஆண்டுபத் தாக வேதான் அரசனை அருகன் வந்து
காண்டலு மற்றங் கோர்நாள் கனியளித் தகன்ற பின்பு

தீண்டியே அரச னுந்தன் சிறுவன்கைக் கொடுக்க மந்தி
தாண்டியே பறித்துக் கொண்டு சடக்கெனக் கடித்த
[தன்றே.

8. கடித்தவக் கனியின் உள்ளே கனலென ரத்தி னங்கள்
கடித்திடச் சிதறுங் காலை யவற்றினை யரசன் பார்த்து
அடுத்தவுக் கிரா்ணக் காவ லாளரை யழைத்து முன்னாள்
பிடித்துள கனிகள் எல்லாம் பிறபடப் போடு மென்றான்.

9. அந்தமா காவ லாளர் அரசனை
யருகன் காண
வந்தநாள் முதலா யுள்ள மாதுளங்
கனிகள் எல்லாம்
தந்துமுன் வைக்க மன்னன் சடக்கென
உடைத்துப் பார்த்து
முந்தியே கூவை செய்து முகமலர்ந்
தனேகஞ் சொன்னன்.

10. காவலன் காவ லோரைக் கனக்கவே மகிழ்ந்து காவல்
மாவலீ ரென்று ரத்தின மணிகளத் தனையும் ஈந்தான்
தேவர்தே வனைப்போ லத்தான் சிறந்துபத் தாண்டு நம்பால்
மேவிய வருகன் தன்னை விசாரித்தோ மில்லை யென்றான்.

முனிவனும் மன்னனும்

11. மற்றைநாள் சாந்த சீலன் மாதுளங்
கனியொன் றேந்தி
கொற்றவன் திருமுன் கையில் கொடுத்தெதிர்
நிற்கக் கண்டு
உற்றகா ரியமே தென்பா லுரையுமென்
றரசன் கேட்கக்
கற்றநா வலர்போல் வாழ்த்திக் காரணம்
உரைப்ப தானன்.

12. வாழ்வினல் உயர்ந்த மன்ன மயானத்தி னருகே ரத்தில்
தாழ்விலா வமர பட்சச் சதுர்த்தசி யதனில் நீயென்
வேள்வியைக் காப்ப தாக மேவிட வேணு மென்றான்
கேள்வியா லுயர்ந்த விக்ரம கேசரி இசைந்தோ மென்றான்.

13. அருகன் இவ் வாறு கூறி யரசன்பால் விடைகொண் டேகி
வருகின்றே மென்று பேசி வந்தநா ளவதி தன்னில்
உருகிமஞ் சனநீ ராடி உயர்தலை மயிரைப் பின்னிக்
கருகுமோர் கச்சை கட்டிக் கையில்வா ளெடுத்துக் கொண்
[டான்.

14. சக்ரவா ளத்தை யெல்லாந் தனியொரு குடைக்கீழ் ஆளும்
விக்ரம கேசன் றானும் இருள்நடு நேரந் தன்னில்
நக்ரக மாகப் பூண்ட நவமணி விளக்கஞ் செய்ய
உக்ரம பாகத் தோடு மொருவனாய் வருவ தானான்.

15. தருக்குடன் தன்னெஞ் சந்தான் தனக்கொரு
துணைய தாகப்
பொருக்கென மன்ன வன்றான் போந்திடும்
வழியி லேதான்
எருக்குடன் காரை சூரை நேரையே
கள்ளி சூழும்
நெருக்கிய வனத்தி லேதான் நிகழ்ந்தமை
புகழ்ந்து சொல்வாம்.

16. பாயிருள் பரந்த காலம் பரவிய நடுநே ரத்தில்
நாய்களோ ரன் றென்றைத் தாக்க நரியினங் கூடிக் கூவப்
பேயினம் பாடை மீதிற் பிணங்களின் நிணங்கள் கௌவக்
காய்சின வெருகு பார்க்கக் கழுகினம் பாடி யாட.

17. வெளிக்குரல் முழக்கஞ் செய்ய வெய்யகூ கைகள் கூவக்
கொளிக்குறை பாடை மீதிற் குதித்துடன் மிதித்திட் டேறி
யொளித்துடன் பேயொ டாடு முருத்திர மூர்த்தி யென்னக்
களிப்புடன் மயானத் தூடு காவலன் கடந்து போனான்.

18. சாந்தசீ லன்தா னேறித் தம்பத்தின்
முகத்தி லெய்திக்
காந்தவே யோமம் பண்ணிக் கடுகியா
குதிய ளித்தே
ஆய்ந்தமந் திரங்கள் ஓத யரசனு
மிரவில் வேள்வி
வாய்ந்ததோர் வேளை தன்னில் மன்னனும்
வந்தே னென்றான்.

19. வந்தமன் னவனை நோக்கி வாய்மொழி
தவறு மன்னு
எந்தையே அரசர் கோவே யென்றுமா
தவன்றான் போற்றிச்
சிந்தனை முடிந்த தென்று தென்றிசைத்
தருவிற் றூங்கும்
அந்தவே தாளந் தன்னை யருகணுந்
தருக வென்றான்.

20. தக்கவே தாளந் தன்னைத் தரும்பொழு ததுதன் னோடே
யொக்கநீ பேசொ ணாது உயர்ந்ததோர் மவுன மாகிச்
சிக்கெனப் பிடித்துக் கொண்டு தீரனே தருதி யென்றான்
அக்கண நன்றென் றேதா னரசனும் விரைவிற் போனான்.

21. கொள்ளியொன் றங்கை யேந்திக் கூறிய நெறியை நாடி
யொள்ளிய கையில் வாளோ டொருவனு யிரவி லேகி
நள்ளிருள் நடுநே ரத்தில் நகைப்பவே தாளந் தன்னைத்
தெள்ளிய மனத்த ரான தீரரிற் றீரன் கண்டான்.

22. தோலுடன் எலும்பும் வற்றித் துவர்க்குட லுலர்ந்து
[கையும்
காலுறு நரம்புந் தேய்ந்து கயிறென நான்று நின்று
ஞாலமேற் றருமந் தன்னை நலிந்தபா விகளைப் போன்று
சாலவே தலைகீ ழாகத் தளர்ந்துவே தாளந் தூங்கும்.

மன்னனும் வேதாளமும்

23. அஞ்சுதல் இன்றி மன்னன் அணுகிவே தாளந் தன்னை
கிஞ்சுக மரத்தில் ஏறிக் கீழ்விழப் போடக் கண்டு
விஞ்சிய வீரத் தோடும் வேந்தனங் கிறங்கப் பேயும்
புன்சிரிப் புடனே மீண்டு போய்த்தரு வுற்ற தன்றே.

24. தருவினில் மீண்டு மேறிச்
சலித்துவே தாளந் தன்னை
விரைவுடன் முதுகிற் கட்டி
விசித்துக்கொண் டிறங்கி யேகும்
நிருபனைக் கண்டு சாபம்
நீங்குநா ளிதுவோ வென்று
பரிவுடன் வாய்தி றந்து
பசாசுமங் குசாவிக் கூறும்.

25. வழிதொலை யத்தான் வேண்டி மன்னனே
 விநோத மாகப்
பொழுதுபோக் குதலா லேயான் புகன்றிடுங்
 கதைகே ளென்னப்
பழுதிலா மன்னர் மன்னன் பசாசுசொல்
 விசாரச் சொல்லை
முழுதுமொன் றொழியா வண்ண மோனத்தாற்
 கேட்க லுற்றான்.

## அருஞ்சொற்பொருள்

1. மீகாமன் - கப்பலோட்டி.

2. பதிட்டமாநகரம் - ஓரூர்.

3. நவம் - புதிது.

4. கீர்த்தி - புகழ். சீர்த்தி - சிறப்பு. மண்டலீகர் - நாட்டின் உட்பிரிவாகிய மண்டலத் தலைவர்கள்.

5. திறல் - வலிமை. தெரிவையர் - பணிப் பெண்கள். தமிழோர் - தமிழ்ப்புலவர்கள், அரியணை - சிங்காதனம்.

6. சாந்தசீலன் - ஒரு முனிவன்.

7. அருகன்-சாந்தசீலனைக் குறிக்கும்சொல். மந்தி-பெண்குரங்கு.

8. உக்கிராணம் - பொருள்கள் வைக்கும் அறை.

9. முந்தி - தன் எதிரில், கூவை - குவியல்.

12. கேள்வி - கேள்வியறிவு. இசைந்தோம் - சம்மதித்தோம்.

14. சக்ரவாளம் - உலகம்.

15. தருக்கு - பெருமிதம். பேர்ந்திடும் - வரும். நிகழ்ந்தமை - நடந்தமை.

16. வெருகு - காட்டுப்பூனை.

17. கூகை - கோட்டான். கொளி - கொள்ளி. உருத்திர மூர்த்தி - சிவன்.

18. ஆகுதி - அக்கினியில் மந்திரபூர்வமாகச் செய்யும் ஓமம். வேள்வி - யாகம்.

19. வாய்மொழி - சொன்ன சொல்.

21. நெறி - வழி. ஒள்ளிய - ஒளிபொருந்திய.

22. ஞாலம் - உலகம். நலிந்த - கெடுத்த. சால - மிக.

23. அணுகி - நெருங்கி. கிஞ்சுகம் - முருக்க மரம்.

24. விசித்து - இழுத்து. நிருபன் - அரசன். பரிவு - அன்பு. உசாவி - கேட்டு.

25. மோனம் - வாய்திறவாமை.

---

## 1. பதுமாபதி கதை

---

முருக வணக்கம்

1. ஏறுமயி லும்பன் னிரண்டுடைய தோளும்
சீறுமதி சூரனுடல் சிந்தியிடு வேலும்
மார்பிறுக வள்ளியை மணந்ததிரு மார்பும்
ஆறுமுக மும்பதமு மன்பில்மற வேனே.

வேதாளம் விளம்பிய முதற் கதை

2. அறிவுடைய னுதாரகுண மாண்மைநெறி நீதித்
திறமுடைய விக்கிரம கேசரி தனைத்தான்
உறவுபணி யேயலகை யோர்பொழுது போக
முறைமைதவ றுமலொரு முதற்கதை யுரைக்கும்.

3. கஞ்சமலர் வாவிகளும் கங்கைநதி யின்பால்
மஞ்சுதவழ் கோபுரமு மாமதிலு மேவிச்
செஞ்சொல்மறை யோரொடு சிவாலய நிறைந்தே
தஞ்சநகர் என்றோர்பதி தானுளது மன்னு.

4. அப்பதியில் மேவியுல காளுமர சன்பேர்
தப்புரையி லாதபிர தானமகு டன்றான்
விற்பனவி தாரகுண வேந்தன்மனை யாள்பேர்
சொற்பிரபை பெற்றசுதன் வச்சிரமகு டன்றான்.

5. கத்தனுயர் சட்டமுள காரியப்பிர தாபன்
பத்தியொடு பெற்றதொரு பாலக னவன்பேர்
புத்திசித்தன் புரவலன் குமாரனொடு மேதான்
வைத்தநெறி கற்பதரு வாமென வளர்ந்தான்.

6. அகிலவுல கந்தனை யாளரச குமரனொடு
புகலுநெறி மந்த்ரியருள் புத்தி சித்தனும்
முகிலுமுகி லென்னவே முயற்சியில் வளர்ந்தே
சகல்வித கல்வியுடன் தந்திரமே கற்றார்.

7. வச்சிர மகுடனொடு மந்திரி குமாரன்
நிச்சித மகிழ்ச்சிசொலி நேர்கள்பிரி யாமல்
அச்சமற வாலிபர்க ளானதொரு நாளில்
மெச்சியிரு வோரும்வன வேட்டைதனிற் சென்றார்.

8. ஏவமற வேட்டைதனி லெங்கணுமு லாவி
மேவிய வனத்திடை வேட்கையென வந்தார்
வாவிதனில் நீர்பருகி வாவியரு கேதான்
பூவுல்வு சோலைநிழல் புக்கினி திருந்தார்.

9. ஏகிய இளைப்பற இருந்தவர்கள் முன்னே
தோகைமயி லாடுகிற சோலைநடு வேதான்
கோகனக மென்னவுயிர் கொஞ்சுகிளி யென்ன
மோகரதி யென்னவொரு மொய்குழல் நடந்தாள்.

10. கரும்புமத னேவல்செய வாலிபர்கள் கண்டே
விரும்பியெதிர் கொண்டருள மெல்லியர்கள் சூழக்
குரும்பைமுலை தாங்கியொரு கொடியிடைதள் ளாட
அரம்பையென வல்லவென வாமென நடந்தாள்.

11. வந்தருள்மடந்தைதனை வச்சிரமகு டன்றான்
இந்திராணி யோவென இரங்கியெதிர் கண்டே
முந்தவிழி யம்புமதன் ஊடுருவ வெய்தான்
சிந்தைதடு மாறியே தியங்கினி திருந்தான்.

12. ஆகமது தானுருகி யைங்கணையி னொந்தே
மாதுயரில் மன்னவன் மனந்தளர்வ தெல்லாம்
பாகனைய சொல்லியொரு பார்வையி லறிந்தே
தோகைமயில் தானுமொரு சூட்சும முரைப்பாள்.

13. காரளக மீதிலுறை காவிமலர் வாங்கிப்
பார்செவியில் ஒத்திநிரை பல்லின்மிசை வைத்தாள்
வேரிமலர்க் காலினில் மிதித்தபத மேற்றி
மார்பினில ணைத்தனள் மன்னன்மகன் முன்னே.

14. இக்குறிகள் காட்டியபின் னேந்திழையு மாங்கே
ஒக்கவரு சேடிய ருடன்புனலில் மூழ்கி
மைக்குழலி யேகியபின் மற்றவரு மப்போ
மிக்கதொரு தம்பதியில் மீண்டினிதி ருந்தார்.

15. மன்னன்மயல் கொண்டுதினம் வாடுவது கண்டே
உன்னிமதி மந்திரி யுணர்ந்தினி துரைப்பான்
அன்னநடை யாள்மலரை யன்றுசெவி வைத்தாள்
கன்னபுர மென்றுகுறி கண்டுகொளி தென்றான்.

16. பாலின்குறி பற்குறிகள் பல்லவன் மடந்தை
காலின்குறி வேந்தனுமோர் காலிங்கனு மென்றான்
மார்பின்பத மேற்பதிற் பதுமாபதி யென்றான்
ஆலிங்கன முன்னே யணைக்கைகுறி யென்றான்.

17. சொன்னகுறி யின்பிரிவு தோழனுரை செய்வான்
மன்னன்மகிழ் வாகிமிக வாஞ்சையதி னாலே
மின்னுமணி மார்பன்மன வேகமுட னேதான்
கன்னபுர நாடியவர் கால்கடுகி வந்தார்.

(வேறு)

18. இருவ ரங்கக ரெய்தி யுற்றபின்
னெவரை யேவுவோ மென்று எண்ணியே
புரைவ றவொரு முதும கள்தனைப்
பொருள்கொ டுத்துநல் லுறவு பண்ணியே
அரிவை பால்விட வருகு சென்றுநீ
யன்று கண்டவர் இன்று வந்தனர்
மருவ வல்லையே யென்று கூறிட
வைது மற்றவட் செய்த தோதுவாம்.

19. வேரி தானகற் பூரத் தூளிலே
விரல்கள் பத்தையும் திரள வப்பியே
நாரி மார்பினில் மோதி யேவவே
நாடி மன்னனும் வாடி நின்றனன்
கூரி தானதோர் புத்தி சித்தனும்
குறியை மன்னனுக் கறிய வோதுவான்
ஏரு லாவிய நிலவு பத்துநாள்
இன்ன முண்டெனச் சொன்ன தென்றனன்.

20. அந்த நாள்வரை செல்ல மற்றைநாள்
அன்ன மங்கையைப் பின்னு மேவவே
வந்த பேரெனே வரவி டுத்தனர்
மாற்ற மேதினிச் சாற்றி டாயெனத்
தொந்த மற்றவர் போல நாரியும்
தொட்ட சாந்தினிற் பொட்டைமூன் றையிட்
டந்த மாதினை வேற்று வாசலில்
மேவ ஏவினள் கோப மாகியே.

21. சீற்ற மேயலால் நயமு ரைத்திலள்
சேர்ந்து மூவிரற் சாந்தை யப்பியே
வேற்று வாசலில் ஓட்டி னுளவள்
மேவி னேனெனப் பூவை கூறவே
தோற்றி மூன்றுநாள் தீண்டொ ணுதெனச்
சூழ்ச்சி கூறினுள் ஆட்சி வாசலை
மாற்றி யேவியவ் வழிவ ரச்சொனுள்
மன்ன னேயென மந்திரி கூறினுன்.

22. குறிப்பை நாடியவ் வழியி லேகியே
கொற்ற வன்செல மற்ற வள்மிகச்
சிறப்பி னேடெதிர் கொண்டு நின்றிதஞ்
செப்பி யேமன மொப்பி யன்புடன்
புறப்ப டாமலே யேக போகமாய்ப்
பொருந்த வேளுடன் இரதி போலவே
மறப்பி லாமலே மன்ன வனுடன்
வாய்மை யாய்மகிழ்ந் தரிவை கூடினுள்.

23. கூடி யன்புடன் சிறிது நாள்வரைக்
குமுத வாயிதழ் அமுதம் உண்டுபொன்
மேடை மீதினில் மாது தன்னுடன்
வேந்தர் வேந்தனும் சேர்ந்தி ருக்கையில்
வாடி யேதுணை யான மந்த்ரியை
மன்ன வன்மனந் தன்னி லெண்ணவே
சாடை கண்டிதே தென்று கேட்டனள்
சரச மாயவட் கரச னேதினுன்.

24. இப்ப டிக்குயி ராக வுன்னுடன்
எய்து தோழனுர் செய்தி யென்னுடன்
செப்பி டாததென் னென்று மன்னனைத்
தெரிவை கூறியே பரிவுள் ளார்கள்போல்
அப்ப மோடுசீ ரடைம ருந்தினுல்
அதிர சங்களும் சதிர தாகவே
வைப்ப தாகவே யறிவி லாமனன்
மந்தி ரிக்கிவை தந்து நல்கினுன்.

25. தந்து நின்றபோ திங்கி தேதெனச்
சாற்று மந்திரிக் கேற்ற மாகவே
அந்த வண்ணமா மயிலு னக்கிவை
யருளி ளுளென வேந்தன் கூறினன்
பந்த மாகநான் வந்த தேன்சொனுய்
பாரி தோவெனக் கவ்வு நாயின்முன்
மந்திரி போடவே தின்று மாய்ந்தது
வாய்த்த சோதனை பார்த்து வெட்கினுன்.

26. அறிவி லாமன்னன் தலையி றக்கியே
யங்கு நின்றிடத் துங்க மந்திரி
உறவ தாகிலும் மங்கை மார்களை
யொன்றும் நம்பொணு தென்று பின்னையும்
நெறிகள் வேந்தனுக் கோதி நீயவள்
நித்தி ரையிலே முத்து மாலையைக்
கறுவி வாங்கியே சூல மாய்நகம்
காட்டி மார்புறத் தீட்டி வாவென்ருன்.

27. ஏகி மன்னனும் சொன்ன வாறுசெய்
திரவி லேதனி வரம கிழ்ந்தனன்
சோகி வேடமா யந்த மந்திரி
சுடலை யூடிருந் தடலை பூசியே
வாகு கன்னமா புரியி லெங்கணும்
மாலை யைவிலை காட்டி வேண்டினுல்
ஆக மாகவெங் குருவிலை சொல்வார்
ஆரம் வேண்டினுல் வாரு மென்னுமே.

28. ஆர மாலையைக் கையில் வாங்கியே
யாண்டி ரூபமாய் மீண்டு மன்னனும்
வேரி மாம்திற் கன்ன மாபுரி
வீதி வீதியி லோதி ஞன்விலை
ஊரி லெங்கணுஞ் சொன்ன போதினில்
ஒருவ ஞேடியே அரசன் முன்சொலச்
சேர வேஅழைத் துரையென் ருன்விலை
செறிகு ருக்களே யறிவ ரீதென்ருன்.

29. இந்த மாலையை ஈந்த நின்குரு
ஏதி ருப்பிடம் ஓது வாயென
அந்த மாமயா னத்தில் மேவுவார்
ஆரம் வேண்டினல் வாரு மென்னவே
வந்து நின்றகா லிங்க ராயனும்
மன்ன னுமிவன் தன்னை நாடியே
சிந்தை யாரவே போற்றி யோகியைத்
தெண்ட னிட்டுநின் றண்டியே சொல்வான்.

30. தேட்ட மாகிய முத்தி னின்விலை
சொல்லு முண்மையாய்ச் சொல்லு மென்றவன்
கேட்ட போதுதா னந்த யோகியுங்
கிருபை யாகிய மொழியை யோதுவான்
ஈட்ட ருந்தினம் பகலி ரவதாய்
இறைவ இங்குநா னுறைவ னென்றுமே
நாட்டி லேயெனும் பல்ல வன்மகள்
நாட்பி ணந்தின விரவில் வந்தனள்.

31. பேய்கள் தன்னைவந் தரிவை ஓட்டியே
பிணமு ருட்டியே நிணம ருந்தியே
வாயி லேதினக் கண்டு சூலமின்
மார்பி லூன்றியிம் மாலை வாங்கினேன்
தெய்வ மானிடத் தரிவை யென்றெணிச்
சேர ழைத்துநீ யாரெ னச்சொலாய்
ஆய மின்றியான் கேட்ட தட்டவே
யஞ்சி யஞ்சியே வஞ்சி கூறுவாள்.

32. மல்லு லாவுகா லிங்க ராயனர்
வாச லுக்கொரு தேச மந்திரி
பல்ல வனெனும் பேர வன்மகள்
பதும மாபதி யதுவு மென்பெயர்
அல்லி லேதினஞ் சுடுபி ணங்கள்தின்
றகமு மேவுவேன் செகம றிந்திடச்
சொல்லி டாதிரு மென்றெ னைக்கழல்
தொழுது மாலைதந் தழுது போயினள்.

33. ஈத லாமலே யின்ன மொன்றுள
திறைவ னேயினிக் குறியி லொன்றுகேள்
ஆத லாலுமுன் னொரு மைந்தனை
யன்று மிப்படிக் கொன்று தின்றனள்
பாதி நேரம்யாம் பார்த்தி ருந்தனம்
பாவி யிங்கிவள் மேவி யூர்கெடும்
காதி டாதுபெண் கொலைபொல் லாதினிக்
காட்டி லேகடி தோட்டு வீரென்றான்.

34. திசைய தாகிய மன்ன வன்னுடன்
சித்த ரும்இவை புத்தி சொல்லியே
இசையு முத்துமா லையிலெ மக்கினி
யென்ன தான்பயன் மன்ன னேயிதுன்
வசமி ருக்கவென் றருள மற்றது
வாங்கி மன்னனும் பாங்கி லெய்தியே
விசையு டன்பதி மேவி மந்திரி
வீட்டில் மாலையைக் காட்டி யோதுவான்.

35. மைக்க ணுள்செயல் சித்த ரோதிய
வாறு மாமடை யாள னேரெலாம்
மிக்க தந்தையும் தாயு மந்நகர்
வேந்த னும்மிகச் சோர்ந்து நோக்கினர்
தக்க மார்பினிற் சூல மூன்றிய
தாரை கண்டபின் னூரு ளோரெலாம்
ஒக்கு மொக்குமென் றேநடுங்கவே
யோட்டி னர்பெண்ணுங் காட்டி லெய்தினள்.

36. கவலை நெஞ்சமாய்க் காட்டி லெய்திய
காரி கைதனைச் சேர வந்தவர்
அவள் பயந்தனைப் போக்கி யாசைகொண்
டதிவி தத்துடன் பதியி லெய்தினர்
இவள்தன் தந்தைதாய் சோக முற்றியே
யெண்ணி யெண்ணியே மண்ணில் மாய்ந்தனர்
புவியின் மீதினில் கொலையெ வற்கெனப்
புரவு லாவெனக் குரைசெ யென்றதே.

37. சாற்றி தென்றுவே தாள மோதவே
சாத்தி ரத்தினல் பார்த்து சாவியே
மாற்ற மிங்குநீ யுரைசெய் யாவிடில்
வலிய வுன்னைநான் நலிவ னென்றிட
ஏற்ற மானவிக் கிரம கேசரி
யிக்க தைப்பொருட் டாக மாகவே
நேர்த்தி யாய்விசா ரித்த தாமென
நீதி யானசொல் லோது வாமரோ.

38. சொன்ன தோழனுங் கன்னி தான்செயும்
சூட்சி யானுமங் காட்சி யாகவே
மன்ன வனெனுஞ் செயல்மு டித்திடல்
மந்தி ரிக்கதே யந்த மென்றனன்
மின்னின் ஆசையாற் கொண்டு செய்வது
மெள்ள வாலிபற் குள்ள காரியம்
மன்ன னேதுமெண் ணாத கற்றினன்
அரச னுக்கலோ பெரிது பாவமே.

39. என்று மன்னவன் இவைகள் கூறவே
இருளி லேயுரைத் தருளுகின்றதோர்
வென்றி யானவே தாள மங்ஙனே
மிக்க தோர்கதை யொக்கு மென்றுதான்
நின்ற விக்கிரமன் விசார மாகியே
நெறியெ லாமுணர்ந் தறிய வேண்டியே
சென்று காற்றெனத் தருவி லேறியே
தீங்கி லாமலே தூங்கு மாமரோ.

## அருஞ்சொற்பொருள்

3. கஞ்சம் - தாமரை. வாவி - குளம்.

4. பிரதான மகுடன் - அரசன் பெயர். சொற்பிரபை - அரசியின் பெயர். வச்சிர மகுடன் - இளவரசன் பெயர்.

5. புத்திசித்தன் - மந்திரிமகன். கற்பகதரு - கேட்டார் கேட்டதைத்தரும் தேவலோக மரம்.

6. முகில் - மேகம்.

8. வேட்கை - தாகம். புக்கு - புகுந்து.

9. ஏகிய - சென்ற. இளேப்பற - களேப்பு நீங்கிய. கோகனகம் - தாமரை. மொய்குழல் - நெருங்கி வளர்ந்த கூந்தலேயுடைய மங்கை.

10. மதன் - மன்மதன். மெல்லியர் - மெல்லிய தன்மைவாய்ந்த பணிப் பெண்கள். கொடி இடை - கொடி போன்ற மெல்லிய இடுப்பு. அரம்பை - தேவலோக நடனமகள்.

11. இந்திராணி - தேவருலகத்து அரசி.

12. ஆகம் - உடல். பாகனேய சொல்லி - தேன்பாகு போன்ற இனிமையான சொற்களே உடைய மங்கை, தோகை மயில் - தோகை மயில் போன்ற அந்த மங்கை. சூட்சுமம் - நுட்பமான செய்தி.

13. கார் அளகம் - கரிய கூந்தல். நிரை - வரிசை.

14. ஏந்திழை - நகைகளே அணிந்த பெண். ஒக்க வரும் - சேர்ந்து வரும். சேடியர் - தோழியர். குழலி - கூந்தலே யுடையவள்.

15. காட்டில் தோன்றிய மங்கை மலரைச் செவியில் வைத்ததால் தன் ஊர் கன்னபுரம் என்பதைக் குறிப்பாக உணர்த்திஞள் என்று மந்திரி மகன் கூறிஞன். கன்னம் - காது.

16. அவள் மலரைப் பல்லில் வைத்ததால் அவள் பல்லவன் மகள் என்பதை உணர்த்திஞள். காலில் குறிப்பிட்டது அரசன் பெயர் காலிங்கன் என்பதைக் குறிக்கும்.

18. எய்தி - அடைந்து. ஏவுவோம் - செலுத்துவோம். புரை - குற்றம்.

19. நாரி - பெண், காட்டில் சந்தித்த மங்கை. ஏர் - அழகு.

20. வரவிடுத்தனர் - அனுப்பினர். தொந்தம் - பற்று. அற்றவர் - இல்லாதவர்.

21. பூவை - நாகணவாய்ப் பறவை. இது அழகிய பெண்ணேக் குறிக்க ஆளப்பட்டது. சூழ்ச்சி - தந்திரம்.

22. அரிவை - பெண்.

23. குமுதம் - அல்லி.

25. மயில் - உவமை ஆகுபெயராய்ப் பெண்ணேக் குறித்தது.

26. துங்கம் - தூய்மை. நம்பொணுது - நம்பமுடியாது.

27. சோகி - மாயமந்திரங்களில் தேர்ச்சியுற்றுப் பாம்பைப் பிடித்தாட்டி வயிறுவளர்க்கும் தொட்டிய சாதிப் பிச்சைக்காரன். அடலே - சாம்பல்.

28. வேரி, மணம்.

29. மேவுவார் - பொருந்தியிருப்பார்.

31. நிணம் - கொழுப்பு. எணி - எண்ணி. வஞ்சி - வஞ்சிக் கொடி போன்ற பெண்.

32. அல் - இரவு. அகம் - வீடு.

33. இறைவனே - அரசனே. கடிது - விரைவாக.

34. சித்தர் - சோகி வேடம் அணிந்த மந்திரி மகன்.

35. ஒக்கும் - தகும்.

36. சோகம் - வருத்தம். புரவலா - அரசனே.

37. சாற்று - சொல். நலிவன் - வருத்துவேன்.

38. மின் - மின்னல் போன்ற இடையையுடைய பெண்.

39. விசாரம் - கவலை. வென்றி - வெற்றி.

பதுமாபதி கதை முற்றும்.

---

## 2. மந்திராபதி கதை

முருக வணக்கம்

1. வீர தத்துவமும் ஏறு மாமயிலும்
மெய்க்க டம்புமுயர் குக்குடம்
சேரு நற்கொடியும் மூவி ரண்டெனுமொர்
திருமு கத்தழகு பெருமையும்
ஆரொ ருத்தர்தின மந்தி யும்பகலு
மதிவி தத்தினொடு துதிசெய்தால்
சூர னைத்துணிசெய் கையும் வேலுமெதிர்
தோற்று மேவினைகள் மாற்றுமே.

வேதாளம் விளம்பிய இரண்டாம் கதை

2. மேதினிக் கரசன் மீண்டு பற்றியிடை
விலகி டாதுகொடி தலகையைச்
சூதி னிற்கடிதி லேகு மப்பொழுது
தோளின் மீதுவரும் வேளையில்
ஆதரித் துலகில் மூது ரைப்பொருள
தாக வும்பொழுது போகவும்
ஏத விட்டலகை இரண்டெ னுங்கதையை
யிறைவ கேளென இசைக்குமே.

3. அழகு பெற்றதொரு பிரம தேசமெனு
மகர மானதொரு நகரியில்
செழும றைக்குரிய வந்த ணரிலோர்
சேர வங்குச சுவாமிதான்
முழுது நற்றவ முயன்று பெற்றதொரு
மோகி னிக்குநிக ராகியே
எழிலி மற்றவளை மந்தி ராபதியு
மெனப்பெ யர்பகரு மென்பரே.

4. இந்தி ராதிபரு முலகில் மானிடரும்
இச்சை யாலழகின் மெச்சவே
மந்தி ராபதியை மகவி னுசையால்
வளர்த்து மாமகிழ் வுளத்தினல்

தந்தை தானவளை யறிவின் மிக்கவர்
தமக்க ளித்திட நினைக்குநாள்
அந்த நாளிலொரு மூவர் வந்துபெண்
ஆசை யாலறிவு பேசினர்.

5. தங்கள் தங்களுடைக் கல்வி யின்பெருமை
தன்னை வேதநெறி யென்னவே
மங்கை தந்தைதிரு முன்த னித்தனி
மகிழ்ந்து மூவர்சொல் பகர்ந்துதான்
எங்க ளுக்குனது மாதி னைத்தருதி
யென்ன வன்னை மடந்தையு
முங்கள் தன்னிலோர் மிக்க பேர்க்கருள்வன்
ஒப்பு மென்றுவகை செப்பினள்.

6. மோக மாயையி லெனக்கு னக்கென
மூவ ரும்புணரு மாவலால்
மாக ரமோ டேகை யாய்மன
மகிழ்ந்தி டாவகை பகர்ந்துதான்
ஏகி னர்கணெடு நாள்மின் னள்குமரி
யிருந்து தான்மிக வருந்தியே
சோக மாய்மதன சோக மாகியே
சொக்கி யேவுயிரை நீக்கினள்.

7. தந்தைதா யழுது மாதினைச் சுடலை
தான டக்கியவர் போனபின்
இந்த மூவர்களும் வந்து தான்சுடலை
யெய்தி யேகவலை யெய்தியே
வெந்த சாம்பலது பூசி யங்கொருவன்
மேவி னனொருவ னென்பினைக்
கங்கை யிற்கலக்க ஏகின னொருவன்
ஏகி னன்பர தேசமே.

8. சொல்லொ ணாதுகடி தென்று சென்றுபல
தேச மெங்குமுழ லாசையாற்
சொல்லொ ணாதுபசி நலிய நெஞ்சமது
தேய்ந்து தேய்ந்துமிக வந்தநாள்

நல்ல வேதியர்ப திக்கு ளெய்தியவ
னன்ம ருத்தரசன் மனையிடை
இல்லி லேயமுது கேட்க மற்றவனும்
இடவி சைந்திடமு மருளினன்.

9. மற்ற வற்கடிசில் சமையெ னக்கடுகி
மனைவி யோடுசொலி நினைவினல்
உற்ற வேளையது சந்தி பண்ணவென
உளம கிழ்ந்தரசன் செல்லவே
பெற்ற பிள்ளையழ வேமுறித்தவள்
பெருங்கை யாலெறி கரும்புபோல்
குற்றந் தீரடிசில் சமைக்க மைந்தனுடல்
கூட்டி யேயெரியை மூட்டினள்.

10. வண்டி ருந்தகுழ லாள்ச மைத்தடிசில்
வைத்த லும்மகவு செத்ததும்
கண்டி ருந்தவன் துக்க மெய்திமிக
கண்ட னன்நினைவு கொண்டனன்
பண்டி ருந்துயி ரளிக்க மூட்டியெரி
பட்ட சாம்பல்மிசை தட்டியே
தண்டி ருந்தகை நீர்தெ ளித்துமே
தேவி மைந்தனை யெழுப்பினள்.

11. எழுந்து மைந்தனுயிர் பெற்றதும் விஞ்சை
இனிது கண்டிவனு மாவலால்
அழுந்து துன்பமு மகற்றி மாண்டருளு
மரிவை யும்வருவ ளென்று தான்
கொழுந்து விட்டுருகு மயலி னுலுடல்
குளிர்ந்து சிந்தையும் தெளிந்துதான்
செழுந்த ரத்தடிசில் உண்டு மூடியது
தேடி யேதிருடி யோடினன்.

12. ஓடி யங்கரிவை வெந்தி டஞ்செல
வுழன்று கங்கையில் நடந்துபோய்
யாடி வந்தவனு மெய்தி னன்சுடலை
யருகு காத்தவனெ டிருவரும்

கூடி னரவட னென்பை வாரியொரு
கூவை செய்தவனு மாவலா
லேடு வைத்தெழுது பொத்த கத்தினுயிர்
எழுப்பி னன்மனச் செழிப்பினன்.

13. கொண்ட வாசையி லெழுப்ப மாவிளங்
கொழுந்து போலவ ளெழுந்துதான்
பண்டு ரூபமதி லெண்ம டங்குகொடு
பாவை யங்கவர்முன் மேவினுள்
கண்டு தானிவ ருனக்கெ னக்கெனக்
காத லாலுருகி மாதினல்
சண்டை யாயினர்கள் மூவ ருக்குளிவள்
தார மாவதினி யாரதோ.

14. இந்த வாறுரைசெ யென்று மன்னவனே
யேதுவா யலகை யோதவே
மைந்த னமினிய கங்கை யாடினவன்
வந்து மங்கையுயிர் தந்தவன்
தந்தை யாஞ்சுடலை காத்தவன் தனது
தார மாகுமென வீரமாய்
மூந்த மன்னவ னுரைசெய் போதலகை
மூண்டு தன்தருவில் மீண்டதே.

## அருஞ்சொற்பொருள்

3. அகரம் - அக்கிரகாரம். மறை - வேதம். சாமி - பிராமணன். எழிலி - அழகுடையவள்.

4. இந்திராபதி - இந்திரன். மகவு - பிள்ளை.

5. அருள்வன் - கொடுப்பேன். ஒப்பும் - ஒப்புக்கொள்ளுங்கள்.

6. மின்னுர் குமரி - மின்னல் போன்ற இடை பொருந்திய நங்கை. சோகம் - வருத்தம். மதனசோகம் - காமவேட்கை. சொக்கி - மயங்கி.

7. சுடலை - சுடுகாடு. எய்தி - அடைந்து. ஏகினுன் - சென்றுன். பரதேசம் - பிற நாடு.

8. வேதியர் - பிராமணர். பதி - ஊர். மருத்தரசன் - பெரிய மருத்துவன்.

9. அடிசில் - உணவு. எரி - நெருப்பு.

10. வண்டு இருந்த குழலாள் மருத்தரசன் மனைவி. தேவி - மருத்துவன் மனைவி. தாய் தான் கொன்ற குழந்தையின் எலும்பையும் சாம்பலையும் சேர்த்து மந்திர நீர் தெளித்து உயிர்பிழைக்கச் செய்தாள்.

11. மருத்தரசனுடைய மனைவி பிள்ளையை எழுப்பிய அற்புதத்தைக் கண்ட பார்ப்பன இளைஞன், அவளறியாமல் அவ் வித்தையைக் கற்றுத் தன் உடன்பிறந்தவன் இருந்த சுடலைக்குச் சென்றான். அவ்வமயம் கங்கைக்குச் செல்ல முயன்றவன் எலும்புடன் திரும்பி வந்தான். எலும்பையும் சாம்பலையும் குவியல்செய்து, பரதேசம் போனவன் தான் கற்றுவந்த வித்தையால் பெண்ணை எழுப்பினான்.

12. உழன்று - வருந்தி. அவடன் = அவள் + தன். பொத்தகம் - புத்தகம்.

13. தாரம் - மனைவி.

14. உரைசெய் - பதில் சொல். பெண்ணின் எலும்புகளைக் கங்கைக்கு எடுத்துச்சென்றவன் மைந்தன்; மங்கைக்கு உயிர் கொடுத்தவன் தகப்பன். ஆகையால் சுடலை காத்தவனுக்கே அவள் மனைவி ஆக வேண்டும் என்று வேந்தன் விடை கூறினான்.

மந்திராபதி கதை முற்றும்.

# 3. கிளிகள் கூறிய கதைகள்

முருக வணக்கம்

1. எந்தா யுமெனக் கருள்தந் தையுநீ
சிந்தா குலமா னவைதீர்த் தெனையாள்
கந்தா கதிர்வே லவனே உமையாள்
மைந்தா முருகா மயில்வா கனனே.

வேதாளம் விளம்பிய மூன்றும் கதை

2. வான்தோய் தருவே றிவலித் தரசன்
தான்தோள் கொடுதான் வருபோ தலகை
தோன்றா துவழித் தொலைபோ யகல
மூன்றுங் கதைகே ளெனவே மொழியும்.

3. தாழ்வே துமிலா ததருக் குளதாய்
ஏழ்பா ரினிலெங் குமெடுத் திடவே
வாழ்பா டலுமா பதியென் பதொரூர்
ஆள்வா னரகே சரியாங் கரசே.

4. அரியே வரசன் கைவளர்த் ததுமொன்
றுருவா னகிளிப் பிளையொன் றுளது
கருதா மலுணர்ந் துசெல்கா லமுடன்
வருகா லமிரண் டுமதித் திடுமே.

5. அங்கே நவமா னதெலாம் பகரும்
சிங்கா ரமதா னசெழுங் கிளியைப்
பங்கே ருகபா ரியையொன் றுபகுத்
திங்கே விதியென் றனன்மன் னனுமே.

6. ஆமா றுதெரிந் தயனிட் டவிதி
கோமா னுடனே கிளிகூ றியிடும்
வாமா கமதித் தொருதே சமெலாம்
தாமா ளிறைசந் திரலோ சனனே.

7. மன்னன் மகள்சந் தனமா பதிதான்
என்னுந் திருவிங் குளையெய் துவள்காண்
பன்னுங் கிளிபா வைவளர்த் ததுவும்
ஒன்றுங் குறியா மெனவோ தியதால்.

8. அனையாள் கிளிபே டதறிந் தவளோ
டுனையே கணவ னெனவோ தியதால்
மனையா ளவளே யெனமன் னனுடன்
தொனியா கவருங் கிளிசொல் லியதால்.

9. முந்தாள் தனையே விழுயன் றுறவாய்
வந்தா னரகே சரிமன் னவனும்
பொந்தா கமணஞ் செய்துபூ வைதனைத்
தந்தா னுயர்சந் திரலோ சனனே.

10. மட்டார் குழல்மா துடன்மன் னவனும்
கிட்டார் களமே விதருக் கியபோர்
கிட்டா தபெணுங் கிளிதன் னையுமே
விட்டா ரொருகூண் டினில்மே வியதே.

11. இரவிற் றனியே நெடுநேர மதாய்ப்
பிரியத் துடனுண் கிளிபெண் கிளியைச்
சருவுற் றதுகண் டுதையற் கிளியும்
புருடர் குணநம் புகைபுன் மையெனு.

12. நாணும் படிமா தரைநம் பரிதென்
றுணுஞ் சொலவங் குவழக் கதுவாய்
பூணும் புகழ்மன் னவன்முன் புகலக்
காணும் படிதோற் றிடிலோ கழுறுய்.

13. கூறும் மெனப்பெண் கிளிசொற் றிடவும்
தாரம் மெனவாண் கிளிதம் மறிவான்
சேரு மடிமைத் தொழில்செய் வனெனக்
கூறுஞ் சபதங் கள்குறித் ததுவே.

14. காதற் பரிவா லிவர்கா வலர்முன்
பாதிப் பொழுதீ துபகர்ந் திடவே
கீதத் துறைபெண் கிளிகே ளுமென
ஏதற் கதையொன் றையியம் பிடுமே.

பெண்கிளி கதை கூறுதல்

15. மனுமெச் சியயவ் வசந்தீப் பதியிற்
றனதத் தனெனும் வணிகன் சதுரன்
இனிமைக் குமரன் பேர்தந் தனென
முனைபெற் றுவளர்ந் தனன்மொய்ம் மையினுல்.

16. ஓதுந் தொழில்கல் வியனுள் ளதெலாம்
கோதின் றியுணர்ந் தனனக் குமரன்
தாய்தந் தைமரித் தனர்தை யனலார்
மாதொந் தமிகுத் தனன்மைந் தனுமே.

17. பொன்னு னதெலாம் பரிபோ கமுறு
மின்னார் வசமீந் துமிடித் தனனல்
தன்னு தொருசந் தனமா பதியில்
அந்நா ளிலடைந் தனனக் கணமே.

18. ஏரா ருமிர ணியகர்ப் பனெனும்
பேரா னையடைந் துதனார் பெயரும்
சீரா கமொழிந் துசெய்வா ணிபமும்
வாரா தனவில் லையெனு வறைவான்.

19. ஒப்பா துயர்தா தையுடன் முனிவா
யிப்போ திங்ஙன் வந்தேன் எனலும்
தப்பா துநமக் கொருசார் வெனவே
அப்போ தொருபெண் ணையளித் தனனல்.

20. இப்பா ரெண்ணிர ணியகர்ப் பனெனுந்
துப்பா கியமா மனுடன் துணையாய்
முப்போ திலும்வா ணிபமே முயல்வான்
வைப்பாய்ச் சிலநாள் வரைவாழ்ந் தனனே.

வேறு

21. எங்கள தூரி லும்யான்
இத்தனை நாள திங்கே
தங்கிய சேதி யொன்றுந்
தாய்தந்தை யறிந்தி லார்கள்
மங்கையும் நானும் சென்று
மாமனே வருவோ மென்றான்
அங்கவன் மகளைக் கூட்டி
யலங்கரித் தனுப்பி விட்டான்.

22. அரிவையைக் கொண்டு கானி
லனுகிலோர் பயமுண் டென்று
திரவியப் பணிக ளெல்லாஞ்
சிக்கென வாங்கிக் கொண்டு

துரவினிற் றள்ளிப் போனன்
தோகையோர் கொடியைப் பற்றிக்
கருதியுற் றழுத போது
கண்டவ ரெடுத்து விட்டார்.

23. கண்டுதான் தந்தை தாயும்
கருதியிங் கிவளைக் கேட்க
வொண்டொடி யுரைப்பாள் கள்ள
ருடைமையும் பறித்துக் கொண்டு
மண்டிய கானி லெந்தன்
மகிழ்நனைப் பிடித்துப் போனர்
சண்டையி னும் பிந்தித்
தப்பியே வந்தே னென்ருள்.

24. அன்னையும் பிதாவும் மற்று
மங்குள வுறவு ளோரும்
கன்னியைத் தேற்றிக் கொண்டு
கவன்றுகொண் டிருந்த காலை
பொன்னையும் போக்கித் தத்தன்
பூவையர் மாயை யாலே
பின்னையுஞ் சில்பொன் கேட்கப்
பெண்ணின்பேர் கூறி வந்தான்

25. வந்தவ னிந்த மாதை
வாசலில் கண்டே யேங்கி
முந்தியே திரும்பி யோட
மொய்குழல் பின்னே யோடி
யுந்தனை யுரைப்ப னேனு
னென்றுநீ ரஞ்சே லென்று
தந்தைதாய்க் குரைத்த தோதித்
தாள்பணிந் தழைத்து வந்தாள்.

26. மருகனைக் கண்டு மாமன்
வாய்திறந் தரற்றி மாழ்கி
யுருகியே நிற்க மற்ற
வுறவுளார் வினவி யேதான்

பெருகவே விருந்து செய்தார்
பின்னையு மிருந்து மாமன்
அருகில்வா ணிபங்கள் செய்தே
யவருடன் கூடி வாழ்ந்தான்.

27. இருந்துபின் சிறிது நாள்மே
லிரவில்நித் திரைசோ தித்துத்
திருந்தணி கலைக்கைக் கொண்டே
சேயிழை கழுத்தை வாளால்
அரிந்துதான் போட்டு மீள
வாரிருள் தன்னிற் போனான்
வருந்தினர் தந்தை தாயு
மரித்தனள் பெண்ணு மன்றே.

28. அருளுடை மடந்தை நம்பற்
கன்றுதான் செய்த நன்றி
குருடருக் கிட்ட பாற்சோ
றுகவே கொன்று போனான்
புருடரை நம்ப லாமோ
புரவலா புகன்றி டென்ன
விருடிபோல் மருவிப் பார்மே
லெண்ணியாண் கிளியுங் கூறும்.

ஆண்கிளி கதை கூறுதல்

29. இங்குநீ மன்ன னேகேள்
யானுமோர் கதையைச் சொல்வேன்
தங்கள்தங் கணவர் நெஞ்சம்
சலித்திட வஞ்சித் தேதான்
பங்கமா யெங்கும் பேசப்
பற்றியே நிந்தை செய்த
மங்கையர் சூழ்ச்சி தன்னை
மற்றது நிகழ்த்து மாங்கே.

30. சோலைமா மதிலுஞ் சூழ்ந்து
துலங்குகோ புரங்கள் விஞ்சும்
ஆலயம் நிறைந்து மேவும்
அருட்பதி தன்னி லேதான்

சீலமா யுலகில் செங்கோல்
செலுத்தியே கேள்வி கேட்டுச்
சாலவும் புகழ்சேர் மன்னன்
தரிமரித் தலைவ னென்பான்.

31. அமைத்தவன் னகரில் வாழ்வார்
அமைந்திடு வணிகர் தம்மில்
அமைத்தகன் தத்தன் பெற்ற
வசுமதி யென்னு மின்னை
நிமித்தமும் பொருத்தந் தானு
நிறையவுண் டாகை யாலே
சமுத்திர தத்த னென்போன்
தனக்கவன் மணமுஞ் செய்தான்.

32. பாங்கிறு லவளோ டேதான்
பரிவுடன் நெடுநாள் வாழ்ந்து
தாங்கியே பொருள்கள் தேடச்
சமுத்திர தத்த னென்போன்
சோங்கினி லேறிப் போனான்
தோகையிங் கிருக்கு நாளில்
தீங்குடை விபரீ தத்தால்
தீவினை யெண்ணிச் செய்வாள்.

33. ஆரிருள் தன்னி லங்கோ
ரந்தணன் மகனைக் கூடிச்
சோரமே யியற்றிக் கொண்டு
தோகையங் கிருக்கு நாளில்
வாரிமேல் சோங்கிற் போன
வணிகனும் மீண்டு வந்து
காரிகை தன்னைக் கூடிக்
கங்குலிற் றுயிலுங் காலை.

34. மின்னனை யாளு மந்த
வேதியன் றனக்காள் விட்டாள்
சொன்னடை யாளந் தன்னில்
சோரனும் வந்து நின்றான்

உன்னிய காவ லாள
ரொளிக்கையில் கள்வ னென்று
மன்னிய வாளிற் கொன்று
மண்ணின்மேற் றள்ளிப் போனர்.

35. பொற்றெடி கணவன் தன்னைப்
புணர்ந்துநித் திரைசோ தித்து
மற்றவள் வந்தே யந்த
மண்ணின்மே லவனைக் கண்டு
முற்றிய முனிவா மென்று
முகத்தினை மோந்த போது
குற்றுயி ரிருந்து மூக்கைக்
குறைத்துமே நீங்கிற் றங்கே.

36. மெத்தமெய் நடுங்கி மின்னாள்
மீண்டுவந் தெண்ணா தெண்ணி
யித்தைநா மென்செய் வோமென்
றிருந்தொரு விசார மிட்டு
நித்திரை கொள்வா னென்னை
நினைவில்மூக் கரிந்தா னென்று
அத்திரு நகரி கேட்க
வபயமிட் டரற்ற லுற்றாள்.

37. வந்தினி துறங்கு வானும்
மனைவியைக் கண்ணா னேக்கி
நிந்தனை யிதுவே தென்று
நெடியமூச் செறிந்து நிற்க
இந்தவா றென்னென் றூர்தா
னிரங்கியே திரண்ட போது
அந்தநன் னகரை யாளு
மரசனு மழைத்துக் கேட்டான்.

38. வேந்தனே டிந்த மின்னாள்
விளம்புவாள் கணவன் றன்னைச்
சேர்ந்துநித் திரைதான் கொண்டேன்
செய்ததோர் குற்ற மில்லை

ஆய்ந்துமுன் பின்னெண் ணமல்
அரிந்தனன் மூக்கை யென்று
வாய்ந்தநீ லியள்போல் சொல்ல
மன்னனு மதிச யித்தான்.

39. குற்றமே யேதுஞ் செய்யாக்
கொம்பனை யாள்தன் மூக்கைப்
பற்றிநீ யரிய லாமோ
பாதக னிவனை வாளால்
எற்றுமென் றரசன் கூற
விரவினிற் பாரி யாகச்
சுற்றிய காவ லாளர்
தோன்றவே வுரைக்க லுற்றார்.

40. நள்ளிருள் நடுவே ரத்தி
னரிதன் மனையின் பின்னே
மெள்ளவோர் சோர னுற்றான்
மேவியே திரிய நாங்கள்
கள்ளனே வென்று கொன்றோம்
காரிகை யதன்பின் வந்து
உள்ளறி யாம லேதா
னுயிர்விடும் பிணத்தை மோந்தாள்.

41. மாலினு லிவளு மோர மற்றவன் வாயும் பல்லும்
சாலவே கூடும் போது தையல்தன் மூக்குப் போச்சு
நீலமாய்ப் பார்த்து நின்றோம் நிந்தையே கூறு கின்றாள்
நீலியிங் கிவளே யென்று நிருப னுக் கவர்கள் சொன்னார்.

42. ஆரிய காவ லாள ராங்கவன் வாயில் மூக்கைப்
பாரும்நீ ரென்று காட்டப் பதியுளோ ரெல்லாம் பார்த்தார்
வீரிய வேந்தன் றானும் மிகவதி சயித்த போதே
நாரியைத் தள்ளு மென்றார் நாட்டினிற் கண்ட துண்டோ.

43. ஆய்ந்துநீர் சொல்லு மென்றே
யாண்கிளி யடைவே கூறி
வேந்தனைக் கேட்டு நிற்க
விரைந்துபெண் கிளியு நிற்கச்

சூழ்ந்ததோர் வழக்கி னாலே
தோற்றவ ராரோ வென்று
போந்தவே தாள மன்னு
புகன்றிடென் றுரைத்த தன்றே.

44. உலகினி லெங்க ணுந்தான்
ஒருவனே புருட னல்லால்
பலருமிப் படித்தான் செய்யார்
பாவையர் பாவ ரூபம்
துலவிலே யவர்கள் தீமை
தோல்வியும் பெண்ணே யென்றான்
அலகைதான் மீண்டு மோடி
யத்தரு வுற்ற தன்றே.

ஆக விருத்தம் 145

## அருஞ்சொற்பொருள்

1. சிந்தாகுலம் - மனவருத்தம்.

2. வான்தோய் தரு - வானளாவி வளர்ந்த (மிக்க வுயரமான) மரம். வலித்து - இழுத்து.

3. நரகேசரி என்பது அரசன் பெயர்.

4. செல்காலம் - சென்ற காலம், வருகாலம் - எதிர்காலம்.

5. பங்கேருகம் - தாமரை.

6. மன்னனுக்கு நிகழ்வனவற்றைக் கிளி கூறுதல்.

7. திரு - இலக்குமி ; இலக்குமி போன்ற அரசன் மகள். அவள் வளர்த்த கிளியும் உன்னை வந்தடையும்.

8. அவளது கிளி பெண் கிளி ; பேடு - பெண்.

9. பூவை - அரசன் மகள்.

10. மட்டு - வாசனை. ஆர் - பொருந்திய. அரசன் மகள் தான் கொண்டுவந்த பெண்கிளியைத் தன் கணவன் வளர்த்து வந்த ஆண் கிளியின் கூட்டிலே விட்டனள்.

11. புன்மை - அற்பம். என்னு - என்று. ஆடவர் குணத்தை உறுதியென்று நம்புதல் தவறு என்று பெண்கிளி பேசியது.

12. பெண்களை நம்பலாகாது என்று ஆண்கிளி அறைந்தது. கழறுய் - சொல்வாய்.

13. சொற்றிட - சொல்ல.

15. வசந்திப் பதி - கதைக்குரிய ஊர். தனதத்தன் - வணிகன் பெயர். இவன் மகன் பெயர் தத்தன் என்பது.

16. கோதின்றி - குற்றம் இல்லாமல். தையல் நல்லார் - பெண்கள். தொந்தம் - பற்று. தத்தன் பெண்கள் நட்பில் மிகுந்தான்.

17. மின்னுர் - தத்தன் பழகிய பெண்கள். மிடித்தனன் - வறுமையடைந்தான். பதி - ஊர், ஏழையான தத்தன் சந்தனமாபதி என்ற ஊரை அடைந்தான்.

18. ஏர் - அழகு. வாணிபம் - வியாபாரம். இரணிய கர்ப்பன் - வணிகன் பெயர். அறைவான் - சொல்லுவான்.

19. இரணிய கர்ப்பன் தன் மகளைத் தத்தனுக்கு மணம் செய்வித்தான். தாதை - தந்தை. முனிவு - கோபம். சார்வு - சார்பு ; துணை.

20. தத்தன் தன் மாமனுக்கு வாணிகத்தில் துணை செய்தான். பார் - பூமி. எண் - மதிக்கத்தக்க. துப்பு - வலிமை.

22. கான் - காடு. போகும் வழியிலுள்ள காடு. துரவு - பெருங் கிணறு. தோகை - வணிகப் பெண் ; தத்தன் மனைவி. தத்தன் தன் மனைவியின் நகைகளைக் கழற்றிக்கொண்டு, அவளை ஒரு கிணற்றில் தள்ளிவிட்டுச் சென்றான். அவள் கிணற்றில் இருந்த கொடிகளைப் பிடித்துக்கொண்டு அழுதாள். அவ்வழியிற் சென்றவர் அவளைக் காப்பாற்றினர்.

23. ஒண்டொடி - ஒளிபொருந்திய வளையலையணிந்தவள் ; செட்டி மகள். மகிழ்நன் - கணவன், தத்தன்.

24. கவன்று - வருந்தி. பூவையர் - பெண்கள்.

25. மொய்குழல் - நெருங்கிய கூந்தலையுடையாள், வணிகன் மகள். அஞ்சேல் - பயப்படாதே. தாள் - பாதம். இச்செய்யுளில் மனைவியின் சிறப்பைக் காண்க.

26. அரற்றி - புலம்பி. மாழ்கி - மனம் வருந்தி.

27. அணிகள் - நகைகள். சேயிழை - செவ்விய நகைகளையணிந்தவள், வணிகன் மகள்.

28. மடந்தை - பெண். நம்பன் - நம்புதற்குரியவன், கணவன். பாற்சோற்றின் நிறத்தைக் குருடர் கண்டு பாராட்ட இயலாது. அது போலவே ஒழுக்கமற்றவன் தன் மனைவியின் நல்லொழுக்கத்தைப் பாராட்ட இயலாது.

30. விஞ்சும் - நிறைந்துள்ள. கேள்வி - கேள்வியறிவு.

31. பெண்பெயர் - வசுமதி. கணவன் பெயர் - சமுத்திர தத்தன்.

32. சோங்கு - மரக்கலம், கப்பல்.

33. வாரி - கடல்.

34. மின் அனையாள் - வணிகன் மனைவி. சோரன் - கள்ளன்.

35. பொற்றொடி - பொன் வளையலை அணிந்தவள், வணிகன் மகள்.

36. விசாரம் - துக்கம். நகரி - நகரம். தன் கணவன் உறக்கத்தில் தன் மூக்கை அரிந்துவிட்டதாக (தன் களவு ஒழுக்கத்தை மறைக்க)ப் புலம்பினள். அரற்றல் உற்றாள் - புலம்பலானாள்.

37. நிந்தனை - பழி.

39. கொம்பனையாள் - பூங்கொம்பை ஒத்த மென்மையும் அழகும் வாய்ந்தவள், வணிகன் மகள்.

40. காவலர் நடந்ததை நவிலுதல். நாரி - பெண் காரிகை - பெண்.

41. மால் - மயக்கம், ஆசை மயக்கம். நிந்தை - வீண்பழி. நீலி - பாசாங்குக்காரி.

43. புகன்றிடு - சொல்லிடு.

கிளிகள் கூறிய கதைகள் முற்றும்.

## 4. வீரபரணன் கதை

முருக வணக்கம்

1. வருகா லஞ்செல் கால முணர்ந்தே மதிபேணேன்
முருகா வுன்னைத் துதிப்பே னழைக்கு முளமீதோ
அருகோ டுருவக் குன்ற மெறிந்திடு மயில்வேலா
முருகா மாயோன் மருகா ஆறு முகத்தோனே.

வேதாளம் விளம்பிய நான்காம் கதை

2. வாளொரு கையினி லேகொடு மன்னனு மரமேறித்
தாளொடு கையை மரத்தொடு பற்றிச் சலியாமல்
தோளினில் வைத்தவன் ஏகுமந் நேரம் தொலையாமல்
மீளவும் நாலா வதுகதை யோதும் வேதாளம்.

3. ஆரண நூலும் வேள்வியு மாங்கே யழகாகத்
தாரணி மீதிற் சோபன நாளுந் தவறாதே
தேரணி வீதிகள் மேடைக ளெங்குஞ் செறிவாகித்
தோரண வாசல் மேவிய சோமப் பதியுண்டே.

4. அந்நகர் தன்னி லதிபதி யாகி யரசாளும்
மின்னிலை வேல்சூத் திரகவி ராச னெனும்பேரோன்
கன்னிகை சோமப் பிரபையெ னுங்கா தலியோடே
ஒன்னல ரின்றிப் பார்முழு தாளு மொருநாளில்.

5. வீர பரன்று னென்பவ னோர்வே தியனங்கே
தாரமும் மைந்தன் தானொரு பெண்ணுந் தனியேகி
சீரிய சோமா பதியில் மிகுஞ்சே வகமோதி
பாரியல் மன்னன் வாசலில் வந்தே பகர்கின்றான்.

6. அவசர காரர்க ளோடி யுரைத்தா ரரசன்முன்
சவுரிய வானைத் தன்னெதி ரேதான் தருகென்றான்
புவிபுகழ் மன்னவன் அவையத னுள்ளே கொடுவந்தார்
உவமையி லாதொரு சேவக னுண்மைய துரைசெய்தான்

7. மாளுவ தேசந் தன்னி லிருந்துன் பால்வந்தேன்
ஆளுவை யாகிற் சீவித மும்பொன் னைந்நூறும்
நாளு மெனக்குத் தினந்தினம் நீநல் குவையானல்
வேலையி லெண்ண முடிப்பது பார்வீ ரியமென்றான்.

8. மேவிய வன்பால் வீடினன் நாவீ ரியமோத
காவல னங்கவ னுண்மைக ளெல்லாங் கரைகாண
ஆவலி லப்போ தவன்வழி யிற்பொன் னைந்நூறும்
சீவித மாகக் கட்டளை யிட்டான் திசையாக.

9. மன்னவ னப்போ விடுதி யளித்தே மறையோன்பால்
பொன்னைந் நூறுந் தானருள் செய்தே போகென்றான்
என்னசெய் வானோ வென்றிறை யொற்றா ளினைவிட்டான்
பின்னை யவன்போய் மனையினி லெக்கியம் பிரிதிசெய்வான்.

10. மூந்திய தேவர்க் கோரிரு நூறு முதலீந்தான்
அந்தணர் நாவலர் கட்கிரு நூறு மருள்செய்தான்
வந்த விருந்துந் தானும் புசிக்க மனை யெக்யம்
தந்தொரு நூறுங் கட்டளை யிட்டான் தயவாலே.

11. அப்படி யேதா னனுதின மும்பொன் னைந்நூறும்
ஒப்பிய வன்றா னிட்டருள் செய்யுமு தாரத்தை
வைப்பென வேதான் கண்டவர் சொன்னார் மதிமன்னன்
எப்பொழு துந்தான் சொற்படி தப்பா திடுவித்தான்.

12. புரவல னன்பின் கருணையி னாலும் பொய்யாதே
தரவர முன்சீ விதமத னாலுஞ் சலியாமல்
இரவுட னேநற் பகலுமென் னும லெப்போதும்
பிரிவதி லாமற் சேவகர் தம்மிற் பேர்பெற்றான்.

13. அரசன் திருவுள் மெச்சிட வருகங் கனுதினமும்
மருவும் பணிவிடை செய்துகொண் டேதான் வருநாளில்
இரவில் தனிநடு நேரத் தெழுமோ ரழுகுரல்தான்
பரவும் படியிறை கேட்டது பார்க்கும் படிவந்தான்.

14. வாயில் தனிலா ரென்றனன் மன்னன் தன்முன்னே
நேயத் துடனா னென்றனன் வீர பரணன்தான்
ஆயிற் றுயில்நே ரத்தினில் வாய்சத் தமிதேதோ
போயித் தையறிந் தேகென பூபா லனுரைப்பான்.

வேறு

15. வேந்தன்சொல வேநன்றென
விடைபெற்றடை வுடனே
ஏந்துங்கையில் வாளிற்பிரபை
யிருள்நீக்கிட முன்னே

சேர்ந்தங்கழு குரல்வந்திடு
திசையேசெலு மளவில்
போந்தங்கறி யச்சென்றனன்
புவியாள்மன் னவனே.

வேறு

16. தன்னெதிரில் லாவெற்றித் தனிவீர பரணன்றான்
முன்னேடினன் மாகாளியு முறையிட்டன ளப்போ
வன்னேரமு மழுகாம லதட்டித்தனி நின்றே
யின்னேரமு மழுதாயுனக் கேதோகுறை யென்றான்.

17. அங்குற்றிட நெஞ்சுமிவ னுண்மைத்திற மதுவுங்
கங்குற்றனி யேவந்ததும் கண்டாளருள் கொண்டாள்
தங்கிச்சிவ னுடனுடிய தாயார்திரு வாயால்
பொங்கிச்சில மொழிபேசினள் புவிமேல்வரு நலமே.

18. பொறையாமனு நெறியாலுயர்
புவிதான்முழு தாளும்
இறைதான்மிக நன்றாகவி
ருக்கின்றது தருக்கால்
குறையாததொர் மாபூசைகள்
கொண்டேன்வினை கண்டேன்
முறையேயொரு தத்துண்டது
மொழிவேனென மொழிந்தாள்.

19. நீயேயல நானுந்தினம் நிருபன்தன தருளா
லாயேமிடி தொலைந்தேனினி யார்பாலினிச் சேர்வேன்
மாயேசவுந் தரீயே மகமாயீ கவுமாரீ
தாயேயுரை யென்னலது தவிர்க்கும்வகை யுளதோ.

20. வீரம்மிகு பரகேளினி வேந்தனிட மீதிற்
சாரும்வினை நின்மைந்தனைத் தானீபலி தந்தால்
தீரும்மென வேமன்னிடர் தீர்ந்தாலமை யும்மிந்
நேரம்மிது தருவேனெனு நினைவோடினன் மனையே.

21. அல்லிற்செ லவர்சத்தமு மரசன்தனை யேவச்
சொல்லுற்றது மாகாளிதன் துயர்மீதினில் வேந்தைக்
கொல்லுற்றது மவைதீர்ந்திடக் கொல்மைந்தனை
[யென்றே
யில்லத்தினில் மனையாளுட னெல்லாமுரை செய்தான்.

22. செகவேந்துடை வினைதீர்வது செயுஞ்சம்மத மானால்
மிகவேயுயி ரதனாற்செயு மென்றாள் மனையாளும்
மகனுநல தென்றானொரு மகள்தாயனை வோரும்
புகழேதிலை தானென்றெணிப் போனார்துணி வானார்.

23. தலமீதினி லென்சத்தியந் தன்மைந்தனைத் தானும்
மலர்மஞ்சன மாட்டிக்கொடு மாகாளிசந் நிதியில்
இலகும்புகழ் சேர்மன்னவ னிடர்தீர்த்தரு ளிவனைப்
பலிகொள்ளெனக் கைவாள்கொடு பாலன்சிர மரிந்தான்.

24. அண்ணன்சிர மரிந்தேபலி யங்கிட்டது கண்டே
பெண்ணுமுயிர் துறந்தாள்பெற்ற தாயுமவை கண்டே
எண்ணுங்கவ லையினாலுயி ரிறந்தாளிது வெல்லாம்
கண்ணைக்கொடு பார்த்தேமகா காளிக்குரை செய்வான்.

25. வினையங்கது வேந்தன்தனை விடவேயருள் செய்தாய்
தனயன்னழி வோர்பெண்ணொடு தாய்தானு மரித்தாள்
மனையங்கது பாழாச்சினி வாழ்வே எனக்கென்ன
எனையும்பலி கொள்வாயென இருந்தான்சிர மரிந்தான்.

26. அரிந்தானுயிர் துறந்தான்பினை யரசன்னது
கண்டே
பெருந்தேவியை வலங்கொண்டடி பேணித்தொழு
தேதான்
விருந்தாகவென் னுயிர்போன்றவர் வீழ்ந்தாரினி
நான்தான்
இருந்தாவதென் னுயிரென்றுகை வாள்கந்தரம்
வைத்தான்.

27. அங்நாயகி தான்கண்டளை விற்கைகள் பிடித்தாள்
உன்னாலிவர் தான்மாண்டன ருயிர்நீயினித் துறந்தால்
என்னாவது புவிதானுனக் கிதமாகிய வரந்தான்
சொன்னாலது தருவேனெனச் சுக்கிரீபனு முரைப்பான்.

28. தரவேறினி வரமாவது தானுஞ்சில வுளவோ
பரிவானுள நால்வர்க்கினி பயிர்போலிவ ருயிர்தான்
வரவேயருள் செய்வாயென மாகாளியு மளித்தாள்
இரவேயவர் காணவகை யிறைசென்றன னிப்பால்.

29. தானல்வரு மெழுந்தார்மகா சாமுண்டியைப் பணிந்தார்
மானுளுட னேபாலரை மனையூடுற வைத்தே
போனனர சன்பாலெதிர் புகலென்ன ஓராயி
கானரிடை யழுதாளது கண்டோடின னென்றான்.

* 30. இரவூடினி நடுநேரம தென்றுஞ்சரீ ரந்தான்
தரைமீதினி லேயிப்படி தானெத்தனை யில்லை
யரசேயென மொழிந்தானவ னுண்மைத்தொழில்
[கண்டே
வுரையாடிட லதுவைத்தனை போவேனென
[வுரைத்தான்.

31. அருள்விஞ்சிய தோர்மன்னவ னதுமற்றைய நாளில்
தெருள்வன்படை மதிமந்திரி சேனைத்திர ளுடனே
யிருள்தன்னில வன்செய்தவை யெல்லாமுரை செய்தே
பொருள்தண்டிகை பட்டாடைகள் புகழ்ந்தேமிக
[அளித்தான்.

32. தாதைக்குயி ராயேபுகழ் தருசத்தி யதற்குத்
தீதற்றிட வேதாஞெரு தேசத்தை யளித்தான்
நீதிக்குள ராய்வாழ்ந்தனர் நிருபன்தனை யும்மே
ஏதுக்கிவை செய்ந்நன்றிமு னீடோவிது வென்றான்.

33. இருந்தோரனை வருஞ்சேவக மிவன்போலிலை யென்றார்
பரிந்தாதர வுடன்வேந்தனும் பகர்ந்தேதினம்
[புகழ்ந்தான்
குருந்தாகிய மகவானொடு குணவானெவன் றானே
தெரிந்தோதுநீ மன்னுவெனச் செப்பிற்றல கையுமே.

34. அவனுண்டவர் தனைப்பேணுத லாருஞ்செய்வர் மனையாள்
தவமுன்னிய மகிழ்நன்மொழி தள்ளாரறி வுள்ளோர்
புவியின்வரை வாழ்க்கையது பொல்லாதன வென்றும்
மகன்றானது துணிவெய்திய வதுவேநவ மென்றான்.

35. ஓமென்றுநல் லுரையாடியன் புடனேவரு வார்போ
லாமென்றுநல் லரசன்னுயர் வன்றேளினி லன்றே
தாமின்னிய வேதாளமும் சரமாருத மெனப்போய்த்
தாமுன்னிய தருமீதினிற் சென்றுற்றது தானே.

* செ, 30, 32 செய்யுட்கள் பொருள் விளக்கம் இல்லை.

## அருஞ்சொற்பொருள்

1. குருகு - கிரௌஞ்சமலை. ஊடுருவ - நடுவில் செல்ல. மாயோன் - திருமால்.

3. சோமப்பதி - ஊரின் பெயர்.

4. அரசன் பெயர் - சுத்தவிராசன். அரசியின் பெயர் - சோமப்பிரபை.

5. வீரபரணன் - ஒரு வேதியன். பகர்கின்றான் - சொல்கின்றான். சேவகம் - சேவை. தொண்டு - வேலை.

6. அவசரகாரர் - பணியாட்கள். சவுரியவான் - பலசாலி.

7. நல்குவை - கொடுப்பாய். வீரியம் - வீரம். காவலன் - அரசன்.

9. விடுதி - குடி இருக்கும் வீடு. ஒற்றாள் - உளவு அறிபவன்.

10. நாவலர் - பேச்சுவன்மை உடையவர். அந்தணர்-பிராமணர்.

12. புரவலன் - வள்ளல், அரசன்.

13. இறை - அரசன்.

14. பூபாலன் - அரசன்.

17. கங்குல் - இரவு. தாயார் - காளிதேவி.

18. பொறை - பொறுமை. மனுநெறி - மனுதர்ம சாத்திரம்.

19. யார்பால் - யாரிடம். தவிர்க்கும் - விலக்கும்.

20. இடர் - துன்பம். மன்னனுக்கு வரும் இடர் நின் மகனைப் பலி கொடுப்பதால் நீங்கும் என்று காளி கூறினாள்.

21. மறையவன், காளி கூறியதைத் தன் மனைவியிடம் கூறினான்.

22. சேய் - பிள்ளை. எணி - எண்ணி.

23. இலகும் - விளங்கும்.

25. மகமாயி - காளிதேவி.

26. பெருந்தேவி - காளிதேவி. பேணி - பாராட்டி.

29. சாமுண்டி - காளிதேவி. உற - பொருந்த.

31. மிஞ்சிய - மிகுதிப்பட்ட. மதி - அறிவு. புனைந்தனன் - அணிந்தான்.

32. நிருபர் - அரசர்.

33. சேவகம் - தொண்டு. மகிழ்நன் - கணவன்.

34. நவம் - புதிது.

வீரபரணன் கதை முற்றும்.

---

## 5. கூர்மக் கதை

முருக வணக்கம்

1. நலதோர்பவு ஷாகிய போதும்
நடுவேமிடி யாகிய போதும்
பலகாவிய மோதிடு போதும்
பகைபோல்நம னூர்வரும் போதும்
தலமேழையு மோர்சிறு போதிற்
சதிராய்மயில் வாகன மீதில்
வலமாய்வரும் வேலவர் பாத
மறவேன்மற வேன்மற வேனே.

வேதாளம் விளம்பிய ஐந்தாம் கதை

2. மஞ்சார்பொழில் சூழ்தரு வேறி
மறித்துப்பிடித் தேவலி மையுடன்
துஞ்சாதொரு வேதா ளத்தைத்
தோள்மீதினி லேயுறத் தூக்கி
நெஞ்சாலிரு கண்விழி தன்னல்
நீ[ள்]நித்திரை யற்றுழல் வான்முன்
அஞ்சாகிய தோர்கதை கேளென்
றலகைவிரித் தேயுரைத் திடுமே.

3. ஏரார்வயல் சோலைகள் சூழ்ந்தே
யெழில்மாமறை யோருறை விடமாய்
நூறுயிர மாமலை மேடை
நுழைதோரண வீதிகள் மேவி
மாறுதம ராபதி போல
மலர்மேலய னூர்பத விக்கு
வீறுமழ காகிய வங்க
விசையாவெனு மோர்நக ரத்தே.

4. சதுர்வேதிய னங்கொரு வன்விபூ
ஷணசுவாமி யெனுந்தா ளாளன்
புதல்வோரொரு மூவர்க ளுண்டப்
புதல்வோர்தமை யங்கவ னழைத்தே
அதிவேள்வியை யானுமிங் கேதா
னறியச்செய் தற்கோர் கூர்ம
மிதமாய்முந் நீர்தனி லெய்தி
இதுநீர்கடு கத்தரு கென்றான்.

5. நெடுநாள் மறையோ ராகமங்கள்
நீடு புராணஞ் சாத்திரங்கள்
அடைவே யுணர்ந்த மைந்தர்கடாம்
அலையா ழியினிற் போய்நாடி
யுடன்மே னுரையும் பாசியுடன்
உறுப்பை யடக்கித் தான்கிடக்கும்
படிதான் கண்டு இங்கிளையோன்
பார்த்தங் கிதனை யெடுமென்றான்.

6. மானூர் தங்கள் புணர்ச்சிமிக
வல்லே னிதனையெ டேனென்றான்
ஆனால் நடுவி லவர்தன்னை
யழைத்தே யெடுத்து வருகென்றான்
தேனு கியபோ சனசுகியன்
தீண்டே னிதனையெ டேனென்றான்
முன்னே நீயோ நானெனவே
நித்திரை சுகிய னெனவுரைத்தான்.

7. வேதா கமமூ வருமங்கோர்
விடங்க நகரி தனிலெய்தித்
தாதா வெனவாழ் பிரதாபனெனும்
தரணி வேந்தன் சபையணுகி
மாதா தையின்வேள் வியினடைவும்
வந்தே கூர்மமெ டாததுவும்
சூதா கியதோர் தங்கள்தங்கள்
சுகியும் வழக்கு முரைசெய்தார்.

8. செல்வா ரிங்கு வுரைத்தபடி
சோதித் திடுவோ மென்றெண்ணி
மல்லார் புயனூர் மன்னவனூர்
மாதை யழகா யலங்கரித்து
நல்லாய் போகச் சுகியிடத்தில்
நடவென் றனுப்ப மற்றவளும்
செல்லா முன்ன முடைநாற்றம்
சேரா தவன்தா சியைப்பழித்தான்.

9. அப்போ மன்னன் அவள்தாயை
யழைத்தே யிவள்தன் பிறப்பேது
செப்பா யென்ன மற்றவளுஞ்
சென்ம வரவு தெரிந்துரைப்பாள்
வைப்பா கியதாய் மரித்தருள
வளர்த்தே னூட்டின் பாலூட்டி
யிப்போ தறிந்த தெப்படியோ
வென்று ளரச னதிசயித்தான்.

10. ஆறு கியதோர் சுவைக்கறியும்
அமுதும் தான்போ சனசுகிக்குப்
பேறு யமர்த்திப் படைப்பித்தான்
பிணநாற் றமிதென் றிகழ்வுற்றான்
தேறு ததனை விசாரிக்கத்
தெரிந்தே கணக்க ருரைசெய்வார்
வீறாய் மயானத் தடிவயலில்
விளைந்த நெல்லீ தெனமகிழ்ந்தான்.

11. பட்டா லியற்றும் பஞ்சணையைப்
பாங்கா கியகித் திரைசுகிக்கு
இட்டா ரதுபஞ் சுறுத்துதென்றே
இரவி லிறைப்போ துந்துயிலான்
மட்டார் புயமன் னவன்கேட்டு
வளம்சோ தித்தோர் மயிர்கண்டு
கெட்ட விதுதான் கண்டறியேன்
கேட்கிற் புதுமை யெனவுரைத்தான்.

12. மூவர் செயலும் நன்றென்று
மூடிவேந் திருந்தான் அவர்காண
மூவர் தந்தையு மரித்தானவ்
வேள்வி யும்பொய்த் திடலாச்சு
ஏவ ரிவரிற் கூர்மந்தான்
எடுக்க வுரியர் பழியினது
பாவ மெவர்மேற் சுமக்குமென்று
பசாசு வினவப் பகர்ந்தருள்வான்.

13\. போக சுகியு முணற்சுகியும்
புகுந்த மணத்தாற் கண்டறிந்தார்
ஆக மதனிற் பஞ்சுறுத்தும்
மயிர்கண் டறிந்தோன் மிகப்பெரியன்
ஆகிற் கூர்மந் தனையெடுக்க
வவர்தா முரிய ரல்லரென்று
ஏக விடாமற் சோதித்தங்
கிருந்த விறைமேற் பழியென்றான்.

14\. என்றே மன்ன னுரைசெய்ய
வெளிதாய் மகிழ்ந்து வேதாளம்
ஒன்றே டொன்று வழுவாமல்
உரைக்கும் பொருளின் றிறங்கண்டு
நன்றே யென்று கொண்டாடி
நரபா லன்றோள் தனைவிட்டுச்
சென்றே மீண்டு மாயையெனச்
சேர்ந்தே தருவிற் பாய்ந்ததுவே.

### அருஞ்சொற்பொருள்

1\. நமனார் - எமன்.

2\. மஞ்சு - மேகம். பொழில் - சோலை. தரு - மரம்.

3\. ஏர் - அழகு. ஆர் - பொருந்திய. உறைவிடம் - வாழ்விடம். அமராபதி - இந்திரன் தலைநகரம்.

4\. சதுர்வேதியன் - நான்கு வேதங்களில் வல்லவன். கூர்மம் - ஆமை.

5\. அடைவே - முறையாக. ஆழி - கடல். ஆமை தலையையும் கால்களையும் தன் ஓட்டினுள் அடக்கிக்கொள்ளும் இயல்பையுடையது.

6\. மானார் - பெண்கள். புணர்ச்சி - சேர்க்கை.

7\. விடங்கம் - அழகு. தாதா - வள்ளல்.

10\. ஆறுகிய சுவை - இனிப்பு, புளிப்பு, துவர்ப்பு, கார்ப்பு, கைப்பு, உவர்ப்பு.

11\. மட்டு - வாசனை.

13\. ஆகம் - உடல். ஏக - போக.

14\. நரபாலன் - அரசன்.

கூர்மக்கதை முற்றும்.

---

## 6. சூரன் கதை

முருக வணக்கம்

1. சீறிவரு சூரரொடு சீறியம ராடுமவர்
   தீரமிகு சோரிபருகும்
நீறுபட மால்வரையி னூடுருவி யாடும்வினை
   வார்கள்வினை வேரதனையு
மாறுதவ லாகவம ரேசர்சிறை மீளவிடு
   மானகதி யேயுதவிடும்
வீறுமயில் ஏறியிடு மாறுமுக னூர்கையினில்
   வேலினுடை வீரியமதே.

வேதாளம் விளம்பிய ஆறும் கதை

2. மானபர னுமரசன் வேதமுனி யோடுரைசெய்
   வாய்மைதவ ரூதங்ஙனே
தானொருவ னேதமிய னய்மரம தேறிமிகச்
   சாகசமோ டலகையின்
நூலதனை யேயிறுக மாறியுயர் தோளதன்முன்
   னேடிவரு நேரமதிலே
ஆனநெறி யாலுலகு ளோரறிய வீறுகதை
   யாறின்வகை கூறியிடுமே.

3. சீருலவு தாமரையின் வாவியொடு சோலைபுடை
   சேர்ந்தமதில் சூழ்நகரதாய்
ஊர்களிலு மெங்கணிலு மோதவிட வாழ்வுபுனை
   யுஞ்சையெனு மாநகரிலே
பாரைமுழு தாள்புண்ய சீலனெனு மோர்நிருபன்
   பாலுறைபு ரோகிதரிலே
பேருரிய வர்ச்சுனசு வாமியொரு வன்மிகு
   பிரதாபனென வாழுமவனே.

வேறு

4. அன்னவன் வரத்தின் பேறா
   யருள்தெய்வ சுவாமி யென்போன்
மின்னுதித் தருளுஞ் சோமப்
   பிரபையென் றுளளோர் பெண்தான்

சொன்னவள் தன்னை ஞானி
 சூத்திர தாரி சூரன்
என்னுழை வருக்கல் லால்மற்
 றீகலோ மெனவ ளர்த்தார்.

5. பெண்ணவள் வளரு நாளில்
 பெருத்ததென் திசையில் மாற்றார்
புண்ணிய சீல னென்னும்
 புரவலன் தன்மேல் மோத
நண்பனப் போது பேசி
 நல்லது பண்ண வல்லார்
அண்ணலிங் காரோ வென்ன
 வருச்சுன சுவாமி யென்றார்.

6. மற்றவன் தனைய ழைத்து
 மன்னவ னினிது சொல்வான்
பற்றலர் நம்மேல் வந்தார்
 பகருநீ யவர்பாற் சென்று
சுற்றம தாக்கி மீளச்
 சொல்போக வெய்தித் தானும்
அற்றைநா ளவனும் பேசி
 யவர்களை யனுப்புங் காலை,

7. அருச்சுன சுவாமி பாலோர்
 அந்தணன் குமரன் வந்து
தரித்ததோ ரூரும் பேரும்
 சாற்றியே வுறவு பேசி
விரித்துமெய்ஞ் ஞான மெல்லாம்
 விளம்பியே மானைக் கேட்கப்
பரிச்சிலா யேழு நாளில்
 பாவையைத் தருவே னென்றான்.

8. தந்தையங் கவர்க்குச் சொன்ன
 தறிகிலான் போயோ ரூரில்
மைந்தனு மிருக்கச் சூரன்
 வந்துதான் வலிமை காட்டி.

யுந்தனக் கிளையாள் தன்னை
யுறவினிற் றருதி யென்றான்
சிந்தையன் புடனு ளேழில்
திருவினைத் தருவே னென்றான்.

9. இருவரு மிசைந்த வார்த்தை
யேதுமே அறிந்தி டாமல்
மருவியில் விருந்தாள் தன்முன்
வந்தொரு சூத்திர தாரி
விரைவுடன் கல்வி காட்டி
மெச்சுவித் தவள்பெண் கேட்கத்
தருவமென் றவளும் பேசச்
சம்மதித் தவனுஞ் சென்றான்.

வேறு

10. தந்தை தாயர் தமையனிம் மூவரும்
அந்த மூவருக் காசை யுரைத்திட
முந்தி யேழ்தின முற்றுமு கூர்த்தநாள்
வந்து மாதை மணஞ்செய்யென் றார்களே.

11. உறுதி யால்வந் தொருவர்க் கொருவர்தான்
அறிவி லாம லவர்க்குரை செய்கையால்
மறுகி நின்றனர் மற்றவர் கற்றதோர்
சறுவ கல்வியிற் றள்ளவொண் ணுதென.

12. ஏற்ற மாதிங் கெனக்குனக் கென்றுதான்
சாற்றி மூவருஞ் சண்டைவி ளைத்தனர்
நேர்த்தி யாய்மணக் கோலஞ்செய் நேரிழை
போற்று வார்முன் போயினள் மாயையால்.

13. தாதை யேங்கித் தனித்துமெய்ஞ் ஞானியை
மாது போமிட மற்றெது கூறென
காத லாலரக் கன்கொடு கன்னியைச்
சூதி னுற்சென் றனனெனச் சொல்லினன்.

14. அன்ன மிந்த வனத்திருந் தாளென
பின்னு ஞானியும் பேரடை யாளமாய்ச்
சொன்ன போதந்தச் சூத்திர தாரியும்
மின்னல் போல்சமைத் தானோர் விமானமே.

15. வீர மாயவன் மேவி விமானமேற்
சூர விற்கொடு தோற்றின னேறினன்
தாரு விந்த வனத்திடை சார்ந்துதான்
ஓர ரக்கனைக் கண்டவ னோதுவான்.

16. உன்னு நாளதுண் ணுமனு டாமலே
பொன்னைப் பூட்டிய புல்லர் மறுக்கவே
கன்னக் காரர் கருதிய வாறுபோல்
மின்னை நீகொண்ட வீரிய நன்றென்ருன்.

17. சுருதி தான்வல்ல சூரனீ யாரென்றன்
விருத றிந்திலை மேவிய நீயெனைப்
பொருது தான்கொண ராமலிப் பூவையைத்
திருடி வந்தவிச் சேவக நன்றென்ருன்.

18. சூர னென்றும் தோள்வலி யுண்டென்றும்
தீர மென்னுடன் செப்பிய நீயினி
யார டாவென் றரக்க னதட்டியே
வேரொ டேகிரி வாங்கினன் வீசினன்.

19 அல்லின் மேனி அரக்க னெறிந்திடும்
தொல்லை யோர்கிரி துண்டஞ்செய் தேபினும்
வில்லி னல்மிக வெற்றிகொள் சூரனும்
வல்ல பக்கண மாரிகள் தூவினன்.

20. சொற்ப சாரித்துச் சூரனெய் யுங்கணை
*யற்பொ ருந்து மரக்கனு ரத்தது
கற்ற னுறெனச் சோரியுங் கான்றிட
வெற்பு மேனும் மிகுதியெ றிந்தனன்.

21. சிலையொன் றக்கணை மாரிகள் சிந்தியே
மலைக ளைப்பொடி யாக்கிம லைந்துதான்
கொலைய ரக்கனைக் கூர்ங்கணை யொன்றினல்
தலைய றுத்தனன் சாகசம் பண்ணினன்.

22. வஞ்ச மான வரக்கன் மடிந்தபின்
அஞ்ச லஞ்சலென் றன்னமன் னள்தனை
விஞ்சு தேரின் விசைகொடு சூரனு
முஞ்சை மாநக ருற்றன னமரோ.

*தெளிவில்லை.

23. சொன்ன ஞானியுஞ் சூத்திர தாரியும்
மின்னைத் தந்தருள் வீரிய சூரனோ
டுன்ன தென்னது வென்றங்கு ரைக்கையாய்
மன்ன வன்முன் வழக்கினி லேறினர்.

24. பூவை தன்பொருட் டால்வழக் கேறிய
மூவ ருக்குளிம் மொய்குழ லாட்கினி
யாவர் தானுரி யாரென் றலகைதான்
காவ லாவினிக் கட்டுரை யென்றதே.

25. சொல்ல லாமிகு சூத்திரஞ் செய்யலாம்
வெல்ல லாவது வீரிய மல்லவோ
வல்லி சூரன் மனைவியென் றான்மன்னன்
அல்லி லேமீண் டலகையும் போந்ததே.

ஆக விருத்தம் 220

## அருஞ்சொற்பொருள்

1. சூரர் - சூரபதுமர். சோரி - இரத்தம். வீரியம் - வீரம். மாறும் - நீங்கும். தவல் - குற்றம்.

2. வேதமுனி - சாந்தசீலன். வாய்மை - சொன்ன சொல்.

3. வாவி - குளம். உஞ்சை - உச்சயினி என்னும் நகரம். புண்ணியசீலன் - அரசன் பெயர்.

4. பேறு - பயன்.

5. மாற்றார் - பகைவர். அண்ணல் - பெருமை பொருந்தியவன்.

7. மான் - சோமப்பிரபை; அருச்சுனசுவாமியின் மகள்.

8. தருதி - கொடுப்பாய். திரு - இலக்குமி, இலக்குமிபோன்ற சோமப்பிரபை.

9. இல் இருந்தாள் - வீட்டில் இருந்த மனைவி.

10. மூவரும் வந்து ஒரே பெண்ணை மணம் செய்துகொடுக்கும்படி கேட்டனர்.

11. அறிவிலாமல் - ஒருவர் சொன்னதை மற்றவர் அறியாமல். மறுகி - மயங்கி.

12. சாற்றி - சொல்லி. நேரிழை - ஒழுங்கான அணிகளை அணிந்தவள், சோமப்பிரபை. மூவரும் சண்டையிட்டுக்கொண்டிருந்தபொழுது மணமகள் அரக்கன் மாயையால் மறைந்தாள்,

13. மெய்ஞ்ஞானி அவளை ஓர் அரக்கன் கொண்டு சென்றான் என்று கூறினான்.

14. சூத்திரதாரி, அக் காட்டிற்குச் செல்ல ஒரு விமானத்தைச் சமைத்தான்.

15. விற்கொடு - வில்லைக்கொண்டு.

16. புல்லர் - அற்பர். உடாமல் - உடுத்தாமல். மின் - மின்னலைப் போன்ற இடையுடையவள்.

17. சுருதி - வேதம். விருது - சிறப்பு. மேவிய - பொருந்திய.

18. கிரி - மலை.

19. அல் - இருள். கணைமாரி - அம்புமழை.

20. கான்றிட - சிந்த. வெற்பு - மலை.

21. கூர்ங்கணை - கூர்மையான அம்பு.

22. அன்னம் அன்னாள் - சோமப்பிரபை. உற்றனன் - அடைந்தான்.

24. கட்டுரை - சொல்வாய்.

25. வல்லி - வல்லிக்கொடி போன்றவள், சோமப்பிரபை.

சூரன் கதை முற்றும்.

---

# 7. தலை வழக்குக் கதை

முருக வணக்கம்

1. வேகு மிவ்வுடல் கொண்டு வாழ்வது
மெய்யெ னுவுழல் பொய்யனைத்
தாக போக மறுத்து நின்னிரு
தாளின் மீதுவைத் தாளுவாய்
தோகை மாமயி லேறு கந்த
சுவாமி யேபர மேசுரன்
பாக மேவிய வாகு மாதுமை
பால னேகதிர் வேலனே.

வேதாளம் விளம்பிய ஏழாம் கதை

2. வேழ மாதுர கங்கள் சேனை
மிகுத்து மாற்றலர் திறையிட
வாழு மன்னவன் தருவின் மீதினில்
மறித்து மேறியவ் வலகையைச்
சூழி ருட்டினி லேபி டித்துயர்
தோள்கொ டேவரும் வேளையில்
ஏழெ னுங்கதை யின்பொ ருள்தனை
யிறைவ கேளென வறையுமே.

3. மாம லர்செறி சோலை யுந்திரு
வான சத்திர சாலையும்
ஏம ரத்தி னத்தின் மேடையும்
அகமி குத்துள வாடையும்
பூம கள்தினம் வாழ்வ தும்புகழ்
பூத லத்தினில் நீள்வதும்
சோம வேதிகை என்னு மோர்பதி
சோப னங்கள்மி குந்ததே.

4. உகம தாகிய ஞான மும்நல்
லுதார மாகிய மானமும்
புகழ தாகிய மேன்மை யும்மனம்
புலம தாகிய வாய்மையும்

மகிழ்வ தாகிய கேள்வி யும்மற
வாம லேசெயும் வேள்வியும்
நிகரி லாதுல காளு மன்னவன்
நீதி வங்கிச கேதுவே.

5. அன்ன மன்னவ னுக்கிர காளியை
ஆத ரித்தவள் கோயிலும்
வன்ன மாமதிற் கோபு ரந்திரு
வாச லும்நவ மாக்கியே
புன்னை மாமலர்ச் சோலை யும்புணர்
புண்ணிய தீர்த்தப் பெருக்கமும்
அந்ந கர்க்குளே தினந்தி னந்திரு
நாள்ந டத்துமந் நாளிலே.

6. எண்டி சைக்குளி னுள்ள பேர்களி
லியாவ ரும்மிக வந்துதான்
புண்ட ரீகநல் மலர்சொ ரிந்திடு
புண்ணிய தீர்த்தம தாடுவோர்
கண்டு காளியைப் போற்று வோர்மிகு
கடிய தீவினை மாற்றுவோர்
அண்டி யேவரம் வேண்டு வோரனை
வோரு மிப்படி யாயினர்.

7. ஆய தோர்திரு நாளி லெய்தியவ்
வூரி லங்கொரு காளியான்
தூய தன்குல மாது வோர்கன்னி
தோன்ற வந்தெதிர் கண்டனன்
நேய மாய்மதன் அம்பின் வாடியந்
நேர மேதன தூரிலே
போய வனுடைத் தந்தை தாயொடு
போத வேயிவை யோதினன்.

8. மைந்த னேதிய சொல்லு கந்தவன்
ஞானு மாதய வாகியே
அந்த நன்னக ரெய்தி மாதினை
யன்பு டன்பெறு தந்தைபால்

எந்தன் மைந்தனுக் குன்ம கள்தனை
யீந்தி டாயென மற்றவன்
தந்த னென்னன மாம ணஞ்செய்து
தைய லாள்தனை யருளினன்.

9. சோம வேதிகை தன்னில் வாழ்ந்தருள்
சுத்த மாகிய மருமகன்
மாம னைத்தொழு தேபெ ணைக்கொடு
மருக னூரிடை யெய்தியே
காம னுமிர தியுமெ னச்சில
கால மேவியி ருக்குநாள்
தாம கள்தனை யழைக்க வேமிகு
தந்தை மைந்தனை யேவினன்.

10. பத்தி யாலுயர் தமைய னவன்
பதியில் மேவின னன்புடன்
மைத்து னன்னொடு தங்கை தன்னையும்
வருத னங்கொடு வருகையில்
மெத்த வெய்யிலில் வெம்பி யேயவர்
வெய்ய காளிதன் கோயில்மு
னெய்த்து நீள்பொழி லூடு றைந்தவர்க்
கேதம் வந்தமை யோதுவாம்.

11. அங்கி ரும்மென வவரை வைத்துநல்
லன்பில் யாமளி கோயிலை
மங்கை தன்கண வன்வ லங்கொடு
வந்து தாளில்வ ணங்கியே
தங்கு முக்கிர காளி சந்நிதி
தன்னில் வேறொரு நினைவதாய்த்
துங்க வாள்கொடு சிரம ரிந்தெதிர்
தூக்கி னுயிரை நீக்கினன்.

12. என்ன வோதெரி யாது வந்தில
னென்று மங்கைச கோதரன்
மன்னி யேகினன் மாபி டாரிமுன்
மாண்டு போனது கண்டனன்

நன்னு தற்கது சொல்ல வேபய
மெண்ணி யேமிகத் துணிவுடன்
தன்னு டைச்சிர மரிந்து யாமளை
சந்நி திக்கெதிர் வீசினன்.

13. தாம தித்தன ரிருவ ரும்மெனத்
தான றிந்திட வந்துதான்
மாம திற்செறி கோயி லின்படி
மாண்ட வாறது நோக்கியே
பூமி யிற்புரண் டரற்று வாள்பொருமி
விம்மு வாளவ ளுருகுவாள்
தேம லர்க்குழ லாள்து யர்க்கடல்
தெளிய வோதிட லெளியதோ.

14. மூலையி லுந்தன் முகத்தி லுங்கையை
மோதி மோதி யரற்றியே
சிலையெ னும்நுத லாளி யாமளை
தேவி தன்னெதிர் செப்புவாள்
பலதி னம்முனை யாத ரித்திடு
பாவி யேன்வினை மேவவோ
தலைவ னுமெந்தன் தமைய னுந்நீ
தண்டி யேபலி கொண்டதே.

15. என்று காளிம னேகரி நல்லி
யாம ளைசிவ னுருடன்
மன்று ளாடிய காளி யேமக
மாயி யேகவு மாரியே
துன்று சூலக பாலி யேயெனத்
தோத்தி ரஞ்செய்து மங்கைதான்
இன்று றுந்துய ராறி லேனென
ஆரு யிர்கழிய எண்ணினள்.

16. கொடியெ னுமிடை யாளு மங்கொரு
கொடியை வாங்கியோர் கொம்பிலே
முடிவு கொண்டனள் தன்கழுத்திலும்
முடிவு கொண்டுயிர் முடிக்கவே

கடிய வுக்கிர காளி தானெதிர்
  கண்டு வந்துகை பற்றினள்
அடிப ணிந்தன ளன்னை யேதுய
  ராற்றி லேனெனச் சாற்றினள்.

17. சிரித்து மங்கைதனை யஞ்ச லென்றுமக
  தேவி மற்றவர்த னுவிதான்
தரித்தெ ழுந்தருள வருள்செய் வேனுடல்கள்
  தம்மி லங்கவர் தலையைநீ
பொருத்தெ னச்சொலத் துயரில் வாடியிடு
  யூவை நெஞ்சது கலக்கமாய்
மரித்த பேர்தலையு முடலு மாறுபட
  வைத்த போதுயிர்கள் வந்தவே.

18. சிறந்த தோர்தமைய னுடலி லேகணவன்
  சென்னி வைத்தது தன்னுடன்
பிறந்த வன்தன்தலை மகிண னுருடல்
  பொருத்த மாய்மிக விருப்பதும்
அறிந்து கண்டுதலை தானி றக்கியரு
  ளாற்கு மாரி திகைத்தனள்
நிறைந்த தோர்கணவ னுரெ னுவலகை
  நிருப நீயுரைசெ யென்றதே.

19. ஆதி யானவடை யாள மாயுடலை
  யார றிந்தவர்க ளாசையால்
மாதி னுக்குமுக சாயல் கண்டவர்கள்
  மகிண னென்றுவகை யுரைசெய்தான்
நீதி மன்னனிதை புகன்ற தும்நடு
  நேர மானயிருள் தன்னிலே
சூது செய்தலகை மீண்டுபோ யருகு
  சுற்றி யேதருவி லுற்றதே.

ஆக விருத்தம் 239

## அருஞ்சொற்பொருள்

2. வேழம் - யானை. துரகம் - குதிரை. திறை - கப்பம். மன்னவன் - விக்கிரமகேசரி. இறைவ - அரசனே. அறையும் - சொல்லும்.

3. செறி - நெருங்கிய, நிறைந்த. திரு - அழகு. பூதலம் -நிலவுலகம். சோபனம் - அழகு.

4. உதாரம் - கொடுத்தல் பண்பு. புலம் - அறிவு. திறம்பாமல் - மாருமல். வங்கிசசுவாமி, அல்லது வங்கிச கேது - அரசன் பெயர்.

5. திருநாள் - விழா.

6. புண்டரீகம் - தாமரை.

8. உகந்து - மகிழ்ந்து.

10. வெம்பி - வாடி. வெய்ய - கொடிய. ஏதம் - தீமை.

12. யாமளி - காளி. நன்னுதல் - நல்ல நெற்றியை உடையவள்.

13. தே மலர்க்குழல் - தேன் பொருந்திய மலர்களை அணிந்த கூந்தல்.

15. மனோகரி, யாமளி, காளி, கவுமாரி, கபாலி—இவை காளியின் பெயர்கள்.

16. ஆற்றிலேன் - பொறுக்கிலேன்.

17. துக்கத்தினால் மயங்கிய பெண் இறந்துகிடந்த தன் கணவன் உடலையும் தலையையும், தமையன் உடலையும் தலையையும் மாறிமாறிப் பொருத்தினாள். காளியின் அருளால் அவர்கள் உயிர்பெற்று எழுந்தார்கள்.

18. அவள் தமையன் உடலில் கணவன் தலையையும், கணவன் உடலில் தமையன் தலையையும் பொருத்தினாள். இந்நிலையில் அவளுக்குக் கணவன் எவன் என்று வேதாளம் கேட்டது.

19. மகிணன் - கணவன். புகன்றது - சொன்னது.

தலை வழக்குக் கதை முற்றும்.



## 8. காற்படிகன் கதை

முருக வணக்கம்

1. மந்தர கிரியைச் சற்றும் மனிதரா
   லசைக்கொ ணாது
   கந்தர மாரு தத்தைத் துரும்புக
   ளணுகொ ணாது
   செந்தழல் தன்னை யீக்கள் சேர்ந்துதான்
   மொய்க்கொ ணாது
   கந்தனைப் போற்று வார்மேல் காலனு
   மணுகொ ணாதே.

வேதாளம் விளம்பிய எட்டாம் கதை

2. அட்டதிக் கெண்ணு மன்னன் ஆண்மையி
   னுடனே மீண்டு
   மட்டவிழ் தருமே லேறி வாங்கிவே
   தாளந் தன்னைக்
   கட்டியே தோளிற் கொண்டு கடிதவ
   னேகுங் காலை
   எட்டெனுங் கதைகே ளென்று இறைவனுக்
   குரைக்கு மாங்கே.

3. வந்தனன் நடந்தே பார்க்க மாமயில் குவிந்தே யாடத்
   தெந்தன தென்ன வென்று சிலமது கரங்கள் பாட
   அந்தநல் தருக்க ளெல்லா மாமெனத் தலையசைக்கச்
   சந்தன சோலை சூழுந் தாமலி புரமென் றோரூர்.

4. மண்டல மெங்கும் போற்ற
   மாமனு வரம்புண் டாக்கிக்
   கண்டவர் தருவா மென்னக்
   கற்றவர் மிடியே தீர
   அண்டிய பேர்கள் வாழ
   அந்நகர் தன்னில் மேவி
   சண்டசிங் கன்தா னென்போன்
   தாரணி முழுதுங் காத்தான்.

5. மேவலர் போற்று மன்னன்
விருதுகள் சேனைக் கெல்லாம்
காவல னுன தீரன்
காற்படி கன்ரு னென்போன்
ஆவியு முடலும் போல
அரசனைப் பிரிவி லாதான்
சேவகங் கூறில் வீம
சேன னு நிகரி லாதான்.

6. இத்தல மெண்ணு மன்னர்க்
கேசது ரங்க சேனை
மெத்தமே கூட்டிக் கானில்
வேட்டையி லொருநாள் போகத்
தத்துவாம் பரியின் மேல்கால்
தாக்கலும் வாயு வேகம்
ஒத்தது வோட வேந்தன்
ஒருவனும் வருவ தானுன்.

7. ஓடிய பரியின் பின்னே
வுற்றகாற் படிக னென்போன்
கூடியே தொடர்ந்து சென்ருன்
கொற்றவன் தனித்த கானில்
வாடியே வாயும் பல்லும்
வறண்டதிங் கிளைத்தே னென்று
நீடுயர் சேவ கன்தான்
நீள்நெல்லிக் கனியை ஈவான்.

8. நெல்லியின் கனியைத் தின்று
நிருப னுந் தண்ணீர் கேட்ப
ஒல்லையின் கானி லெங்கு
மோடியே விரைந்து தேடி
அல்லியின் சுனைநீர் தந்தே
யளித்தபேர் விடாயுந் தீத்தான்
மெல்லவே இருவர் தாமும்
மீண்டனர் பதியி லாங்கே.

9. காற்படி கன்று னந்தக்
 கானிடைச் செய்த நன்றி
தார்பொலி புயத்தான் மன்னன்
 தன்னிலே மகிழ்ந்து நோக்கி
நேர்பரி வாரம் யானை
 சிறந்தபட் டாடை மாடை
நாற்புவி யறிய நல்கி
 நண்புடன் வாழு நாளில்.

10. அங்கொரு வேளை யந்த
 அரசன்காற் படிகன் றன்னைச்
சிங்கள தேச மன்னன்
 தோகையை நமக்குப் பேசி
இங்கினித் தருக வென்றான்
 இசைந்தவன் வணிகன் பின்னே
வங்கம தேறும் போது
 மன்னனை வாழ்த்திப் புக்கான்.

11. நன்மணி வகைக ளேற்றி
 நாளெண்ணித் தவசம் போட்டுப்
பன்னமா மரக்க லத்தின்
 பாய்தனை விரித்த போது
மன்னிய பொருளே வேட்ட
 வேசியர் மனது போலப்
பொன்னணி தேரே போலப்
 புணரியில் ஓடிற் றன்றே.

12. ஆழியின் நடுவே யெய்த
 அளவிலே கொண்டல் பெய்து
ஊழியின் மாரு தம்போல்
 ஒருபெருங் காற்று மோத
வாழ்திரு மரக்க லந்தான்
 வலஞ்சுழன் றுடைந்த போது
தாழ்வுறு மனிதர் மீன்கள்
 தமக்கிரை யாயி னரே.

13. கரத்தில்வா ளுருவிக் கொண்டு
    காற்படி கன்றா னென்போன்
தரத்துநெஞ் சினிமா றாமல்
    சண்டசிங் கனையே வாழ்த்தித்
துரத்துமீ னனைத்துங் கொன்று
    துன்னுமோர் கொடியைப் பற்றி
யுரத்தினின் வழியே சென்றங்
    குரகலோ கத்தைச் சேர்ந்தான்.

14. தோரண வாயில் மீது
    துலங்கிய மாட கூடம்
தேரணி வீதி சோதி
    சிறந்திடு தூப தீபம்
ஆரண மான ஞான
    வாக்கிய வார வாரம்
காரணம் நிறைந்து நின்ற
    காஞ்சன புரத்தைக் கண்டான்.

15. தக்கதோர் மணியும் பொன்னுந்
    தழுவிய மதில்கள் கோயில்
மிக்ககோ புரந்தே ருண்டாய்
    மேளவாத் தியமு ழங்கத்
திக்குளோ ரெல்லாம் போற்றத்
    தினமகா பூசை கொள்ளும்
துர்க்கைதன் பாத மாங்கே
    தொழுதவ னிருந்த காலை.

வேறு

16. உரக லோக மாதர் கூடி
    யுற்று கந்து வந்துதான்
துரக மேய கற்றி நின்ற
    துர்க்கை கோயில் நண்ணியே
அரிய பூசை செய்து நண்பி
    லங்கு தாள்வ ணங்கியே
வருவர் மீள்வ ராயி ருக்கும்
    வண்மை யான போதிலே.

17. குரும்பை யான முலைகள் ஏந்திக்
கொடிய தான இடையதும்
கரும்ப தான மொழிக ளும்வேள்
கணைய தான விழிகளும்
சுரும்பு லாவு குழலு மன்பர்
தொழுது மேவு கழல்களும்
அரம்பை யங்கு முண்டெ னவோர்
அரிவை வந்து தோன்றினாள்.

18. வன்ன மார னேவல் செய்ய
மயில்கள் சாயல் கண்டுதான்
தன்னி னங்க ளென்று மேவத்
தாளி ரண்டு நூபுரம்
தென்னெ னப்பு லம்ப நூறு
சேடி மார்கள் சூழவே
அன்ன மஞ்ச வந்த மாது
அவ்வை கோயி லெய்தினாள்.

19. கலையி லேறு கொற்ற மேன்மை
கண்டு தாள்வ ணங்கியே
மலரி தான காசி நாட்டி
வயிர வீமு காரியென்
பலவி தஞ்சொல் கீத நீதி
பாடி யாடி மீண்ட தோர்
குலவு மாதை நோக்கி யாசை
கொண்டு மெத்த மேவினான்.

20. மார னம்பி னைந்து கூட
வந்த சேடி மாருடன்
தீர வோதி மாதி னேடு
செப்பி னார்க ளொப்பியே
நாரி தானு மிவனை யங்கோர்
நளின வாவி மூழ்கென
வீர னண காற்ப டிகன்
மேவி வாவி மூழ்கினான்.

21. காம நோயில் வாவி மூழ்குங்
காற்ப டிக னங்ஙனே
தாம லிப்பு ரத்தி லோர்த
டத்தின் வந்து தோன்றினன்
சேம மீதில் கண்ட பேர்கள்
நிருப னுக்கு ரைசெய்தார்
போமெ னமு னேடி யேமுன்
னுடன ழைத்துப் போயினர்.

வேறு

22. வாரியின டந்ததும் மரக்கலமு டைந்ததும்
நீரிலேவி ழுந்ததும்பின் நெடியதான கொடியதுந்
தூரிலேவி ழுந்ததுமோர் துர்க்கைகோயில் கண்டதும்
ஊரில்வந்த வண்மையும்பெண் ணுற்றவாறு மோதினன்.

வேறு

23. வேந்த னீது கேட்டு வந்து
மேதி னிக்க மைச்சரில்
போந்த பேரை வைத்த வன்பின்
புணரி யூடு கொடிவழிச்
சார்ந்து தானி றங்கி யையைத்
தலத்துக் கோயில் கண்டபின்
வாய்ந்த தோகை மன்ன வன்முன்
மற்றை நாளு மேவினள்.

24. மணமு லாவு குழல்மின் னள்தன் வடிவு கண்டு மன்னனும்
இணைய தில்லை யிவளை மாத ரென்று வந்து நின்றனன்
கணைய தான கண்ணி கண்டு காதல் கொண்டு மன்னனை
யணைய வெண்ணி யாங்கோர் சேடி தனைய ழைத்த
[னுப்பினள்.

25. வந்து சேடி சொல்லும் வண்மை மன்ன னும் விரும்பியே
யந்த மங்கை தன்னை யிங்க ழைத்து வாரு மென்றனன்
முந்தி யோடி யுரைசெய் தார்கள் மோக மான வஞ்சியும்
சிந்தை யன்பின் தெய்வ ரம்பை செய்கைபோல
[வெய்தினள்.

26. கண்ணி ளுேடு கண்பொ ருந்து காலே யிங்குன் மாலதாய்
எண்ணி யெண்ணி மார னம்பி னீட ழிந்து வாடினேன்
அண்ண லேயிந் நாக லோக மாளு ரகம களியான்
திண்ணி தான காம நோயைத் தீர்க்கை காணு
[மார்க்கமே.

27. எந்தை யிங்கெ னக்கெ னன்பி
வீந்த வூரி ரண்டினுள்
முந்தி யிட்ட காமி யங்கள்
முழுத ளிக்கு மங்கயொரூர்
சிந்தை யுற்ற சென்ம மான
தீர்க்கு கின்ற தங்கொரூர்
அந்த வூரை யான ளிப்ப
னன்பி லென்னை மருவினுல்.

28. அரிவை கூறுஞ் சொல்தெ ரிந்தங்
கரச னன்பி னுரைசெய்வான்
உருகு கின்ற தோழ னும்மென்
னுயிரு மைந்த னும்மிவன்
மரபு மேன்மை யாண்மை ரூபம்
வாய்மை தூய்மை யுள்ளவன்
இரதி யும்வில் வேளு மென்ன
விவனும் நீயும் மேவுவீர்.

29. என்று மன்ன னேத நன்றி
தென்று தானி சைந்தனள்
அன்று காற்ப டகன் கையி
லரிவை தன்னை யருளியே
நின்று கூறு வானி ரண்டு
நெல்லி யங்க னிக்குமான்
ஒன்று வந்து திக்கு மாறு
மொன்றென் மீதி லுண்டென்றுன்.

வேறு

30. காவல னுரைத்து கந்து கன்னி தன்னை யுங்ஙனே
சேவ கன்வ சத்தி வீந்து தீரனுகி மீளவும்
வாவி மூழ்கி யேதன் னூரில் வந்துவீற் றிருந்தனன்
யாவர் செய்த நன்றி மேன்மை யாகுமென்ற தலகையே.

**31.** அருகனேவ லாலு முன்ற
அரச னீது ரைசெய்வான்
திரைகடற்கு ளோடி மீள்வர்
செய்யொ ணுத செய்வரே
ஒருவர் சோற்றை யுண்டபேர்க்க
துண்ட தேயவ் வேலையுள்
அரசனங்கொ ழித்து மாதை
யருளு மாண்மை யார்செய்வார்.

**32.** என்று கூற வேயிதாமென்
றுகந்த வலகை தானது
துன்று மேழை யர்க்கொ
ராசை சொல்லியே திரும்புமோர்
கன்று மற்பர் சிந்தைபோற்
கழன்று தோளி ருந்துதான்
நின்று யர்ந்த தருவின்
மீது நிபிடமாயு றைந்ததே.

ஆக விருத்தம் 271.

## அருஞ்சொற்பொருள்

**1.** மாருதம் - காற்று. செந்தழல் - எரிகின்ற நெருப்பு. அணுகொணுது - நெருங்கமுடியாது.

**3.** மதுகரம் - வண்டு.

**4.** தாமலிபுரம் என்பதைச் சண்டசிங்கன் என்ற அரசன் ஆண்டு வந்தான்.

**5.** காற்படிகன் - சண்டசிங்கனது சேனைத்தலைவன்.

**9.** மாடை - பொன்.

**11.** புணரி - கடல்.

**12.** கொண்டல் - மேகம்.

**13.** துன்னும் - பொருந்தும். உரகம் - பாம்பு. உரகலோகம் - நாகலோகம்.

**14.** நாகலோகத்தில் காஞ்சனபுரம் என்பது ஓர் ஊர்.

**16.** உகந்து - விரும்பி.

**17.** வேள் - மன்மதன். கழல் - வீரச் சதங்கை. இது பாதத்தைக் குறித்தது. அரம்பை - அரம்பை என்னும் தேவலோக நடிகை.

18. நூபுரம் - காலணி. சேடிமார் - தோழியர். அன்னம் அஞ்ச - இவளது நடையைக்கண்டு அன்னப்பறவை வெட்கப்பட. அவ்வை - துர்க்கை.

20. மாரன் - மன்மதன். காற்படிகன் அவனது யோசனைப்படி ஒரு வாவியில் மூழ்கினன்.

21. மூழ்கிய காற்படிகன் தாமலிப்புரத்தில் இருந்த ஒரு குளத்தில் வந்து கரையேறினன்.

22. வாரி - கடல். காற்படிகன் தாமலிப்புரத்து மன்னனிடம் தான் கடலில் புறப்பட்டது முதல் அதுவரையில் நடந்த நிகழ்ச்சிகளைக் கூறினன்.

23. ஐயை - துர்க்கை.

25. வஞ்சி - வஞ்சிக்கொடி போன்ற பெண்.

26. மால் - மயக்கம்.

27. மருவினல் - சேர்ந்தால்.

28. அரிவை - பெண். மரபு - பரம்பரை. மேவுவாய் - பொருந்துவாய்.

29. ஓத - சொல்ல. இசைந்தனள் - சம்மதித்தாள்.

30. கன்னி - நாகலோக மகள்.

31. செய்யொணுத - செய்யக்கூடாதவை. ஒழித்து - தனக்கு வேண்டாவென நீக்கி.

32. துன்று-பொருந்திய. நிபிடம் - நெருக்கம்.

**காற்படிகன் கதை முற்றும்.**

## 9. இரத்திருபதி கதை

முருக வணக்கம்

1. *கோடேறி யாயுகதி யமணர்பே ரரசர்
கழுவேறி யுழல்பிறவிபோம்
மேடேறி யானுந்த னருளேறி யேசொர்க்க
மீடேற நாளேதுதான்
மாடேறு திருநீறு நாடோறு மறுசமய
மருளேறு சமணர்கழுவில்
கர்டேற வடியவர்க ளீடேற வேகான
மயிலேறு கதிர்வேலனே.

வேதாளம் விளம்பிய ஒன்பதாம் கதை

2. புடைவாற நெறிவேறு தெரியாத விருளான
பொழுதென்று சலியாமலே
யுடைவாளி னெடுசென்று தருவேறி யவன்மீள
வொருகையி னல்வாரியே
தொடைமார்பி னுயர்தோளின் மிசையேறிக் கொண்[டுமே
சுளியாமல் வருபோதிலே
அடைவாக வருமொன்ப தாங்கதை யின்றிறமை
யரசனுக் குரைசெய்யுமே.

3. விரிவான வகழ்வாரி யெனவானி லுயர்மேக
மிகநாடி யவைகூடியே
கருவாசை புனல்மூழ்கி யதுவாரி மிகுமீது
கனமேரு விதுவாமெனப்
பெருவானில் மழைதூவ வருமாறு குளமேரி
பெருவாவி தொறுமூறரூன்
ஒருநாளும் வடியாத வணேமேவி விளைவான
தொருசேனை நகரானதே.

வேறு

4. ஓதுமந் நகரிலே யொருசொல் வாய்மையால்
ஆதுலர் செல்வமா யமரர் கோனெனத்
தீதற வோதுசெங் கோல்செ லுத்தியே
மேதினி யாள்பவன் வீர தேவனே.

---

*தெளிவான பாடமில்லை. வரி 1—2.

5. மேவலர் தொழுகழல் வீர தேவனும்
தேவியென் னுமாபதி யென்னுஞ் சேயிழை
பூவையைப் புணர்ந்துதான் பொருந்தி வாழுநாள்
காவலர்க் குற்றதோர் கருமங் கூறுவாம்.

6. கண்ணிலார் முகத்தினிற் காட்சி போலவும்
பண்ணிலார் பவிசுபோல் பரமன் தாள்தினம்
எண்ணிலா வுயிர்கள்போ லியன்ற கல்விநூல்
நண்ணிலார் குலத்தினில் நலத்தைப் போலவும்,

7. அந்தமாங் குயமிலா வணங்கின் பெண்மைபோல்
சந்தத மணமிலாப் பூவின் தன்மைபோல்
பைந்தமிழ்ப் பரிவிலான் பாடும் பாடல்போல்
மைந்தரை யின்றியே மன்னன் வாடினன்.

8. ஆயதோர் காலையி லரச னங்குள
தூயவே தியர்தமைத் தொழுது சொல்லுவான்
சேயுளோர் பெறுகதிச் சீருஞ் சேயிலார்
போயுறை கதியும்நீர் புகலுவீ ரென்றான்.

9. மனதினிற் பாலர்க்கு வருந்து மன்னன்முன்
புனையுறு முலகியற் புகலொ ணாதினித்
துணிவுறச் சொல்லும்நீர் சொலவும் வேணுமென்
றினையவே தியரெணி யிறைவற் கோதுவார்.

10. தந்திரப் பெருக்கமும் றழைத்து வாழ்வது
மிந்திரத் தருவென வேதுண் டாகினும்
அந்தமாய் வினவுவார் வார்த்தை கேட்பரோ
மைந்தருண் டோவென மனிதர் கேட்பரால்.

11. மதமுடன் பாரினில் வாழும் வாழ்வெனும்
அதிகசம் பத்துமே யார்க்கும் நிற்குமோ
இதமுடன் சந்திரா தித்தர் நாள்வரைச்
சதமினி புத்திர சம்பத் தென்னுமே.

12. தரித்துட லெடுத்ததுஞ் சதமன் றியாவர்க்கு
மரித்திடில் பின்புதான் மைந்தர் தந்தைக்குக்
கரத்தினல் நீர்நலக் கடன்க ழித்திடில்
பெருத்ததோர் பரகதி பெறுவ ரங்குமே.

13. வரமுள புண்ணிய வானென் றோதிடும்
உரையுள கதியுள வுயர்ச்சி தானுள
பரிவுள மனமுள பாலர் தோன்றிடில்
தரையுள நாளெலாந் தழைக்குங் கீர்த்தியே.

14. சீத்தரு மகவிலார் தமக்குச் சீரிலை
வாய்த்ததோ ரன்பிலை மனமு மங்கிலை
கீர்த்தியு மிங்கிலை கதியு மிங்கிலை
பார்த்திப னேயெனப் பழமை கூறினர்.

15. கண்டது மறையவர் கூறக் காவலன்
மண்டிய துயரொடு மறுகி நொந்துதான்
பண்டுநான் செய்தவப் பயனிற் பாலகர்
உண்டிலை யென்பதிங் குரைசெய்வீ ரென்றான்.

16. அவஞ்செய் துயர்க்கட லதனில்வீ ழாமலே
செபஞ்செய் வேள்வியுஞ் செய்து நாடொறும்
நவஞ்செய்தா னங்கள்தான் நம்பி நம்பியே
தவஞ்செயி லுனக்கினித் தனய ருண்டென்றார்.

17. புத்திர வாஞ்சையிற் புவியி னசையைக்
கைத்துற வமைச்சரைக் காக்கப் பண்ணியே
வெத்திய தானமும் வேள்வியும் செய்தபின்
சத்தியோர் பாகர்பாற் றவத்தின் மேவினன்.

18. அடைவுடன் மன்னவ னகோர மாகியே
திடமுட னநேகநாள் செயுந்த வத்தினைச்
சடைமுடிக் கடவுளுந் தன்னி லுன்னியே
விடைமிசை வந்துதான் வெளியிற் றோன்றினன்.

வேறு

19. சத்தியோர் பாகா போற்றி
சதுர்மறைப் பொருளே போற்றி
நித்திய விநோத போற்றி
நிறைபரஞ் சோதி போற்றி
மத்தனே போற்றி யெந்தன்
மனத்துயர் முடிப்பாய் போற்றி
அத்தனே போற்றி யென்றே
அரசனும் வணங்கி நின்றான்.

20. அந்தமன் னவனை நோக்கி
யரன்மகிழ்ந் தருளிச் செய்வான்
சிந்தனை யறியார் போலச்
செப்பிடு நினைவே தென்றான்
மைந்தனைத் தருக வென்றான்
மங்கைபங் காளன் தானும்
தந்தனன் என்னச் சாற்றித்
தான்சிவ லோகம் புக்கான்.

21. வரம்பெற்ற மன்னன் தானும்
மாநகர் தன்னை யெய்திப்
புரஞ்செற்ற கடவுள் தோன்றிப்
புகன்றதெல் லார்க்குஞ் சொல்லித்
திறம்பெற்று வாழு நாளில்
சிறுவனைப் பெற்று மற்றும்
அரம்பைக்கு நிகர்போ லாங்கோர்
அன்னமும் பெற்றான் மன்னே.

22. வீரதே வன்தா னென்னும்
வேந்தன்தன் மைந்தன் தன்னைச்
சூரதே வன்தா னென்னுஞ்
சொல்லினல் நாமஞ் சாற்றி
யாரிது பெறுவா னென்ன
அரிவைதன் நாமம் வையம்
ஈரேழுந் தானே போற்ற
இரத்தின பதியென் றிட்டான்.

23. மன்னவன் பெற்ற மாதின்
வடிவினை நோக்கிச் சொல்வார்
அன்னவள் தன்னைக் கல்வி
யாண்மைபே ரழகு வீரம்
உன்னிய வகையி னன்கும்
முள்ளவர்க் கருள்வோ மென்று
கன்னியை வளர்க்கு நாளில்
காவல னொருவன் வந்தான்.

24. வந்தவன் மாதைக் கேட்க
மன்னவன் வீர தேவன்
இந்தநற் குணங்கள் நான்கும்
நிறைந்தவர்க் கருள்வே னென்ன
அந்தநாற் குணங்க ளின்மை
யாகையா லவனுஞ் சென்றான்
முந்தியோர் சாதி நான்கில்
முறைமையோர் நால்வர் வந்தார்.

25. மறையவ னொருவன் முந்தி
மன்னவன் மகளைக் கேட்க
இறைவனிக் குணங்கள் வல்லார்க்கி
யானளித் தருள்வே னென்றான்
குறைவற வேந்தன் சொன்ன
குணங்களும் வேத நான்கும்
அறுதொழி லாளன் கூற
வதிசயித் தரசன் நின்றான்.

26. வேந்தனிங் கொருவன் நின்று
விளம்புவான் கல்வி வல்லேன்
ஆய்ந்ததோர் குலமும் வல்லேன்
ஆண்மையு முடைய னுவேன்
சாந்தமா நீதி ஞானத்
தகைமையு முடைய னுவேன்
ஏந்திழை தனைத்தா வென்ன
இறைவனு மகிழ்ந்தி ருந்தான்.

27. செட்டியங் கொருவன் சொல்வான்
சித்திரத் தொழிலும் வல்லேன்
ஒட்டிய குணங்கள் நான்கு
மொன்றொழி யாம லுள்ளேன்
வெட்டிவெல் வதுவுங் கல்வி
விளம்பிவெல் வதுவும் வல்லேன்
கட்டியே யெனக்கு நீங்கள்
கன்னியைத் தருக வென்றான்.

28\. சூத்திர னொருவன் பின்னைச்
சொல்லுவான் கல்வி ஞானச்
சாத்திரம் பலவும் வல்லேன்
சராசர மனைத்தும் பேசும்
வார்த்தையுங் குறியும் வல்லேன்
மற்றுமிக் குணங்கள் நான்கும்
பார்த்திடி லெனதே யாகும்
பாவையைத் தருக வென்றான்.

29\. கூடியிந் நால்வர் சொன்ன
குறிப்பினால் வல்ல பத்தால்
ஊடறுக் கொண்ணு தங்கண்
ஒருவருக் கொருவர் தோலார்
நாடுமந் திரியர்க் கோதி
நரபதி யுசாவி னின்றான்
தேடிலிங் குரியார் யாரோ
செப்பெனு மலகை தானே.

30\. மெத்தவே யலகை சொன்ன
விசாரமாங் கதையை மன்னன்
புத்தியா லாய்ந்து நோக்கிப்
புகலுவான் குலமல் லாதோர்
எத்தனை கல்வியேனும்
ஏந்திழைக் குரியா ரல்லர்
ஒத்ததோர் குலமாய்க் கல்வி
உள்ளமன் னவனுக் கென்றான்.

31\. காவலன் விரித்துச் சொன்ன
கதையினிற் பயனு மென்று
நாவினில் முருகன் பாதம்
நாள்தொறுந் துதிசெய் வார்மேல்
தீவினை மாயு மாய்கை
செய்கைபோல் மாய மாகித்
தாவியே யலகை மீண்டுந்
தருவினி லுற்ற தன்றே.

ஆக விருத்தம் 302.

## அருஞ்சொற்பொருள்

1. உழல் - வருந்தும்.

2. மீள - மீண்டும். மிசை - மேலே.

3. புனல் - நீர்.

4. ஆதுலர் - ஏழைகள். அமரர்கோன் - தேவேந்திரன்.

5. மேவலர் - பகைவர்.

6, 7. ஆசிரியர் அரசனுக்குப் பிள்ளைகள் இல்லை என்பதை இவ்விரண்டு பாக்களிலும் பல உவமைகளால் விளக்குகின்றார். இவ்விரு செய்யுட்களும் படித்து இன்புறத்தக்கவை. நண்ணிலார் - நெருங்காதவர். மதி - அறிவு. பரிவு - அன்பு.

8. வேதியர் - வேதங்களில் வல்லவர். சேய் - பிள்ளை. சீர் - சிறப்பு. புகலுவீர் - சொல்லுவீர். புகலொணாது - சொல்லமுடியாது. இறைவன் - அரசன்.

10. இந்திரதரு - கற்பகமரம். எவ்வளவு செல்வமிருந்தாலும் பிள்ளைகள் உண்டோ என்று கேட்பதுதான் மனித இயல்பு.

11. சம்பத்து - செல்வம். சதம் - நிலைத்திருப்பது. பிள்ளைப்பேறே நிலைத்திருப்பது.

12. பரகதி பேறு - மோட்சபாக்கியம்.

13. நரர் - மனிதர். கீர்த்தி - புகழ்.

14. பழமை - பழைய நூற்செய்தி; பிள்ளை இல்லாதார் நிலையைப் பழைய நூல்களில் சொல்லியுள்ளபடி வேதியர் அரசருக்குக் கூறினர்.

11-14 ஆகிய நான்கு செய்யுட்களும் பிள்ளைப்பேற்றின் சிறப்பினை விளக்குகின்றன.

15. மண்டிய - மிகுந்த. மறுகி - மயங்கி. பண்டு - முன்பு, முற்பிறப்பு.

16. செபம், வேள்வி இவற்றை இறைவனை நம்பிச் செய்தால் பிள்ளை பிறக்கும் என்று வேதியர் உரைப்பர்.

17. சத்தி - உமாதேவி. சத்தி ஓர் பாகர் - உமாதேவியை இடப் பாகத்தில் தாங்கியுள்ள சிவன்.

18. சடைமுடிக் கடவுள் - சடைமுடி அணிந்த சிவன். எண்ணி - நினைத்து. விடை - எருது.

19. அரசன் சிவனைத் துதித்தல். சதுர்மறை - நான்கு மறைகள். அத்தன் - அப்பன். போற்றி - வணக்கம். மத்தன் - பித்தன்.

20. அரன் - சிவன். தந்தனம் - கொடுத்தோம்.

21. புரம் - முப்புரம்; பொன், வெள்ளி, இரும்பு ஆகிய மூன்றால் அமைந்த தனித்தனி நகரங்கள். செற்ற - அழித்த. கடவுள் - சிவன். புகன்றது - சொன்னது. அரம்பை - தேவலோக நடன மகள். மன்னோ- அசைச்சொல்.

22. சூரதேவன் - சிவன் அருளால் வீரதேவனுக்குப் பிறந்த மகன். இரத்தினபதி - வீரதேவன் மகள். கல்வி, ஆண்மை, பேரழகு, வீரம் இவை உள்ளவனுக்கே தன் மகளைத் தருவதாக மன்னவன் சொன்னான்.

24. இறந்தவர் - சிறந்தவர். நான்கு சாதி - அந்தணர், அரசர், வணிகர், சூத்திரர் என்னும் நான்கு சாதிகளும்.

25. அறுதொழில் - ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், பெறுதல். இத்தொழில்கள் பிராமணர்க்கு உரியவை.

27. செட்டி - வணிகன். குணங்கள் நான்கு - நான்கு குணங்கள். அரசன் மணமகனுக்கு இருக்கவேண்டும் என்று கூறிய நான்கு குணங்கள். கல்வி, ஆண்மை, பேரழகு, வீரம் என்பவை.

28. சராசரம் = சரம் + அசரம். அசையும் பொருள்களும் அசையாப் பொருள்களும். பாவை - பதுமை; பதுமை போன்ற அரசன் மகள்.

29. தேடில் - ஆராயின்.

30. ஏந்திழை - இரத்தினபதி.

## இரத்தினபதி கதை முற்றும்.

## 10. மதனசேனை கதை

முருக வணக்கம்

1. விளங்கு சூரியன் எழுவது மாய்வதுங் கண்டு
வளர்ந்து நீங்குவ தறிந்துனைப் போற்றிலே னாய்ப்
பிளந்து குன்றமு டுருவவே லெறியுமெம் பிரானே
வளர்ந்த பன்னிரு புயத்தனே வள்ளிநா யகனே.

வேதாளம் விளம்பிய பத்தாம் கதை

2. புத்தி யாற்றலாற் புரவலன் மீண்டுமக் கானில்
கொத்த ருத்தனி லேறியே யலகையைக் கொண்டு
மெத்த கங்குலின் வீரியன் மூன்வரும் போதில்
பத்தெ னுங்கதை கேளென வலகையும் பகரும்.

3. சிகர கோபுர மதில்முதல் செம்பொன்னா லயங்கள்
நிகரி லாவயி டூரிய மேடைகள் நிறைந்து
நகர மெங்குமந் நகரையே நிகரிலை யென்ன
மகர மென்றொரு பதியுள மாநில மதனில்.

4. காரி யங்களுங் காலமு மிடமுமே யறிந்து
பாரில் நீதியு முதாரமும் படைத்துல காள்வோன்
சேர லர்க்கொரு சிங்கமே யனையதோர் செம்மல்
வீர னென்பவ னந்நகர் மேவுகா வலனே.

5. அத்தி தத்தியே மரக்கல மங்குமின் றோட
வித்தை தத்துவ ஞானமே மிகுந்தவ னாகி
யெத்த லத்தினு மென்னவந் நகரினில் வாழ்வோன்
அத்தி தத்தனென் றொருவனவ் வணிகரிற் றலைவன்.

6. சதுர னாகிவாழ் தத்தனல் தவப்பய னாலே
பதமை யாங்குண தத்தனென் றேயொரு பாலன்
அதிவி தத்துட னங்கவன் தோன்றிய பின்னர்
மதன சேனையென் றொருமகள் தோன்றினள் மாதோ.

7. பெருந்த வத்தினால் பெற்றதோர் பிள்ளையும் பெண்ணும்
மருந்து போலவே வளருநாள் மதனசே னையைத்தான்
பரிந்து தந்தையுஞ் சமுத்திர தத்தற்குப் பரியம்
பொருந்தி யீவனென் றன்புடன் வளர்த்தனன் புகழால்.

8. மருமி குத்திடு மணத்தையும் மலரையும் போலப்
பருவ முற்றிய தேனையும் பாலையும் போல
வொருமை பெற்றிடு முடலையு முயிரையும் போலத்
தரும தத்தனென் றொருவனுங் குணதத்தன் தோழன்.

9. பள்ளி யோதியே பலகலை நூல்களும் பயிற்றித்
தெள்ளி தாகிய செட்டிமத் தொழில்களுந் திருத்தி
மெள்ள வேவய தெண்ணிரண் டானது வென்னத்
துள்ளி யேவிளை யாடிநற் றேழமை புரிந்தான்.

10. புரைவ றப்பின்பு போதமும் ஒன்றியே பொருந்தி
இரவு மற்றவன் பகலுமென் னுமலெப் பொழுதும்
தரும தத்தனுந் தோழனுங் குணதத்தன் மனையில்
வரவும் போகவுந் தடையின்றி வாழ்கின்ற நாளில்.

11. அரம்பை போலவு மன்னமே போலவு மாசைக்
கரும்பு போலவுங் காமவேள் விழைரதி போலும்
விரும்பி யம்மனை கழங்குபந் தாடிமெய்ப் பருவந்
திரும்பி மேடைமேல் மதனசே னையுந்திகழ் வுற்றாள்.

12. மதன சேனையர் மங்கைய ருடன்விளை யாடி
மதன சேனையு மகிழ்ந்தினி திருந்திடும் போதில்
மதன சேனையாற் றருமதத் தனும்வருந் திடவே
மதன சேனையைக் கண்டனன் மதிமயக் குற்றான்.

13. காண்ட லும்மிவன் மார்பிடைக் கன்னிதன் கண்கள்
தாண்டி யோடியூ டுருவவே தைத்தவக் காலை
வேண்டி யேயுலை மெழுகதாய் விரகந்தான் கொண்டு
மீண்ட னன்தரு மதத்தன மென்னுமக் குமரன்.

வேறு

14. இந்த மதன சேனையா லிரங்கு கின்ற போதிலே
அந்த மதன சேனையா னடைய வந்த தாகவே
கந்த மதனை யேபனிநீர் கலந்து பூச வாடியே
பந்த மதனை யுந்துறந்து பந்த னைக்கு ளாயினன்.

15. தரும தத்தன் வாடுமெய்த் தளர்ச்சி கண்டி ரங்கியே
பெருமை பெற்ற தோழன்வந்து பேசி யிங்கி தேதெனக்
கரும முற்ற தேகிடாது கன்றி வெம்பு கின்றபோ [னன்.
தருமை யுற்று நொந்துவினவி யவனும் மீண்டு போயி

16. அற்றை நாளி லங்கோர்நா ளாறு நூறு கங்களாய்
மற்ற நாள்வி டிந்தபின்பு மதன சேனை பாலடைந்
துற்றபோ தணைத்த வேளை யொன்று கண்டு நின்றுதான்
நற்றி யென்னை மருவிடென்று நயமு ரைத்து
[வேண்டினன்.

17. நலமி குத்த மதன சேனை நாடிநாடி யங்ஙனே
தலையிறக்கி யேற நின்று தரும நீதி யுரைசெய்வாள்
குலம தற்க டாதவாறு கூறு சொல்வர் தாதைபால்
நிலம தித்த றிக்கை பண்ணி நீம ணந்து புணருவாய்.

18. தாதை யென்னை முன்னமே சமுத்திர தத்த னுக்கென
வாதி நாளு ரைத்தசொல் லறிந்து நீயு ரைப்பாயோ
நீதி சொல்லொ ருவர்தாரம் நினைக்கத் திண்ண மல்லவோ
போதி போதி யென்ன வாசை பொங்கி யங்கை
[பற்றினன்.

19. நாரி யஞ்சி யஞ்சி யேந
டுங்கி நின்று பகருவாள்
காரி நேர்ச முத்திர தத்தர்
கடிம ணஞ்செய் தருளினர்
ஆரி ருட்டி லீச னணை
யங்கு முந்தி யிங்குனைச்
சேர்வ னென்று சத்தி யங்கள்
செப்ப நம்பி யொப்பினன்.

வேறு

20. ஒப்பி நின்று தரும தத்த
னொருமையோ டகன்றபின்
செப்ப மான மதன சேனை
சிறிதுநா ளிருந்துபின்
வைப்பெ னுஞ்ச முத்திர தத்தன்
வந்துநன்ம ணஞ்செய்தே
கைப்பி டித்தரு ளிதத்தன் கன்னி
யோடு மேவினன்.

21. கன்னி யான மதன சேனை
கணவன்முன்வ ணங்கியே
யுன்னு வேளை கண்டு நாண
முற்றிடாம லுரைசெய்தாள்
என்னை முன்பு தரும தத்த
னிச்சையிற்கைப் பற்றியே
தன்னை மேவி டென்ற போது
சத்தியச்சொல் செப்பினேன்.

22. தந்தை தாய்ச முத்திர தத்தன்
தாரமாய ளித்தநாள்
முந்தி வந்து வுந்த னருகு
மோகம்நான்த ணிக்கிறேன்
இந்த வாய்மை தான்ம ரும
லின்றுநீமி றுத்தென
அந்த வாறி சைந்து நீய
னுப்பவேணு மென்றனள்.

23. உள்ள வாறு நன்றெ னுதொ
ளித்திடாம லுரைசெய்தாள்
கள்ள மில்லை மனதி லென்று
கணவனு மிசைந்தனன்
தள்ளி யேகி டென்ற போது
தனித்துமாது மிருளிலே
மெள்ள வன்ன மென நடந்து
மேவுகின்ற போதிலே.

வேறு

24. அல்லினில் மின்னல் போல
அரிவைதான் வருகை கண்டு
தொல்லையிற் கள்வன் சர்வ
சுவாமியென் றொருவ னங்கே
நில்லென வோடி வந்து
நிறுத்தின னவளை நோக்கி
வல்லியிவ் வுடைமை வேண்டில்
வாங்கிப்போ வென்று சொன்னாள்.

25. காரிகை யலங்கா ரத்தைக்
கண்ணினுற் கள்வன் னோக்கிச்
சீரியல் திருவோ வானோர்
தெரிவையோ புவியின் மானோ
ஆரிவ ளென்று தன்னுள்
அதிசயித் தவனுஞ் சொல்வான்
சேரிழை யல்லா திந்தச்
செம்பொனாற் பயனே தென்றான்.

26. தன்னையே தரும தத்தன்
தழுவவே தலைநாள் தன்னில்
உன்னிய வாறுந் தானங்
குரைத்ததும் மகிழ்ந னுர்க்குச்
சொன்னதும் பின்ன வன்றான்
சொன்னபின் னெப்பு மாறும்
கன்னிகை பகர்ந்து மீண்டு
காதலைத் தணிப்பே னென்றாள்.

27. மேனியி னிளமை தானும்
மிக்கதோர் கீர்த்தி தானும்
ஆனநல் லுயிர்கள் தாமும்
ஆற்றுநீர்ப் பெருக்கந் தானும்
மானனை யார்கள் தாமும்
வாரியிற் போட்ட பொன்னும்
போனபின் மீளு மோதான்
பூவையே புகன்றி டென்றான்.

28. இக்கணம் நின்பால் வந்திங்
கெய்திலே னுகிற் கோவைச்
சிக்கென வதைசெய் தோரும்
செய்ந்நன்றி குன்றி னோரும்
விக்கினம் பண்ணி யீவை
விலக்கின மூடர் தாமும்
புக்கதோர் நரகு தன்னில்
புகுதற்குக் கடவே னென்றாள்.

29. கொம்பனை யாளு நின்று
கூறிய வாறு கேட்டு
நம்பியே கள்வன் தானும்
நாரியைப் போய்மீ ளென்ன
வம்பமர் குழலி ளௗம்
மதனசே னையுமப் போது
தம்பதம் நோவ மேவித்
தருமதத் தனைப்போய்க் கண்டாள்.

30. மெல்லணை மீது ளானை
விழிதுயி லெழுப்பிச் சொல்வாள்
நல்லதோர் மணமு மின்று
நடந்தது தலைநாள் தன்னில்
சொல்லிய மொழியால் நின்னைத்
தோய்ந்திட வந்தே னென்னைப்
புல்கென வுரைக்க மாதைப்
போற்றியே தருமன் சொல்வான்.

31. குருவைமுன் னிகழ்தல் தானும்
கோயிலி னுடைமை தானும்
அருமறை யோர்கள் சொத்தும்
அடைக்கலப் பொருள்கள் தாமும்
நரபதிக் கிரண்டு தானும்
நம்பினர் குற்றந் தானும்
ஒருவர்தம் தாரந் தானும்
உளத்திலும் நினைக்கொ ணுவே.

32. அரிவையே தனியெண் ணும
லாரிருள் தன்னி லேதான்
வருவையோ வருகி லும்நீ
வந்ததே சத்தி யத்தின்
உரையெனக் கொப்ப தாச்சு
வொல்லையில் செல்வா யென்ருன்
கருதியே மீண்டு மாது
கள்வன்பா லிரவில் வந்தாள்.

33. மட்டவிழ் தரும தத்தன்
    மனையிற்றான் சென்ற வாறும்
கிட்டியே யவனை வாவென்று
    கேட்டதும் பின்னை யன்னான்
எட்டிய பரதா ரத்தை
    யுளத்திலும் நினையே னென்று
கட்டுரைத் ததுவும் நின்று
    கள்ளனுக் குரைத்து நின்றாள்.

34. சதிருடன் முன்னாள் செய்த
    சத்திய நெறியி னாலே
புதுமையா லவன்மே வாதே
    போமெனு மறிவால் வார்த்தை
யுதவியே தன்பால் வந்த
    வுறுதியால் மனம்வே றாகி
வதைசெயக் கள்வன் தானும்
    வாங்கிடா தனுப்பி விட்டான்.

35. தங்கிய வுயிர்போய் மீளச்
    சரீரத்தி லுறைந்தாற் போலும்
மங்கிய பொருள்கள் வந்து
    மடியினி லிருந்தாற் போலும்
பொங்கிய புலியின் வாயில்
    புக்கது மீண்டாற் போலும்
அங்கவள் சமுத்திர தத்த
    னருகினி லெய்தி நின்றாள்.

36. தழுவிடத் தரும தத்தன்
    சாற்றிய நெறியின் வாறும்
வழியிலே கள்வன் கண்டு
    வளைத்தது மவன்பாற் செய்தி
மொழியவே யவனும் மெச்சி
    முனிந்திடா தனுப்பு மாறும்
செழியனும் மகிழ்ந ளார்க்குச்
    சேயிழை யடைவே சொன்னாள்.

37. வெற்பென வந்த விந்த
விக்கின மிடையில் தள்ளித்
தற்பர னருளி னாலே
சார்ந்தனள் தீங்கி லாமல்
கற்புளா ளிவளே யென்று
கணவனு மதிச யித்துப்
பொற்புயந் தன்னில் மாதைப்
புணர்ந்துவீற் றிருந்தா னங்கே.

38. தாரத்தை யிசைந்தே யேவும்
சமுத்திர தத்தன் தானே
சோரத்தைத் வெறுத்து விட்ட
செல்வனுந் தத்தன் றானே
நேரிட்ட பொருளுக் காசை
நினைந்திடா திருடன் தானே
ஆரிவர் தம்மில் நல்லா
ரரசவென் றலகை கேட்கும்.

39. ஒருசொல்லா ரருக னாலே
உழலுமன் னவனுஞ் சொல்வான்
துரிசற நாண மின்றிச்
சொல்கையால் மகிழ்நன் தானும்
அரிதென விசைந்தான் நன்றி
அறிவிறல் தரும தத்தன்
விரிவிய ஞான முற்றி
வெறுத்தனன் பரதா ரத்தை.

40. செப்பிய விருவர் தம்மைச்
சிறப்பென வுரைக்கொ ணாது
ஒப்பிய தயவில் லாமல்
உயிர்களை வதைத்து நாளும்
வைப்பெனப் பறித்து நாளும்
வயிறது வளர்த்து வாழ்வோன்
கைப்பொருள் தன்னை விட்ட
கள்வனே நல்ல னென்றான்,

41. ஆமென வலகை தானு
மரசனை வியப்புற் றேதான்
காமுறு வேசி மார்கள்
காணெண மனத்தைப் போலும்
ஓமெனும் மாயை போலும்
ஓடியே மீண்டு மந்தத்
தேமிகு தருவின் மீதே
சேர்ந்துவீற் றிருக்குந் தானே.

ஆக விருத்தம் 343

## அருஞ்சொற்பொருள்

1. மாய்வது - மறைவது. பிரான் - தலைவன்.

2. ஆற்றல் - வலிமை. வீரியன் - வீரத்தை உடையவன்.

4. சேரலர் - பகைவர். செம்மல் - சிறந்தவன். வீரன் - அரசன் பெயர்.

5. அத்தி தத்தன் - வணிகர் தலைவன்.

6. அத்தி தத்தனுடைய மகன் - குணதத்தன்; மகள்-மதனசேனை.

7. மருந்து - உடல்நலம் காக்கும் மருந்து, அமிர்தம்.

8. மரு - வாசனை. தருமதத்தன் - குணதத்தனுக்குத் தோழன்.

10. புரை - குற்றம்.

11. அரம்பை - தேவலோக நடன மகள். அம்மனை, கழங்கு, பந்து என்பவை சிறுமியர் ஆடும் ஆட்டங்கள். அம்மனை - அம்மானை, பெண்கள் பந்துகளை மேலே தூக்கி எறிந்து விளையாடும் ஒருவகை ஆட்டம். கழங்கு - கழற்சிக்காய்கள் கொண்டு பெண்கள் ஆடும் ஆட்டம். திகழ்வுற்றாள் - விளங்கினாள்.

12. மதனசேனையர் - மதனசேனையின் தோழியர். மதனசேனையால் - மன்மதனுடைய சேனைகளால். விரகம் - வேட்கை.

14. மதனசேனையான் - மன்மதன். பந்தம் - பற்று. பஞ்சணை - ஐவகையான மெத்தைகள் இட்ட கட்டில்.

15. மெய் - உடல். வெம்புதல் - வாடுதல். அருமையுற்று - அன்புற்று.

16. தருமதத்தன் மதனசேனையைத் தன்னைக் கூடுமாறு வேண்டினான்.

17. மதனசேனை, தன் தந்தையை வேண்டித் தன்னை மணந்து கொள்ளும்படி தருமதத்தனிடம் கூறினாள்.

18. தாரம் - மனைவி. 'என்னைச் சமுத்திரதத்தனுக்கு மணம் முடிப்பதாக என் தந்தை முன்பே கூறியுள்ளார். எனவே, நான் அவருக்கு மனைவி. என்னை நீ விரும்புவது தவறு' என்று மதனசேனை கூறினாள்.

19. நம்பி - தருமதத்தன். ஒப்பினான் - சம்மதித்தான்.

21.
22. } திருமணம் ஆன பின்பு மதனசேனை தன் கணவனிடம் தருமதத்தன் வேட்கையைப்பற்றியும் தான் கொடுத்த வாக்குறுதியையும் விளம்பினாள்.

23. இசைந்து - சம்மதித்து. கள்ளம் - வஞ்சனை. மாது - மதனசேனை.

24. அல் - இருள். சர்வ சுவாமி - கள்ளன் பெயர். வல்லி - வல்லிக்கொடிபோன்ற மதனசேனை. உடைமை - நகைகள்.

25. காரிகை - பெண். திரு - இலக்குமி. வானோர் தெரிவை - தேவலோக மங்கை.

26. கள்வன் மதனசேனையை விரும்பினான். அவள் தன் வரலாற்றைக் கூறித் தருமதத்தனிடமிருந்து மீண்டு வரும் வழியில் அவனைச் சந்தித்தாள்.

27. இச்செய்யுள் பொருள் நயம் மிக்கது. மேனியின் இளமை, புகழ், உயிர்கள், வெள்ளப் பெருக்கம், பெண்கள், கடலிற் போட்ட பொன் இவை போனபின் மீண்டு வருமோ என்று கள்வன் கேட்டான்.

28. கோ - பசு. விக்கினம் - கெடுதி. ஈவை - ஈதலை, ஒருவர் செய்ய வந்த உதவியை. இச் செய்யுளும் பொருள் நயம் மிக்கது. மதனசேனை, வாக்குத் தவறியவரைப் பலருக்கு ஒப்பிடுகிறாள்.

29. கொம்பனையாள் - பூங்கொம்பு போன்ற மதனசேனை, வம்பு - வாசனை. தம்பதம் - தன் கால்கள்.

30. அணை - மெத்தை. புல்க - சேருக. போற்றி - பாராட்டி.

31. இச் செய்யுளும் பொருள் நயம் உள்ளது. உள்ளத்தில் நினைக்கத் தகாதவற்றுள் பிறர் மனைவியையும் குறிப்பிட்டுத் தருமதத்தன் பேசினான்.

32. ஒல்லையில் - விரைவாக. இச்செய்யுள் தருமதத்தனது பெருந்தன்மையை உணர்த்துகிறது.

33. மதனசேனை கள்வனிடம் சென்று நடந்ததை நடந்தபடி நவின்றாள். பரதாரம் - மற்றொருவன் மனைவி.

**34.** இச் செய்யுள் கள்வனது மனமாற்றத்தை உரைக்கின்றது. அவன் அவளைக் கெடுக்காமலும் அவள் நகைகளை வாங்காமலும் அனுப்பி விட்டான்.

**35.** இச் செய்யுளும் பொருள் நயம் உடையது. சென்ற உயிர் மீண்டும் உடலுக்குள் புகுந்தது போலவும், மறைந்த பொருள்கள் மடியில் வந்து இருந்தாற்போலவும், புலியின் வாயினுள் புகுந்தவர் மீண்டு வந்தாற் போலவும் மதனசேனை சமுத்திரதத்தன் பக்கத்தில் வந்து நின்றாள் என்று கூறுவது நயமுடையது.

**36.** மதனசேனை நடந்த விவரங்களை யெல்லாம் தன் கணவனிடம் மறையாது புகன்றாள்.

**37.** வெற்பு - மலை. தற்பரன் - இறைவன். சமுத்திரதத்தன் தன் மனைவியின் கற்பினைப் பாராட்டி மகிழ்ந்தான்.

**38.** தன் மனைவி சொன்னபடி அவளை ஏவிய சமுத்திரதத்தன், விரும்பியவளை வேண்டேனென்ற தருமதத்தன், மதனசேனையையோ அவள் நகைகளையோ வேண்டாத கள்வன் ஆகிய மூவருள் நல்லவர் யார்?

**39, 40.** விக்கிரமாதித்தன், பிறர் பொருளைப் பறித்து அதனால் வயிறு பிழைக்கும் கள்வன் மதனசேனையிடம் நடந்துகொண்டதே பாராட் டத்தக்கது என்று பதில் கூறினான்.

**41.** வேதாளம் அரசனை விட்டு ஓடி முருக்கமரத்தில் ஏறிக் கொண்டதற்குக் கூறப்பட்டுள்ள இரண்டு உவமைகளும் கவனிக்கத் தக்கவை. வேசியர் மனம், மாயை - இவ்விரண்டும் உவமைகள்.

**மதனசேனை கதை முற்றும்.**

---

## 11. மிருகாங்கபதி கதை

முருக வணக்கம்

1. காரான குழலொன்று கனியான மொழியொன்று
கயலான விழியொன்றுதான்
வாராரு முலையொன்று இயல்பாடி மடமாதர்
வலைமூழ்கி யுழலாமலே
ஓராறு முகமுங்கை யீராறு முயர்வேலு
மொருநாளு மறவாமலே
சீராக விசைபாடி யடியேனு முனையோதில்
சிவலோக மெனதாகுமே.

வேதாளம் விளம்பிய பதினோராம் கதை

2. மதிநின்று தளராவே தாளமுட னேமீண்டு
மன்னவன் பினுமங்ஙனே
எதிர்நின்று தருவேறி யேயல கையைப்பிடித்
திருதோள்கொண் டவனேகவே
அதினின்று விதமான கதையொன்று தானுண்
டரசனே நீகேளெனப்
பதினொன்றெ னுங்கதையி னுடைப்பயனை யிரவினிற்
பாராட்டி யேபகருமே.

3. கஞ்சமலர் வாவியும் பூங்கா வனங்களும்
கனகமதி ளுஞ்சூழ்ந்துதான்
விஞ்சைநக ரென்றொர்பதி யந்நகர மதனிலே
மேவியனை வோர்களுக்கும்
தஞ்சமென வேபுலி புல்வாய்க ளொருதுறையில்
தண்ணீ ரருந்தியிடவே
வஞ்சமற வோரரசன் வங்கிசத் துவசனெனும்
மன்னனங் கரசாள்வனே.

4. அந்தமன் னவன்றனக் கின்பமது வாகியே
யங்குரிய தேவிமார்தாம்
சந்தன குயத்திந்திர ரேகையெனு மங்கையுந்
தாரவல் லியெனுமவளும்

செந்திருவை நேரென்னு மிருகாங்க பதியென்னுந்
தெரிவையுட னேமூவர்தாம்
புந்தியுற வேமகிழ்ந் தேவாழு நாளினில்
புதுமையது விதமோதுவாம்.

5. தேசமதி லெங்கும் வசந்தகா லம்வந்து
தென்றலது மிகவீசவே
வாசமிகு மயிலிந்த்ர ரேகையுட னேதுவச
மன்னனொரு பொய்கையருகே
நேசமுடன் மேவியுறை போதில்மட மங்கைகுழல்
மீதில்மிகு வண்டுறையவே
வீசுகுழல் பொருமலவள் குறங்கில்மலர் வீழவே
நொந்துவே தனைவெம்பினள்.

6. அப்பொழுது தாதிமார் வந்திந்திர ரேகையை
யடைந்துபரி காரமெல்லாம்
செப்பமுட னேசெய் திருந்தனர்கள் மன்னவன்
தேவிதார் வல்லிமனையில்
ஒப்புரவு டன்சென்று மேடைதனி லேசெல்ல
உயருவா மதிகாயவே
கொப்புள மெழுந்ததங் கவள்மேனி தாதிமார்
கொண்டுபனி நீர்வீசினர்.

7. அரசனுந் தேவிமா ரிருவர்தம் செய்திகண்
டதிசயித் தேங்கியேதான்
விரைசெறியும் பூங்குழல் மிருகாங்க பதியினுடன்
மேவியுறை காலைதனிலே
உரைசெய்தனிக் குத்துலக் கைத்தொனி செவியிலுற
உறுகரமெ லாங்கனியவே
விரல்விதிர்த் தனளென்று கண்டவர்கள் புதுமையென
மேதினியி லுரையாடினர்.

8. உற்றமலர் தொடையில்விழ நோமிந்திர ரேகையும்
உயர்வானில் நிலவுதழலாய்ச்
சற்றுமுடல் சலியாது கொப்புளங் கொண்டதோர்
தார்வல்லி யென்னுமவளோ

குற்றுதொனி யால்கரம் கன்றுமவ ளோவெனக்
குலமன்ன னுமுன்னினன்
மற்றவர்கள் மூவரினு மிக்கமா தெவரென்று
மன்னவனை யலகைவினவும்.

9. மலர்குறங் கினில்வீழ நொந்ததொரு மங்கையு
மலர்ந்திடும் நிலவுதணலாற்
கலக்கமொடு கொப்புளங் கொண்டதொரு மங்கையுங்
கண்டுவே தனையெய்தினர்
உலக்கைகுத் துத்தொனியில் விரல்கன்று மன்னவள்
உற்றசுகி மற்றெந்னலாம்
இலக்கணமி தென்றன னென்றவவ் வளவிலே
அலகையுந் தருவுற்றதே.

ஆக விருத்தம் 352

## அருஞ்சொற்பொருள்

1. கார் - கரிய மேகம். கனிமொழி - இனிய சொல். கயல் - கெண்டை மீன். வார் - கட்டுதல். மாதர் வலை - பெண்களின் ஆசைவலை. உழலாமல் - துன்பப்படாமல். சீர் - செம்மை. பேணி - போற்றி, வணங்கி.

3. கஞ்சம் - தாமரை. கனகம் - பொன். விஞ்சை நகர் - வித்தியாதர நகரம். புல்வாய் - மான். வங்கிச தத்துவன் - அரசன்பெயர்.

4. குயிற்றி - பதித்து. புந்தி - புத்தி, அறிவு.

5. குறங்கு - தொடை. வசந்தகாலம் - இளவேனிற் காலம், சித்திரை, வைகாசி மாதங்கள். தொடைமீது மலர் வீழ்ந்ததால் இந்திர ரேகை துடித்தாள்.

6. மதிகாயவே - சந்திரன் நிலவை எரிக்கவே. உற்று - அடைந்து. இரண்டாவது மனைவியின் உடம்பில் நிலவு தாளாமல் கொப்புளங்கள் உண்டாயின.

7. விரை செறியும் - வாசனை நிறைந்த. பூங்குழல் - பூவை யணிந்த கூந்தல். விதிர்த்தனள் - நடுங்கினள். தொனி - ஓசை. உலக்கை குற்றுவதின் ஓசை கேட்டு மிருகாங்கபதி நடுங்கினள். அவள் கரம் கன்றி விட்டது.

8. இந்த மூன்று பெண்களில் மிக்க சுகி யார் என்று வேதாளம் வேந்தனைக் கேட்டது.

9. உலக்கை குற்றிய ஓசை கேட்ட அளவிலே எவளது கை கன்றியதோ அவளே மிக்க சுகி என்று வேந்தன் விடையளித்தான்.

மிருகாங்கபதி கதை முற்றும்.

## 12. அருச்சுனசுவாமி கதை

முருக வணக்கம்

1. கோலி வந்தபல பிணிக ளுங்கொடிய
வினைக ளுங்கடிய கோள்களுங்
கால னுங்கறுவி யேயெ னைச்சிறிது
கண்ணில் நோக்கியிட லாகுமோ
ஆல முண்டசிவ னருளு மாறுமுக
னடியி ணைக்கடிமை யாயினேன்
வேலு டன்பனிரு கரமு முண்டுதுணை
வேறெ னக்குநிக ராவரோ.

வேதாளம் விளம்பிய பன்னிரண்டாம் கதை

2. முன்னி ருண்டவிருள் தனையெ ணுமலே
மூர்க்க மாயரச னூக்கமாய்
தன்னி ரண்டுபத நோவ மீண்டுமுயர்
தருவின் மீதலகை யைக்கொடே
உன்னி நின்றுமொழி யாத மன்னனெறி
யொல்லை யிற்கடிது செல்லவே
பன்னி ரண்டெனுமோர் கதையை மன்னனுளம்
பதியவே யலகை பகருமே.

3. ஆர நாவிடை துதிக்கி னும்மணுகி
யந்த மாதல மிதிக்கினும்
சேர வேயெதிர் கொள்ளி னும்மருரு
சென்று மீள்பவரைப் பேணினும்
பார வெவ்வினை யறுத்து நல்லதொரு
பதம ளிக்குநதி சூழவாழ்
வார ணசியெனு நகர மொன்றுளது
மாநி லத்தில்வள மாகவே.

4. பைந்த மிழ்ப்புலவர் மன்னர் மண்டலிகர்
பரவு விஞ்சையர்கள் நகருளோன்
முந்து நான்மறை புராண மானதுவும்
மூவி ரண்டுவகை யங்கமும்

சிந்தை யுற்றுயர் தெளிந்த ஞானியொரு
தெய்வசு வாமியெனு மேன்மையான்
அந்த ஞானியுடை மைந்த னுமமது
வங்க நுர்ச்சுனசு வாமியே.

5. ஞான மாகியுயர் தெய்வ சுவாமியும்
நிகரி லாண்மையந் தண னுமோர்
ஆன மைந்தனுக் கெண்ணி ரண்டுவய
தான வாறதனை நோக்கியே
மேன கைக்குநிக ரெழில்ப டைத்துவளர்
இரத்தி னுபதி யென்னுமோர்
மானை யர்ச்சுன சுவாமி தாரமென
மாம ணஞ்செய்து கொடுத்தனன்.

6. ஆடல் மாமதனு மிரதி யும்மென
வறுமு கன்றனெடு வள்ளிதான்
ஈடு நேரெனவு மிந்தி ராணியொடு
குலிச வேந்தனவ னென்னவும்
தோடு லாவுகுழ லிரத்தி னுபதியுஞ்
சொல்லு மர்ச்சுனசு வாமியும்
மேடை மீதினில்வ சந்த காலமதில்
மேவி யேதுயி லும் நாளிலே.

7. எண்ணி யெண்ணிமிக வுண்டு டாமலும்
இருக்கு மற்பர்சில வுலுத்தர்தான்
மண்ணின் மீதினிலொ ளித்த மாநிதியம்
வந்து சோரர்கொடு போகைபோல்
பெண்ணெ னும்பொழுது பேயு நெஞ்சுருகு
மென்ப தேபிழைய மங்கையைக்
கண்ணில் நோக்கியோர் அரக்கனு மவன்முன்
கண்க ரந்துகொடு போயினன்.

8. அன்றி ராவணன் முயன்று வஞ்சனைசெய்
தரிவை சானகியைக் கொண்டுதான்
சென்ற போதினி லிராக வன்கடிது
தேடி யோடியுழல் செய்கைபோல்

நின் று நாரிதனை நாடி ஞன்நெடிய
மூச்செ றிந்துமிக வாடிஞன்
கன் றி யர்ச்சுனுசு வாமி யங்குருகு
காத லைப்பகர லாகுமோ.

9. வெற்றி யாம்விதியை வெல்லொ ணதென
விரைந்து தானவர்கள் செல்லவே
சுற்றமோ டினிய தந்தை தாய்துய
ரகற்ற வுந்துயர்பொ ருமலே
நிற்ற மிங்கிவளை யெண்ணி யெண்ணிநெடு
நீர்நி லம்புகுவ தாகியே
நற்றி யேபுவியி லெங்குமா தரவி
ஞடி யேதுயரில் வாடிஞன்.

10. கலையி ழந்தமதி யென்ன வும்பொருள்
கையி ழந்தபரி சென்னவும்
நிலையி ழந்தபரி சென்ன வும்முயிரை
நின் றி ழந்தவுட லென்னவும்
தலையி லங்கைகொடு வெம்பியே பதிகள்
தன்னி லெங்கணுமு லாவியே
மலையி லும்பெரிய கானி லுந்திருவை
வந்து நாடியிடு காலையில்,

11. திக்கி லெங்கணுமு லாவி மானமொடு
சென்றொ ரந்தண புரத்திலே
மிக்க வேள்வியொரு பற்ப நாதனெனும்
வேதி யன்புரியும் வேளையில்
தக்க தீவினைக ளான தோர்பசி
தணித்தி டாயெனவு ணர்த்திஞன்
பக்க நின்றமனை யாளை நீயமுது
படையெ னப்பரிவி லேவிஞன்.

12. அன்ன முங்கறியு மடைவு டன்கடுகி
யவள்ச மைத்தமுது செய்யவே
முன்பு வாவிதனில் நியம மானவை
முடித்த லாலமுது செய்கிலேன்

பின்னை யங்கடிசில் தாரு மென்றனன்
விரைந்து தானோர்ப லாவிலை
தன்னி லங்கவள்பொ திந்த ளித்தனள்
சடக்கெ னக்கொடு போயினன்.

வேறு

13. போயவன் வழியி லேயோர்
புதுமலர்ப் பொய்கை கண்டு
தூயதோர் தருநி ழற்கீழ்
சோற்றினைக் கரைமேல் வைத்து
மாயனை நினைந்து வாழ்த்தி
வாவியின் மூழ்கி யேறி
ஆயநல் நேம மெல்லா
மடைவுடன் முடித்து வந்தான்.

14. கல்லையிற் பொதிந்த சோற்றைக்
கையினு லவிழ்த்துப் பார்த்து
அல்லியஞ் சுனையி னீரை
யள்ளிமேல் தெளித்துக் கொண்டே
ஒல்லையி லவாவி யேதா
னுற்றதோர் பசியி னாலே
மெல்லவே யவனு மன்னம்
விரும்பியே புசிக்குங் காலை.

15. மெய்க்நிறை வாலி பத்தில்
விளைந்ததோர் பிணியே போலும்
முன்னிய தொன்று நிற்க
ஒன்றுதான் வருகை போலும்
மின்னனை யார்கள் வார்த்தை
விரும்பிய புருடர் போலும்
தன்னையு மறியா தேயோர்
தவறுதான் வந்த தாங்கே.

16. கொடுந்தொழில் பசியி னாலே
குறித்தொரு கருடன் கண்டு
தொடர்ந்தொரு நாகந் தன்னைச்
சுற்றியே தருவி லேகிப்

படந்தனைக் கொத்தித் தின்னப்
பாம்பது பதைத்து வாயால்
விடந்தனை யுமிழ்ந்த தன்றே
வேதிய னசன மீதே.

17. வீழ்ந்ததோர் விடத்தைக் காணான்
விபரீதம் போல வாங்கே
காய்ந்ததோர் பசியி னாலே
கடிதினிற் புசித்த போது
மூழ்ந்ததோர் நஞ்சு விஞ்சிப்
பொங்கியே தலையி லேறிச்
சூழ்ந்ததோர் விதியி னாலே
சோர்ந்தவ னுயிரை நீத்தான்.

18. பொருந்தியே யசனஞ் சொன்ன
பூசுரன் தனக்கோ விந்தத்
திருந்திழை தனக்கோ மற்றைச்
சேடனுக் கென்ன லாமோ
பருந்தது தனக்கோ வன்னம்
பருகினன் மரித்த பாவம்
அருந்திறல் மன்னா சொல்லென்
றலகையும் வினவிற் றங்கே.

19. அன்னமும் கேட்கிற் சொல்கை
யறமெனத் தகுமங் கிந்தக்
கன்னிகை செயலு நன்றே
கருடனு மிரைதான் தேடிப்
பன்னக மெடுக்கும் பாம்பு
பதைத்துமவ் விடத்தைக் கான்றும்
இன்னவர்க் காகு மென்றோர்க்
கெய்திடும் பாவ மென்றான்.

20. உருகிய பொருளு நீதி
யொக்குமென் றதிச யித்தே
அருகர்தம் வாது தன்னில்
அன்றுசம் பந்த ரோடு

*பெருகிய வைகை தன்னில்*
*பெய்ததிர் மீண்டாற் போலத்*
*தருவினி லலகை மீண்டுஞ்*
*சார்ந்தினி திருக்குந் தானே.*

ஆக விருத்தம் 372.

## அருஞ்சொற்பொருள்

1. பனிரு - பன்னிரு. கோலி - சுற்றி. கோள் - கிரகம். காலன் - யமன். ஆலம் - விஷம். நிகர் - சமானம், ஒப்பு.

2. கொடே - கொண்டே. பதிபவே - மனத்திற் பதியும்படி.

3. வாரணசி - காசி. அருகு - பக்கம்.

4. மூவிரண்டு வகையங்கம் - ஆறங்கம். வேதத்தினுடைய ஆறு அங்கங்கள்; சிட்சை, வியாகரணம், சந்தசு, நிருத்தம், சோதிடம், கற்பம். தெய்வசுவாமி என்பவன் மகன் அருச்சுன சுவாமி.

5. மேனகை - தேவலோக நடிகை; அழகி. அவளைப்போன்ற அழகி இரத்தினபதி.

6. மன்மதனும் இரதியும் போலவும், முருகனும் வள்ளியும் போலவும், இந்திரனும் இந்திராணியும் போலவும் அருச்சுன சுவாமியும் இரத்தினபதியும் கூடி வாழ்ந்து இன்புற்றனர். குலிசம் - வச்சிராயுதம். குலிச வேந்தன் - இந்திரன். துயிலும் - தூங்கும்.

7. உடாமல் - உடுத்தாமல். போகை - போவது. சோரர் - கள்வர். கரந்துகொடு - மறைவாகக் கவர்ந்துகொண்டு. அரக்கன் ஒருவன் இரத்தினபதியைக் கவர்ந்து சென்றான்.

8. கன்றி - உள்ளம் வெதும்பி.

9. ஒணாது - ஒண்ணாது - இயலாது. நிற்றம் - நித்தம் - நாளும். நாடி - விரும்பி.

10. பொருநர் - வீரர். பரி - குதிரை. காலை - பொழுது. அரசன் தன் மனைவியைப் பல இடங்களிலும் தேடத் தொடங்கினான்.

11. பரிவு - அன்பு,

12. மின் - வேதியன் மனைவி. அடிசில் - உணவு. பொதிந்து - மூடி. சடக்கென - விரைவாக.

13. மாயன் - திருமால். நேமம் - பூசை.

14. கல்லை - இலைப்பாத்திரம். அல்லிய - இருண்ட, ஆழமான. புசித்தல் - உண்ணுதல்.

**15.** உன்னியது - நினைத்தது. பிணி - நோய். இச்செய்யுள் பொருட் சிறப்பு உடையது. இதிலுள்ள உவமைகள் உணரத் தக்கவை.

**16.** அசனம் - சோறு. நாகக் கன்று - பாம்புக்குட்டி. விஞ்சி - மிகுந்து.

**18.** சேடன் - பாம்பு. அசனம் சொன்ன பூசுரன் - பத்மனுபன். சொன்ன - கொடுக்கச் சொன்ன. திருந்திழை - பார்ப்பனன் மனைவி. மரித்த - இறந்த.

**19.** சொல்கை - சொல்லுதல். கன்னிகை - பத்பனுபன் மனைவி. கான்றுதல் - கக்குதல். இன்னவர்க்காகும்............பாவம்—எவர் மீதும் குற்றம் சுமத்துதல் கூடாது என்பது கருத்து.

**20.** அருகர் - சமணர். சம்பந்தர் ஆற்றில் விடுத்த ஏடு எதி ரேறிச் சென்றது போல வேதாளம் திரும்பிச் சென்றது.

அருச்சுனசுவாமி கதை முற்றும்.

# 13. தீர்க்க தரிசி கதை

முருக வணக்கம்

1. பேறாய் மிகவே நடமா டுகினும்
   பிணியா லுடலே கிடையாய் விடினும்
மாறாய் விழிபஞ் சடைபோ தினுமெய்
   வசமற் றுகுபால் கடைவா யுறினும்
கூறா துரைநா விழுபோ தினிலும்
   குலமா மடவா ரழுபோ தினிலும்
வேறா யுயிரே விடுபோ தினிலும்
   விழிமுன் னகலா வேலுங் கையுமே.

வேதாளம் விளம்பிய பதின்மூன்றும் கதை

2. கொந்தே தளரா மனதா யிருள்வாய்
   நூலோ டியபே யாலே பிணையும்
வந்தே தருமீ துறைபே யதனை
   வன்புற் றதனை வாரிக் கொடுதான்
தன்றோள் மிசையே கொடுபோ மவனைத்
   தடுமா றுதலே பணவே யெண்ணி
யிந்தா பதின்மூன் றென்னுங் கதைகே
   ளிறைவா வெனவே யறையு மடைவே.

3. சங்கந் தவழு மலர்வா விகளும்
   தரளம் புரளும் மடைசேர் வயலும்
எங்கும் வளமார் குளமே ரிகளும்
   எழிலிக் கிணையாய் வளர்சோ லைகளும்
வங்கம் நிகர்கூ டமுமே டைகளும்
   வரமே தருகோ யில்களே நிறையும்
அங்கம் விசய மெனுமோர் பதிதான்
   அலையார் கடல்சூழ் புவிமீ துளதே.

4. நல்லோர் புலவோர் தினமும் புகழ
   நளினத் திருவீ டகமா யுறையும்
எல்லா வறிவும் பொறையு முளதாய்
   எழில்சேர் செங்கோல் நிலைநின் றிடவே

அல்லே பகலா மணிமா மதிள்சூழ்
அங்கம் விசய மெனுமந் நகரில்
சொல்லே தவறு தரசாள் பவன்றுன்
துரைவங் கியகே துவனென் பவனே.

வேறு

5. சீரிய ளான திலோத்தமை யைப்போல்
பேரழ காயொரு பெண்ணென வந்தாள்
மாரனை யேநிகர் மன்னவ னுக்குத்
தாரம தாமவள் சந்திர வதனே.

6. ஆதர வால்மிக வனுதின முந்தான்
போதம கிழ்ந்த புணர்ச்சியி ஞலே
மாதினு டன்புகழ் மன்னவ னுந்தான்
காத லெனும்பேர் கடற்கரை காணுன்.

7. வாங்கிவ ரும்பொருள் வந்தது பாரான்
ஓங்கிய நாட்டினி லுற்றது கேளான்
பாங்குள மன்னர்ப டைப்பது செய்யான்
தாங்கிசை யான தமக்குமி குத்தே.

8. காக்குழு யற்சிகள் காலமி டந்தான்
ஏற்கென வேயறி யும்மியல் புடையோன்
பார்க்குளிவ் வன்மை படைத்தவ மைச்சன்
தீர்க்க தரிசி யெனுமொரு சீரோன்.

9. மன்னவன் வரவே மந்திரி யார்க்குள்
அன்னவ னேதலை யானவ மைச்சன்
ஒன்னல ருந்திறை யிட்டுற வாக
நன்னில மானது நட்புட னுண்டான்.

10. திரண்டெதி ரரசர்கள் மேன்மைசெ லுத்தி
அரண்டிடு போதினில் அபய மளித்தே
மருண்டிடு காம மயக்க மகற்றி
இரண்டற மன்னர் எடுத்திட ஆண்டான்.

11. மூலையில் மன்னனை வீழ்த்தமு யன்றே
கோலிய வன்புவி கொற்றவ னென்னச்
சீலறி யாதவ கீர்த்திமி குத்தே
ஞாலம தெங்கும் நடந்தது வார்த்தை.

12. வார்த்தையை யோக்கிய மந்திரி கேட்டே
யேத்திடு மன்னனு மிப்படி யானுன்
கீர்த்தியி லாதவ கீர்த்தியு முண்டோ
பார்த்தி பரேசொலு மென்று பகர்ந்தான்.

13. எங்கும மைச்சர்க ளெத்தனை யோதா
னங்குயர் மன்னனை யன்றி நடந்தால்
பங்கினை வார்த்தை பலிப்பதிவ் வாறே
சங்கர னேயென நெஞ்சு தளர்ந்தான்.

14. நன்றிய தேசெய்து நன்மையி னாலே
யென்றுமிவ் வார்த்தை யெடுத்திடு வாரோ
அன்றியு மிங்கடை வல்லவி தென்னச்
சென்றன னேபர தேசம தாயே.

15. பொற்றிரு மந்திரி போனது கண்டே
கொற்றவ னுமருள் கூர்ந்து கவன்றான்
நற்றிய சார்தலில் நட்புவி டாதே
மற்றுள பேர்தமை வைத்தர சாண்டான்.

16. போயின மந்திரி பூதல மெல்லாம்
ஓய்வற வெங்கணு மோடியு லாவி
ஆயக டற்கரை யருகினி லோரூர்
ஏயது கண்டன னெய்தின னங்கே.

17. அந்நகர் தன்னி லதிபதி யாக
வன்னய வணிகரில் வர்த்தக னென்போன்
தன்னுடன் மந்திரி தங்கு சிநேகம்
பண்ணி யிருந்தன னேபல காலம்.

18. உடலுட னேயுறை யுயிரது போலும்
மடலுட னேயுறை மணமது போலும்
கடலுட னேயுறை கலமது போலும்
அடைவுட னங்ஙன மாகி யிருந்தான்.

19. அங்கிரு வோர்களு மன்புக லந்தே
தங்கிய நாள்களில் தனிவணி கன்றூன்
வங்கம தேறி வருமள வும்நீ
ரிங்கிரு மென்றவ னேக நினைந்தான்.

20. வர்த்தக னுஞ்சொல மந்திரி சொல்வான்
இத்தல மேல்நவ முள்ளன வெல்லாம்
உத்தம னேநான் உன்னுடன் காண
எத்திசை யும்வரு வேனென் றறைந்தான்.

21. சோடிணை யாகவே சோங்கைய மர்த்திக்
கூடிய வன்றனைக் கொண்டன னேகி
மேடுயர் பாயை விரித்துப் பகர்ந்தான்
ஓடின தேகல முவரியின் மீதே.

22. காலையும் மாலையு மேகசி வாயே
வேலனை யேத்திடு வார்வினை போலே
மூலநன் மாருத மோதுகை யாலே
தோலின டந்தது சோங்குசெ ழிப்பால்.

23. நன்னெறி சோங்கு நடுக்கட லூடு
உன்னிந டக்கையி லோர்திடர் மீதே
பொன்னிற மாயொரு பூந்தரு வின்கீழ்
கன்னியி ருந்தது கண்டும கிழ்ந்தார்.

24. சத்தி பராபரை யுமைகவு மாரி
கொத்தல ரேநிறை கோயிலின் முன்னே
அத்தரு வின்நிழல் அரியணை மீதோர்
மெத்தையில் மெல்லியல் விழிதுயில் கின்றூள்.

25. வாரியில் மாமயி லோவுயர் வானோர்
காரிகை யோவுயர் கணபதி மின்னோ
சீரிய மோகினி யோதிரு வோதான்
ஆரிவ ளோவென வன்பனு ரைப்பான்.

26. தத்திய சோங்கு தனிற்பல கால்யாம்
இத்திசை போகையில் மீள்கையி லென்றும்
உத்தமி யுண் டிவ ளொண்ணுத லென்றே
வர்த்தக னுஞ்சொல மந்திரி கேட்டான்.

27. நவமென மந்திரி நம்பி மகிழ்ந்தே
அவனொடு சோங்கினி லக்கரை யேறிப்
புவனம தாடு புரந்தரன் முன்னே
குவவிய வாய்கை குவித்தெதிர் நின்றான்.

28. விழியினிற் போனது மீண்டது போலும்
வழியினில் வீழ்பொருள் வந்தது போலும்
ஒழியுயிர் மெய்யி லுறைந்தது போலும்
அழகிய மந்திரி யரசனை யுற்றான்.

29. இன்புள பாலனு மென்னுயி ரும்நீ
துன்ப மகற்றிய தோழனு நீயே
அன்புள நீதனி யேயெனை விட்டு
வன்பினி லேகிய வாறெது வென்றான்.

30. நிலைபெறு கேள்வி நினைந்திலை யாலும்
உலகினுள் ளோர்சொலு மோமலி னாலும்
தலைவனில் லாத சலிப்பதி னாலும்
பலதிசை யேகின னென்றுப கர்ந்தான்.

31. மன்னொடு மந்திரி மற்றுமு ரைப்பான்
அன்னகர் வர்த்தக னுக்குற வாயே
துன்றுக டற்படர் சோங்கிடை போயோர்
கன்னியை யானெதிர் கண்டன னென்றான்.

32. மற்றொரு பார்வதி வாழ்ந்தருள் கோயி
லுற்றொரு சந்நிதி யுண்டதன் முன்னே
பொற்றரு வின்னிழல் பூவையி ருந்தாள்
நற்றிடர் மீதொரு நவமிது வென்றான்.

33. நந்தலை வங்கம் நடக்கைகள் தோறும்
இந்துமு கத்தியை யெப்பொழு துந்தான்
கந்தம லர்க்குழல் காணுது மென்றே
வந்தருள் வணிகரும் மற்றி துரைத்தார்.

34. வீறு மரம்பைய ரென்பது வீணே
நாறு மலர்க்குழ லாள்நவ மாமே
பூருவ மன்றொரு புதுமையை மனமுன்
கூறிய வவ்வகை குறித்தெதிர் நின்றான்.

35. வானுத லங்கெழில் வண்ணம தெல்லாம்
பேணிய மந்திரி பேசுகை கேளான்
நாணய மான நவந்தனை யப்போ
காணவி ரும்புறு காதலு மானன்.

36. அம்புவி காக்கவ மைச்சரை வைத்தே
கொம்பனை யாளுடைக் கோலநி னைந்தே
வம்பவிழ் தாருறு வர்த்தக னர்பால்
வெம்பிம னத்தொடு வேந்தன டைந்தான்.

வேறு

37. வரிசைபெறு வர்த்தகனை மகிழ்வினொடு கண்டே
அரசனுயர் மந்திரி அறிக்கையது பேசிச்
சரசமொடு வங்கமிசை தாமதில்க டந்தே
திரைசெறி கடற்றிடர் தெரிந்ததனை யுற்றூர்.

38. உமைக்கது விருப்பெனவு ருக்கியபொன் னலே
சமைத்ததொரு கோயிலெதிர் சந்நிதியின் முன்னே
இமைத்தவிழி யானமயி லேமதரு வின்கீழ்
அமைச்சனுரை செய்தருளு மரிவையு மிருந்தாள்.

39. கந்தமத னிந்தமுலை கண்மலர்கள் கண்டால்
இந்திரனு மிங்கொரடி யெய்தவல னேதான்
பந்தமெழில் வஞ்சியெழில் பார்த்தவனு நம்பால்
வந்தருளு மந்திரிதிட வானெனம கிழ்ந்தான்.

40. கொற்றவனு மாகவுரி கோயிலினு ளேபோய்
மற்றவளை யங்கடிவ ணங்கியுரை செய்வான்
உற்றமக மாயியுமை யேயெனது தாயே
எற்றுவிழி யாதினை யெனக்கருள்க வென்றான்.

41. ஈந்தன மெனக்கவுரி யின்பமொடு சொன்னள்
வேந்தனுறு காதலொடு மின்னருகு சென்றான்
ஆய்ந்தவன்மு கத்தையெதிர் நோக்கியவள் நீரில்
பாய்ந்துகடி தேகினள் பன்னகபு ரத்தே.

42. பன்னக புரத்தினிடை பாவையுமி ழிந்தே
தன்னக மதிற்பெரிய தவிசுதனி லேறி
வன்னகலை யிற்றனது மதிமுகம றைத்தே
கன்னிகை யதிற்றுயில்வள் போலவுறை காலை.

43. மாகவுரி யாரருள்வ ரத்தின்வலி கொண்டே
தோகைமயில் பாய்ந்தருளச் சூட்டிடையி ழிந்தான்
நாகபதி புக்கவன் நன்னுதல்ம னைக்கே
யேகினனவ் வேந்திழையி ருந்தபடி கண்டான்.

44. கண்டவள்மு கத்தின்மிசை யிற்கிலைதி றந்தே
வண்டுலவு பூங்குழல் மடந்தையொ டுரைப்பான்
கொண்டமய லோகொடிது கூடகினை யென்றான்
ஒண்டொடியு மன்னவனொ டோமெனவு ரைப்பாள்.

45. பட்டவபி டேகமுள பாரரச னென்றே
இட்டமுட னங்கவ னெழிற்குறி யறிந்தாள்
அட்டமி யுவாதின மகன்றணைவை யாகில்
கிட்டியணை யென்றவள் கிளத்தின ளிசைந்தான்.

46. ஆடரவி ரண்டெனவு மன்றிலுட னேநற்
பேடெனவு மாசைகொடு பெண்ணினொடு மன்னன்
கூடியவ ணேயுறவு கொண்டசில நாள்மேல்
தேடியொரு பவுர்ணமி தினமவ னகன்றான்.

47. அத்தினம டந்தையைய கன்றவர சன்றான்
இத்தையறி வோமெனவி ருந்தளவி லேதான்
முத்துநகை யாள்தனிமு யன்றதொரு நோன்பால்
புத்தியினில் மூழ்கவொரு பொய்கையிடை போனாள்.

48. வாறவினை யும்மலரின் மேலயனெ ழுத்தும்
ஊறுபுன லுள்படவு றைந்தருளு முள்ளும்
வீறுமவை யின்குறியும் மெல்லியர்கள் நெஞ்சும்
தேறரிய தென்றரசு சிந்தையினி னைந்தான்.

49. வாளுருவி யேகடிது மாதையறி யாமல்
வேளனைய மன்னவனு மேவிவரு போழ்தில்
தோளில்வலி வானசல துட்டனென் அரக்கன்
பாளைமண நாறுகுழல் பாவையை வளைத்தான்.

50. அந்தநள னைச்சனி யடைந்தபடி போலும்
முந்துபனி யாதவனை மூடியது போலும்
சந்திரனை ராகுவெதிர் தாவியது போலும்
விந்தைநகர் மாதினை விழுங்கின னரக்கன்.

51. வீறுட னரக்கனும் விழுங்கியது கண்டே
சீறியர சன்கடிது சென்றவனை யங்கே
தூறுதலை வாளிடைது ணித்துதரம் பற்றிப்
பீறிய வனைத்தனி பிறங்கிடவெ டுத்தான்.

52. நன்றுமிருள் சீறியெழு ஞாயிறு தனைப்போல்
வன்றமது முன்னையிலும் வாகது படைத்தே
அன்றவெதிர் நின்றுதனக் கச்சமது தீர்ந்தே
என்றுமுள சாபமது பேசியிட லுற்றாள்.

வேறு

53. விண்ணவர்கோன் சபையிலுள வித்தியா
தரனில்மிரு காங்க தத்தன்
பெண்ணுமியா னென்னுடனே பிறந்தமைந்த
ராயிரவர் பேரி யானே
பண்ணமரு மென்றாதை பரிவுடையா
னென்மீதிற் பலநா ளுந்தான்
கண்ணெதிரி லெனையன்றி யமுதருந்தான்
வளர்த்தருளுங் காலை யோர்நாள்.

54. அட்டமியிற் பார்ப்பதியாள் நோன்பதுநோற்
றருளுதவி யாருங் காலை
யிட்டவிமு தருந்தாம லெனைத்தேடிக்
காணுமல் வெறுத்தே தாதை
பட்டினியந் நாளிருந்தான் மற்றைநாள்
யான்வரவே பார்த்துச் சாபம்
இட்டனனிவ் வரக்கனுனை விழுங்குவனென்
றெரிக்கின்ற சீற்றந் தன்னால்.

55. அங்கவன்தான் சாபமிட மிகநடுங்கி
அடிபணிந்தங் கடைந்த சாபம்
இங்கெனக்கு நீங்குவது என்றென்றேன்
பிதாவுமன மிரங்கிச் சொல்வான்

வங்கிசகே துவனென்னு மன்னனுனைக்
கூடியே வாழு நாளில்
துங்கவரக் கன்விழுங்கத் துணிந்துனைக்காத்
திடச்சாபந் தொலையு மென்றான்.

56. தாதையுடைச் சாபமெனைச் சார்ந்ததுவுந்
தீர்ந்ததுவுந் தக்கோ யென்று
மாதுநல்லாள் தன்பேருஞ் சாரங்க
வதனையெனும் வசனஞ் சொன்ன
போதுமன்ன னதிசயித்தா னேன்பதுநோற்
றிருவருமோர் பொய்கை மூழ்க
ஆதரவி லவர்பண்டை யங்கவிச
யந்தனில்வந் தணுகி னரே.

57. தன்னகரை மன்னவனுந் தான்கண்டு
தையலுடன் கூடச் சென்றான்
அன்னவனை யெதிர்கொண்டு மந்திரிக
ளடிபணிந்தங் கழைத்துப் போனார்
பொன்னரியா சனத்திருத்திப் போனதுவும்
வந்ததுவும் புகலக் கேட்டார்
இன்னவனே யவனென்ன வெல்லோரு
மதிசயிக்க விருந்தான் மன்னன்.

58. காசினியில் பிரியாத காமுகர்க்குத்
தான்தெய்வ கன்னி வந்தால்
ஆசைபின்னை யளவேது பண்டிலுமெண்
மடங்கதிக மாயிற் றன்றே
தேசுறுபூ பாரமெலாம் தீர்க்கதரி
சியைமுன்போல் செலுத்தப் பண்ணி
நேசமுடன் சாரங்க வதனையெனுங்
கன்னியொடு நிருபன் வாழ்ந்தான்.

59. வானவர்தம் மாதினொடும் மன்னவனும்
வாழ்ந்தளவில் மனம்வே றாகி
ஆனபுகழ் மந்திரியும் விடமுண்டு
தான்மரித்தா னந்த வாறு

போனவன்மீண் டானென்றே யான்கண்ட
பூவைதனைப் புவிமீ திற்றன்
தானணைந்தா னெனுஞ்சலிப்போ சாற்றென்ற
வலகையுட னரசன் சொல்வான்.

60. சிறியார்கட் கினியதுகாட் டியபோல
வறிஞர்க்குச் செல்வர் சொன்ன
குறியான வார்த்தைபோல் குருடர்தம்
பாற்சோற்றின் கொள்கை போலும்
அறியாத மன்னவனுக் கறிவித்தோம்
நம்மாலே யாயிற் றென்றே
நெறியான மந்திரியும் விடத்தால்வீந் தானென்று
நிகழ்த்துங் காலை,

61. தருகின்றே மெனுமுழுத்தர் தாம்மனது
திரும்புகைபோல் சால வுண்டு
பொருகின்றே மெனமன்னைப் போர்க்களத்தில்
விட்டோடும் புல்லர் போலும்
வருகின்றே மெனக்கூட வந்தலகை
மன்னவன்றே ஸினும கன்றே
அருகுதோய் தருவின்மிசைச் சார்ந்துவீற்
றிருந்தருளு மறியார் போல.

ஆக விருத்தம் 433.

## அருஞ்சொற்பொருள்

1. கிடையாய் - படுக்கையாய். விழி பஞ்சிடுதல் - கண்பார்வை குறைதல். மெய் - உடம்பு. உகுபால் கடைவாய் உறுதல் - இறக்குங் காலத்து வாயில் ஊற்றும் பால் கடைவாயில் வழிதல். நாவிழுதல் - நாக்குப் பேச முடியாது இருத்தல். ஆகுலம் - வருத்தம்.

2. வன்பு அன்றி - வலுக்கட்டாயம் இன்றி; வற்புறுத்துதல் இன்றி. பற்றிக் கொடு - பிடித்துக்கொண்டு. தோள்மிசை - தோள் மேல். பணவே - பண்ணவே; செய்வதற்கு. எணி - எண்ணி; நினைத்து.

3. சங்கம் - சங்கு. வாவி - குளம். தரளம் - முத்து. எழிலி - மேகம். எழிலிக்கு இணையாய் வளர்தல் - மேகமண்டலம் வரை சோலை வளர்தல். வங்கம் - வங்காநாடு. விசய நகரத்தின் சிறப்புக் கூறப் பட்டது.

4. நளினம் - தாமரை. வீடு அழகாய் உறையும் - திருமகள் தன் வீடு போல் நினைத்து அழகாய் உறைகின்ற. அல்லே பகலா - இரவும் பகல் போல் விளங்க. வங்கிய கேதுவன் - அரசன் பெயர்.

5. திலோத்தமை - தேவலோகப்பெண். மாரன் - மன்மதன். தாரம் - மனைவி.

6. ஆதரவு - அன்பு. அனுதினம் - தினந்தோறும். காதலெனும் பேர் கடல் - காதல் என்னும் பெரிய கடல்.

7. வாங்கி வரும் பொருள் - வரிப்பொருள். உற்றது - நடந்த நிகழ்ச்சிகள். பாங்கு - பக்கம்.

8. அமைச்சன் காலம் இடம் அறிபவன். பார்க்குள் - பூமிக்குள். வன்மை - வலிமை. தீர்க்கதரிசி - வருங்கால நிகழ்ச்சிகளை ஆராய்ந்தறிபவன்.

9. ஒன்னலர் - பகைவர். திறை - கப்பம். நண்புடன் ஆண்டான் - நட்புடையவனாய் அமைச்சன் அரசாண்டு வந்தான்.

10. சக்கரம் - ஆணைச்சக்கரம். அரசனை ஏமாற்றி அமைச்சன் ஆளுகின்றான் என்ற பழிச்சொல் உலகெங்கும் பரவியது.

11. கோலி - வளைத்து. அவன் புவி - மன்னனுடைய நாடு.

12. அவகீர்த்தி - பழி. பார்த்திபர் - அரசர்.

13. வார்த்தை - மக்கள் கூறும் வார்த்தை. சங்கரனே - சிவனே. நெஞ்சு - மனம்.

14. இவ்வார்த்தை - அமைச்சன் நாட்டைக் கவர்ந்துகொண்டான் என்ற பழிச்சொல். பரதேசம் - வேறுநாடு. (அமைச்சன் பழிக்கு அஞ்சி வேறு நாடு சென்றான்.)

15. கொற்றவன் - அரசன். கவன்றான் - வருந்தினன். நற்றிய - நச்சிய ; விரும்பிய. மற்றுளபேர் - மற்ற அமைச்சர்.

16. பூதலம் - பூமி. ஒய்வு அற - ஓய்வு இல்லாமல். ஏயது - பொருந்தியது.

17. வணிகன் பெயர் வர்த்தகன் என்பது.

18. உடலோடு கூடிய உயிர் போல, மடலோடு கூடிய மணம் போல, கடலுடன் கூடிய கப்பல் போல அமைச்சனுடன் வணிகன் நட்புக் கொண்டிருந்தான்.

19. வங்கம் - கப்பல். அவன் ஏக - வணிகன் வெளிநாடு செல்ல.

20. நவம் உள்ளன - புதுமைகள். பத்திரமாக - நன்றாக ; பாதுகாப்பாக. அத்திசை - செல்லும் திசை.

21. சோங்கு - கப்பல். கலம் - கப்பல். உவரி - கடல்.

22. கசிவு+ஆய்=கசிவாய்; மனம் உருகி. வேலன் - முருகன். ஏத்திடுவார் - வழிபடுவார். வினை - தீவினை, பாவம். மாருதம் - காற்று.

23. உன்னி - நினைத்து. பூந்தரு - மலர் மரம்.

24. கொத்து அலர் - கொத்தாகிய மலர். அரியணை - சிங்காதனம்.

25. வாரி - கடல். மாமயில் - கடற்கன்னி, நீர் அரமகள். வானோர் காரிகை - தேவமகள். கணபதி - தேவர் கூட்டத்துத் தலைவன், இந்திரன். திரு - திருமகள்.

26. பலகால் - பல முறை. உத்தமி - நல்ல பெண். ஒள் நுதல் - ஒளிபொருந்திய நெற்றியுடைய பெண்.

27. நவம் - புதுமை. புவனம் - பூமி. புரந்தரி - பார்வதியம்மன். (சக்திதெய்வம்.) குவவிய - குவிந்த. வாய் கை - வாயின்கண் கையை.

28. விழி இணை - இரண்டு கண். வீழ்பொருள் - விழுந்த பொருள். ஒழியுயிர் - நீங்கிய உயிர். மெய் - உடம்பு.

29. தோழன் - நண்பன். தனியாய் எனைவிட்டு - என்னைத் தனியே விட்டு. வன்பினில் - கடுமையாக.

30. கேள்வி - அமைச்சர் கூறும் மொழி. நினைந்திலை - நீ கேட்டு நினைக்கவில்லை. பலதிசை - வெளிநாடுகள்.

31. வர்த்தகனுக்கு+உறவாய்—வர்த்தகனுடன்.

32. பொன் தரு - பொன் மலர் பூக்கும் மரம். பூவை - பெண். நல்திடர் - நல்ல மேடை.

33. இந்து முகத்தி - சந்திரன் போன்ற முகமுடைய பெண்.

34. நாறும் - மணம் வீசும். குழல் - கூந்தல். பூருவம் - பழைமை.

35. எழில் - அழகு. வண்மை - வளம், நலம் - அழகு.

36. அம்புவி - பூமி. கொம்பு - பூங்கொடி. கோலம் - அழகு. தார் - மாலை.

37. அறிக்கை - பெண்ணைப்பற்றி மந்திரி கூறிய மொழிகள். வங்கம் - கப்பல். கடல்திடர் - தீவு.

38. உமை - உமாதேவி. சமைத்தது - செய்தது. அரிவை - பெண்.

39. கந்தம் - வாசனைப்பொருள். இங்கு ஓரடி எய்துதல் - அடி பெயர்ந்து செல்லுதல். வஞ்சி - வஞ்சிக்கொடி போன்ற பெண். திடவான் - மன வலிமையுடையவன்.

40. மா + கவுரி—சிறந்த உமாதேவி. மகமாயி - பெருமையுடன் மாயத்தன்மையுடையவள். எற்றுதல் - மனம் தடுமாறச் செய்தல்.

41. ஈந்தனம் - கொடுத்தோம். மின் - மின்னல் கொடி போன்ற பெண். நீரில் பாய்ந்து சென்ருள். பன்னகபுரம் - நாகநகரம்.

42. தன்னகம் – தன் வீடு, தவிசு - ஆசனம். கலை - ஆடை. ஆடையால் முகத்தை மறைத்துக்கொண்டாள். துயில்பவள் போல - தூங்குபவள் போல.

43. மா கவுரியார் - உமாதேவியார். வரத்தின் வலி - வரத்தின் வலிமை. சூட்டிடை இழிந்தான் - பிலத்துவாரத்தின் வழி சென்ருன். நாக பதி - நாகருலகத்து நகரம். மனை - வீடு. ஏகினன் - சென்ருன். ஏந்திழை - பெண்.

44. கலை - ஆடை. மடந்தை - பெண். கூடநினை - என்னை மணக்க எண்ணங்கொள். ஓம் - ஆம்.

45. பட்ட அபிடேகம் - பட்டாபிடேகம்—முடிசூட்டு விழா. பார் அரசன் - நிலவுலகத்து அரசன், இட்டம் - விருப்பம். எழிற்குறி - அழகின் அடையாளம். அட்டமி - எட்டாம் நாள். உவா - பௌர்ணமி. கிட்டி அணை - நெருங்கிவந்து மணந்துகொள். கிளத்திஞள் - சொன் ஞள். இசைந்தான் - ஒத்துக்கொண்டான்.

46. அரவு இரண்டு என - இரண்டு பாம்பு போல. அன்றி லுடனே நற்பேடு - அன்றிற் பறவை பெண் அன்றிலுடன் இருந்தது போல.

47. முத்துநகையாள் - முத்துப்போன்ற பல்வரிசை யுடையவள். நோன்பு - விரதம். பொய்கை - குளம்.

48. மலரின் மேல் அயன் எழுத்து - தாமரைமலரின் மேல் இருக் கும் பிரமதேவன் எழுதிய தலையெழுத்து. ஊறுபுனல்..............முள் - நீருக்குள் மறைந்திருக்கும் முள். அவை - சபை. மெல்லியர் - பெண் கள். தேறரியது - தெளிய முடியாதது, அறிய முடியாதது.

49. வேள் அனைய மன்னவன் - மன்மதன் போன்ற அரசன். மேவிவருபோழ்து - நெருங்கி வந்த போது. சலதுட்டன் - அரக்கன் பெயர். பாளை மணம் நாறும் - பாக்கு மரத்தின் பாளை மணம் வீசும்.

50. ஆதவன் - சூரியன். இராகு - சந்திரனை விழுங்கும் பாம்பு.

51. கடிது - விரைவாக. உதரம் - வயிறு. அரக்கன் வயிற்றி லிருந்து அரசன் அப்பெண்ணை வெளியில் எடுத்தான். பிறங்கிட - விளங்க.

52. ஞாயிறு - சூரியன். வாகு - திறமை.

**53.** வித்தியாதரர் - தேவர் வகையில் ஒரு கூட்டத்தார். மிரு காங்க தத்தன் - பெண்ணின் தந்தை பெயர். பெண்ணுடன் பிறந்தோர் ஆயிரவர். தாதை - தந்தை. பரிவு - அன்பு. என்னைக் கண்ணால் கண்ட பிறகே என் தந்தை உணவருந்துவான்.

**54.** பார்ப்பதியாள் - உமாதேவி. நோன்பு - விரதம். அமுது - உணவு. சீற்றம் - கோபம்.

**55.** பிதா - தந்தை. துங்கம் - பெருமை.

**56.** தாதையுடைச் சாபம் - தந்தை இட்ட சாபம். பொய்கையில் மூழ்கி விசயநகரத்தை அடைந்தனர்.

**57.** தையல் - பெண். பொன் அரியாசனம் - பொன்னாலாகிய சிங்காதனம். போனதுவும் வந்ததுவும் - தீவுக்குச் சென்று நகரத்துக்கு வரும்வரை நடந்த நிகழ்ச்சிகள்.

**58.** காமுகர் - காமம் உடையவர். பண்டிலும் - முன்னைவிட. பூபாரம் எல்லாம் - அரசாட்சி செய்யும் செயல் எல்லாம். சாரங்கவதனே - பெண்ணின் பெயர். நிருபன் - அரசன்.

**59.** மரித்தான் - இறந்தான்.

**60.** வறியோர் - ஏழைகள். நம்மாலே ஆயிற்று - நம்மாலே அரசன் கெட்டான்.

**61.** உலுத்தர் - கீழ்மக்கள். பொருகின்றோம் - போர் செய்கின்றோம். மன்னை - மன்னனை.

**தீர்க்கதரிசி கதை முற்றும்.**

## 14. கள்வன் கதை

முருக வணக்கம்

1. பேதோர் குணங்களுள தீதே நிமிர்ந்தெருது
போலே திரிந்துழலவோ
ஏதேனு நின்கவியை யேதேனு மன்பினுடன்
ஈடேற நெஞ்சில் நினையாய்
தாதாவு மென்றனுடை மாதாவு முந்தனிரு
தாளேதா மென்ற றிவையே
வேதாக மங்களிடை தனியாக நின்றருளு
வேலாவி ளங்குமரனே.

வேதாளம் விளம்பிய பதினான்காம் கதை

2. வாகான நெஞ்சுதிட மாயே யுழன்றரசன்
வாயா லிரண்டுசொலவே
ஆகாதெ னுந்தகைமை யாலே திரும்பிமதி
யாதேறி முன்தருவிலே
நோகா திருந்தலகை யேதோ ளணைந்துகொடு
நூலோது கின்றவர்கள்போல்
ஏகா நினைந்தபினும் வேதாள மும்பகரும்
ஈரே ழெனுங்கதையையே.

3. வாயார நாப்பரனை யேயோது மாட்சியரும்
மாதான மேற்குமறையோர்
தாயான காட்சியரும் வீரான கீர்த்திபுனை
தாதாவெ னப்பெருமைசேர்
தூயோரு மேற்றமுடன் வாழ்வாகி நெற்றிமதிள்
சூழ்வாகி யாட்சியுளதாய்
ஓயாத நீர்க்கடல்க ளேழ்சூழு நாட்டிலெனும்
ஓரூர யோத்திநகரே.

வேறு

4. பாரமா மேன்மையால் பண்புசேர் கல்வியால்
தீரமாம் வெற்றியால் தேவதா பத்தியால்
ஆருமிங் கவனேரே ராரெனப் புவியிலே
வீரகோ வென்பவன் மேவிவா ழரசனே.

5. தீதிலா வாழ்வுசேர் செல்வமாம் வணிகரின்
சாதியில் இரத்தின தத்தனங் நகருளோன்
போதநற் றவமதே புரிகையிற் பெற்றதோர்
மாதரா ளிரத்தின பதியெனு மங்கையே.

6. வெற்றிசேர் மதனவேள் மெய்யிலா பரணமாய்ப்
பற்றிநல் லாசையே படர்கொழு கொம்பதாய்ச்
சுற்றில்மா தவர்கள்தந் துறவினை விடுப்பதாய்
பற்றுடன் ரத்தின பதிவளர்ந் தாளரோ.

7. கொம்மையா முலையுடைக் கோதையைக் கண்டபேர்
செம்மிகத் தருகிறேந் தெரிவையைத் தருகெனச்
செம்மையாந் தந்தைபால் செப்பவே மற்றவள்
சம்மதித் திடியான் தருவனென் றுரைசெய்தான்.

8. மையலா யோடியே வந்துவந் தவர்கள்தாம்
செய்யலாம் வகையெலாஞ் செய்துநின் றருளினும்
அய்யமாய் வேண்டிலள் ஆசையற் றேகினர்
தையலாள் மேடைமேற் றனித்திருந் தருளினள்.

9. ஆரையுங் கொல்பவ னபகரித் திடுபவன்
காரிருள் திரிபவன் களவினிற் பெரியவன்
சோரநூ லடைவெலாந் தொலைவறக் கற்றவன்
ஊரிலோர் கிராதனென் றுள்ளனோர் கள்வனே.

10. துன்னிருள் மேனியன் தூறுசேர் தலையினன்
தன்னிலே கள்வரிற் றலைவனு யுறைபவன்
மன்னர்மண் டலிகர்தம் மனைமனைக் குள்ளெலாம்
கன்னமிட் டந்நகர் கவருமந் நாளிலே.

11. பகருமிக் களவினுற் பலருமே முறையிடப்
புகலொணு விருளிலே புரவல னெருவனும்
நகரிசோ தனையதாய் நலமுடன் வருகையில்
நிகரிலாக் கள்வனும் நின்றுமுன் தோன்றினன்.

12. ஆரெனக் கடிதுதான் அரசனுங் கேட்கவே
வீரமா காளிதன் வெற்றிசேர் புதல்வன்யான்
ஊரினிற் காவலா யுலாவுவென் றுளெனைக்
காரிய மிதுவெனக் கள்வனுங் கூறினன்.

13. உரையினு லரசனன் றுள்ள றிந் தேய்வன்
திரவிய முளசில சேரவே தருகிறேன்
இரவினிற் றிரிவதென் னென்னுடன் கூடவே
வருகெனக் கொண்டுதன் மனையிடைப் போயினன்.

14. அன்னவன் காரண மறியவே னும்மென
மன்னனு மேகினன் வாசல்முன் வைத்தவன்
சன்னையாற் கூட்டர்பால் சாற்றினன் வதைசெய
வுன்னியே யனைவரு மொருமைசெய் காலையில்,

15. வடிவனும் மன்னனை வதைசெய்தா லிந்நகர்
அடையவே கெடுமென வவன்மனைத் தாசிதான்
தொடரவந் தோதினள் சுளிவறிந் தங்ஙனே
உடையில்வா ளுருவியே யோடின னரசனே.

16. சென்றதோர் வேந்தனுஞ் சேனையைக் கூட்டியே
வென்றியோ டெறிதிரை வேட்டைபோற் சுற்றியே
கொன்றுதீ வினைசெயுங் கொடியதோர் கள்வனை
யன்றுதான் கைப்பிடி யாகவே பற்றினன்.

17. பற்றிய சோரர்கள் பலரையும் வதைசெய்தே
யுற்றதோர் கள்வனு யுறையுமத் தலைவனை
அற்றையி லந்நக ரறியவே யூரினைச்
சுற்றியே கழுவின்மீ தேற்றுமென் றிறைசொனன்.

18. வேரிசேர் சந்தனம் மெய்யெலாம் பூசியே
மார்பிலே நெடியபூ மாலையைத் தூக்கியே
ஊரினில் வலமதா யொருதரம் வருகையில்
சோரனுக் குற்றதோர் சோபனங் கூறுவோம்.

வேறு

19. வணிகர்தம் வீதியில் வந்திடும் போதினில்
பணைமுலை யிரத்தின பதியவள் கண்டுதான்
இணையிலாத் தேவரை யிகழ்ந்திடும் கண்ணினள்
அணையவே சோரன்மே லாசையுற் றுளரோ.

20. தந்தையை நோக்கியே தையலும் கூறுவாள்
இந்தமா கள்வனே யெனக்குநற் காதலன்
சிந்தையுற் றெவரையுஞ் சேருதல் வேண்டிலேன்
பிந்திடா திவனைநீர் பேணுவீ ரென்றனள்.

21. ஏந்திழை விரும்பவே யிருந்தநற் றூதையும்
ஓர்ந்தனன் கள்வனுக் குறவதா யாவரோ?
வேந்தனுஞ் சோரனை விடுவனோ நினையெனக்
காந்திமின் றுரைசெயக் கன்னியும் கூறுவாள்.

22. கள்வனே யென்னுடைக் கணவனும் அன்றிமற்
றுள்ளபே ரியாரையு முகந்துநான் வேண்டிலேன்
மெள்ளவே தடையினின் றவனைநீர் விடுவியும்
தெள்ளெரி மூழ்குவேன் இலையெனிற் றேறுவீர்.

23. முறையல வுறவல முன்பு பின்புதான்
அறிவல நண்பல வாருக் கார்செய்வார்
சிறியளும் வருந்தினள் செய்வ தேதென
விறைவன்முன் வணிகனு மெய்தி னனரோ.

24. விலையிலா தானகோ மேத கந்தனை
நிலைபெற வணிகனு நிருபன் தாளின்முன்
வலியகா ணிக்கையாய் வைத்து மற்றவன்
தலைவருங் காரியந் தன்னைக் கூறுவான்.

25. பெருந்தவப் பயனில்யான் பெற்ற பெண்கொடி
வருந்திய பேர்க்கெலாம் மாலை யிட்டிலள்
விரும்பினள் கள்வனை விட்டு ரட்சியும்
அரும்பொருள் வேண்டிய தளிக்கின் றேனென்றான்.

26. காரிகை யவளைநீர் காத்தி டாவிடில்
பேரெரி மூழ்கவே துணிந்து பேசினள்
பாரமே நாதனைப் பற்றி நீருமச்
சோரனை விடுமெனத் தொழுது வேண்டினன்.

27. மாறுரை மன்னனும் வணிகற் கோதுவான்
வேறெது கேட்கினும் வேண்டிய தீகுவன்
சூறையின் னகரெலாங் கொண்ட சோரனைக்
கோறலே யல்லது விடுத்தல் கூடுமோ.

28. கள்வனுக் குறவினர் தாமுங் கள்வரே
வெள்ளர்போ லிங்கெனை வேண்டி வந்தனை
உள்ளுநீ யவனுட னொருவ னேவெனத்
தள்ளென வணிகனைச் சாலச் சீறினன்.

29. மன்னவன் மனந்தனை வணிகன் கண்டுதான்
தன்னிலே மறுகியே தலையி றங்கினன்
பின்னையோ ருரையின்றிப் பெயர்ந்து போயினன்
கன்னிகை தன்னுடன் கலந்து கூறுவான்.

30. புரவலன் வேண்டிய பொருள்கள் தாமெலாம்
தருகிறே னென்றன னுசை தானிலை
துரிசறச் சோரனைத் துணிப்ப தேயலால்
உருகியே விடுவதற் குடன்படே னென்றான்.

31. மெத்தவே சீறினன் வேந்தன் காரியம்
அத்திற முனக்குநீ யடாதுபோ வென்றான்
தத்தைபோல் மொழியினள் தந்தை வேண்டியே
எத்தனை சொல்லினு மினியிரே னென்றாள்.

32. குணமுட னேகனுய்க் கூடி வாழ்ந்ததோர்
கணவனைப் போலவே கவலை யெய்தியே
துணைவிழி நீருகச் சோரன் பின்புதான்
வணிகர்தம் பாவையு மறுகி யோடினாள்.

33. ஓடிய மங்கையை யூரு ளோர்களும்
நீடிய சுற்றமும் நிறுத்த நின்றிடாள்
வாடின ளரற்றினள் வயிற்றை மோதினள்
கூடவே சென்றனள் விதியின் கொள்கையால்.

34. அந்தநன் னகருளோ ரடையக் கண்டபேர்
இந்தநன் மாதினுக் கிடரி தேதென
மின்னவள் கரமது விரித்து மேவினாள்
தந்தையு மரற்றியே தையல்பின் சென்றனன்.

35. சிக்கிய கள்வனுந் திரளு முன்செல
ஒக்கவே மங்கையு மோடிப் பின்செலத்
துக்கமாய்த் தந்தையுந் தொடர்ந்து தான்செல
அக்கணங் கழுவினி னருகு சென்றனள்.

36. கழுவினை வலஞ்செயச் சொல்லிக் கள்வனை
வழுவிலோர் கழுவினில் வலித்த போதவன்
விழியினில் வணிகனை மின்னை நோக்கியே
அழுதுதான் நகைத்துயி ரடங்கிற் றங்ஙனே.

37. ஆயது கண்டபி னமைந்து மங்கையும்
தூயதோர் உளத்தொடு துணிந்து நின்றுதான்
ஏயின கவுரிநோன் பியாவும் நோற்றபின்
தீயினை வலஞ்செய்து சேர்ந்த காலையில்,

38. வந்தொரு வான்பகை தோன்றில் வான்றுணை
முந்தியே தோன்றிடு முறைமை போலவே
சிந்தையி லிவையெலா முணர்ந்து சேவின்மேல்
அந்தரத் தினுமிழிந் தரனுந் தோன்றினன்.

39. கன்னிகை நீயுமிக் கனலில் வீழ்வதேன்
என்னதா னவாவுனக் கேதுவே னும்நீ
சொன்னது தருவன்யான் சொல்லி டென்னவே
நன்னுத லிவனுயிர் நல்கு மென்றனள்.

40. ஈந்தன மெனச்சிவ னேகி னனவன்
வாய்ந்த தோருயர் மரத்தி றங்கினன்
போந்தனர் மனையிடைப் பூவை மாலையிட்
டாய்ந்ததோர் கணவனே யாக்கி வாழ்ந்தனள்.

41. அந்நக ரடையவு மதிச யித்தனர்
மன்னனும் நவமென மகிழ்ந்து கள்வனைத்
தன்னுடைச் சேனைக்குத் தலைவ னாக்கினன்
மின்னிடைப் பொருட்டினல் விளங்கி யோங்கினன்.

42. பேரியல் மன்னெடு பேயுங் கூறிடும்
சோரனு முயிர்தனைத் துறக்கும் போதினில்
ஆரவே நகைத்தது மழுதவா றுந்தான்
காரிய மிதுவெனக் கழறி டென்றதே.

43. அறிவிலை முன்புபின் பவளுநா முந்தா
னுறவிலை யுருகினள் எனந கைத்தனன்
சிறியவள் தாதையின் துயரில் விம்மினன்
நெறியிது வென்னவே நிருபன் கூறினன்.

44. அப்பொழு தலகையு மாமென் றங்ஙனே
வைப்பென வுலகினில் வாழ்வை நம்புவார்க்
கொப்பியங் கிராதுயி ரொளிக்கு மாறுபோல்
கப்புடைத் தருவினிற் சென்றங் குற்றதே.

ஆக விருத்தம் 477

## அருஞ்சொற்பொருள்

1. பேது - பேதைமை; பேதோர் - மூடர். ஈடேற் - நான் மேன்மை அடையும்படி. ஏதேனும் அன்பினுடன் - குறைந்த அளவு அன்புடனுவது.

2. இரண்டு - இரண்டாம் சொல், மறுவார்த்தை. தோள் - தோளோடு. ஏகா - ஏக, செல்ல.

3. பரன் - இறைவன். மாட்சியர் - பெருமையுடையோர்.

4. தீரம் - தைரியம். தேவதா பத்தி - தெய்வ பக்தி. வீரகோ - அரசன் பெயர்.

5. இரத்தின தத்தன் - வணிகன் பெயர். இரத்தினபதி - வணிகன் மகள்.

7. கொம்மை - முகடு; பருத்த. கோதை - பெண். சொம் - செல்வம்,

9. சோர நூல் - களவு நூல். அடைவு - முழுதும். தொலைவு அற - குறை இன்றி. கிராதன் - கொடியவன்.

10. இருள்மேனியன் - இருள்போன்ற கருநிறத்தான். தூறுசேர்- தூறுபோல் மயிர் நிறைந்த. மண்டலிகர் - மண்டல அதிகாரிகள். மனை மனை - மனைக்குள் மனை.

12. காளியின் புதல்வன் எனத் தன்னைக் கள்வன் கூறிக்கொண்டான்.

13. மனை - அரண்மனை. அவன் - அக் கள்வன்.

14. காரணம் - திருடன் உலாவிய காரணத்தை. சன்னையாய் - குறிப்பாக. கூட்டர் - கள்வர் கூட்டத்தார். ஒருமைசெய் காலை - ஒன்ருகச் சேர்த்த வேளையில்.

15. வடிவன் - அழகு உள்ளவன். சுளிவு அறிந்து - இரகசியம் அறிந்து. தாசி - பணிப்பெண். அவன் - அரசன்.

16. எறிதிரை வேட்டைபோல் - வலைவீசி மீன் வேட்டையாடுவது போல. சுற்றி - சுற்றி வளைத்துக்கொண்டு.

17. சோரர் - திருடர். அற்றை - அன்று.

19. தேவரை யிகழ்தல் - தேவரை மணக்க விரும்பாமை.

20. சிந்தையுற்று - மனம் விரும்பி. பிந்திடாது - நேரந் தாழ்த் தாமல்.

21. ஏந்திழை - நகை அணிந்த பெண். ஆவரோ - ஆகுவார்களோ.

22. வேண்டிலேன் - விரும்பவில்லை. தடை - தளை, விலங்கு. எரி - நெருப்பு.

23. செய்வது ஏது என - செய்யத்தக்கது யாது என்று. இறைவன் - அரசன்.

24. கோமேதகம் - நவரத்தின வகையுள் ஒன்று. நிருபன் - அரசன். தலை வரும் - அங்கு வந்த முதன்மையான்.

25. ரட்சியும் - காப்பாற்றுக. மாலை இட்டிலள் - மண மாலை இடவில்லை.

26. காரிகை - பெண். பாரமே - அவளைக் காப்பது உம்முடைய பொறுப்பு ஆகும். நாதனைப்பற்றி - கடவுளைத் துணையாகக் கொண்டு.

27. சூறை - கொள்ளை. சோரன் - கள்வன். கோறல் - கொல்லுதல். விடுத்தல் - விடுதலை செய்தல்.

28. வெள்ளர் போல் - கள்ளம் இல்லாதவர் போல, உள்ளுநீ - அவனை விடுவிக்க நினைக்கும் நீ.

29. மறுகி - மயங்கி, பேர்ந்து - இடம் பெயர்ந்து.

30. துரிசு அற - குற்றம் இல்லாமல். துணிப்பது - வெட்டி அழிப்பது. உருகி - மனம் இரங்கி.

31. அடாது - உனக்கு அது பொருந்தாது. தத்தைபோல் மொழி - கிளிபோன்ற மொழி. இனி இரேன் - இனிமேல் வீட்டில் தங்கி இரேன்.

32. துணைவிழி — இரண்டு கண்கள். நீர் உக - நீர் வழிய. மறுகி - மயங்கி.

33. ஊர் உளோர் - ஊர் மக்கள். சுற்றம் - சுற்றத்தார். வாடினள் - வருந்தினாள். மோதினள் - அடித்துக்கொண்டாள்.

34. அடைய - முழுதும், எல்லோரும். இடர் - துன்பம். இடர் + இது + ஏது = இடரிதேது. கரமது விரித்து மேவினள் - கை விரித்து நீட்டிக்கொண்டு ஓடினவள்.

35. திரள் - மக்கள் கூட்டம். அக் கணம் - அந்த நேரம்.

36. வணிகனை மின்னை - வணிகனையும், மின்னல் போன்ற பெண்ணையும். கள்வன் முதலில் அழுதான், பின்னர் நகைத்தான்.

37. ஆயது - கள்வன் கழுவேறியதை. ஏயின - பொருந்திய. கவுரி நோன்பு - பார்வதி விரதம். வலஞ்செய்து - வலமாகச் சுற்றிவந்து.

38. வன் பகை - வலிய பகை. வான் துணை - சிறந்த துணை. அரன் - சிவபெருமான். சே - காளை.

39. கன்னிகை - பெண். கனல் - நெருப்பு. அவா - விருப்பம். நன்னுதல் - நல்ல நெற்றியையுடைய பெண். நல்கும் - கொடும்.

40. ஈந்தனம் - கொடுத்தோம். போந்தனர் - சென்றனர். பூவை - பெண். மரம் - கழுமரம், கொலைக்கருவி.

41. நவம் - புதுமை. மின் இடைப் பொருட்டினால் - மின்னல் போன்ற இடையினையுடைய பெண்ணின் காரணமாக.

42. பேர் இயல் - பெருந்தன்மையுடைய. மன்னொடு - மன்னனிடத்தில். கழறிடு - சொல்.

43. உறவு இலை - உறவு இல்லாதவர். அறிவு இலை - முன்பு அறிமுகம் இல்லாதவர். துயரில் - துன்பத்தைக் கண்டு.

44. வைப்பு என - வைத்த பொருள்போல. உயிர் ஒளிக்குமாறு போல் - உயிர் ஒளிந்து மறைதல் போல. கப்பு - கிளை.

கள்வன் கதை முற்றும்.

---

## 15. தெய்வ சுவாமி கதை

முருக வணக்கம்

1. அறுசீர் சமய மோதுந் தெய்வ
மதுவோ விங்கெதுவோ
குறிதா னென்றிடை தடுமா றும்பல
குணர்கா ளிங்குணரீர்
திறமா குஞ்சுரர் முனிவோர் சங்கரர்
திருமா லம்புவியோர்
மறைநா லுந்தொழு தடிபே ணும்தெய்வ
மயிலே றுங்குகனே.

வேதாளம் விளம்பிய பதினைந்தாம் கதை

2. அலவா மென்பது கடைபோ கும்படி
யறிவே மென்றெண்ணியே
வலமாய் வந்திருள் தனில்கண் டரசனும்
நீளுந் தருமேலே
வலிதாய் நின்றல கையைவா தின்கொடு
வருநே ரந்தனிலே
கலைநூ லின்படி சொலுமே யங்கொரு
கதைமு வைந்தினையே.

3. குடமே வுந்திரு மனைதோ றும்பல
கொடியா டுந்தொழில்சேர்
இடுவா ரிங்குளர் பசியா றும்படி
இனிதே யென்பவர்போல்
நெடுமா டங்களு முயர்கூ டங்களும்
நிறைவா யவண்மின்னர்
விடமே வுங்கணை யினமோ வென்றுரை
விசயாம் நன்பதியே.

4. பரிவா லும்பெரு மையினு லுங்கன
பவுசா லுஞ்சுரர்மா
தருவா குங்கொடை யதனு லும்புவி
தனையா ளுஞ்செயலால்

இரவோ ருஞ்சது மறையோ ருந்தச
ரதரா மன்தனேநேர்
பெருமா னிங்கென வரசா ளுந்துரை
பெயர்தே வென்பவனே.

வேறு

5. அந்தவர சன்னுடைப் பாரியழ கேதான்
உந்துதிரு வாகியவு ரோமவல்லி யென்பாள்
முந்துதவ மேபுரிமு யற்சியத னாலே
தந்ததொரு மாமயில் சசிப்பிரபை மாதோ.

6. உசத்தியில் முளைத்தமதி யோங்கினது போலும்
விசைப்பின்களை நீங்கிவிளை வானபயிர் போலும்
திசைக்குளிந்தி ராணியென வேமிகு சிறப்பால்
சசிப்பிரபை யென்பவள் சடக்கெனவ ளர்ந்தாள்.

7. கசிந்துபுவி வாலிபர்கள் கண்டுருக வேதான்
இசைந்துமட வார்களொடு மிருந்துவிளை யாடி
வசந்தமெனு மோர்பருவம் வந்தணுக வேதான்
உசந்ததொரு காவினிடை யுற்றவ ளுறைந்தாள்.

8. கன்னியர்கள் சூழவளர் காவிலவள் மேவத்
தன்னினம தென்றுமயில் தானருகி லாடப்
புன்னைமலர் கொய்துகுழல் மீதுபுனைந் தேதான்
அன்னநடை யாளும்விளை யாடுகிற போதில்,

9. பரிதிதனை யர்ச்சனைகள் பண்ணமலர் கொய்யச்
சுருதிவல வோர்தெய்வ சுவாமிபொழில் புக்கான்
கருதியிவ ளைத்தனது கண்ணினெதிர் நோக்கி
விருதுமத வேளிரதி யோவென வியந்தான்.

10. கண்டவுடன் வேளுமொரு கஞ்சமல ரெய்தான்
ஒண்டொடிக ணம்புமதி யூடுருவி யோட
அண்டரிய மாமயல்கொ டந்தணனு நின்றான்
வெண்டரள மானநகை மின்னுமினை வானாள்.

11. கோடுகொடு மால்வரை குலுங்கவம ராடி
நீடியம தத்தொடு நிமுற்கறுவி யேதான்
தேடிவரு பாவையர்கள் திசைதிசையி லோட
வேடுலவு சோலைநடு வெய்தியதோ ரானை,

12. கந்தனுயர் வள்ளியுடைக் காதலில்நி னைக்கத்
தொந்திவயிற் றானைவரு தோற்றமது போலும்
அந்தணகு மாரன்மிசை யன்புளவர் போலும்
வந்தமத யானைதனை மங்கையெதிர் கண்டாள்.

13. குஞ்சரம் நடந்துவரு கோபமது கண்டு
வஞ்சியு நடுங்கிமறை வொன்றுமிலை காணள்
தஞ்சமினி நீயெனவே சார்ந்தபய மென்றாள்.
அஞ்சலென் வங்கையினி லந்தண னணைத்தான்.

14. அதிர்ந்துநில மெங்கணு நடுங்கியரு கேதான்
எதிர்ந்திடு மரங்களை யிறுத்திடை முரித்தே
முதிர்ந்ததொரு மும்மத முழக்கவுயர் காவும்
சிதைந்திட வகன்றுதிசை சென்றதுவே யானை.

15. மோகமுட னேயிருவர் நெஞ்சுமுற வாகி
ஏகமினை வாயினிது எண்ணிமகிழ் வுற்றார்
ஆகமுற வேதமுவி யந்தணனி டத்தே
தோகைமனம் வைத்தனள் சுளித்துமனை புக்காள்.

வேறு

16. வேதியன் றானு மாங்கே மின்னுமே லாசை தூண்ட
ஆதவன் தனைப்பூ சித்தே அனங்கன்பா ணத்தா [னொந்தே
தீதிலா முனிவன் மூல தேவனார் பால னான
நீதியான் சசிதா னென்னு நேயனை நாடி வந்தான்.

17. சசியெனுந் தோழ னேடுந் தையலைக் கண்ட வாறும்
விசையிலோர் வேழம் வந்த வெற்றியு மின்னா ளஞ்சிக்
கசிவுடன் தழுவு மாறுங் காத்ததுங் காம பாணம்
பசுமரத் தாணி போலப் பட்டதும் பகர்ந்து நின்றான்.

18. பொருமதன் பகழி தன்னைப்
பூவென்பர் பொறுக்க மெத்த
அருமையுண் டன்ப னேயா
னாற்றிலே னென்று சொன்னான்
தருமனை நிகர்த்த அந்தச்
சசியுந்தன் தந்தை யான
திருவளர் புயத்தான் மூலத்
தேவன்பால் சென்று சொன்னான்.

19. மூலதே வனுந்தன் பாலன்
மொழிந்தவா றதனைக் கேட்டுச்
சாலவே மனமி ரங்கித்
தன்னிலே தயைதா னுன்னிக்
கோலமா மரிவை யாகுங்
குளிகையொன் றளிக்க வப்போ
மாலினல் வருந்துந் தெய்வ
சுவாமியும் வாங்கிக் கொண்டான்.

20. குலமுனி யவனுக் காங்கே
குளிகையின் செய்கை சொல்வா
னலமுள வனிதை யாவை
நாவினிற் போட்ட போதில்
இலகியே யுமிழ்ந்த போது
எப்போதும் போல ஆவை
விலையிலை யிதனை நீதான்
விரும்பியே கொள்க வென்றான்.

21. தோழனல் வணங்கித் தெய்வ
சுவாமியு மாசை தீர
ஈழமாங் குளிகை நாவி
விட்டபோ தரிவை யானன்
வாழுமோர் மூல தேவன்
மன்னவன் தன்பால் வந்து
சூழுமோர் சபையின் முன்னே
தோகையைக் காட்டிச் சொல்வான்.

22. ஏத்திமன் னவனை நோக்கி
யிதம்பல பேசி நின்று
தீர்த்தயாத் திரையாய் நான்தான்
சென்றுமீண் டிடுதல் வேண்டும்
வாய்த்தவென் மகளை யுன்றன்
மகளுடை யருகே வைத்துக்
காத்துநீ கொள்க வென்று
காட்டியே கொடுத்துப் போனன்.

23. மன்னனும் முனிவன் போக
மற்றவன் மகளை யப்போ
தன்னுடை மகள்தா னை
சசிப்ரபை யைவா வென்று
நின்னுடைத் தோழி யிந்த
நேரிழை யிவளைக் கூடிப்
பன்னியே பொழுது போக்காய்ப்
பாங்குட னிருநீ யென்றான்.

24. ஓதிய தாதை தன்னை
யுற்றடி வணங்கி யேகிப்
பேதைய ரிருவ ருந்தான்
பெருத்ததோர் மேடை மீதில்
ஆதர வுடனே கூடி
யமர்ந்தினி திருக்கும் போதில்
வேதியன் மடந்தை வேந்தன்
மின்னினை வினவ லுற்றாள்.

25. மனமொரு குணமும் பேசும்
வாக்கொரு செயலு மானாய்
நினைவென்னீ யுற்ற தென்ன
நிருபன்தன் மகளுஞ் சொல்வாள்
புனைமலர்ச் சோலை யூடோர்
பூசுரன் மகனைக் கண்டேன்
தினமவ னுசை யென்றன்
சிந்தைவிட் டகலா தென்றாள்.

26. அங்கவன் தன்னைக் காணில்
அறிவையோ வென்றான் கண்டால்
இங்கினி யறிவே னென்றாள்
இவ்வுருக் கொண்டு வந்தேன்
மங்கையே யான்கா ணென்று
வடிவினைக் காட்டி நின்றான்
கொங்கைகள் குழைய நெஞ்சம்
மகிழ்ந்தனள் புல்லிக் கொண்டாள்.

27. நினைத்தது முடிந்த தென்று
நிருபன்தன் மகளு மாங்கே
தனத்தினி லுறவே புல்கிச்
சதுர்மறை யோனுந் தானும்
மனத்தினி லன்பு கூர்ந்து
மருவியே யன்றில் தன்பே
டினத்துடன் கூடி னாற்போல்
இரவுமெண் பகலும் வாழ்ந்தார்.

28. இருவரு மனதொன் றாகி
யேகபோ கமதாய்க் கூடிப்
பரிவுட னிரவிற் றேய்வன்
பகலெலா மரிவை யாவன்
மருவியங் கிருக்கு நாளில்
மன்னவன் மகளி டத்தே
கருவொன்று நிலைக்கக் கண்டே
கலக்கமுற் றிருக்கும் போதில்.

வேறு

29. வேந்தன் றெருவேள் வியுஞ்செய வெணியே
போந்தங் குளபூ சுரர்தங் களையும்
சேந்தம் புவிமன் னவர்சே னையையும்
மாந்தன் புடனிங் கழையென் றனனால்.

30. மன்னே திடமா திரமெங் கணிலும்
சொன்னார் பலதூ துவர்சொல் லுதலும்
அந்நா ளினிலங் குளபேர் களெலாம்
தன்னு தரவா லவர்சார்ந் தனரால்.

31. எதிர்கொண் டனைவோர்க் குமிடம் பணியே
கதிகொண் டவர்பூ சுரர்கல் வியினால்
விதிகொண் டெழுவேள் விமுடித் திடவே
சதிர்கொண் டுயர்கட் டளைதான் பணினன்.

32. விழைவா கியவேள் வியின்வண் மையெலாங்
கழைபோல் மொழிவஞ் சியர்கண் டிடவே
இழைநுண் ணிடையா ரிருவோர் களையும்
அழையென் றனனே டியழைத் தனரால்.

33. விரைவா லவர்வேள் வியின்மே விடவே
பரிவா லொருமந் திரிபார்த் துருகி
நரபா லனைநான் மறைமா தினைநீ
தரவே ணுமெனத் தனிசாற் றினனல்.

34. ஞான பரமன் னவனுன் மறையோன்
மான லைமணஞ் செயவெண் ணினனல்
ஆன லுமடைக் கலமா னவளைத்
தானீ யருளத் தகுமோ சொல்வாய்.

35. மின்னங் கதுகூ றவுமே தினியும்
பொன்னுந் திருவும் பொதுவா குமென
மன்னன் சொலிமந் திரிபா லவளைத்
தன்னன் பிலளித் தனனே சதிரால்.

வேறு

36. அவ்வேள்வியை முடித்தானவ னனைவோர்களு மகிழக்
கைவானவர் தருவாரெனக் கனதானம தளித்தான்
வெவ்வேறர சரையும்விடை கொடுத்தான் மழைமின்னும்
மைவேல்விழி தனைமந்திரி பின்னேவினன் மன்னே.

37. நிறைவாமழ கைக்கண்டவள் நிலையுள்ளறி யாமல்
குறியாதுயர் மடியிற்கனல் கொடுபோ மவர்போலே
மறுவேதுமி லாதானபி மானம்முழு துறவே
அறிவேதுமி லாமந்திரி யகமேகொடு சென்றான்.

38. வேதத்திரு விவள்நாமமு மிருகாபதி யென்றே
ஓதித்தன திடமுற்றனன் உறுமன்பினில் வைத்தான்
காதல்தனி லொருநாளவன் கலவிக்கெனும் போதில்
மாதர்க்கர சன்னுள்புற மானளுரை செய்வாள்.

39. அருமாமறை யவர்கன்னிகை யன்னன்றனை நோக்கி
இருவோர்களு மிணையத்தக விலையிங்கிது வேண்டில்
விரிவாகிய நவதீர்த்தமு மிகவாடிநீ வந்தால்
மருவிங்கெனை யலவாமெனில் மரிப்பேனென
[வுரைத்தாள்.

40. அங்கேயவ னுறைகாலையி லருமாமுனி தன்பெண்
ணெங்கேயழை யெனவந்தவ னிறைமுன்னுரை
[செய்வான்
செங்கோலுள மன்கன்னிகை தேசத்தினி லொருவர்
பங்கோவென வொருமந்திரி பால்நல்கின னென்றான்.

41. தன்கண்ணெரி யெழவேமுனி தான்சீறிநின்
[றுரைப்பான்
என்பெண்ணினை நீமந்திரிக் கீயத்தகு மோதான்
வன்பெண்ணினை யானுனுமோர் வசனஞ்சொ லு
[வேனுன்
நின்பெண்ணையென் மகனுக்கருள் நிருபாவென
[நின்றான்.

42. தகவல்லது செய்தோமிவன் சபிப்பானென வஞ்சி
முகமன்புடன் மலர்ந்தேபினை முனிதன்னெடு
[மொழிவான்
மிகநன்றதற் கிசைந்தேனென வேந்தனழைத் தேதான்
மகள்தன்னையே யவன்மைந்தனை மணமேசெயக்
[கொடுத்தான்.

43. வேடிக்கையில் முனிமன்னவன் மின்னைக்கொடு
[போந்தே
தேடிக்கொடு வந்தேதெய்வ சுவாமிக்கிவை சொன்னான்
சோடித்தது கைகூடிய தென்றேமன மன்பால்
கூடிக்கொள வெனக்கீயெனக் குலமங்கையைக்
[கேட்டான்.

44. அன்றுங்குளி கையைநல்கி யவளைப்புணர் வித்தாய்
துன்றுங்கரு வுண்டாயினள் தோய்ந்தேகிய பின்னை
இன்றிங்கொரு வழக்கேசொலி யிவளைக்கொடு வந்தாய்
நின்றுன்கழல் பணியத்தகும் நீதாவென வுரைத்தான்.

45. முனிவன்மகன் சினந்தான்மிக முனியோடுரை
[செய்வான்
மனுவின்னெறி யேமன்னவன் மணஞ்செய்தெனக்
[களித்தான்
இனியென்னுடைத் தாரமிவள் என்றான்முனி நின்றே
தனியங்கிரு வோருஞ்சரி யெனவேதலை வளைத்தான்.

46. முன்னாளினில் யான்கூடினன் முன்பின்னிலை
[யோதான்
மின்னாளெனக் கேயென்றனன் வெகுண்டேவழக்
அன்னாரிரு வோர்தங்களில் லாருக்கவள் தாரம் [கானார்
மன்னாவென வேதாளமும் வழக்கேதுரை யெனுமே.

47. கானார்குழல் மடமாதினைக் களவிற்புணர்ந் தருள்வோன்
தானாள்வதற் குரியோனெனத் தகுமோதக வலவே
ஆனாலுமம் புவிமீதினில் அனைவோர்களு மறிய
மானாள்தனை மணஞ்செய்தவன் மகிழ்நனெனல் வழக்கே.

48. வழக்கங்குரை செயுமன்னனை மதித்தன்புடன் மகிழ்ந்தே
செழிக்கும்பவு சதிலேழையர் தேடும்பொரு ளதனை
அழக்கண்டவர் கைவிட்டது அகலும்படி போலே
தழைக்குந்தரு மீதுற்றது சடக்கென்றல கையுமே.

ஆக விருத்தம் 525

## அருஞ்சொற்பொருள்

1. அறுசீர் சமயம் - ஆறு சமயங்கள்; சைவம், வைணவம், சாக்தம், சௌரம், காண பத்தியம், கௌமாரம். தடுமாறும் பல குணர் - மனம் தடுமாறுகின்ற குணங்களையுடையவர்களே. உணரீர் - நீர் அறிய மாட்டீர். சுரர் - தேவர். புவியோர் - பூமியில் உள்ள மக்கள். தெய்வ மயில் - தெய்வத்தன்மையுடைய மயில்.

2. அலவாம் - அது அன்று, இது அன்று என்பது. கடை போகும்படி - முடிவு பெறும்படி. அறிவேம் - அறிவோம். கலை நூல் - கலைகளை வளர்க்கும் நூல்.

3. குடம் - பூரண பொற்குடம். அன்னதானம் செய்பவர் வீட்டில் கொடி கட்டியிருப்பர். பசி ஆறும் - பசியாறிச் செல்வீராக ; உண்பீராக. கடிதினில் - விரைவாக. மின்னார் - மின்னல்போன்ற பெண்கள்.

4. பரிவு - அன்பு. கனபவுசு - மிகுந்த செல்வவாழ்வு. சுரர் மாதரு - தேவர் உலகத்துள்ள கற்பகதரு. இராமன் தனைநேர் - இராமனைப் போன்ற. துரை - அரசன்.

5. பாரி - மனைவி. திரு - இலக்குமி. சசிப்பிரபை - உரோம வல்லியின் மகள்.

6. இதன்கண் வந்துள்ள உவமைகள் பொருத்தமானவை; உசத்தியில் - வானத்தில். கீழ்வானத்தில் தோன்றும் சந்திரன் வரவர மேலோங்கு

வது போலவும், களை நீக்கப்பெற்ற பயிர் செழித்துவளருவது போலவும் சசிப்பிரபை என்னும் பெண் வளர்ந்தாள்.

7. வசந்தம் என்னும் ஓர் பருவம் - மணத்திற்குரிய பருவம். கா - சோலை.

8. மேவ - பொருந்த. சோலையில் தோழியருடன் வந்த சசிப்பிரபை அச் சோலையில் மலர்ந்த புன்னை மலர்களைப் பறித்துத் தன் கூந்தலில் வைத்துக்கொண்டாள். அவள் அருகில் மயில்கள் ஆடின. அவள் தன் தோழிமார்களுடன் விளையாடினுள்.

9. பரிதி - சூரியன். பண்ண - செய்ய. சுருதி - வேதம். வல - வல்ல.

10. கஞ்சம் - தாமரை. வேள் - மன்மதன். ஒண்டொடி = ஒள் + தொடி—ஒளிபொருந்திய வளையல். இங்கு அதனை அணிந்த சசிப்பிரபை யைக் குறித்தது. கொடு - கொண்டு. அந்தணன் - பிராமணன். தரளம் - முத்து. மன்மதன் விட்ட தாமரை மலர் என்னும் அம்பினேடு சசிப் பிரபையின் பார்வை அம்பும் அந்தணனை ஊடுருவ, அவன் மிக்க வேட்கை கொண்டு செயலற்று நின்ருன். தெய்வசுவாமி - அந்தணன் பெயர்.

11. வேடு - வேடுவர்கள். கோடு - உச்சி. மால்வரை - பெரிய மலை. நீடிய மதம் - மிகுந்த மதத்துடன்.

12. கந்தன் - முருகன். தொந்தி வயிற்று ஆனை - பிள்ளையார் கொண்ட யானை உருவம். மிசை - மீது. கந்தன் வள்ளியை வசப்படுத்தப் பிள்ளையார் துணையை வேண்டியபொழுது அப் பிள்ளையார், பெரிய யானை யின் உருவத்தில் தோன்றியது போல சசிப்பிரபையையும் அந்தணனையும் ஒன்றுசேர்க்க மதயானை அங்கு வந்தது.

13. குஞ்சரம் - யானை. வஞ்சி - வஞ்சிக்கொடி போன்றவள்; சசிப்பிரபை. அபயம், தஞ்சம் - அடைக்கலம். அஞ்சல் - பயப்படாதே. அங்கை - அழகிய கை.

14. இறுத்து - ஒடித்து. மும்மதம் - யானைக்கு மூன்று மதங்கள் உண்டு.

15. தோகை - சசிப்பிரபை. சுளித்து - அந்தணனை விட்டுப்பிரிய நேர்ந்தமைக்கு வருந்தி.

16. மின் - மின்னற்கொடி போன்ற சசிப்பிரபை. ஆதவன் - சூரியன். அனங்கன் - மன்மதன். சசி - முனிவன் மகன் பெயர், அந்தணனுக்கு நண்பன்.

17. விசையில் - விரைவில். அந்தணன் சசி என்னும் தன் தோழனிடம் சோலையில் நடந்த நிகழ்ச்சிகளை விவரித்தான்.

30. வாசவன் - இந்திரன் ; சிவபிரான் ஆணைப்படி வேதாளம் மன்னனைத் தன் தோள்மீது எடுத்துக்கொண்டு ஈரேழு உலகங்களையும் சுற்றிவரப் புறப்பட்டது.

31. ஐங்கரன் - ஐந்து கைகளையுடைய விநாயகர். ஒரு மாங்கனிக்காக முருகன் மயில்மீது ஏறி உலகங்களைச் சுற்றிவந்தான். அது போல வேதாளத்தின்மீது ஏறி விக்கிரமாதித்தன் பல உலகங்களைச் சுற்றினான்.

32. ஈந்த - கொடுத்த. பைந்தமிழ்=(பசுமை+தமிழ்) - என்றும் செழிப்போடு விளங்கும் தமிழ். பதிட்ட மாநகரம் - விக்கிரம கேசரி என்னும் விக்கிரமாதித்தனது தலைநகரம்.

33. புடை - பக்கம். புரந்து - பாதுகாத்து. சின்மொழி - (சில+மொழி) சில சொற்கள்.

34. செய்ய பொன்மேனி - சிவந்த பொன்போன்ற உடல். அத்தம் - நேரம். கோவில் குருக்களாக இருந்த தான் வேதாளமான வரலாற்றை அது வேந்தனுக்குக் கூறியது.

35. இக்கும் - இருக்கும். இந்த வாறு - இப்படி.

36. மெச்ச - பாராட்ட. விடை பெற்றது - விடுதலை பெற்று நீங்கியது. 'இக்கதைகளைப் படிப்பவரும் பிறர்க்கு அறிவிப்பவரும் நலம் பெறுவர்' என்று வேதாளம் வேந்தனிடம் கூறி விடைபெற்றது.

37. புந்தி - புத்தி. கபடு -வஞ்சகம். நாதம்+அந்தம்=நாதாந்தம். நாதாந்த சிவலோகம் - நாத தத்துவத்துக்கு மேற்பட்ட சிவன் உறையும் இடம். நயந்து இரு - விரும்பி இரு. வள்ளலாகிய நீ பதினான்கு உலகங்களிலும் வாழ்ந்து சிவலோக பதவியை அடைய விரும்பியிரு.

38. கறுப்பன் - நூலாசிரியருடைய தந்தையார் பெயர். கவிக்களஞ்சியன், கவிப்பிரான் - ஆசிரியருடைய பட்டப் பெயர்களாக இருக்கலாம். மயிற்குகன்=மயில்+குகன். அருத்தி - அன்பு. விஞ்சு- மேம்படுகின்ற. அகத்தியன்.........உரைத்தனன் - அகத்திய முனிவரால் வளர்க்கப்பட்ட தமிழ்மொழியில் நான் இக்கதையை இயற்றினேன் என்று ஆசிரியர் கூறுகின்றார் ; நாள் ஒன்றுக்கு ஐம்பது விருத்தங்களாக இந்நூலைப் பாடியதாகக் கூறுகின்றார்.

39. துன்முகி வருடத்திலே, கன்னி மாதம் என்னும் புரட்டாசி மாதத்தில், முதல் பத்துநாள்களுக்குமேல், தசமி திதியில் கவிக்களஞ்சியன் என்னும் புலவர் இக்கதை நூலைப் பாடி முடித்தார்.

40. அண்ணலார் - சிவபெருமான். அன்று + உமைக்கே= அன்றுமைக்கே. உமைக்கு - உமாதேவிக்கு. நாலாறு - இருபத்து நான்கு. இந்நூலாசிரியர் தாம் எண்ணூற்றறுபத்து நான்கு கவிகளை இயற்றியதாகக் கூறுகின்றார். பண்ணுடன் - இசையுடன். பரகதி - மேன்மையான பதவி.

**விக்கிரமகேசரி கதை முற்றும்.**

# செய்யுள் முதற்குறிப்பகராதி

[எண் - பக்க எண்]


| | |
|---|---|
| அகிலவுலகந்தனை | 10 |
| அகிலொடு | 203 |
| அங்கவன்தான் | 103 |
| அங்கவன் | 123 |
| அங்கவன்வந்திட | 136 |
| அங்கவர் | 162 |
| அங்கிரும்மென | 54 |
| அங்கிருவோர்களும் | 99 |
| அங்கியென | 190 |
| அங்குநோக்கி | 140 |
| அங்குற்றிட | 38 |
| அங்கேயவனுறை | 126 |
| அங்கேநவமான | 25 |
| அஞ்சியமன்னன் | 190 |
| அஞ்சுதல்இன்றி | 8 |
| அட்டமாதிரமும் | 138 |
| அட்டதிக்கெண்ணு | 58 |
| அட்டமியிற் | 103 |
| அடவியிற்புள் | 137 |
| அடைவுடன் | 69 |
| அண்ணலாரன்று | 224 |
| அண்ணன்சிர | 39 |
| அண்டர்கோனை | 138 |
| அத்திதத்தியே | 75 |
| அத்தினம் | 102 |
| அதிர்ந்துநிலை | 121 |
| அந்தணன் | 3 |
| அந்தமாகாவலாளர் | 6 |
| அந்தநாள்வரை | 12 |
| அந்தநளனை | 103 |
| அந்தமன்னவனே | 70 |
| அந்தமன்னவன் | 86 |
| அந்தவரசன் | 120 |
| அந்தவாறங்கு | 135 |
| அந்தணக்குமரன் | 161 |
| அந்தநன்னகரினில் | 149 |
| அந்தநன்னகருளோர் | 114 |
| அந்தந்தவுலகு | 221 |
| அந்தணனும் | 203 |
| அந்தணகுமாரனு | 190 |
| அந்தணாளர் | 175 |
| அந்தியிற்பஞ்ச | 153 |
| அந்நகர் | 162 |
| அந்நகர்தன்னில் | 98 |
| அந்நகரடையவும் | 115 |
| அப்பதியில் | 10 |
| அப்படியே | 37 |
| அப்படி | 215 |
| அப்பொழுதலகை | 115 |
| அப்பொழுது | 87 |
| அப்போ | 44 |
| அம்முனி | 1.89 |
| அமைத்தவன் | 30 |
| அம்புவி | 101 |
| அயனுடை | 203 |
| அரசன் | 37 |
| அரசனுந்தேவி | 87 |
| அரசனேதிட | 176 |
| அரசனுக் கலகை | 193 |
| அரம்பை | 76 |
| அரியே வரசன் | 25 |
| அரிந்தானுயிர் | 39 |
| அரிவைகூறும் | 64 |
| அரிவையே | 80 |
| அரிவையை | 27 |
| அரிவைபோ | 135 |
| அரிவைதன் | 141 |
| அருகனிவ்வாறு | 7 |
| அருகனேவ | 65 |
| அருக நினைந்திடும் | 180 |
| அருச்சுன | 47 |
| அருமறை | 173 |
| அருமாமறை | 125 |
| அருமாதவ | 214 |
| அருந்தவத்திடை | 181 |
| அருள்விஞ்சிய | 40 |
| அருளுடை | 29 |
| அருவிசார்வரை | 180 |
| அல்லிற் செல்வர் | 38 |
| அல்லின் | 49 |
| அல்லினில் | 78 |
| அலகை முன் | 216 |

## 16. சீமூதவாகனன் கதை

முருக வணக்கம்

1. பரவி டேன்வெளி கண்ட மானெனப்
பலதெய் வங்களைக் குலதெய் வங்களென்
றுருகி யோதிடேன் பிராண நாயகன்
ஒருவ னேயெனக் கருது மாதர்போல்
அரன ளித்தரு ளறுமு கனெனக்
கான நல்வரந் தானு கந்தினித்
தருகி னுந்தரா விடினு நெஞ்சினில்
சால நம்பினேன் வேலர் பாதமே.

வேதாளம் விளம்பிய பதினாறும் கதை

2. மேவ லரெனும் விக்ரம கேசரி
மீள வுந்தரு மீதி லேறியே
சேவ கத்துட னலகை யைக்கையில்
சிக்கெ னப்பிடித் தக்க ணத்திலே
வாகு திண்புயத் திட்டு தாரமாய்
வருமவ் வேளையிற் றரும நீதிசேர்
காவ லன்னுட னெண்ணி ரண்டெனுங்
கதையி னின்பய னறிய வோதுமே.

3. மாத வர்க்கிருப் பிடம தாகியே
வாய்த்த தோரிம வரையின் மீதிலே
தாத லர்செறி சோலை வண்மையும்
தாதின் வண்டுறை பூவின் வாவியும்
மீது சுற்றிய மாட கூடமும்
மேடை கோபுர வாடை யோங்கியே
பூத லத்தனில் விஞ்சு காஞ்சின
புரமெ னும்மொரு புரம துண்டரோ.

4. மேவு செல்வமுந் தியாக போகமும்
வெற்றி யுமுளோன் கொற்ற வர்க்குளே
தேவர் தம்பதத் திந்தி ரன்னெனத்
தீதி லாதசீ மூத வாகனன்

பூத லத்திலோர் மகப்பு கழ்ந்திடப்
புரையி லொன்றிலா திறைய ளித்திட
நாவ லோர்கள்தம் வைப்ப தென்னவென்
ஞரு மன்னர சாரு மன்னனே.

5. தரையெண் மன்னவன் தேவி யானவள்
சதிர்க யாபதி யென்னு மோர்பெயர்
தெரிவை தன்னுடன் கூடி மாலுடன்
திருவு மென்னவே மருவி வாழுநாள்
மரபின் முன்னையில் பெருமை பெற்றதோர்
மன்னர் தம்வரந் தன்னில் வந்துதான்
சுரர ளித்ததோர் கற்ப தாருவின்
சோலை யங்கவன் பாலி ருக்குமே.

வேறு

6. முனைத்திற முள்ளசீ மூத வாகனன்
தனக்கிசை யாகவுந் தருவின் நின்றுதான்
அனைத்துல கெண்ணயி சுவரிய மட்டினும்
நினைத்ததெல் லாமிக நிருபர்க் கீயுமே.

7. மனைவியும் பாலரும் மன்னுந் தேடிய
தனமது முட்டலதுந் தரணி மீதினில்
அனைவருக் கும்நிலை யாதென் றெண்ணியே
தினவசந் தம்மிடு தியாகி யாகினன்.

8. புரவலர் தமக்குளிங் கிவனைப் போலவே
தரவல ரிலையெனத் தரணி போற்றவே
வருபவர் யாவரும் வாரு மென்றுதான்
இரவலர் பாரிபோல் இடுமந் நாளிலே.

9. இன்னதென் னுமலிங் கிவனளிக் கையால்
பின்னையோர் நால்வர்கள் கூடிப் பேசியே
மன்னனை மனதுசோ திக்க வான்தரு
தன்னையு மெமக்குநீ தருக வென்றனர்.

10. ஏற்பவர் கேட்பவர் இன்ன தன்றியே
தீர்க்கமா யிலையெனுர் தியாகி யானபேர்
ஆர்க்கிது நிலையென அரச னெண்ணியே
நாற்புவி புகழவே தருவை நல்கினன்.

11. புவியினி லுள்ளதொல் புலவர் யாவர்க்கும்
அவரவர் வேண்டிய பாரி போலவே
நவமென வைந்தரு நல்கி வானிடை
யிவந்தருள் சொல்கையும் எய்தி னனரோ.

12. கற்றவர் பானுயர் கற்ப தாருவை
யுற்றவ னளித்தமை யுணர்ந்து மாற்றலர்
மற்றிவன் வலியெலாம் மாய்ந்த தென்றெணிக்
கொற்றவன் மேற்றளங் கூட்டி மேவினர்.

13. ஆனைகள் புரவிக ளம்பொற் றேர்களே
சேனைகள் தந்துபோர் செயிக்கச் செய்திடும்
வானவர் தருவிலை மருவலர் வெல்லுதல்
தானுறு தியெனத் தரணிப னெண்ணினன்.

14. மதியினிற் றெளிந்துதான் மன்னன் தன்னுடைப்
பதியினை விட்டுயர் பரியைக் கைக்கொண்டே
விதியினை நொந்துதான் மேவி மாதவர்
கதிபெறு காண்டகு கான மேவினன்.

15. கானிடை நடந்துதான் தார னென்னுமோர்
ஞானமா முனியுடன் நண்பு கொண்டுதான்
மானில மாண்டருள் மன்னன் தாரமும்
தானுமங் கிருந்தனன் அவரைக் கூடியே.

16. மன்னனு மங்கோர்நாள் மாது தன்னுடன்
உன்னியே கானிடை யுலாவும் போதினில்
அன்னமா காளியா லயமுஞ் சோலையும்
தன்னிக ரிலாதொரு தடமுங் கண்டனன்.

17. வருகிற மாதவர் மனமுங் கண்களு
முருகிடக் காட்டினில் உகந்து நின்றனள்
தருவெலாந் தழைக்கவே தையல் கோயில்முன்
விரைவுட னுருத்திர வீணை மீட்டினள்.

18. வீணையின் ஓசையும் மின்னின் பாடலும்
வாணய னங்களில் வருவி விகாரமும்
நாணய மாகிய நவமி தென்றுதான்
காணுமன் னவனுளங் கசிந்து நின்றனன்.

19. திங்கள்போல் வதனமும் சிலையெனு நுதல்களும்
கங்குல்நே ரளகமும் களபக் கொங்கையும்
இங்கித மானநூ லிடையும் பெண்மையு
மங்கழ கனைத்துங்கண் டரசன் கூறுவான்.

20. மண்ணினிற் றோன்றியென் மன்ன னுகிலென்
புண்ணியஞ் செய்கிலென் புகழ்ப டைக்கிலென்
பெண்ணெனு மிவளுடன் பிரதா பியாவிடில்
எண்ணிலிங் கவர்சென்ம மென்ன சென்மமே.

21. என்றுதன் தோழனோ டியம்பிக் கோயில்முன்
நின்றவ ளருகினில் நிருபன் சென்றுதான்
அன்றவன் மோகமுற் றரிவை தன்னுடன்
ஒன்றுநீ கேளென வுணர்த்து வானரோ.

22. வாரிதி மங்கையோ வானவர் மங்கையோ
சாரதி யோரதி யென்னுந் தையலோ
பாரினிற் கன்னியோ பன்ன கப்பெணோ
ஊரெது பேரெதிங் குரைசெய் வாயென்றான்.

23. மானனை யாளொரு வார்த்தை யுஞ்சொலாள்
மோனமா யிருக்கவே சீமூத வாகனன்
ஏனிவள் பேசிலா ளென்று சேடியர்
ஆனவ ருடன்சொல வவருங் கூறுவார்.

24. நின்னுடைக் கதிர்முகங் கண்டு நேசமாய்
மின்னிவள் பேசிலாள் மெய்ம றந்தனள்
அன்னவள் ஊர்பெயர் அறிய வேண்டினல்
இன்னமும் யாஞ்சொல்வோ மிறைவகே ளென்றார்.

வேறு

25. திருவு லாவிய சேணில்வித் தியாதரர்
மரபு ளோன்விசு வாவசு வின்மகள்
சுரனைப் பாடலிற் றும்புரு வொப்பவள்
அரிவை பேர்மலை யவதிதா னென்றார்.

26. ஆசை யாய்மலை யவதிக் காய்மனம்
பூசல் வேள்பொர மன்னன் புலந்தனன்
தாசி மாருடன் தையலு மக்கணம்
வாச மேவுதன் மாளிகை யெய்தினள்.

27. அரிவை போனபின் னங்குறை மன்னவன்
உருகி நெஞ்சம் உலைமெழு காகியே
முருக னைத்தன் உளத்தினிற் போற்றிடும்
அருமைத் தோழன் அரசனைத் தேற்றுவான்.

28. பொன்னி னுசையும் பூதல வாசையும்
கன்னி யாசையுங் கல்வியி லார்க்கலோ
உன்னி வாட வுனக்கி தடுக்குமோ
மன்ன னேயென்று மதுகரன் தேற்றினன்.

29. மார னர்பொர மனமும் நொந்துதான்
சோரு மாதுந்தன் தோழியர்க் கோதுவாள்
சேர வேமன்னன் சேர்ந்தில னுகிலென்
ஆரு யிர்க்கழி வெண்ணுவன் யானென்றுள்.

30. ஆண்டு தோழிய ராங்கிது வென்னென
வேண்ட வேண்ட விலக்கநில் லாமலே
நீண்ட மாளிகை விட்டந்த நேரிழை
தாண்டிக் காளிதன் சந்நிதி மேவினள்.

31. என்ன மேநல்லி யாமளி யேநின்ற
சொன்ன மேதிரி சூலிக பாலியே
முன்ன மீச னுடன்முயன் ருடிய
வன்ன மேயென் றடிபணிந் தோதுவாள்.

32. என்மயற் கொண்ட திப்பொழு தேவெனைத்
தன்ம மன்றித் தழுவ நினைந்திலான்
மன்ம தனிகர் மன்னனை யான்மற்றைச்
சென்ம மாயினுஞ் சேர்ந்திடப் பண்ணுவாய்.

33. அந்த வாறங் கரிவை பகர்ந்துதான்
கந்த ரத்திற் கயிறது பூட்டியே
முந்து கொம்பில் முடிந்தவள் நான்றப்போ
வந்து காளி மலர்க்கரம் பற்றினள்.

34. இந்த மன்னனை வேண்டி லுனக்கியான்
தந்த னன்னெனச் சாமுண்டி சாற்றலும்
வந்த வாறு மதுகரன் கண்டுபோய்
அந்த மன்னனுக் கப்பொழு தோதுவான்.

35. காவ லற்குத் தானுக்ர காளியும்
பூவை தன்னைப் புணர்ந்தருள் வாயென்றாள்
ஈவ தற்கிவள் தாதை யிசைந்திடில்
மேவு வேனென விண்ணப்பந் தான்செய்தான்.

36. கன்னி தாதைக்குக் கட்டுரைத் தானவன்
மன்ன னுக்கு மணம்செய் தளித்தனன்
இன்ன நேரமெண் ணுதிரு வோர்களும்
தன்னில் மோகச் சமுத்திர மூழ்கினர்.

37. சித்தசன் றன்னுடன் சேர்ந்த இரதிபோல்
தத்தைபோல் மொழியினள் தழுவியே வாழுநாள்
மைத்துன னும்விசு வாசு தன்னுடன்
பத்தியில் வனமெலாம் பார்ப்பதாய் மேவினன்.

38. அன்னகா னகமெலா மடைவுடன் பார்க்குநாள்
முன்னியோர் பாறைமேல் முகடுபோல் என்புதான்
துன்னியோர் குவையதாய்த் தோன்றிடக் கண்டுதான்
மன்னனிங் கேதென மைத்துனன் கூறுவான்.

39. என்றுமிப் பாறைமே லெய்திநா கங்கள்தாம்
துன்றியே மேவிடுஞ் சுழல்பசிக் கருடனர்
கொன்றுதின் றெலும்பினைக் குவியல்செய் தாரென
வென்றிசேர் மன்னன்முன் விரைவுடன் கூறினன்.

40. என்றனைத் தந்தைதா னில்லினிற் றேடுவான்
வந்திடா யென்றுதான் மைத்துனன் கூறலும்
முந்தியே சென்றுசீ மூத வாகனன்
அந்தநற் பாறையின் அருகி லெய்தினன்.

41. அங்கவன் வந்திடக் கண்டதோர் அரவுதான்
இங்கிவன் கருடனே வென்றுளம் அஞ்சியே
சங்குசூ டன்றனைத் தான்மறைத் தருளவே
உங்களி லொருவனென் றுறவுகொண் டுரைசெய்தான்.

42. அடவியிற் புள்ளினுக் கரசல வுலகினில்
முடிபொறுத் தரசன்சீ மூதவா கனனியான்
திடமுடன் வங்கணஞ் செய்துமைப் பேணியே
உடனியா னுறைவனென் றுரகனுக் குரைசெய்தான்.

43. மரபினி லரவெலாம் வலியதோர் கலுழனுக்
கிரையதாய் மாய்ந்தன இன்று நாளையில்
மருவுவ னென்னையு மாய்க்கு மாசையால்
தரையமன் னுவெனச் சங்குசூ டன்சொனான்.

44. எங்களோ டுறவுனக் கென்னதா னியமனுர்
பங்கதாய் மேவினும் பார்த்திபா வென்றுதான்
சங்குசூ டன்சொலச் சாலநெஞ் சுருகியே
அங்கைமன் னவனமைத் தஞ்சலென் ருேதினன்.

45. வஞ்சனைக் கருடனே வருகினுங் காலனுர்
விஞ்சியே மேவினும் விண்ணெலாம் மேவினும்
தஞ்சமாய்க் காட்டியே தான்கொடே னுங்களை
அஞ்சல்நீ ரென்னுயி ராகினுந் தருவனே.

46. காற்றின்முன் பூளையும் கனலின்முன் னீரதும்
ஏற்றின்முன் பசுவது மியமன்முன் னுயிர்களும்
தோற்றியே வென்றிடா சுழல்பசிக் கருடனை
மாற்றிநீ காப்பையோ மதியிலா மன்னனே.

47. மாரியே பொய்க்கினு மறைமொழி தப்பினும்
சீரிய ராமர்தம் பாணம் திகைக்கினும்
பாரினிற் புகழதாய்ப் பன்னகா திபர்கள்தம்
ஆருயிர் காப்பனென் றரசனுங் கூறினன்.

48. பரிவுடன் சபதமே பகருமன் னவனையே
உரகரிற் சங்குசூ டன்னுகந் துரைசெய்வான்
இரவலர்க் குத்தரு வீந்ததோர் கீர்த்தியாய்
சரியுனக் காரெமைக் காவெனச் சாற்றினன்.

49. கூறிய சங்குசூ டன்றனைக் கொற்றவன்
நேரகில் லென்றுதா னியல்புடன் கூறியே
பாறைமேல் நின்றனன் பசியினுற் கருடனுஞ்
சூறைமா ருதமெனத் தோன்றினன் வானிலே.

50. மலையுமா ரணியமும் வன்சிறைக் காற்றினுல்
நிலைகுலைக் தலையவே நெடியவாற் கருடன்ருன்
விலையிலா ரத்தின பரணமே வெயிலெழ
வுலகில்வெவ் வடவைபோல் உறுத்துவக் தானரோ.

வேறு

51. என்றி ருந்துமொரு சாவெ னுமனதி
லெண்ணி யேபுகழும் மண்ணின்மேல்
நின்றி ருந்தருளு மென்று விற்குனிய
நீட்டி நாணியது பூட்டியே
குன்றின் மீதுவிழு சோனை மாரியெனக்
கோடி கோடிகணை போடவே
வென்றி யானகரு டன்னு ரத்தின்மிசை
வீசி னன்விருது பேசினன்.

52. போர டாபொர வெதிர்ந்தநீ புவியில்
வேந்த னேவீர சூரனே
ஆர டாவென வதட்டி யேகருடன்
அம்பெ லாஞ்சிறகின் மோதினன்
பார டாஎனது ஆண்மை பாரின்மிசை
மன்னன் பன்னக மனைத்தையும்
கார டாதுகையில் நின்னைவா ளிகொடு
கலைவ னுறுமினி விளையவே.

53. அண்டர் கோனைவென் றமரர்வா னுலகில்
அமுதம் யான்கொணரு மந்த நாள்
சண்ட மாருதம தான வெஞ்சிறகு
தன்னி னெந்தரிய ரோடவே
கண்ட மன்னரெதி ரோவெனக் கெனவே
கருட னேதிடவவ் வரசனும்
கொண்டல் போல்கணைகள் தூவி யேவசைகள்
கூறி னன்மனது சீறினன்.

54. அட்ட மாதிரமும் மண்ணும் வானுலகும்
ஆழி யேழுவரை யெட்டினும்
முட்ட வேபரவி யோடு பானுவினை
மூடு கின்றபனி போலவே

விட்ட பல்கணையி னல்ம றைத்தருவி
விற்குனித் தெதிர தட்டியே
ஒட்டி நின்றுபொரு மன்னன் வீரியம்
உகந்து தான்கருடன் உன்னுவான்.

55. விற்பி டித்திடு முயர்ந்த வீரர்தமில்
வேந்தன் முன்னமரில் மேவினல்
புற்பி டித்தவ ணங்கு வாரலது
போரில் வெற்றிகொள வல்லரோ
கைப்பி டித்துரக ரெதிர்ந மக்கிவனைக்
காட்டி னரெனவெ குண்டுதான்
பற்க டித்துமுயர் சிறக டித்துமிசை
பட்ட பல்கணைகள் தட்டினன்.

56. போரில் மன்னனடல் வாளி யேவுகையில்
பொறுக்கொ ணதெதி ருறுக்கியே
பாரி லேகடிது வந்து தான்சிலை
பறித்த னன்கையில் முறித்தனன்
ஓரி மைப்பினுரு மேறு போலரச
னுடையின் வாளுருவி முடுகியே
வீர மானகரு டன்னு ரத்தின்மிசை
வெட்டி னன்சிறகி லொட்டினன்.

57. வெட்டி னன்கையில் வாள்ப றித்தெதிரின்
வீசி யேவிருது பேசியே
குட்டை மீன்கள்தமை நாரை கவ்வியிடு
கொள்கை போலரசைக் கொட்டவே
தட்டி யேசிறக டித்து வானின்மிசை
தாவி யேகருடன் மேவுபோ
திட்ட மாமகுட மலைய மாவதிதன்
ஏந்து சீர்மடியில் வீழ்ந்ததே.

58. தன்னுயிர்த் துணைவ னைக்கொண் டேகுமது
சங்க சூடனெதிர் கண்டுதான்
அன்னை யர்க்குரைசெய் தந்தரத் தின்மிசை
யலறி யேயருகி லெய்தினன்

என்னை யிப்பொழுது நீபுசித் திவனை
யீண்டு விட்டிடென வேண்டினன்
முன்னொ ளித்ததுவும் பின்னை வந்ததுவும்
மூர்க்க மாய்க்கருட னோக்கினன்.

59. அங்கு நோக்கிநகை செய்துதான் கருடன்
அதிச யித்தவர்கள் நட்பினைச்
சங்கு சூடனெதிர் வென்று கொன்றுவிற்ற
தலையை நாசிகொடு கொத்தியே
பொங்கு கோபமதி லுண்ணு போதிலுயர்
புவிக்கு மன்னவன் மனத்திலே
மங்கி டாமலொரு வற்கு வாருயிர்
வழங்கி னேமென மகிழ்ந்தனன்.

60. ஆரொ ருத்தரொரு வர்க்க தாருயிர்
அளிக்கில் வானிடை விளக்கமாய்
வீர சொர்க்கமுள தேழ்பி றப்புமிலை
விதியி னலவர்கள் கதியுளார்
சோரி யைப்பருகி யுடலி னிற்றசை
துணித்து நீபசி தணித்திடாய்
வாரு கோக்கருட வென்று நன்றிபுனை
வாக்கி னுலுயிரை நீக்கினன்.

வேறு

61. வந்துவிழு மகுடமது மலையவதி கண்டே
தந்தைமுனர் வைத்தழுது தாளிணை பணிந்தே
எந்தன்மகிழ் நன்கருட னெய்துதலை யுற்றான்
உந்தவினை வந்தபடி யொன்று மறியேனே.

62. தையலழு தோதிடவே தாதையு மிரங்கிச்
செய்யதொரு கானினிடைத் தேடியே நடந்தான்
ஐயமற வேயரச னண்டமதில் மாண்ட
மெய்யிலடை யாளமது கண்டனள் விழுந்தாள்.

63. வீழ்ந்தனள்பு ரண்டனள்வி ரைந்துரை மறந்தாள்
சோர்ந்தனள்ம யங்கினள்து ளங்கினள்தி கைத்தாள்
வேந்தனெ னவேயலறி விம்மிவிம்மி நின்றாள்
பாய்ந்தனலில் மூழ்குகைப கர்ந்தனள்து ணிந்தாள்.

64. இன்றுகண வன்றனையி முந்தினியு மூன்றே
மண்ணினிலி ரேனெரிவ ளர்த்தருள்க வென்றாள்
பெண்ணினிடர் கண்டதொர்பி தாமனமி ரங்கிக்
கண்ணருவி சோரவெரி கானிடைவ ளர்த்தான்.

65. இலகுகண வன்தனுடை யெலும்பதனை வாரி
முலையினு முகத்தினு மொய்குழல் அணைத்தும்
குலவுமுக்கிர காளியுடைக் கோவிலெதிர் நோக்கித்
தலையின்மிசை வைத்தழுது தையலுரை செய்வாள்.

66. அன்றிவனை யீந்தெனிட ரகற்றினளும் நீயே
யின்றிவனை மாற்றிவினை யிட்டவளும் நீயே
ஒன்றுமறி யேனிவைக ளுன்மகிமை யென்றே
கன்றிமன நொந்தரிவை காளியைவெ றுத்தாள்.

67. வெறுத்துமிகக் காளிதனை வீறினெடு போற்றி
மறித்தவளு மாகவுரி நோன்புவகை நோற்றுக்
குறித்தனல்வ லஞ்செய்துகை குவிடுத்திடு மப்போதில்
நிறுத்தினளி யாமளியும் நேசமுடன் வந்தே.

68. வந்தமக மாயிதன் மலர்க்கழல் பணிந்தே
சிந்தையில் மகிழ்ந்தரிவை செயசெயன நின்றாள்
அந்தரி யெழுப்பியர சன்றனைமுன் னுளே
தந்ததுவே தந்ததெனத் தந்தவள் அகன்றாள்.

69. அரிவைதன் னிரக்கமு மடுத்ததொரு கற்பும்
எரியைவலம் வந்ததுவு மியாமளை வரத்தும்
நரபதி யெழுந்ததுவு நாட்டில்நவ மென்றே
கருடனு மகிழ்ந்துயர் களிப்பினொ டுரைப்பான்.

70. மன்னவனை நோக்கிகரு டன்மகிழ்வ தாகி
உன்னொடுசி நேகித மதாகவுற வானேன்
என்னவரம் வேணுமினி இங்குரைசெ யென்றான்
நன்னெறியில் வேந்தனுமோர் நன்றுசெய வென்றான்.

71. அன்றையிலெ லும்புமலை யாயரவி யாவும்
ஒன்றுமொழி யாமலுயிர் பெற்றிடவு முற்றே
யின்றுமுத லாயரவை யிரட்சியென வுந்தான்
வென்றிபுனை மன்னன்வரம் வேண்டவவ னீந்தான்.

72. ஈந்தனமெ னக்கருடன் ஏகியபின் னேதான்
வாழ்ந்தனமுன் னுலெனவ ணங்கியர வெல்லாம்
வேந்தனொடு கூறிவிடை பெற்றளவில் மீண்டே
ஆய்ந்தமலை யவ்வதிய கத்திடைபு குந்தான்.

73. கற்பதரு வுங்கடிது காளிதன் வரத்தால்
அப்பொழுது வந்ததர சன்தனி யிடத்தே
வைப்பனைய தன்பழைய மாநகரி லெய்தி
யொப்பொருவ ரின்றியுல காண்டுமன் னிருந்தான்.

74. பன்னகம தோவலது பறவையர சன்னே
மன்னவனே யாமளையோ மலையவதி தானே
அன்னவரில் நற்குணவர் யாவருரை என்றே
சொன்னலகை தன்னொடிறை தோன்றிடவு ரைப்பான்.

75. உரகன்றனக் காயரசன் உயிர்விடுகை தீதென்
றருகணையு மகிழ்நனுட னரிவையர்க ளானோர்
எரியில்விழு வார்கடிதில் யாமளையு முன்னுள்
வரமருள்கை தவறிலென வந்துயிர் அளிப்பாள்.

76. கலுழனுமம் மகிமையது கண்டுறவு கொண்டான்
உலகிலிவர் செய்கையை யுதாரமென லாமோ
வலுவிலுயி ருதவியினில் மாறுதவி யுண்டோ
புலவரெனு மரசுசெயல் புகழ்வதென லாமே.

ஆக விருத்தம் 601.

## அருஞ்சொற்பொருள்

1. பரவிடேன் - தொழ மாட்டேன். குலமகள் தன் கணவன் ஒருவனே தெய்வம் என்று கருதுவதுபோல யான் முருகன் ஒருவனே கடவுள் என்று வழிபடுவேன். சால - மிகவும்.

2. மேவலர் - பகைவர். சேவகம் - வீரம். திண்மை - வலிமை.

3. மாதவர் - பெரிய தவசிகள். தாது - மகரந்தத்தூள். அலர் - மலர். செறி - நெருங்கிய. உறை - வசிக்கும். பூவின் வாவி - பூக்களை உடைய குளம். பூதலம் - நிலவுலகம். விஞ்சு - மேலோங்கி நிற்கும். புரம் - நகரம்.

4. கொற்றவர் - அரசர். வைப்பு - சேமநிதி. நாவலோர் - புலவர்கள்.

5. தரை - தரையிலுள்ள மக்கள். எண் - மதிக்கும். சதிர் - அழகு. கயாபதி - அரசியின் பெயர். மால் - திருமால். திருமாலும் இலக்குமியும் போல அரசனும் அரசியும் இன்புற்று வாழ்ந்தனர். சுரர் - தேவர். பால் - இடம். சுரர் × அசுரர்.

6. முனைத்திறம் - போர் முனையில் திறமை. இசை - புகழ். அரசன் தன்னிடமிருந்த கற்பகதருவின் உதவியால் மன்னர்க்கும் பிறர்க்கும் செல்வத்தை உதவினான்.

7. மனைவி, மக்கள் என்பவரும் அரசபதவி, செல்வம், உடல் என்பவையும் உலகில் நிலையில்லை என்பதை நன்கு உணர்ந்த மன்னவன் நாள்தோறும் கொடையிற் சிறந்து விளங்கினான். வசந்தம் - மகிழ்ச்சி.

8. புரவலர் - பொருள், உணவு முதலியவற்றைக் கொடுத்து ஆதரிப்பவர். தரணி - உலகம், உலகத்திலுள்ள மக்கள். பாரியாய் - பாரி வள்ளல் போல். பாரி வள்ளல் தன் நாட்டைச் சேர்ந்த முந்நூறு ஊர்களையும் பரிசிலர்க்கு வழங்கிப் புகழ் பெற்றவன். இடும் - கொடுக்கும்.

9. இன்னது - இவ்வளவினது. என்னமல் - என்று நினையாமல். அளிக்கையால் - கொடுத்தலால்.

10. ஏற்பவர் - யாசிப்பவர். தீர்க்கமாய் - முடிவாய். தியாகி - தன்னலமின்றிப் பிறருக்கு உதவுகின்றவன், அரசன் தன்னிடமிருந்த தரு ஐந்தினையும் அவை வேண்டும் என்று கேட்டவருக்குக் கொடுத்து விட்டான்.

11. நல்கி - கொடுத்து. இவந்து - ஊர்ந்து. சொல்கை - புகழ்.

12. தளம் - படை. மாற்றலர் - பகைவர். அரசன் கற்பகதருவைக் கொடுத்துவிட்டதால் வலிமை அற்றுவிட்டான் என்று எண்ணிய பகைவர் அவனைத் தாக்கப் படைதிரட்டினர்.

13. புரவி – குதிரை. அம் - அழகிய.

14. மதி - அறிவு. பதி - ஊர். மேவி - பொருந்தி. காண்டகு - காண் + தகு, காணத் தக்க.

15. சீமூதவாகனன் தன் மனைவியோடு காட்டில் வாழலானான்; அங்கு இருந்த ஞானமா முனி என்பவருடன் நட்புக் கொண்டான்.

16. உன்னி - நினைத்து. தடம் - குளம்.

17. காளி கோயிலின் முன் ஓர் அழகி வீணை வாசித்தாள். அவ்வினிய ஓசையால் காட்டில் உலர்ந்து நின்ற மரங்கள் எல்லாம் உயிர் பெற்றுத் தழைத்தன.

18. மின் - மின்னல் போன்ற அழகி. வாணயனம் - வாள் + நயனம், வாள் போன்ற கண். நவம் - புதுமை.

19. திங்கள் - சந்திரன். வதனம் - முகம். நுதல் - நெற்றி. சிலை - வில். கங்குல் - இரவு. நேர் - ஒப்பான. களபம் - வாசனை, வாசனைச் சாந்து பூசப் பெற்ற. நூல் இடை - நூல் போன்ற நுண்ணிய இடை.

20. பிரதாபியாவிடில் - சிறப்பு அடையா விட்டால்; கூடி மகிழா விட்டால். எண்ணில் - ஆராய்ந்தால்.

21. இயம்பி - சொல்லி. நிருபன் - அரசன். அரசன் தன் நண்பனிடம் தான் காளி கோவிலில் கண்ட அழகியைப் பற்றித் தெரிவித்தான்.

22. வாரிதி மங்கை - கடற்கன்னி. வானவர் மங்கை - தேவர் மகள். சாரதி - கலைமகள். பாரினிற் கன்னி - மானிட மகள். பன்னகப் பெண் - நாகர் மகள்.

23. மான் அனையாள் - மான் போன்ற மருட்சி வாய்ந்த பார்வை உடையாள். சொலாள் - சொல்லாள். மோனம் - பேசாமை. சேடியர் - தோழிமார்.

24. மெய் மறந்தனள் - தன்னை மறந்தாள். இறைவ - தலைவனே. தோழிமார் அப்பெண்ணைப் பற்றிக் கூறலாயினர்.

25. திருவுலாவிய - செல்வம் பொருந்திய. தும்புரு - யாழ் வாசிப்பதில் பெயர் பெற்ற முனிவர். அழகியின் பெயர் மலையவதி என்பது.

26. பூசல் - குழப்பம். தாசிமார் - பணிப்பெண்கள். தாசன் × தாசி. வாசம் மேவும் - மணம் பொருந்திய.

27. உலை மெழுகாகியே - எரிகின்ற உலையில் இட்ட மெழுகு போல் உருகி. தோழன் அரசனைத் தேற்றலானான்.

28. தோழனது அறிவுரை படிக்கத்தக்கது. 'கல்வி அற்றவர்க்கே மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை தகும், அறிஞனான உனக்கு இது முறையன்று' என்று நண்பன் நரபதியைத் தேற்றினான். அடுக்குமோ—தகுமோ.

29. பொர - போர் செய்ய. சோரும் - காமவேதனையினால் சோர்வு அடையும்.

30. அழகி அரசனை எப்படியும் அடைய வேண்டும் என்று விரும்பினாள். அரசனோ அவளையே அடைய வேண்டுமென்று வாடிநின்றான். ஆயினும் அவன் அவளை அடையத் துணிவு கொள்ளவில்லை. அதனால் மனம் வருந்திய அழகி காளி கோவிலை நோக்கிச் சென்றாள்.

31. என்னமே - என்+அம்மே=என் அம்மையே. நல்+யாமளி =நல்லியாமளி. சொன்னமே - சொர்ணமே - பொன்னே. கபாலி - கபாலம் (மண்டை ஓட்டை) ஏந்தியவள். முன்னம் - முன்னொரு காலத்தில்; காளி ஒரு காலத்தில் சிவனுடன் நடனம் ஆடினுள். அன்னம் - அன்னம் போன்றவள், காளி.

32. மயல் - மயக்கம். நிகர் - ஒப்பான. சென்மம் - பிறவி.

33. கந்தரம் - கழுத்து. நான்றப்போ - (நான்ற+அப்போ) தொங்கிய அப்பொழுது. மலர்க்கரம் - மலர்போன்ற கை.

34. சாற்றல் - சொல்லுதல்.

35. பூவை - பெண். ஈவதற்கு - கொடுப்பதற்கு. மேவுவேன் - பொருந்துவேன்.

37. சித்தசன் - மன்மதன். தத்தை - கிளி.

38. அடைவுடன் - முழுதும். முகடு - உச்சி. துன்னி - பொருந்தி.

39. துன்றி - நெருங்கி. மேவிடும் - வந்திடும்.

41. சீமூதவாகனன் அப் பாறையின் அருகில் வருவதைக்கண்டு சங்குசூடன் என்ற பெயர்கொண்ட ஒரு நாகம் அவனைக் கருடனே என்று எண்ணி அஞ்சியது. அரசன் அதனுடன் அன்பாகப் பேசி உறவு கொண்டான்.

42. அடவி - காடு. புள் - பறவை. கருடன் பறவைகட்கு அரசன். வங்கணம் - நட்பு. பேணி - பாதுகாத்து.

43. கலுழன் - கருடன். தரையமன்ன - மண்ணுலகாளும் மன்னவனே. மாய்க்கும் - கொல்லும்.

44. இயமனுர் - எமன், பார்த்திபன் - அரசன், அங்கை - அம்+கை, உள்ளங்கை அல்லது அழகிய கை. அமைத்து - உயர்த்தி. அஞ்சல் - பயப்படாதே.

45. விண்எலாம் - தேவர்கள் எல்லோரும். மேவினும் - வந்தாலும். தஞ்சம் - அடைக்கலம்.

46. பூளை - பூளைப்பூ. இது பஞ்சு போல் எளிதில் பறக்கும். கனல் - நெருப்பு. ஏறு - காளை, காப்பையோ - காப்பாற்றுவாயோ. 'பூளைப்பூ காற்றை எதிர்த்து நில்லாது ; நீர் நெருப்பினுல் வற்றிப் போய்விடும் ; காளையின் வலிமைக்குமுன் பசு நில்லாது ; எமனுக்கு முன் உயிர்கள் நில்லா. அவைபோலக் கருடனை எதிர்த்து நீ நிற்க முடியுமோ ?' என்று சங்குசூடன் என்னும் பாம்பு வினவியது,

47. மாரி - மழை. பொய்க்கினும் - பெய்யாது தவறினும். மறை மொழி - வேதமொழி. திகைக்கினும் - தடையுற்று நின்ருலும். பன்னகம் - பாம்பு.

48. உரகம் - பாம்பு. உவந்து - விரும்பி. இரவலர் - யாசிப்பவர். தரு - கற்பக மரம். கீர்த்தி - புகழ். சரி உனக்கு ஆர் - உனக்கு ஒப்பாவார் யார்? கா - காப்பாற்று.

49. கொற்றவன் - அரசன். கொற்றம் - வெற்றி. சூறை மாருதம் - புயல் காற்று.

50. ஆரணியம் - காடு. வன் - வலிய. சிறை - சிறகு. வடவை - கடலுக்குள் இருக்கும் பெரு நெருப்பு. உவணன் - கருடன்.

51. என்றி..................சாவு - என்றைக்கு இருந்தாலும் சாவு உண்டு. என - என்று. மண் - நிலவுலகம். குனிய - வளைக்க. அது - அம்பு. சோனைமாரி - விடாமழை; பெருமழை. கணை - அம்பு. வென்றி - வெற்றி. உரம் - மார்பு. மிசை - மீது. அரசன் கருடன் மார்பின்மீது அம்புமழை பொழிந்தான்.

52. முதல் இரண்டடிகள் கருடன் செயலை உணர்த்துவன. பின் இரண்டடிகள் மன்னன் செயலை உணர்த்துவன. பொர - சண்டையிட. புவியில் வேந்தன்-பூமியில் உள்ள அரசன். அடாது செயில் - பொருந்தாத கொலைத் தொழிலைச் செய்தால். வாளி - அம்பு. களைவன் - அழிப்பேன். ஊறு - துன்பம்.

53. அண்டர்கோன் - தேவர் தலைவனுகிய இந்திரன். கருடன் தாயின் விருப்பப்படி தேவருலகத்திலிருந்து அமுதத்தை எடுத்துச் சென்ருன். அப்பொழுது இந்திரன் முதலியோர் அவனை எதிர்த்தனர். கருடன் அவர்களை வென்ருன். கொண்டல் - நீர் கொண்ட மேகம்; இங்கு மழையைக் குறித்தது.

54. அட்ட மாதிரம் - எட்டுத்திசை. ஆழி ஏழு - கடல் ஏழு. வரை எட்டு - எட்டுத் திசைகளிலும் உள்ள எட்டு மலைகள். பானு - சூரியன். வீரியம் - வலிமை. குனித்து - வளைத்து. பொரு - போர் புரியும். உகந்து - விரும்பி. உன்னுவான் - நினைப்பான். கருடன் மன்னனுடைய போர்த்திறத்தைக் கண்டு மகிழ்ந்தான்.

55. அமர் - போர்முனை. மேவினுல் - வந்தால். புல் பிடித்தல் - தோல்வியடைதல். உரகர் - நாகர். கருடன் அரசனை வெற்றி காண்பது அரிதென்று கருதி வெகுண்டான். அரசன் விடுத்த அம்புகளைக் கருடன் தன் சிறகால் தட்டி விட்டான்.

56. அடல் - வலிமை. ஏவுகையில் - செலுத்துகையில். உரும் ஏறு - இடியேறு. கருடன் திடீரென்று நிலத்தில் வந்து அரசனது

வில்லைப் பறித்து முறித்தான். உடனே அரசன் தன் உடைவாளை உருவிக் கருடன் மார்பில் வெட்டினுன்.

57. விருதுபேசி - வீரப் பெருமை பேசி. நாரை சிறுமீன்களை எளிதில் கவ்வுவது போலக் கருடன் அரசனைக் கொத்தி எடுத்துச் சென்ருன். மகுடம் - முடி; கிரீடம். மலையமாவதி - சீமூதவாகனன் மனைவியின் பெயர்.

58. துணைவன் - நண்பன். அந்தரம் - ஆகாயம். கருடன் அரசனைத் தூக்கிச் சென்றதைக் கண்டவுடன், தனக்கு உதவி செய்ய வந்த அரசனது பரிதாப நிலையை உணர்ந்து இரக்கம் கொண்ட சங்கு சூடன் என்னும் பாம்பு தன் அன்னையிடம் நடந்ததைக் கூறி வானத்தில் பறந்து சென்று கருடனை அடைந்தது; "என்னை இரையாகக் கொள்; இவனை விட்டுவிடு" என்று வேண்டியது.

59. ஒருவரைக் காக்கும் முயற்சியில் தான் உயிர் இழப்பதை உணர்ந்த மன்னன் மட்டற்ற மகிழ்ச்சி யடைந்தான். நாசி - மூக்கு, அலகு.

60. 'ஒருவரைக் காக்க உயிர் கொடுப்பவர் விண்ணுலகில் விளக்கம் பெறுவர்; வீர சுவர்க்கத்தை அடைவர். அவர்களுக்கு ஏழ் பிறவிகளும் இல்லை' என்று அரசன் எண்ணினுன். சோரி - இரத்தம். பருகி - குடித்து. தசை - சதை. கோக்கருடன் - கருடருள் தலைவன்.

61. மலையவதி, மலையமாவதி என்பன அரசன் மனைவியைக் குறிக்கும் பெயர்கள். முனர் - முன்னர்; முன்பு. இணை - இரண்டு. மகிழ்நன் - கணவன். எய்துதலை - பிடிக்கப்படுதலை. உற்ருன் - அடைந்தான். உந்த வினை - முன்வினை.

62. கான் - காடு. செய்ய - சிவந்த. ஐயம் அற - சந்தேகம் நீங்க.

63. மூழ்குகை - மூழ்குதல். கணவனை இழந்த மனைவி தீக்குளித்தல் அக்கால வழக்கம். இச்செய்யுள் மலையவதியின் துன்ப நிலையை நன்கு உணர்த்துதல் காண்க.

64. உழன்று - வருந்தி. இடர் - துன்பம். கண்ணருவி - கண்ணீர் வெள்ளம். எரி - நெருப்பு.

65. இலகு - விளங்குகின்ற. குலவும் - விளங்குகின்ற.

66. கன்றி - வருந்தி. மலையவதி காளியிடம் முறையிட்டாள்.

67. வீறு - பெருமை. போற்றி - வாழ்த்தி. கௌரி நோன்பு - உமாதேவியை நோக்கிச் செய்யும் விரதம்.

68. செயசெய - வெற்றி வெற்றி. (வெற்றி பெறுக). காளி, மன்னனை முன்பு ஒரு முறை எழுப்பியது போலவே இப்பொழுதும் உயிர் பெற்றெழச் செய்தாள்.

69. நரபதி - அரசன். நவம் - புதுமை. மன்னன் உயிர் பெற்றெழுந்ததைக் கண்டு கருடன் பாராட்டினான்.

70. கருடன் என்ன வரம் வேண்டும் என்று மன்னனை நோக்கிக் கேட்டான். நன்று செய - நன்மை செய்ய வேண்டும்.

71. இரட்சி - காப்பாற்று. இது வரை இறந்த பாம்புகளின் எலும்புகள் மலைபோல் குவிந்து கிடந்தன. அப்பாம்புகளை எழுப்பி உதவுமாறு மன்னன் கேட்டான்; 'இன்று முதல் பாம்பைக் கொல்லாது காப்பாற்று' என்றும் வேண்டினான்.

72. ஈந்தனம் - தந்தோம். வாழ்ந்தனம்+உன்னால்=வாழ்ந்தனமுன்னால். மலையவ்வதி - மலையவதி. அகம் - வீடு.

73. வைப்பு - முன் சேர்த்து வைத்த செல்வம். மன் - அரசன்.

74. அலது - அல்லாமல். யாமளை - காளிதேவி. இறை - அரசன்.

76. உதாரம் - பெருந்தன்மை, கொடை. அரசு - அரசன்.

குறிப்பு: சீமூதம் - நீர் உண்டமேகம். சீமூத வாகனன் - மேகத்தை வாகனமாகக் கொண்டவன்; இந்திரன். இப்பெயர் மன்னனுக்கு இடப்பட்டது.

சீமூதவாகனன் கதை முற்றும்.

# 17. உமாபதி கதை

### முருக வணக்கம்

1. பெறுமெனத் தருவதும் பின்முன் னென்பதும்
வறுமையுஞ் செல்வமும் வல்ல வல்லவே
சறுவமும் மானிடர் தமக்கு நெஞ்சமே
அறுமுகன் கருணையுண் டாகி லாகுமே.

### வேதாளம் விளம்பிய பதினேழாம் கதை

2. மன்னவன் றருவினின் மறித்து மேறியே
பின்னையு மலகையைப் பிடித்து மீண்டபோ
தின்னமுங் கேள்பதி னேழெ னுங்கதை
தன்னையென் றெருநவம் சாற்ற லுற்றதே.

3. சிவனடி யார்களுந் தேவர் கோவிலும்
கவிஞர்கள் வாடையுங் கனக மேடையும்
நவமதா கியநலஞ் சிறந்து தானுயர்
புவிமிசைக் **கார்த்திக** புரமுண் டானதே.

4. குகனையுந் தசரத னென்னுங் கொற்றவன்
மகனையும் போலவே வண்மை பெற்றவன்
ககனமெண் புவிபுகழ் கார்த்தி காபுரஞ்
**சுகனெ**னு மன்னவன் தோன்றி யாள்வனே.

5. விலைதர வரியதோர் மெய்த்த மிழ்க்கருள்
சலதர மென்புவி தன்னை யாண்டருள்
நலமதாஞ் சுகனுயர் நாதன் வாசலில்
**பிலதர** னென்பவன் பிரதான தீரனே.

6. வலியவ ரெளியரை வாட்டி டாமலே
புலியொடு கலையொரு துறையில் நீருணப்
பிலதர னுடன்பரி வாரம் பின்செல
உலகெலாஞ் சுகனெனு மொருவ னொருநாள்.

7. அந்தநன் னகரினி லதிக வாழ்வுளோன்
சந்ததம் வணிகரில் தலைவ னனவன்
முந்திய மாதவ முயன்ற காட்சியால்
செந்திருப் போலவோர் தெரிவை தோன்றினள்.

8. பெண்மையி னுறுப்பெலாம் பெருக்கி யேயயன்
பண்புடை ஒருத்தியைப் படைத்து விட்டனன்
வண்மையார் வணிகனும் மாதின் நாமந்தான்
னுண்மையா யுமாபதி யென்றங் கோதினன்.

9. மலரினுள் ளேதிரு வளர்ந்தது போலவும்
நிலவது நாடொறும் நீள்வது போலவும்
சிலைமதன் சேவகஞ் செலுத்தப் பாரின்மேல்
பலருமன் புறவுமா பதிவ ளர்ந்தனள்.

10. வளர்ந்ததோர் மங்கையை வணிகன் கண்டுதான்
உளந்தனி லிவள்தனக் குற்ற காதலன்
தெளிந்திடில் வேந்தனே என்று செழுமுகஞ்
சுளிந்திடா துலகையாள் சுகனுக் கோதுவான்

11. எனக்கொரு பெண்ணுள ளெழிலி னளவள்
தனக்கிணை யில்லையித் தைய லார்களில்
மனக்களிப் பாயினேன் மன்ன வாவினி
உனக்களிப் பேனென வணிகன் ஓதினன்.

12. ஓதிய வணிகனை உகந்து மன்னவன்
வேதியர் இருவரை அழைத்து மின்னினை
நீதிசேர் பெண்மைதான் நிறைந்த லக்கணச்
சோதியு மென்னவே சுகனு மோதினன்.

13. மேவிய வேதியர் வணிகன் மின்னுடைப்
பூவியல் மேனியும் புயலென் கூந்தலும்
காவியின் விழிகளும் கண்ணிற் கண்டுதான்
ஓவிய மோவென வுவந்து நோக்கினர்.

14. சொற்பமாம் மருங்குலுந் திரண்டு விம்மிய
வெற்பெனுங் கொங்கையு மின்னின் பெண்மையும்
மற்புய னுஞ்சுகன் மணந்து கூடினல்
முற்புவி யாள்கிலன் மோகி யாகுவான்.

15. என்றனர் வேதியர் எண்ணி யெண்ணியே
நின்றனர் திகைத்தனர் நிருபர்க் கிந்தமா
தன்றென வன்றென வவர்கள் பேசியே
சென்றனர் சுகனுடன் தெரியச் செப்புவார்.

16. ஆய்ந்தநம் மன்னவர்க் கந்த மாதினைச்
சேர்ந்திடி லக்கணம் சிறிதும் கண்டிலோம்
வாய்ந்ததுன் மனதெனு மறைவ லோர்சொல
வேந்தனும் நன்றென விடைகொண் டேகினர்.

வேறு

17. வேதியர் உரைத்த வாறும் வேந்தன்தான் வெறுத்த [வாறும்
சாதியார் வணிகன் கண்டு தன்னிலே மறுகி யேதான்
ஓதிய பிரதா னியான வுயர்பில தரனுக் கப்போ
மாதினை யலங்க ரித்து மணஞ்செய்து கொடுத்து [விட்டான்.

18. தடுக்கொணு தயனெ ழுத்துத் தப்புமோ தப்பா தென்று
மிடுக்கிலே யொருவர் பெண்ணை இவர்க்கிவர்க் [கென்று பேசிக்
கொடுக்கினும் பொசிப்பும் வந்து கூடுகை வேறே [யன்றே
மடக்கொடி தன்னை ஏற்று மந்திரி புணர்ந்து வாழ்ந்தான்.

19. தருவெலாந் தளிரே காணத் தலைவரை மடவார் கூடத்
தெருவெலாம் நிலவே காயத் தென்றலே மீதிற் பாயக்
குருகெலா மொருங்கு சேரக் குயில்கள்சோ லையினிற் கூவ
மருவெலா மலரே சிந்த வந்தது வசந்த காலம்.

20. மிகநல வசந்த காலம் மேவிய நாளில் ஓர்நாள்
சுகனெனு மன்ன வன்றன் சோலையி னூடு புக்கான்
குகனென மயில்கள் சூழக் குலாவியோ திமங்கள் சூழ
வகைவகை மரங்கள் நிற்க வனந்தனிற் புதுமை [பார்த்தான்.

21. முளரிகள் தீபம் ஏந்த முகைவல்மல் லிகைக ளெல்லாம்
தெளியவா லத்தி போலத் திசையெங்கும் மலர்ந்து நிற்க
வளரிளங் கதலி யால வட்டமே சுற்றும் வீச
அளவிலா வளமை கண்டாங் கரசனும் வியந்து நின்றான்.

22. சீரணி வனத்தில் உள்ள சிறப்பினைக் கண்டு மீண்டு
வாரண மீதில் ஏறி மகுடவர்த் தனர்கள் சூழத்
தாரணி யோர்கள் போற்றத் தையலார் கவரி வீசத்
தோரண வீதி தன்னில் சுகனெனு மன்னன் போந்தான்.

23. பேதையர் முதலா யாங்குப்
பேரிளம் பெண்ணீ ருனோர்
காதலாய் நிற்பார் கோடி
கலைவளை சோர்வார் கோடி
வீதியா லத்தி காட்டி
வேந்தனை யுகப்பார் கோடி
மாதரார் தம்மிற் கூடி
வணங்கியே நிற்குங் காலை,

24. அவனியை ஆளு மன்னன்
யானைமே லேறி வந்த
பவனியை மேடை மீதில்
உமாபதி பார்த்து நின்று
இவனலோ நம்மை முன்னாள்
இகழ்ந்தவன் என்றே யெண்ணி
நவமணி விளக்கஞ் செய்ய
நகைசெய்து நோக்கி நின்றாள்.

25. மலர்த்திரு வென்ன மற்றை
வாசவன் தேவி யென்ன
நலத்தினில் அரம்பை யென்ன
நன்னுதல் நின்ற போது,
சொலற்கரி தான கீர்த்திச்
சுகனெனு மன்னன் கண்டு
இலக்கண மல்ல வென்ற
வேந்திழை யிவளோ வென்றான்.

26. ஆமென வருகி னின்றோர்
அரசனுக் கடைவே கூறக்
காமபா ணத்தா னைந்து
காதலே மோத வாடி
நாமிவள் தன்னைச் சேர
நற்றவ மற்றே மென்று
மாமன மறுகி யேதன்
மனையிடை வந்து புக்கான்.

27. மண்ணினை யாளு மன்னன்
மன்னரை விடைகொ டுத்துப்
பெண்ணினைப் பழுது சொன்ன
பிராமணர் தமைய ழைத்தே
என்னைநீர் கெடுத்தி ரென்றங்
கெரியது போலச் சீறிக்
கண்ணினைச் சுழற்றி யோடிக்
காதலாங் கடலில் வீழ்ந்தான்.

28. அந்தியிற் பஞ்ச பாணம்
அனங்கனும் வந்து தூவச்
சந்தனக் குழம்பை மெய்யில்
தடவுவன் பொறுக்கா தாகும்
இந்துவும் அனலாம் வாழை
இலையின்மேல் படுப்பன் தீயும்
நொந்தனன் மன்னன் காம
நோயையார் தடுக்க வல்லார்.

29. தேனமர் மொழிகள் தாமோ
திங்களின் முகமோ மேருத்
தானெனு முலைக ளோவேள்
தானுமுன் னேவ லாளோ
நானுன்மா மயலி லாட
நகைபுரிந் தருள்செய் தாயோ
யேனுமா பதியே யென்றே
யிரவுநா றுகங்க ளானன்.

30. ஈங்கினித் தோழ னேடு
மேழைமை பேசொ ணுதென்
றேங்கிய பெரியோர் சொல்கை
யுன்னினுன் பின்னு மாசை
தாங்கியே தரிக்கொ ணுமல்
தையலைச் சேர்வ னேவென்
றுங்கொரு தோழன் றன்னே
டரசனு முரைசெய் தானே.

31. சொன்னதோர் சுகனை நோக்கித்
தோழனுந் தொழுது சொல்வான்
மன்னவன் அடாது செய்யில்
மாரியு மறுக்கும் மற்றும்
நன்னிலம் விளைவு குன்றும்
நான்மறை தானும் பொய்க்கும்
என்னினிப் பிறர்தா ரத்தை
எண்ணுதல் மனத்தி லென்ருன்.

32. தருமநீ தியினுற் றேழன்
சாற்றிய நெறியை யெண்ணிக்
கருமமீ தாகு மென்று
காவலன் மனத்திற் கொண்டான்
மருமலர்க் குழலி னளை
மனத்தினில் எண்ணி எண்ணிப்
பெருமையற் றயருஞ் செய்தி
பிலதரன் தானும் கேட்டான்.

33. வருந்திய மன்ன வன்பால்
மந்திரி பிலத ரன்ருன்
விரைந்துடன் வந்தோர் மாற்றம்
விளம்புவான் மதனன் அம்பால்
இருந்துநீ வருந்த லாமோ
இவளொரு பொருளோ மாதைப்
பொருந்தநீ மேவி டாயிப்
பொழுதியான் தருவே னென்ருன்.

34. மந்திரி யாகி மற்று
மைந்தனுத் துணைவ னுகித்
தந்திர மனைத்துங் காக்குந்
தலைவனும் நீயே யாகி
வெந்திறற் பகையைப் போரில்
வென்றெனை வேந்த னுக்கும்
உன்றனக் கிரண்டு செய்கை
யுலகியல் பலவே யென்ருன்.

35. சேவகர் ஒருத்தர் சேரார்
சீர்மைசேர் குடிகள் வாழார்
யாவரு மதித்தங் கெண்ணுர்
அறநெறி புவியிற் குன்றும்
காவலன் தன்னைப் போலக்
காப்பவன் பிறர்தா ரத்தை
மேவிடத் தகாதென் றேத
மீளவும் பிரதானன் சொல்வான்.

36. தேடிய பொருளுங் கொண்ட
தெரிவையு மென்றன் வாழ்வும்
நீடிய உயிரு மற்று
நின்னதே யாகு மன்றே
வாடிநீ வருந்த லாமோ
மங்கையர் வருவார் கோடி
கூடிமால் தணியா யென்று
கொற்றனைப் பணிந்து நின்றான்.

37. நெறியல வென்று கூறி
நிருபனு மறுத்து விட்டான்
அறிவுடை அமைச்சன் மீண்டும்
அகத்தினில் வந்து புக்கான்
விறல்மதன் வாளி யாலே
மெலிந்துநாள் வழியிற் றேய்ந்து
பிறையது தேய்தல் போலப்
பின்னுயிர் துறந்தான் மன்னன்.

38. மன்னவன் இறந்தான் என்று
மந்திரி துயரில் மூழ்கிப்
பின்னவன் இறந்தான் கொண்ட
பெண்ணினைத் தருவேன் என்று
சொன்னவன் தானே வாங்கித்
தோகையை மருவி டாமல்
தன்னுயிர் துறந்தான் ருனே
சற்குணர் இவர்க்குள் ஆரோ?

39. ஆரென வலகை கேட்க
அருகன்றன் சூழ்ச்சி யாலே
வாவென வழைக்க வந்த
மன்னவன் விரித்துச் சொல்வான்
பாரினிற் பிரதானன் செய்கை
பண்பதே புவியில் மாதைத்
தாவென வணைத்தி டாத
தராபதி தரும னென்றான்.

40. ஆனதோர் நெறியை நல்லோர்
அறிவிலார்க் குரைக்கிற் றூங்கள்
போனதே போக்க தாகப்
போமவர் புத்தி போலும்
தானதா மென்று மன்னன்
தன்னைவிட் டலகை மீண்டும்
வானத்தோ டுயர்ந்து நின்ற
மரத்தினிற் பாய்ந்த தாங்கே.

ஆக விருத்தம் 641,

## அருஞ்சொற்பொருள்

1. வறுமை - பொருளில்லாமை. சருவமும் - எல்லாம். சருவம் என்பது எதுகை நோக்கிச் சறுவம் என வந்தது.

2, மறித்து - மீண்டு. நவம் - புதியது.

3. கனகம் - பொன்.

4. வண்மை - கொடைத்தன்மை. ககனம் - மேலுலகம். எண் - மதிக்கத்தக்க.

5. நலமுறு - நன்மை பொருந்திய. சலதரம் - ஓர் ஊரின் பெயர்.

6. கலை - மான். புலியும் மானும் ஒரே நீர்த்துறையில் கலந்து நீருண்ணும்படி மன்னன் நீதி தவறாமல் அரசாண்டான். பரிவாரம் - அரசனைச் சூழ்ந்து செல்வோர் தொகுதி.

7. அதிக வாழ்வு - வளமுள்ள வாழ்வு. சந்ததம் - எப்போதும். மாதவம் - பெரிய தவம். திரு - இலக்குமி. தெரிவை - பெண்.

8. நாமம் - பெயர், உமாபதி - வணிகன் மகள் பெயர்.

9. மலர் - செந்தாமரை. சிலை - வில். மன்மதன் சிலை - கரும்பு. அன்புற - அன்பு செலுத்த.

10. உளம் - உள்ளம், மனம். சுளிந்திடாது - வாட்டமுறுமல். சுகன் - அரசன் பெயர்.

11. எழில் - அழகு. எழிலினுள் - அழகுள்ளவள். இத்தையலார் - இந்த நகரத்துப் பெண்கள். ஓதினன் - சொன்னன்.

12. உகந்து - விரும்பி. வேதியர் - வேதங்களில் வல்லவர், புரோகிதர். மின் - உமாபதி. சோதியும் - ஆராயுங்கள்.

13. மேவிய - ஆராயப் புகுந்த. பூவியல்மேனி - மலர் போன்ற மென்மைத் தன்மை வாய்ந்த உடம்பு. புயல் - மேகம். காவி - நீலோற்பல மலர். ஓவியம் - சித்திரம்.

14. மருங்கு - இடுப்பு. வெற்பு - மலை. மல் புயன் - மற்போருக்குரிய தோள்களையுடைய அரசன். ஆள்கிலன் - ஆளமாட்டான். மோகி - காமுகன். முற்புவி - முன்பு தொட்டு முன்னோர் ஆண்டு வந்த புவி.

15. நிருபன் -அரசன். மாது - உமாபதி. அன்றென அன்றென - அடுக்குத்தொடர்.

16, ஆய்ந்தனம் - ஆராய்ந்தோம். சேர்ந்திடு இலக்கணம் - பொருந்தும் இலக்கணம். வாய்ந்ததுன்மனது - இனியுன் மனத்தில் தோன்றியபடி செய்.

17. சாதியார் - சாதியில் பொருந்திய. மறுகி - வருந்தி. பிரதானி- அமைச்சன். வணிகன் தன் மகளை அரசன் வெறுத்தவுடன் பிலதரன் என்னும் அமைச்சனுக்கு மணம் செய்வித்தான்.

18. மிடுக்கு - வலிமை ; வலுக்கட்டாயம். ஒணுது - முடியாது. அயனெழுத்து - பிரமன் எழுதிய எழுத்து. பொசிப்பு - பிராப்தம். கூடுகை - சேருவது.

19. இச்செய்யுளில் வசந்தகாலச் சிறப்புக் கூறப்பட்டுள்ளது. தலைவர் - கணவர். மடவார் - மனைவியர். தென்றல் - தெற்கிலிருந்து வீசும் மெல்லிய காற்று. குருகு - அன்னம். மரு - மணம். வசந்தகாலம் - இளவேனிற் காலம், சித்திரை வைகாசி மாதங்கள்.

20. சுகன் என்னும் மன்னவன் வசந்தகாலச் சோலையின் அழகைக் கண்டு மகிழ்ந்தான். குகன் - முருகன்.

21. முளரி - தாமரை. முகை - மொட்டு. கதலி - வாழை. ஆலவட்டம் - விசிறி. வளமை - வளப்பம், செழுமை. 20, 21 சோலையின் சிறப்பைக் கூறுவன.

22. சீர் - சிறப்பு. அணி - அழகு. வாரணம் - யானை. மகுடவர்த்தனர் - அரசர்கள். தாரணி - நிலவுலகம். கவரி - கவரிமான் மயிரால் செய்யப்பட்ட விசிறி.

23. பேதையர்...........பேரிளம் பெண் - பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்னும் ஏழு பருவங்களையுடைய பெண்கள். கலை - ஆடை. வளை - வளையல். சோர்வார் - நெகிழவிடுவார். உகப்பார் - விரும்புவார்.

24. அவனி - நிலம். பவனி - ஊர்வலம். நவமணி - ஒன்பது வகை மணிகள்; வைரம், வைடூரியம், கோமேதகம், நீலம், பவளம், முத்து, புஷ்பராகம், மரகதம், மாணிக்கம். உமாபதி ஒன்பது வகை மணிகள் பதித்த நகைகளை அணிந்து பொலிவோடு விளங்கினாள்.

25. மலர்த்திரு - செந்தாமரை மலரிலுள்ள இலக்குமி. வாசவன் - இந்திரன். வாசவன் தேவி - இந்திராணி. அரம்பை - தேவலோக நடனமகள். நன்னுதல் - நல்லநெற்றியை உடையவள், உமாபதி. சொலற்கு - சொல்வதற்கு. கீர்த்தி - புகழ். ஏந்திழை - ஏந்தலாக உள்ள நகைகளை அணிந்தவள்; உமாபதி. 'மிகச்சிறந்த இலக்கணமுடைய இவளையா இலக்கணமற்றவள் என்று வேதியர் கூறினர்' என்று அரசன் வியப்புற்றான்.

26. மாமனம் - சிறந்த மனம். புக்கான் - நுழைந்தான்.

27. மண் - நிலவுலகம். அரசன் உமாபதியை நினைந்து அவளை அடைய முடியவில்லையே என்று மிக்க துன்பத்தை யடைந்தான்.

28. பஞ்சபாணம் - தாமரை மலர், அசோகமலர், மாமலர், முல்லை மலர், கருங்குவளை மலர் என்ற ஐவகை மலர்களாகிய பாணங்கள். அனங்கன் - மன்மதன். இந்து - சந்திரன்.

29. தேன் அமர் - தேன் பொருந்திய. மொழி - சொல். வேள் - மன்மதன். மன்மதன் இவளுடைய ஏவலனோ, மயல் - மயக்கம். மாமயல் - மிக்க மயக்கம். இரவு நூறு உகங்கள் ஆனான் - ஓர் இரவு நூறு யுகங்கள் போல (நீண்ட காலம் போலத் தோன்ற) அரசன் கழித்தான்.

30. 'தோழனோடும் ஏழைமை பேசேல்' என்பது பழமொழி, அப்பழமொழி இச்செய்யுளில் ஆளப்பட்டுள்ளது. ஏழைமை - ஏழ்மை. சொல்கை - சொல்வது. உன்னினான் - நினைத்தான். தரிக்கொணாமல் - தாங்க முடியாமல். தையல் - உமாபதி. அரசன் தனது நிலையைத் தனது தோழன் ஒருவனிடம் கூறினான்.

31. அடாது - தாகாத செயல். மாரி - மழை. மறுக்கும் - பெய்யாது. குன்றும் - குறையும். நான்மறை - இருக்கு வேதம், யசுர்வேதம்,

சாமவேதம், அதர்வணவேதம் என்னும் நான்கு வேதங்கள். தாரம் - மனைவி.

32. கருமம் - செய்யத்தகுவது. மரு - வாசனை. அயரும் - துன்பப் படும்.

33. மாற்றம் - சொல். மேவிடாய் - பொருந்துவாய். அமைச்சன் மன்னனுக்குத் தன் மனைவியைத் தர இசைந்தான்.

34. திறன் - வலிமை. அரசன் அமைச்சனைப் பாராட்டி அவன் கூறிய யோசனையை மறுத்துவிட்டான்.

35. அரசன் பிறர் மனைவியை விரும்புவதால் உண்டாகும் கேடு களை மன்னன் விளக்கினான்.

36. தணியாய் - தணித்துக்கொள். கொற்றன் - வெற்றியை உடையவன், அரசன். அமைச்சன் மீண்டும் அரசனைத் தன் மனைவியை ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினான்.

37. வாளி - அம்பு. நாள் வழியில் - நாளடைவில்.

38. தோகை - மயில் போன்ற சாயல் உடைய உமாபதி. சற்குணர் - நற்குணம் உடையவர். மனைவியைத் தருவேன் என்று சொன்ன அமைச் சன், வேண்டா என வெறுத்த வேந்தன் ஆகிய இருவருள் போற்றத் தக்கவர் யாவர் என வேதாளம் வினவியது.

39. அருகன் - சாந்த சீல முனிவன். விக்கிரமாதித்தன், 'அமைச் சனது செயல் அவனது உயர்ந்த பண்பை உணர்த்துகிறது - ஆயினும் பிறர் தாரத்தை விரும்பாத மன்னனே போற்றத் தக்கவன்' என்று விடை அளித்தான்.

40. நல்லவர் அறிவற்றவர்க்கு எவ்வளவு அறநெறியை உரைத்த போதிலும் அவ்வறிவிலார் தம் போக்கிலேயே போதல் போல வேதாளம் வேந்தனை விட்டுச் சென்று முருக்க மரத்தில் ஏறிக்கொண்டது. தான் அது ஆம் - தான் அந்தப் புத்தி போன்றதாம்.

**உமாபதி கதை முற்றும்.**

---

## 18. இந்திர சாலக் கதை

முருக வணக்கம்

1. சிலருயர்ந் திடவிப் பார்மேல்
   சிலரிருந் திடரில் மூழ்க
   மலரயன் படைத்த மாய
   வாழ்வெனும் பிறவி வேண்டேன்
   பலர்புகழ்ந் திடவே வானோர்
   பதிகுடி யேற்றிச் சூரர்
   அலைவுற வடிவே லெய்யு
   மறுமுகக் கடவுள் தானே.

வேதாளம் விளம்பிய பதினெட்டாம் கதை

2. சற்றும்நெஞ் சினிலே மன்னன்
   சலித்திடா திருளில் மீண்டு
   மற்றுமவ் வலகை தன்னை
   வலித்துயர் மரத்தி லேறிப்
   பற்றியே வருமப் போது
   பலபல விதம தாகக்
   கற்றதோர் பதினெட் டான
   கதையினை விரித்துக் கூறும்.

3. நந்துறை வயல்கள் தானும்
   நளினவா விகளுஞ் சூழ்ந்து
   வந்தவர் மகிழும் உஞ்சை
   மாநகர் என்னு மோரூர்
   அந்தநன் னகரில் மேவி
   யவனியை முழுது மாங்கே
   சந்திரப் பிரபை யான
   தராதிப னொரு நாளில்.

4. புரவலன் வாசல் தன்னில்
   புரோகிதர் தமக்குள் விஞ்சும்
   சுருதிநூல் வல்லோன் தெய்வ
   சுவாமியென் றொருவ னங்கே

வரமதி ஞலே யந்த
மறையவன் புதல்வ ஞனேன்
தருவெனுந் தன்ம சுவாமி
யென்பவன் தன்மை சொல்வாம்.

5. அந்தணக் குமரன் ஆனேன்
அருமறை பயின்றி டாமல்
தந்தொழில் மறந்து தன்ம
சுவாமியுந் தரக ஞகி
வந்தவ ருடன்சூ தாடி
மதமுடன் திரியு நாளில்
பந்தய மநேகம் பொன்னைப்
பகர்ந்துசூ தாடித் தோற்ருன்.

6. சூதினிற் ருேற்ற தன்ம
சுவாமியை வென்ருே ரெல்லாம்
ஓதிய பொன்தா வென்றங்
குரைக்கவே கட்டிக் கொண்டு
வாதியும் இவனே என்பார்
மறித்திடு மிவனே யென்பார்
வேதிய னென்றெண் ணுமல்
மிகுத்தவே தனைகள் செய்தார்.

7. காலி லுங் கையி லுந்தான்
கட்டியே தோள்கள் பூட்டி
மேலுற மிதித்து நீண்ட
மிலாறினல் மோதும் போதில்
தோலெலா மிழந்து மெய்யுந்
துளங்கியே தன்ம சுவாமி
ஓலமென் றபய மிட்டாங்
குயிர்நிலை மயங்கி வீழ்ந்தான்.

8. நுரையது வாயில் நிற்ப
நொந்துதா னடியி ஞலே
உரையது மறந்து மூர்ச்சித்
துயிர்நிலை தளர்ந்து சோர்ந்து

தரையதில் வீழ்ந்தான் கண்ட
தரகரு மஞ்சிக் கெட்டு
துரைவரி னென்னு மென்று
துளங்கியே யோடிப் போனுர்.

9. அங்கவர் போன பின்னர்
அடியினுல் நொந்து வீழ்ந்தோன்
வெங்கன மயக்கந் தீர்ந்து
விழித்தனன் நெடுநே ரத்தில்
பொங்கிய பசியி னுலே
போயொரு துர்க்கை கோயில்
தங்கினன் கண்முன் அங்கோர்
தவமுனி தன்னைக் கண்டான்.

10. வரமுனி தன்னைப் போற்றி
வணங்கியே மறைவல் லாளன்
பரமனைப் போல்வாய் மெத்த
பசித்தனன் பசிதீர் என்ருன்
திரமுள முனிவன் மந்திர
செபத்தினின் பெருமை யாலே
புரமொன்று அவற்குக் காட்டிப்
போயமு தருந்தி டென்ருன்.

11. அந்நகர் முனிவன் காட்ட
அந்தணன் கடிது புக்கான்
முன்னெதிர் கொண்டு மாதர்
முகமலர்ந் தழைத்துப் போனுர்
பன்னீர்மஞ் சனம தாட்டிப்
பசிதனக் கடிசி லூட்டிக்
கன்னியர் தன்னைக் கூடிக்
கங்குலில் துயிலக் கண்டான்.

12. பொழுதுதான் விடிந்த பின்பு
பூசுரன் விழித்துப் பார்த்தான்
முழுதுமங் கொன்றுங் காணுன்
முனிவன்பால் கடிது வந்தான்

தொழுதிது வென்ன மாயஞ்
சொல்லென விரும்பிக் கேட்டான்
பழுதிலா இந்திர சாலம்
பரமனூர் மகிமை யென்றான்.

13. முன்னமவ் விருளிற் கண்ட
முறைமைபோல் பகலி லேதான்
இன்னமு மெனக்குக் காண
வியற்றுநீ முனியே யென்றான்
அன்னவன் செபித்து மீண்டு
மப்படிச் செய்தான் கண்டு
தன்னிலே யதிச யித்துச்
சதுர்மறை யோனுஞ் சொல்வான்.

14. இந்தவித் தையைநீ சொல்லென்
றிறைஞ்சியே முனியைக் கேட்டான்
சிந்தையி லுசாவிக் கொண்டு
செழுந்தவ முனியுஞ் சொல்வான்
ஐந்தெனும் புலன டக்கி
யவாவினை யறுத்தோர்க் கல்லால்
மந்திரஞ் சொல்லேன் சொல்லின்
மற்றது பலியா தென்றான்.

15. பவமற அவாவ றுத்துப்
பயில்செப முயல்வே னென்று
தவமுனி தன்னை வேண்டித்
தாள்பணிந் தவனுங் கேட்பான்
புவியினில் வித்தியா தானம்
புகழெனப் பூசு ரன்தன்
செவிதனி லிந்திர சாலச்
செபமுப தேசஞ் செய்தான்.

16. முனிசொன்ன மந்தி ரத்தின்
முறைமைசோ திக்க வேண்டி
வனமதில் மூழ்கி யோடும்
வாயுவை யடக்கி யீசன்

கனகழல் போற்றி யோகக்
காட்சியாய் விழிவி ழித்து
நினைவினிற் செபிக்கும் போதோர்
நிகரிலா வளமை கண்டான்.

17. புத்திரர் போலத் தாரம்
போலவிப் புவியில் உள்ள
சத்திரம் போல்முன் கண்டான்
தீயினைக் கண்டான் பின்தான்
அத்தழல் மூழ்கக் கண்டான்
ஆகம்நீ ருகக் கண்டான்
மெத்தவே யழகாய்த் தன்முன்
மேவிய உலகங் கண்டான்.

18. இரணிய புரமென் றேரூர்
எதிருறக் கண்டான் கண்டே
அரணிய நகரென் றேதான்
அடைந்திடக் கண்டான் அங்கே
தரணியில் இரதி போன்ற
சசிப்பிரபை யென்றோர் பெண்தான்
கருணையில் தன்னை வந்து
காதலாற் கூடக் கண்டான்.

19. மருவிய மங்கை பாலோர்
மதலையுந் தோன்றக் கண்டான்
சுரிகுழல் மலர்கொய் கைக்கோர்
சோலையில் ஏகக் கண்டான்
அரிவையை யரவு தீண்டி
யங்குயிர் மரிக்கக் கண்டான்
பரிவுடன் தான்தன் ஆயுட்
பாதியீந் தெழுப்பக் கண்டான்.

20. எண்ணெணு விபரீ தங்கள்
இப்படி அநேகங் கண்டான்
அண்ணலாம் முனிவன் றன்னே
டிந்தவா றெல்லாஞ் சொன்னுன்

மண்ணினில் புரட்ட ளுகி
மறையவன் மற்றும் போனுன்
திண்மையாம் முனிக்குந் தியானஞ்
சோதியா தாயிற் றன்றே.

21. முன்கற்றுச் செபித்துக் கண்ட
முனிக்குமா காமற் போச்சு
பின்கற்ற மறையோ னுக்கும்
பிரட்டதாய்ப் போச்சு தன்ருே
நின்கற்ற கலையில் ஆய்ந்து
நிருபனே நிகழ்த்தி டென்று
தன்கற்ற கதையைத் தானே
வேதாளம் பகர்ந்த தாங்கே.

22. சினத்தையுஞ் சாந்த மாக்குஞ்
செயலையுங் கலையில் லாத
மனத்தையு மொழுக்க மாக்கும்
வளமையும் ஞான மாகும்
கனத்தையுங் குணத்தைத் தானும்
கல்வியு மனித்தர் புத்தி
யனைத்தையுங் குருக்கள் ஆனோர்
அறிந்துபின் னுபதே சிப்பார்.

23. ஆய்ந்தவே தியனைத் தோன்றி
யவகுண மதுவே கற்றுச்
சாந்தமோர் சற்று மின்றித்
தந்தைதா யுரைகே ளாமல்
போந்தமை விசாரி யாமல்
புத்தியீ னனுக்கு யோகி
யீந்ததோர் உபதே சத்தால்
இரண்டுமா காமற் போச்சே.

24. ஆகையால் முனிமேல் தப்பென்
றலகையோ டரச னேதை
வாகுடன் தமிழ்நூல் கேட்டு
வாணர்க்குப் பரிசீ யாமல்

பூகம்போல் விழித்தங் கோடி
ஒளித்திடும் உலுத்தர் போல
ஏகியே தருவைப் பற்றி
இருந்தது தலைகீ ழாயே.

ஆக விருத்தம் 665

## அருஞ்சொற்பொருள்

1. இருந்திட - நன்கு வாழ. இடர் - துன்பம். மாய வாழ்வு - நிலையற்ற வாழ்வு. வானோர் பதி குடியேற்றி - தேவர்களை அவர்தம் ஊரில் குடியேற்றி வாழச்செய்து. அலைவு உற - வருந்த.

2. சலித்திடாது - சோம்பல் கொள்ளாமல்,

3. நந்து - சங்கு. நளினம் - தாமரை. வாவி - குளம். அவனி - பூமி. சந்திரப் பிரபை - மன்னன் பெயர். தராதிபன் - மன்னன்.

4. விஞ்சும் - சிறந்த. சுருதி நூல் - வேத நூல். தரு - கற்பக மரம்.

5. தரகன் ஆகி - தரகுத் தொழில் செய்பவனாய். மதமுடன் - மதம் பிடித்து,

6. ஓதிய பொன் - தோற்றால் தருவதாகச் சொன்ன பொன். வாதியும் - வாதிட்டுப் பேசுங்கள். மறித்திடும் - மறியுங்கள், தடுத்துப் பிடியுங்கள்.

7. தோள்கள் பூட்டி - தோளையும் இறுக்கிக் கட்டி. மிதித்து- உதைத்து. மிலாறு - சிறுகழிகள். துளங்கி - நடுங்கி. ஓலம் - அபயமிடும் குரல்.

8. உடனிருந்து சூதாடிய தரகர் அந்தணனை அடித்துவிட்டு அதிகாரி வந்தால் தம்மைத் தண்டிப்பான் என்று எண்ணி ஓடிவிட்டார்கள்.

9. வெங்கன மயக்கம் - கொடிய மிகுந்த மயக்கம்.

10. பரமன் - கடவுள். பசித்தனன் - பசித்தேன். புரம் - ஊர். அமுது - உணவு.

11. கடிது - விரைந்து. மஞ்சனம் ஆட்டுதல் - குளிக்கச் செய்தல். அடிசில் - உணவு. கங்குல் - இரவு.

12. பூசுரன் - பிராமணன். தொழுது + இது = தொழுதிது. இந்திர சாலம் - மாய வித்தை.

13. செபித்தல் - மந்திரத்தைப் பல முறை சொல்லுதல்.

14. உசாவிக் கொண்டு - நினைத்துப் பார்த்து. ஐந்து எனும் புலன் அடக்கி - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து பொறிகளால்

உண்டாகும் இன்பத்தைத் துறந்து. அவா - ஆசை. அறுத்தோர் - நீக்கினவர்.

15. பவம் - பாவம். புவி - பூமி. வித்தியாதானம் - கல்வியை இலவசமாய்க் கற்பித்தல். புகழ் - புகழ்தரும்.

16. சோதிக்க வேண்டி - ஆராய விரும்பி. வனம் - நீர். ஓடும் வாயுவை அடக்குதல் - மூச்சு விடாது அடக்குதல். கனைகழல் - ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த திருவடி. யோகக்காட்சி - கண்ணைமூடி அறிவாற் காணுதல். நினைவினிற் செபித்தல் - ஒரே நினைவாக மறவாது மந்திரம் சொல்லுதல். நிகர் இலா - ஒப்பு இல்லாத; உயர்ந்த. வளமை - வளமான நிகழ்ச்சி.

17. ஆகம் நீருக - உடம்பு சாம்பலாக. மேவிய - தோன்றிய.

18. இரணியபுரம் - ஊரின் பெயர். அரணிய நகர் - காவல் மதிலையுடைய நகர். சசிப்பிரபை - பெண்ணின் பெயர்.

19. மதலை - குழந்தை. சுரி குழல் - சுருண்ட கூந்தலையுடைய பெண். ஏக - செல்ல. அரிவை - பெண். அரவு - பாம்பு. மரிக்க - இறக்க.

20. எண் + ஒணு = எண்ணொணு - நினைக்க முடியாத. விபரீதங்கள் - தீய நிகழ்ச்சிகள். அண்ணல் - சிறந்த மனிதர். புரட்டன் - தவறு செய்தவன்; சொன்ன சொல்லைக் காப்பாற்றுதவன். திண்மை - வலிமை. தியானம் சோதியாது - மந்திரம், செபம், தியானம் முதலியவை பலிக்காமல்.

21. கற்று - மந்திரங்கற்று. ஆகாமற் போச்சு - பயன்படாது போயிற்று. பிரட்டு - புரட்டு, பயன்படாதிருத்தல். நின்கற்ற - நீ கற்ற. நிகழ்த்திடு - சொல். தன் - தான்.

22. குருக்கள் - ஆசிரியர். ஆசிரியர் மாணுக்கருடைய தகுதி அறிந்து உபதேசிக்க வேண்டும். கலையில்லாத மனம் - கல்வியில்லாத மனம். மனித்தர் - மனிதர்.

23. அவகுணம் - கெட்ட குணம். சாந்தம் - பொறுமை. போந்தமை - வந்த விதத்தை. விசாரியாமல் - கேட்டு அறியாமல். புத்தியீனன் - அறிவு இல்லாதவன். யோகி - முனிவர். இரண்டும் ஆகாமற் போச்சு - இருவருக்கும் பயன்படாமற் போயிற்று.

24. தப்பு - தவறு. வாகு - வலிமை, கேட்டு வாழ்நர் = கேட்டு வாழும் புலவர். (வாழ் + நர் = வாணர்.) பரிசு - பரிசுப்பொருள். யூகம் - கருங்குரங்கு. உலுத்தர் - உலோபிகள்.

இந்திர சாலக் கதை முற்றும்.

## 19. பிண்டப் பிரதான கதை

முருக வணக்கம்

1. தாரமொடு சுற்றங்கள் பாலக ரெனத்தந்தை
தாயென வகுத்திங்ஙனே
சீரற மரிக்கின்ற பாசபிற வித்துன்பந்
தீர்பத மெனக்கொன் றுதான்
சூரர்மடி யக்குன்ற மூடுருவ மைக்கொண்டல்
தூளிமறையச் சென் றுதான்
வீரமுட னுத்தண்ட மாயமரில் நிருத்தஞ்செய்
வேலுலவு கைக்கந்தனே.

வேதாளம் விளம்பிய பத்தொன்பதாம் கதை

2. தாவுமிரு ளிற்சென் று வீரியனெ ழிற்கொண்ட
தாருமிசையிற் செங்கையால்
மேவியத னைக்கொண்டு தோளின்மிசை வைத்தன் று
மீள்புதுமை யைக்கண்டுதான்
பூவிலறி விற்கும்ப மாமுனியெ னப்பின்பு
போமலகை யுற்றங்ஙனே
கோவினொடு பத்தொன்ப தாங்கதையின் பண்பதனைக்
கூறியிடும் கோலமுடனே.

வேறு

3. துலங்கிய மாட கூடந்
தோரண நிறைந்த வீதி
யிலங்குசந் திரோத யம்போல்
எழில்புனை கோபு ரங்கள்
அலங்கிருத மாக நாளு
மாரண கோஷ மார்ப்ப
நலம்பயின் றருளு கந்த
நகரெனும் பதியொன் றுண்டே.

4. வீரியத் தாலும் நல்ல
விசாரத்தி னாலுஞ் செய்யுங்
காரியத் தாலுங் கேள்வி
கேட்டுணர் அறிவி னாலும்

நேரியற் சரியி லாதோன்
நேமியை முழுது மாள்வோன்
சூரியப் பிரபை என்போன்
தொன்னகர் மன்ன னவான்.

5. ஆழ்கடல் புவியி லாங்கே
அந்நகர் தன்னில் மன்னன்
வாழ்வுற வாழு நாளில்
மற்றவன் பதியி லேதான்
தாழ்விலா வளஞ்சி யன்தான்
தனதத்தன் மனையாள் தன்பேர்
ஏழ்புவி புகழும் வண்மை
இரணிய வதிதான் என்பாள்.

6. தரணியெண் வளஞ்சி யன்றான்
தனதத்தன் பால ரின்றி
இரணிய வதியும் தானும்
இருந்தவ முயலு நாளில்
அரனரு ளாலே வந்தங்
கநேககா லத்தின் பின்பு
சுரனையென் றொருபெண் ணைசைத்
துளிரெனத் தோன்றி னளே.

7. விழிகய லொதுங்கப் பச்சை
வேய்புயந் தன்னை நாண
மொழிகண்டு குயிலி ரங்க
முகங்கண்டு மதியுந் தேயக்
குழல்கண்டு மேக மஞ்சக்
குயங்கண்டு வரைகள் தோற்கத்
தொழுதின்ப வேளும் வாழச்
சுரனையும் பருவ மானள்.

8. சுரனையின் வடிவைக் கண்டு
தொல்புவி மன்ன ரெல்லாம்
தருகெமக் கென்று கேட்பத்
தனதத்தன் முன்னு மாங்கே

வரவர வளஞ்சி யன்றான்
வந்தவந் தவரை யெல்லாம்
புரையுறப் பழிக்கை யாலே
போயினர் வந்தோ ரெல்லாம்.

9. கொஞ்சுநற் கிளியைப் போலக்
கொண்டுதான் உகந்து போற்றிப்
பஞ்சணை யதனின் மீது
பளிங்கின்மா டத்தின் வைத்து
விஞ்சிய பருவந் தன்னில்
வேண்டினூர் தமையி கழ்ந்து
வஞ்சியை மணஞ்செய் யாமல்
வளஞ்சியன் மரித்து விட்டான்.

10. தனதத்தன் மரித்த பின்பு
தலைவனில் லாமை கண்டு
மனதொத்து நடந்தி டாத
மாற்றலர் எல்லாங் கூடி
யினமொத்தங் கநேகம் பொன்தான்
இடமவர்க் குண்டென் றேதான்
வினைவைத்தே யரசன் தன்பால்
விளம்பினர் விரோதங் கொண்டே.

11. இனத்தினர் சொல்கை யாலும்
இவர்துணை யற்ற தாலும்
தனத்தினி லாசை யாலும்
தராதிப னிடங்கண் டேதான்
சினத்தினை மிகவே கொண்டு
தெரிவையைப் பற்றிச் சொன்னம்
அனைத்தையுங் கொடுவா வென்றங்
கரியவா தனைசெய் வித்தான்.

12. கொடுத்தனள் கொடுத்த பொன்னைக்
கொற்றவன் பற்றிக் கொண்டு
விடுத்தனன் விடுத்த போது
மெய்யணி சிலதாம் தப்பு

எடுத்தவள் மறைத்துக் கொண்டங்
கிரணிய வதியும் பெண்ணும்
கடுத்தவல் லிரவி லோடிக்
கால்கொளு மட்டும் போனர்.

13. மண்டிய இருளி லேயும்
மாதர்போம் வழியி லேதான்
துண்டனு கியவோர் கள்வன்
தூங்கின னுயிர்த்தூண் டில்தான்
கண்டிலள் கழுவைக் கள்வன்
காலது சிரத்திற் றீண்ட
ஒண்டொடி நீயார் என்ன
உள்ளது கள்வன் சொல்வான்.

14. முன்னயன் எழுத்தி னுலும்
மூண்டதோர் பாவத் தாலும்
கன்னமி திடுகை யாலும்
களவுகள் செய்கை யாலும்
முன்னிய சோர னுகி
யுயிர்க்கழு வதனில் நின்றேன்
மின்னனே யாரே யென்று
விளம்பியே மற்றுஞ் சொல்வான்.

15. கானகம் நுழையொ ணுது
கங்குலே தெரியொ ணுது
ஏனமும் புலியு மேயும்
இடையிடைச் சோரர் வாழ்வர்
மேனியிற் பயமு ருமல்
மின்னனே யாரே நீங்கள்
வானவர் மகளி ரேபோல்
வந்ததென் னுரையு மென்ருன்.

16. வாரிபோல் வாழ்ந்த வாறும்
மகிழ்நன்பின் மரித்த வாறும்
சேரலர் செகுத்த வாறும்
திரவியந் தோற்ற வாறும்

ஆரிருள் தன்னில் இப்போ
அஞ்சியே வந்த வாறும்
சோரனுக் கடைவே மங்கை
துயரெலாம் விரித்துச் சொன்னாள்.

17. கன்னிகை யிவள்யா ரென்று
கள்வனுந் தாயைக் கேட்டான்
என்னுடைப் புதல்வி யிப்பெண்
யெனக்குனக் கென்று பாரில்
மன்னவர் வேண்ட வேண்ட
மணஞ்செயா திகழ்ந்து தாதை
தன்னுயிர் துறந்தான் மாதின்
தலையினில் விதியீ தென்றாள்.

18. இக்கழு வதனில் என்னை
யிறக்கினாற் பிழைக்க வல்லேன்
சிக்கிய பொருள்போச் சென்று
சிந்தையிற் கவலை வேண்டா
தக்கபொன் னநேக முண்டு
தாவரம் பண்ணி வைத்தேன்
கைக்கது தருவேன் என்பால்
கன்னியை மணஞ்செய் என்றான்.

19. அன்னையு மகளு மாக
வக்கழு விருந்து கள்வன்
தன்னையங் கிறக்கி னார்கள்
தனமெலாங் கொடுத்து நின்றான்
பின்னையங் கிவனைக் கண்ட
போர்களா ரென்றங் கெண்ணிப்
பொன்னையே கண்டு தாயும்
புதல்வியை யுதகஞ் செய்தாள்.

20. தாரையங் கேற்ற பின்பு
தையலார் தங்கள் முன்னே
சோரனங் குயிரை நீத்தான்
சுட்டனர் விறகின் ஆங்கே

நாரியு மகளு மாக
நல்லதோர் பதியிற் சேர்ந்து
காரியம் வந்த தென் று
களிப்பின்வீற் றிருக்கு நாளில்.

**21.** அருமறை யாள னந்த
நகரினில் அழகில் மிக்கான்
ஒருவன்றன் சோம சுவாமி
யென்பவ னுயர்கா மன்போல்
தெருவினில் வரப்போ கத்தான்
திரிந்தனன் திரியக் கண்டு
சுரனையு மிகமோ கித்துத்
துளங்கிவேள் கணையில் நொந்தாள்.

**22.** காமபா ணத்தில் நாளும்
கன்னிகை வருத்தங் கண்டு
சோமசுவா மியைய ழைத்துத்
தோகையை மருவி டென்று
தாய்மிகப் பொன்னு மீந்தாள்
தனங்கண்டு பருவங் கண்டு
மாமறை யவனு மோர்நாள்
மங்கையை வந்து சேர்ந்தான்.

**23.** பொன்னினை வாங்கிக் கொண்டு
பூசுரன் ஒருநாள் சேரக்
கன்னிகைக் கதுமுன் னுகக்
கருவது தரித்த தப்போ
அன்னையு நிலவ றைக்குள்
அவள்தனை அடக்கி வைத்தாள்
பின்னைவந் தவள்வ யிற்றிற்
பிறந்ததோர் பாலன் ஆங்கே.

**24.** பிறந்தபா லகனைக் கண்டு
பெண்ணுடன் தாயும் எண்ணிப்
பிறந்திடில் உலகம் தந்தை
பேசும்யார் என்றே யெண்ணி

அறிந்துதம் மயல கத்தோர்
யானைப்பா கனையிங் காரும்
அறிந்திடா வகைசெய் வாயென்
றவனுக்குச் சிலபொன் னீந்தாள்.

25. திரவியம் வாங்கிக் கொண்டு
தெரிவையர் தம்மைத் தேற்றி
யிரவினி னடுநே ரத்தில்
ஏந்தியே விசார மிட்டுப்
புரவலன் மைந்த ரின்றிப்
புலம்புவான் வாசல் தன்னில்
பரிவுடன் வைத்தான் வந்தான்
பாலனைத் தொட்டி லோடே.

26. சீருடன் யானைப் பாகன்
சிறுவனை வைத்து மீண்டான்
ஆரிருள் விடிந்த பின்போர்
அமைச்சனும் வந்து கண்டு
பேரியல் மன்னற் கோதப்
பிள்ளையைக் கொடுவா வென்று
நாரியர் கரத்தில் ஈந்து
நரபதி வளர்க்கச் சொன்னான்.

வேறு

27. பொருந்து மன்னொரு புத்திர னின்றியே
அருந்த வஞ்செய் தருள்பெறு வாயிலோர்
திருந்து தெய்வங் கொடுத்ததென் றன்புடன்
வருந்தி மாதர் வளர்த்தனர் மைந்தனை.

28. ஆண்டொ ரைந்தினில் அருங்கலை ஓதினன்
மீண்டொ ரேழினில் வெம்பரி ஏறினன்
தாண்டு மாயுத சாகசங் கற்றனன்
நீண்டு சோடச வாண்டுமி ரம்பினன்.

29. சந்திரப் ரபனென் றின்னவன் தன்பெயர்
அந்த ணாளர் அருமறை யோர்சொலப்
புந்தி தன்னில் மகிழ்ந்து புரவலன்
மைந்த னுக்கு மகுடமுஞ் சூட்டினன்

30. தீதி லாத சிறுவனங் காட்சியின்
நீதி கண்டு நிருபன் மகிழ்ந்தனன்
பூத லத்தினை யாளென்று புத்தியை
ஓதி மற்றிவன் நன்றினை எண்ணினான்.

31. பாரை யாண்டிடப் பாலனுள் ளானெனச்
சீர ருந்தவம் செய்திட வெண்ணியே
தூர மேவித் துறவியர் சேர்விடம்
வீர மன்னனும் மேவின னமரோ.

32. ஓங்கு கானில் உயர்தவத் தோருடன்
பாங்கு டன்தவம் பண்ணிய நேகநாள்
தீங்கி லாமல் சிவன்தன் அருளினால்
ஆங்கு மன்னன் அடைந்தனன் மோட்சமே.

33. பாரில் மன்னன் பரகதி சேர்ந்தபின்
ஊரில் மன்ன னுடன்கண்ட பேர்சொன்னார்
தீர்வை காரியஞ் செய்யவென் றரசனும்
பாரில் மிக்ககங் கைக்கரை மேவினான்.

34. நிருப னுக்கென நெய்தயிர் பாலுடன்
சுருதி வல்லவர் சொற்படி தேடியே
கருதி யேகொண்டு கங்கைத் துறையிலே
பெரிது மைந்தனும் பிண்டம் அருத்தினான்.

35. அந்த ணாளர் அருமறை யோதவே
வந்த சேனையும் மன்னரும் பார்க்கவே
உந்து கங்கையி னூடுயர் பாலகன்
தந்த தோர்பிண்டந் தன்கையி னீட்டினான்.

36. காய மாகிக் கருநிற மாகியே
மாய மாகி மைந்தன் வெருவுற
ஆயு தங்கொண்டு அழுந்து தழும்புடன்
ஈயு மென்றெறி றேற்றதோர் அங்கையே.

37. அன்ன தேதென் றரசன் திகைத்திடப்
பின்னு மோர்கை பிடித்தபஞ் சாங்கமும்
பன்னு தர்ப்பைப் பவித்திர மோதிரம்
தன்னுடை யோர்கையும் தாவென நீட்டுமே.

38. இருவர் நிற்க இணைவிரல் ஆழியும்
மருவு ரத்தின மணிக்கட கத்துடன்
தருக வென்றிவை தம்மையுந் தள்ளியே
ஒருகை தோன்றி உயர்வுற நீட்டுமே.

39. முக்கை யாங்கு முறைமுறை நீட்டவே
சிக்கெனப் பிண்டஞ் செங்கையில் பற்றியே
மிக்க மைந்தனும் வேதியர் தங்களை
யெக்கை தன்னில் இடுகைசொல் வீரென்றான்.

40. வேந்தன் கேட்க விசாரமிட் டேமறை
சேந்த வந்தணர் செப்பத் திகைத்தனர்
ஆய்ந்து சொல்லர சேஎன் றலகைதான்
ஈந்தி டும்பரி செக்கையில் என்றதே.

41. களவில் கள்வனிக் கன்னியை வேண்டியே
அளவிற் றரைய தேற்று மரித்தனன்
முழுது மன்றிந்த மொய்குழ லாள்தனைத்
தழுவி லானைத் தகாதென லாகுமே.

42. பொன்னை வாங்கிப் புணர்ந்திடு பூசுரன்
தன்னைத் தானுந் தகானெனத் தள்ளலாம்
அன்னை போல்வளர்த் தம்புவி யாள்வித்த
மன்ன னேற்கை வழக்கென்று கூறினன்.

43. அரச னேதிட வாமென் றலகையும்
சிரகம் பஞ்செய்து சிந்தைம கிழ்ந்துதான்
விரைசெய் தாருவில் மீண்டுமந் நேரமே
உரைசெய் வார்கிளை யொன்றி லொடுங்கிற்றே.

ஆக விருத்தம் 708.

## அருஞ்சொற்பொருள்

1. சீர் அற - சிறப்பு நீங்க. மரிக்கின்ற - இறக்கின்ற. சூரர் - சூரபதுமன் முதலியோர். மை - கரிய. கொண்டல் - கார்மேகம். உத்தண்டமாய் - மூர்க்கமாய். நிருத்தம் - நடனம்.

2. தாரு - தரு, மரம். கும்பமாமுனி - அகத்திய முனிவன். கோலம் - அழகு.

3. சந்திரோதயம் - சந்திரனது தோற்றம். கோஷம் - ஓசை. ஆரணம் - வேதம். ஆர்ப்ப - ஒலிக்க.

4. விசாரம் - கேள்வி. நேமி - சக்கரம். சூரியப்பிரபை - மன்னன் பெயர்.

5. வளஞ்சியன் - வணிகன். இவன் பெயர் தனதத்தன். இரணியவதி - வணிகன் மனைவியின் பெயர்.

6. தரணி - நிலவுலகம். எண் - மதிக்கின்ற. சுரனை - தனதத்தன் மகள்.

7. வேய் - மூங்கில். புயம் - தோள். குயம் - முலை. வேள் - மன்மதன். பருவமானுள் - மணப் பருவத்தை அடைந்தாள்.

8. தொல் - பழமையான. தரு - தா, கொடு. முன்னும் - நினைப்பான். புரை - குற்றம். தனதத்தன், மணம் செய்ய வந்தவரையெல்லாம் ஒவ்வொரு குற்றம் கூறிப் பழித்தான்,

9. விஞ்சிய - அதிகப்பட்ட. வஞ்சி - வஞ்சிக்கொடி போன்றவள், சுரனை. பெண்ணின் தக்க பருவத்தில் மணம் செய்வியாமல் வணிகன் இறந்துவிட்டான்.

10. மரித்த - இறந்த. மாற்றலர் - பகைவர். இனம் - இனத்தவர். இடம் அவற்கு - அவரிடம்; வணிகன் மனைவி, மகள் ஆகியவரிடம். வினை வைத்தே - தீவினை எண்ணம் கொண்டு, விளம்பினர் - சொன்னுர்.

11. இனத்தினர் - வணிக இனத்தவர், சொல்கை - சொல்லுதல். இவர் - வணிகன் மனைவியும் மகளும். தராதிபன் - அரசன். தெரிவை - இரணியவதி. சொன்னம் - பொன். வாதனை - துன்பம்.

12. மெய்யணி - உடம்பில் இருந்த நகைகள். அவள் - இரணியவதி. பெண் - சுரனை என்பவள். கடுத்த வல் இரவு - கரிய இரவு. கால் கொளுமட்டும் - காலால் நடக்க முடிந்த மட்டும்.

13. துண்டன் - கொடியவன். காட்டில் ஒரு கள்வன் கழுவில் அழுத்தப் பெற்றுத் துன்புற்ருன். சிரம் - தலை. ஒண்டொடி - இரணியவதி. கழு - கடப்பாரை போன்ற கொலைக் கருவி.

14. மின் அனையாள் - இரணியவதியைக் குறிப்பது.

15. கள்வன் அக்காட்டின் கொடுமையை இச்செய்யுளில் விளக்கினுன். ஏனம் - பன்றி. சோரர் - கள்வர். 'இக் கொடிய காட்டில் நீங்கள் சிறிதும் அஞ்சாமல் வந்ததற்குக் காரணம் யாது?' என்று கள்வன் கேட்டான்.

16. வாரி போல் - கடல் போல் பெரும் செல்வத்தோடு. மகிழ்நன் - கணவன். சேரலர் - பகைவர். செகுத்த - கோபித்த. ஆர் இருள் - பொருந்திய இருள். அடைவே - முறையாக.

17. கன்னிகை - மணமாகாத பெண், சுரஜ. தாய் தன் மகளது வரலாற்றைக் கள்வனுக்குக் கூறினள்.

18. தாவரம் - நிலையுள்ளது, பாதுகாப்பு. என்பால் - எனக்கு. தான் பத்திரப்படுத்தி வைத்துள்ள பொன்னைத் தருவதாகவும், தனக்குச் சுரஜயை மணம் செய்விக்கும்படியும் கள்வன் இரணியவதியை வேண்டினன்.

19. உதகம் செய்தாள் - தாரை வார்த்தாள். இரணியவதி கள்வன் கொடுத்த பொன்னைப் பெற்றுக்கொண்டு தன் மகளை அவனுக்குத் தாரை வார்த்தாள்.

20. பெண்ணை மனைவியாக ஏற்றுக்கொண்ட கள்வன் அப்போதே உயிர் நீத்தான். தாயும் மகளும் அவன் உடலை உடனே எரித்துவிட்டனர். நாரி - இரணியவதி. மகள் - சுரஜ. காரியம் வந்ததென்று - பொன் கிடைத்ததென்று.

21. காமன் - மன்மதன். துளங்கி - நடுங்கி.

22. தோகை-தோகையையுடைய மயில்போன்ற சுரஜ. பருவம்-பெண்ணின் பருவம்.

23. பூசுரன் - சோமசுவாமி.

24. பிள்ளையைக் கண்டால் உலகம் பழிக்கும் என்றெண்ணி இரணியவதி யானைப்பாகனிடம் (பிள்ளையை) ஒப்படைத்தாள்.

25. தெரிவையர் - பெண்கள்; இரணியவதியும் சுரஜயும். புரவலன் - அரசன்.

26. நாரியர் - அரண்மனையில் உள்ள பெண்கள். நரபதி - மக்கள் தலைவன், அரசன்.

28. பாலகன் ஐந்து வயதில் கல்வி கற்றான்; ஏழு வயதில் குதிரையேற்றம் கற்றான். ஆயுத சாகஸம் - ஆயுதப் பயிற்சி. சோடசம் - பதினாறு.

29. பாலகன் பெயர் சந்திரப்ரபன் என்பது.

30. ஆட்சியின் நீதி - ஆட்சி முறை. நன்றினை - நல்லதை.

31. அரசன் தன் வளர்ப்பு மகனை அரசனாக்கிவிட்டு முனிவர் ஆசிரமத்தை அடைந்தான்.

32. ஓங்குகான் - மரங்கள் ஓங்கி வளர்ந்த காடு.

33. மன்னன் - வளர்ப்புத் தந்தை. மன்னன் - வளர்ப்பு மகன். தீர்வை காரியம் - ஈமக்கடன்கள். மிக்க - புகழால் மிகுந்த.

34. சுருதிவல்லவர் - வேதங்களில் வல்ல பிராமணர், புரோகிதர். இறந்தவரை நினைந்து மகன் பிண்டம் பிடித்துக் கொடுத்தல் மரபு.

35. உந்து கங்கை - அலைகள் மோதும் கங்கை. அரசன் இறந்த தன் வளர்ப்புத் தந்தையை எண்ணிப் பிண்டத்தைக் கையில் ஏந்தி நீட்டினன்.

36. வெருவுற - அஞ்ச. 'கொடும்' என்று சொல்லி ஒரு கை தோன்றியது. அக்கையில் ஆயுதத்தால் உண்டான தழும்பு இருந்தது; அக் கை கரிய நிறக் கை. அது கள்வன் கை.

37. மற்றொரு கை அடுத்துத் தோன்றியது. அதனில் பஞ்சாங்கம் இருந்தது; தர்ப்பையாலாகிய மோதிரம் இருந்தது. பவித்திரம் - மோதிரம். இது பிராமணனது கை.

38. மூன்றாவதாக ஒருகையும் தோன்றியது. அக்கை விரல்களில் மோதிரங்கள் இருந்தன. கையில் மணிகள் பதித்த கடகம் இருந்தது. ஆழி - மோதிரம். இது அரசனது கை.

39. முக்கை - மூன்று கை 'மூன்று கைகளுள் எந்தக் கையில் பிண்டத்தை வைப்பது என்பதைக் கூறுங்கள்' என்று அரசன் புரோகிதரைக் கேட்டான்.

40. சேந்த - சேர்ந்த, கற்ற. மறை சேந்த - மறைகளைக் கற்ற. வேதியர் பதில் சொல்ல முடியாமல் விழித்தனர். 'எக்கையில் பிண்டம் கொடுப்பது முறை என்பதை நீ ஆராய்ந்து சொல்' என்று வேதாளம் விக்கிரமாதித்தனை வினவியது.

41. கள்வன் கன்னியைத் தாரை வார்த்துத் தரப்பெற்று இறந்தான். மொய்குழல் - வண்டுகள் மொய்க்க இடமான மலர்களை அணிந்த கூந்தலையுடைய சுரனை என்பவள். கள்வனுக்கு இவன் பிறந்தவனல்லன் ஆதலால் அவனது கையையும் தள்ளலாம்.

42. பூசுரன் - சந்திரப் பிரபன் என்ற பிராமணன். அவன் பணத்திற்காகச் சுரனையைக் கூடியவனுதலால் அவனது கையையும் தள்ளலாம். ஆனல் இறந்த மன்னன், பட்டத்தில் இருந்த மன்னனைத் தன் பிள்ளைபோல் பேணி வளர்த்தவனுதலால் பிண்டம் பெறத் தகுதியுடையவனுவன் என்று விக்கிரமாதித்தன் விடையளித்தான். ஏற்கை - ஏற்றுக்கொள்ளுதல்.

43. சிரகம்பம் செய்து - (சரி என்று) தலையசைத்து. சிந்தை - மனம். விரை செய் - மணமுள்ள. வார் - நீண்ட.

**பிண்டப் பிரதான கதை முற்றும்.**

---

## 20. அநங்க மஞ்சரி கதை

---

முருக வணக்கம்

1. வினையி லுளம்பல பிணியில் மயங்கிட
வினவிய மனத்துடனுள்
நினைவுற வந்தினி வரமரு ளுந்தெய்வ
நினையல திங்குளரோ
உனையர னுஞ்செய செயவென மந்திர
வுரைகள் பகர்ந்தவனே
அனைவரின் முன்குற மகளை மணந்தரு
ளறுமுக சம்பிரமனே.

வேதாளம் விளம்பிய இருபதாம் கதை

2. அருக நினைந்திடு முறைகெடு திங்கென
வரசனு மிங்கெணியே
உருகி மரந்தனி லருகு திரும்பின
உவண னெனும்படியே
விருதுட னங்கையில் அலகையை முன்கொடு
விசையில் நடந்திடுபோ
திருளில் மொழிந்திடு வழிதொலை யும்படி
இருபதெ னுங்கதையே.

வேறு

3. அருவி சார்வரையும் நதியு மேரிகளும்
அம்பு யங்கணிறை வாவியும்
தருவி சாலமொடு குயிலு லாவியிடு
சண்ப கம்பரவு சோலையும்
உருவு சாளரமெ லாமுலா விமுக
டுயரு மேடைகளு மழகதாய்
வருவி சாலநக ரென்று பாரினில்
வளஞ்சி றந்தபதி யுண்டரோ.

4. தத்த தத்தனெனும் வணிக னங்கர்
தனத்து வாழ்வினில் மிகுத்தவன்
மெத்து புத்திரனி லாமலே யுமையை
வேண்டி யேதவ முயன்றநாள்

உத்தமக் கவுரி யருளி னல்வணிகன்
ஒருபெண் ணன்பொடு பயந்தனன்
அத்தி றத்தவள் தனக்கு நாமமும்
அநங்க மஞ்சரி யென்பதே.

5. தினந்தி னங்களில் வளர்ந் துயர்ந்துலவு
திங்கள் போலொளி திகழ்ந்துதான்
தனங்கு ரும்பையென வீர வேல்விழிகள்
தாவியே குழைகள் மீறவே
வனஞ்சி றந்தவள மாக வேமயில்கள்
சாயல் கண்டுவிளை யாடவே
அநங்க வேளருகு சேவை செய்திடவும்
அநங்க மஞ்சரியும் விஞ்சினள்.

6. அருந்த வத்திடை பயந்த தாதையொடு
அநங்க மஞ்சரியை அருளென
வருந்தி யேதினமும் வந்துவந் துறவில்
வணிக ரானவர்கள் கேட்கவே
பிரிந்தி டாதிரவு பகலு மாகவே
பெண்ணை மேவுவோர் தமக்கலால்
பொருந்தி யீகலேன் எனத்த காதெனப்
போயி னர்களிசை யாமலே.

7. பூவும் நாருமென வுடலொ டாவியது
போல வேயிவளை மருவுவேன்
ஈவை யோவெனவே தாம மாலிகை
என்ப வன்பிளையி யம்பினன்
ஆவ லாலினிது கண்டு தாதையும்
அநங்க மஞ்சரியை யன்புடன்
மேவு வாயென மணஞ்செய் தேயருளி
விட்ட னன்னவனும் மேவினன்.

8. தரும ரூபமெனு மநங்க மஞ்சரியும்
தாம மாலிகையு மங்ஙனே
திருவு மாலுமென வன்றிலோடு பெடை
சேர்ந்து மேவினது போலவும்

உருவ மாமதனும் ரதியு மென்னவே
யொருவ ரோடொருவர் பிரிவிலார்
மருவி யேநெடிய காம லீலையெனும்
வாவி மூழ்கிதினம் வாழுநாள்.

வேறு

9. மன்றலங் குழலை நாளும்
மருவியே பிரிவி லாதோன்
தன்றொழில் மறக்கு தென்று
சாதியி னோரைக் கூடிச்
சென்றொரு பதியிற் புக்குச்
சிறந்தவா ணிகங்கள் செய்து
நின்றவள் தனைம றந்து
நீங்கினன் ஒருநா ளாங்கே.

10. பிரிவிலான் பிரிந்தா னென்று
பெண்ணுமவ் விரவில் நொந்து
மருவியே வேண்டா தானை
மனத்திலும் வேண்டே னென்றங்
குருவுள மேடை மீதில்
உலாவியே நிலர்மற் காலில்
பரிபுரம் புலம்பு மோசை
பக்கத்தோர் மறையோன் கேட்டான்.

11. நோக்கிய வளவி லேதா
னூபுரப் பதமுங் காதிற்
றூக்கிய விழியி ரண்டுஞ்
சந்திர வதனந் தானுந்
தேக்கிய கும்ப கொங்கைத்
திரட்சியு மிளைஞர் செய்த
பாக்கியம் போல நின்ற
பாவைதன் வடிவைக் கண்டான்.

12. கண்டனன் கண்ணிற் காம
கமனெனு மந்த ணாளன்
கொண்டனன் விரகம் யாக்கை
குலுங்கிடத் திகைத்து நின்றான்.

வண்டுறை குழலி னாளும்
மறையவன் வடிவை நோக்கித்
திண்டிறற் சிலைவே ளெய்யத்
தியங்கியே மயங்கி நின்றாள்.

13. கண்ணொடு கண்டான் நோக்கிக்
கருத்தழிந் தந்த ணாளன்
பெண்ணுடை மயல்கொண் டேதான்
பின்னையுந் திரும்பிப் போனான்
வண்ணமென் முலையி னாளும்
மன்மதன் வாளி யாலே
உண்ணினை வாகி நெஞ்சம்
உருகியே விரகிற் சோர்ந்தாள்.

14. மலர்தனை யணையிற் சேர்ப்பார்
வளமையாய் மற்று வாழை
யிலைதனைப் படுப்பார் சாந்தம்
இழைத்துமேற் பூசி நிற்பார்
நிலவினை மறைப்பார் மேற்பனி
நீர்தனை இறைப்பார் செய்யும்
பலபரி கார மெல்லாம்
பற்றுமோ தென்றற் கென்பாள்.

15. பைங்கொடி வருந்தும் போதில்
பஞ்சபா ணத்தால் நொந்தே
அங்குயர் மறையோன் தானும்
அரிவைதன் மனைக்கு வந்தான்
எங்குளா ளென்று கேட்க
வேந்திழை தோழி மார்கள்
மங்கைதன் னுடனே சொல்ல
மயக்கந்தீர்ந் தழையு மென்றாள்.

16. ஓடியங் கழைத்தார் மாதர்
உருகியே மறையோன் தானும்
வாடிய பயிர்க்குப் பெய்யு
மழையெனக் கடிது வந்தான்.

தேடிய வல்லி காலிற்
சிக்கிய தென்ன மின்னாள்
கூடிவே தியனை அன்பால்
கொங்கைமேல் தழுவிக் கொண்டாள்.

17. கரத்தினில் அணைத்த போது
கலந்திடு மளவு மாவி
தரித்ததங் கில்லை யாசை
தன்னையிங் கேதென் றேத
மரித்தனள் மங்கை பின்பு
மறையவன் இவைதான் கண்டு
பெருத்ததோர் காதல் மிஞ்சிப்
பெண்ணுடன் மரணஞ் செய்தான்.

18. கங்குல்தான் விடிந்த பின்பு
கணவனும் வந்து பார்த்து
மங்கைதன் னுசை யாலே
மரித்தனன் அவனும் ஆங்கே
இங்கிவர் மூவர் செய்த
வாறுகண் டதிச யித்துச்
சங்கரை டன்வா தாடுந்
தையல்வந் தெழுப்ப வந்தார்.

19. மேவியே வுறங்கி னூர்கள்
விழித்தவா றதனைப் போல
மூவரும் உயிர்தான் பெற்றூர்
மூவரி லதிக மான
சாவிவர் தமக்கு ளாரோ
சாற்றென வலகை யப்போ
கோவினை வினவ மற்றக்
கொற்றவன் தெரிந்து சொல்வான்.

20. இருவருந் தழுவிக் கொண்டே
ஏகமாய்ப் போகந் தன்னுல்
அரிவையும் மறையோன் தானும்
அன்புடன் மரித்தார் சற்றும்

*பரிவிலா மங்கைக் காக*
*பார்த்தள வேதான் நெஞ்சம்*
*உருகியே மகிழ்நன் மாள்கை*
*யுலகினிற் புதுமை யென்ருன்.*

21. *ஒக்கவே பேச லாலு*
*முடன்வருங் கொள்கை யாலும்*
*சிக்கதாங் கதைகள் கூறித்*
*தெளியலாந் தெளிந்த பின்பு*
*மிக்கது பெற்ற பேர்க்கு*
*வேற்றுமை சிறுப்ப தாலும்*
*அக்கண மலகை மீண்ட*
*தவகுணர் செயல்போல் ஆங்கே.*

ஆக விருத்தம் 729

## அருஞ்சொற்பொருள்

1. அரன் செய செய என - சிவன் முருகன்பால் மந்திர உப தேசம் பெற்ற வரலாறு.

2. உவணன் - கருடன்.

3. அம்புயம் - தாமரை மலர். சாளரம் - பலகணி, சன்னல். முகடு - உச்சி. விசால நகர் - நகரத்தின் பெயர்.

4. தனத்து வாழ்வு - செல்வ வாழ்வு. பயந்தனன் - பெற்ருன். அநங்கமஞ்சரி - பெண்ணின் பெயர்.

5. குழைகள் - காது அணிகள். சாயல் - மென்மைத் தன்மை.

6. ஈகுவேன் எனத் தகாது - கொடுக்க முடியாது.

7. ஆவி - உயிர். தாமமாலிகை - வணிகன் பெயர்.

8. தரும ரூபம் - அறத்தின் உருவம். பெடை - பெண் பறவை.

9. குழல் - கூந்தலையுடைய பெண். தன் தொழில் - வணிகத் தொழில்.

10. வேண்டாதான் - விரும்பாதவன். உரு உள - அழகு உள்ள. பரிபுரம் - காலில் அணியும் சிலம்பு.

11. நூபுரம் - சிலம்பு. சந்திரவதனம் - சந்திரன் போன்ற முகம். வடிவு - அழகு.

12. காம கமன் - அந்தணன் பெயர். வண்டு உறை குழலி ளுள் - அநங்க மஞ்சரி.

13. வாளி - அம்பு. உள் + நினைவாகி = உண்ணினைவாகி.

14. சாந்தம் - சந்தனம்.

16. தேடிய வல்லி காலிற் சிக்கிய தென்ன - தேடிச் சென்ற கொடி தானே வந்து காலிற் சுற்றிக்கொண்டது போல.

17. ஆசை தன்னை இங்கு ஏதென்று ஓத - ஆசையின் அளவை நான் என்ன என்று சொல்லுவேன்.

18. கங்குல் - இரவு. சங்கரனுடன் வாதாடும் தையல் - சிவனுடன் போட்டியிட்டு நடனம் ஆடிய காளிதேவி.

19. அதிகமான சாவு இவர் தமக்குள் ஆரோ - இறந்த இவர்களில் சிறந்தவர் யார்? கோ - கொற்றவன், அரசன்.

20. ஏகமாய் - ஒன்றாய். போகம் - இன்பம். அரிவை - பெண். பரிவு - அன்பு. மாள்கை - இறத்தல்.

அநங்க மஞ்சரி கதை முற்றும்.

---

## 21. பிரமராட்சதன் கதை

முருக வணக்கம்

1\. வெகுமாய்கை யுற்றுழலுஞ் சமுசார மெய்த்துயரில்
மிகமூழ்கி நித்த மொருநாள்
உகமா யுளத்திலுனை நினையேனை நட்புறுவ
துனதே யினிப்ப ரமதே
முகமாறி னிற்கருணை யதுவே படைத்தருளு
முருகா அரிக்கு மருகா
மகமாயி சத்தியுமை கௌமாரி பெற்றருளு
மகனே செழித்த குகனே.

வேதாளம் விளம்பிய இருபத்தோராம் கதை

2\. தடுமாறு தற்குமன மிலையாம லப்பொழுது
தருவேறி வெற்றி கொடுதான்
உடனேக ரத்தலகை தனைவாரி வெற்பதென
உயர்தோளி லிட்டு வரவே
குடமாமு லைக்கிரிகள் கொடுநா லெனச்சிறிய
கொடியா மெனத்தெ ரிவைமார்
இடைபோல் மனத்தலகை அரசே யெனப்பகரு
மெழுமுன் றெனுங்க தையையே.

வேறு

3\. தேரிற் சித்திர முந்தே
ரோடுந் தெருவெல்லாம்
தூரிற் சித்திர மெழுதிய
கூடம் தொலையாமல்
ஊரிற் சித்திர வளமைக
ளேதா முளவாகிப்
பாரிற் சித்திர கூட
மெனுமோர் பதியுண்டே.

4\. பெருந்திற லாகிய சோரர்க
ளென்னும் பெயரன்றிப்
பொருந்தலர் எல்லாம் திறையிட
நாளும் புகழாகித்

தெரிந்தர சாகிய சித்திர
கூடந் தனிலேதான்
இருந்தர சாள்வோன் சந்திர
லோசனன் என்போனே.

5. பலகலை நூலின் பயனது
நாளும் பாராட்டி
இலகிய வமரர் பதியினில்
வாழிந் திரனேபோல்
சொலிலுயர் புத்திகள் சுமதீ
யெனுமந் திரிசொல்ல
வுலகினை யெல்லா மன்னவ
னொரு மொருநாளில்.

6. ஓங்கிய பரிதேர் மதகரி
சேனைக ளுடனேதான்
ஆங்குயர் கானில் வேட்டைய
தாயர சன்சென்றான்
பாங்குடன் வாயுவின் வேகம
தென்னப் படர்கானில்
தாங்கிய வெம்பரி யரசனை
யுங்கொடு தனியாக.

7. ஒருவனு மரசன் வழிகொடு
தனியே உயர்கானில்
மருவுறை சோலையி லெய்தியொர்
வாவிக் கரைகண்டான்
அரிவையர் ஆடிய குங்கும
மேதான் கமழ்நீரை
நிருபன் விடாய்க்குப் பருகி
யிருந்தான் நிழலூடே.

8. மேலிரு வரைநிகர் கொங்கைக
ளானவை மிகுபாரம்
நூலிடை நோகுது நோகு
தெனுநூ புரமார்ப்ப

வாலிபர் சோர்வுற வேமட
மாதர்கள் சிலர்சூழச்
சோலையில் வந்தொரு பெண்கொடி
மேவினள் சுனையாட.

9. கண்டனன் மங்கையை மன்னவ
னுங்கண் களிகூர
அண்டர்கள் மாதோ புவியினர்
மாதோ யாரோதான்
ஒண்டொடி யீரே சொல்லுமி
னென்றே யுரையாடிக்
கொண்டனன் மாமயல் மாரனு
மைங்கணை கொண்டெய்தான்.

10. ஆரென மன்னவ னுரைசெயு
மென்ன வவள்பின்னே
நாரியர் வந்தவர் தங்களி
லோர்நன் னுதல்சொல்வாள்
சீரிய தெய்வ முனிமக
ளாகும் திருவன்னாள்
பேரது தானு மிங்கிவள்
சந்திரப் பிரபையென்றாள்.

11. அம்முனி பால்வந் தரசனு
மரிவையை யருளென்றான்
மைம்முகில் நேர்குழ லாள்தனை
முனியும ணஞ்செய்தான்
இம்மையில் மன்ன னிரதியு
மதனு மெனவேதான்
கொம்மையை நேர்முலை யாள்தனை
மேவிக் கொடுவந்தான்.

வேறு

12. சிந்தைகளி கூர்ந்துமிக செம்முகம தாயே
அந்தணரை வாவென வழைத்தரச னப்போ
வந்துமயல் தந்தமினை வண்மையிலோர் தெய்வம்
தந்ததென அன்பினுயர் தானம தளித்தான்.

13. மன்றல்நிறை சோலையினுள் மலரணையின் மீதே
தென்றலது வீசவுயர் திங்களது காய
அன்றரசின் நீழல்தனில் அரிவையுடன் அரசன்
துன்றிரவில் மேவியேசு கிக்குமொரு காலை.

14. அங்கியென வேசுழலு மால்விழியு மஞ்செம்
பங்கியது வும்பிறை பகிர்ந்தவெயி றும்மாய்ப்
பொங்கியெழு கோபமொடு பொழிலினிடை யேதான்
இங்கிவர்முன் னோர்பிரம ராக்கதனும் வந்தான்.

15. வருபிரம ராக்கதனும் வன்பசியி னாலே
யிருவரையும் வந்தனுக வெண்ணியிடு போதில்
புரவலனு மஞ்சியெதிர் போயடி பணிந்தே
தருவனிரை வேண்டியது தான்சொலுநீ யென்றான்.

16. அஞ்சியமன் னன்செயலை யப்பொழுது கண்டே
வெஞ்சினம்விட் டுப்பிரம ராக்கத னுரைப்பான்
உஞ்சிநீயி ருக்கவெனி லுன்னுயி ரளித்தேன்
எஞ்சின விருப்பொர்பலி யான்சொலுவ னென்றான்.

17. அந்தண குமாரனுமா யஞ்சுவய தும்மாய்த்
தந்தையொடு தாயுமிகு சம்மதமு மாகி
யிந்தவகை யிற்பலி யெனக்கிரைய தாகத்
தந்தருள்க வென்னவத் தராபதி இசைந்தான்.

18. வேந்தனும் நிசாநிசி விடிந்தளவி லப்போ
வாய்ந்ததொரு தம்பதியில் வந்தணுகி யேதான்
ஓர்ந்திவைகள் தன்மனதி லொன்றுமொளி யாமல்
சாந்தமுள மந்திரிகள் தம்மொடுரை செய்தான்.

19. கொஞ்சுமதி யானதுசு ழித்தரவி னைக்கண்
டஞ்சுமது போலரச னஞ்சியிவை சொல்ல
விஞ்சுமதி தானுளவி வேகியுல கெல்லாம்
எஞ்சுமதி மந்திரியங் கேற்றவை யுரைப்பான்.

20. மற்றுலகில் வேதியர்கள் வறுமைவரி னுந்தாம்
பெற்றபிள்ளை தன்னைவிலை பேசியவர் வில்லார்
விற்றிடினு மைந்தனை விரைந்தவர்கள் கொல்லச்
சற்றுமிசை யார்களெனச் சாற்றின னமைச்சன்.

21. ஆதியெனு மீசனடி யார்மனதை யன்பால்
சோதனை செயும்பரிசு சொல்லுமது போலே
ஓதுமினை வோவிதென விறைவனெ டுரைத்தே
தீதறவோர் பாலகனைச் செம்பொனில் வகுத்தான்.

22. வகுத்ததொரு பாலகனை மந்திரிகொண் டேதான்
மிகுத்தமறை வேதியர்கள் வீதிதனில் வந்தே
அகத்திலொரு பாலகனை யளித்தவனை மாய்க்கத்
தொகுத்திசையில் ஈந்தருள்வன் சொன்னவிலை
[யென்றான்.

வேறு

23. மைந்தர்க்கு மைந்தன் பொன்னல்
வகுத்துமந் திரியுங் கொண்டே
அந்தணர் தெருவிற் காட்ட
வனைவரு மிசையா தென்றார்
சந்தத மொருநாள் போலத்
தரித்திர மதனல் நொந்தோர்
பைந்தமிழ் அந்த ணாளன்
பாரியை நோக்கிச் சொல்வான்.

24. தரித்திரம் தன்னில் நாம்தாம்
இவருவரும் தனியே நொந்து
மரித்திடிற் பின்னை யிந்த
மைந்தனைக் கண்ட பேரார்
பரித்துயி ருடனும் வாழில்
பாலகர் பெறலா மென்று
விரித்தவன் சொல்லக் கேட்டு
மெல்லியல் நல்ல தென்றாள்.

25. மனைவியும் மகிழ்நன் றானும்
மனமிரு வோரு மொன்றாய்
வினவினர் பாலன் தன்னை
வேந்தனும் வாழ நீங்கள்
தனமதால் வறுமை நீங்கத்
தந்தைதாய் உரைத்தீ ராகில்
இனிநலம் இதுபோல் உண்டோ
ஈயுமென் றவனுஞ் சொன்னன்.

26. பிள்ளையும் தாயும் தம்மில்
பேசியே யிசைந்த போது
கொள்ளுமென் றப்போ தோடிக்
கூறினன் தாதை யாங்கே
வள்ளல்மந் திரியும் பொன்னல்
வகுத்தபா லனையு மற்றும்
உள்ளபொற் பணியு மீந்தே
யுளமகிழ்ந் தழைத்துப் போனன்.

27. போயமந் திரியுங் கூடிப்
புரவலன் முன்னே நின்றான்
தாயுடன் பிள்ளை தானும்
தந்தையும் பின்னே நின்றார்
நேயமாய் அவரைக் கண்டு
நிருபனும் மகிழ்ந்தப் போதே
ஏயின பிரம ராக்கற்
கிசைபலி கொடுக்கப் போனன்.

28. கள்ளிருள் தன்னிற் சென்று
நரபதி மறையோன் பெற்ற
பிள்ளையைக் கொணர்ந்தோ மென்று
பிரமராக் கதற்குச் சொன்னன்
உள்ளமும் மகிழ்ந்தே உன்போல்
உலகினிற் பெரியார் உண்டோ
தெள்ளிய மறையோன் பெற்ற
சிறுவனைக் கொணர்ந்தாய் என்றான்.

29. பிரமராக் கதனும் அந்தப்
பிள்ளையைப் பலிதான் கொள்ள
மரமிசை நின்றான் தாயும்
மைந்தனைப் பிடித்து நின்றாள்
கரமதில் வாளால் மந்திரி
கந்தர மரிய வந்தான்
அருமறைச் சிறுவ னப்போ
தவைகண்டு நகைக்க லுற்றான்.

30. மைந்தன்தான் நகைத்த வாறும்
மன்னவன் மொழிதப் பாமல்
சந்ததம் விலைக்கு விற்றுத்
தாய்தந்தை பிடித்த வாறும்
கந்தர மரிய மந்திரி
கையில்வாள் பிடித்த வாறும்
அந்தரத் திருந்து கண்டே
அருமறைப் பிசாசு கூறும்.

31. கொற்றவன் மொழிதப் பாமற்
கொடுவந்தான் சிறுவன் தன்னை
விற்றனர் தந்தை தாயும்
விரைவுடன் வாளி னாலே
எற்றினன் மந்திரி வந்தே
ஏதின தினிதா மென்று
மற்றது கூறிச் சேயை
மன்னித்து விட்ட தன்றே.

32. அரசனுக் கலகை தானும்
அக்கதை விரித்தங் கோதிச்
சிரசினை யரியும் போதில்
சிறுவன்தான் நகைத்த தேனோ
வரிசையிற் பிரம ராக்கன்
மன்னித்து விட்ட தேனோ
வுரைசெய்யென் றதுதான் கேட்க
உன்னிமன் னவனுஞ் சொல்வான்.

33. மிடியினல் தந்தை தாயும்
விற்றனர் தன்னு யிர்க்கே
அடகதாய் வேந்தன் கொண்டான்
அமைச்சனு மாசை பேணி
முடுகியே வதைக்க வந்தான்
மூவர்தம் செயலைக் கண்டே
திடமுடன் வெறுத்த தில்லை
சிரித்தது வேறே யென்றான்.

34. போயின சென்மஞ் செய்து
புகுந்ததோர் பாவத் தாலே
பேயின மாகி நின்ற
பிரமராக் கதனைக் கண்டு
நீயினம் படும்பா டேதோ
நீண்டவிக் கொலையா லென்று
வாயினிற் சிறுவ னப்போ
மனத்தெண்ணி நகைத்த தென்றான்.

35. தையலோர் பாகன் பிச்சை
தான்புகுந் திரக்கு மந்நாள்
தையல்போல் மாயன் வந்து
தான்பலி யிடவே யீசன்
கையினி லிருந்த பிரம
கபாலம்விட் டதுபோல் மன்னன்
கையைவிட் டலகை மீண்டும்
கரந்தது தருவிற் றானே.

ஆக விருத்தம் 764

## அருஞ்சொற்பொருள்

1. மாய்கை - மாயம். ஒருநாள் ஒரு யுகமாய் - ஒரு நாள் ஒரு யுகம்போலத் தோன்ற. பரம் - பாரம். கடவுளை நினைக்காதவர்களுக்கு வாழ்நாள் இன்பமாய் இராது; துன்பமே தரும். ஆதலால் அவர்களுக்கு ஒரு நாள் ஒருயுகம் போலத் தோன்றுகிறது.

2. வெற்பு - மலை. கிரி - மலை. பெண்களின் இளைத்த சிறிய இடை நிலையாது தடுமாறுவதுபோல அப்பேயின் மனமும் தடுமாறியது.

3. செல்வருடைய வீட்டுக் கூடங்களில் அழகிய ஓவியங்களை எழுதி வைத்தல் வழக்கம். தூரிகை - எழுதுகோல்; தூர் என இங்கு நின்றது. சித்திர வளமைகள் - அழகுமிக்க வேறு செல்வவளங்கள்; காட்சிகள். சித்திரகூடம் - ஊரின் பெயர்.

4. பொருந்தலர் - பகைவர். சந்திர லோசனன் - அரசன் பெயர். திறையிடுவதால் பகைவர் திருடர் என்ற கெட்ட பெயர் இன்றி நற்பெயர் பெற்றனர்.

5. நல்ல அமைச்சன் இல்லாதநாடு அழியும். சுமதி என்னும் நல்ல அமைச்சன் இவ்வரசனுக்குத் துணையானான்.

6. மன்னர்களுக்கு முற்காலத்திலிருந்த படைகள் யானை, குதிரை, தேர், காலாள் என்னும் நான்குமாகும். வாயு வேகம் - காற்றின் வேகம் போல.

7. ஒருவனும் அரசன் - அரசன் துணையின்றித் தனியனாய். சந்தனக் கலவை முன்பு குங்குமப்பூ முதலியன கலந்து இருந்ததால் குங்குமம் என்றே கூறப்பட்டது.

8. நூல் இடை - நூல் போன்ற இடை. சுனை - சிறிய குளம். நூபுரம் - சிலம்பு. வரை நிகர் - மலைபோன்ற.

9. அண்டர்கள் மாது - தேவருலகத்துப்பெண். ஐந்து+கணை = ஐங்கணை—ஐந்து அம்புகள். மன்மதனுக்கு ஐந்து மலர் அம்புகள் உண்டு.

10. நாரியர் - தோழிப் பெண்கள். நன்னுதல் - பெண். சந்திரப் பிரபை - பெண்ணின் பெயர்.

11. மைமுகில் - கரிய மேகம். முனி - முனிவர்.

12. செம் முகம் - மகிழ்ச்சி முகம், நன்முகம். திருமணம் செய்து கொள்ளும் போது தானம் அளிப்பது வழக்கம்.

13. மன்றல் - மணம். திங்கள் காய - நிலா ஒளி வீச. அரசின் நீழல் - அரச மரத்தின் நிழல்.

14. அங்கி - நெருப்பு. பங்கி - மயிர். எயிறு - பல். பிறை - மூன்றாம் பிறைச் சந்திரன். இராக்கதனுடைய கண் நெருப்புப் போன்றது. கடைவாயிலுள்ள கோரைப் பற்கள் பிறைச் சந்திரனைப் போல இருந்தன. பொழில் - சோலை.

15. புரவலன் - அரசன். சொலு நீ (சொல்லு நீ) - நீ சொல்வாய்.

16. வெம்மை சினம் - வெஞ்சினம் - கடுங்கோபம். உய்ந்து - உய்ஞ்சி - தப்பிப்பிழைத்து. எஞ்சின - மற்ற; எனக்கு வேண்டிய மற்றொரு பலி.

17. தராபதி - மன்னன். தரை, தரா - பூமி. பதி - தலைவன், அரசன்.

18. நிசாநிசி - இரவு. தம் பதி - தம் ஊர். ஓர்ந்து - ஆராய்ந்து.

19. இராகு என்னும் பாம்பு சந்திரனை விழுங்குவதாகக் கூறுவது நூல்வழக்கு. விவேகி - அறிவுடையவன்.

20. சாற்றினன் - கூறினான். வில்லார் - விற்கமாட்டார்கள்.

21. சிவன் தன் அடியார் மனத்தைச் சோதனை செய்து பார்ப்பது போல, அந்தணர் மனத்தைச் சோதிக்க விரும்பிய மந்திரி, பாலகனைப் போலப் பொன்னால் ஓர் உருவம் செய்தான்.

22. இசையில் - ஒத்துக்கொண்டால். ஈந்தருள்வன் - கொடுப்பேன். 'நீங்கள் உங்களுடைய பாலகனைக் கொடுத்து, அவனைக் கொல்வதற்கு மனம் சம்மதிப்பீரானால், நான் இந்தப் பொன்னால் ஆகிய சிறு பாலகன் உருவத்தைக் கொடுப்பேன்' என அமைச்சன் கூறினான்.

23. சந்ததம்—எப்பொழுதும். அனைவரும்-யாவரும். பாரி-மனைவி.

24. மரித்திடில் - இறந்தால். கண்டபேர் ஆர் - கண்டு பாது காப்பவர் யார்? பரித்து - தாங்கி. மென்மை + இயல்—மெல்லியல்; மென்மைத்தன்மை உடைய பெண்.

25. மகிழ்நன் - கணவன். 'வேந்தன் வாழவும், தாய் தந்தையர் களாகிய நீங்கள் வறுமையில்லாமல் இருக்கவும் என்னால் நன்மை ஏற்படு மானால், என்னை விற்க நீங்கள் இசைந்தால், இதைப் போன்ற நன்மை எனக்கு வேறு உண்டோ?' என்று அந்தணச் சிறுவன் கூறினான். ஈயும் - கொடுப்பீராக.

26. தாதை - தகப்பன். அப்போது + ஓடி = அப்போதோடி. வள்ளல் மந்திரி - வள்ளல் தன்மையுடைய மந்திரி. வகுத்த - செய்த. பொன் பணி - பொன் நகைகள்.

27. ஏயின - ஏவின; கட்டளை இட்ட. இசை பலி - பொருத்த மான பலி.

28. நரர் + பதி = நரபதி; அரசன். உன்போல் பெரியார் - உன் னைப் போன்ற பெரியோர்; செய்தற்கு அருமையான செயலைச் செய்ப வர் பெரியோர்.

29. மரமிசை நின்றான் - மரத்தின் மேல் ஏறி நின்றான். கந்தரம் - கழுத்து. மந்திரி வாளால் அரிய வந்தபோது சிறுவன் நகைத்தான்.

30. கொற்றவன் - அரசன். மன்னன் தான் சொன்ன சொல் தவறாமல் சிறுவன் ஒருவனைக் கொண்டு வந்தான். எற்றினர் - தள்ளி னார். சேய் - மகன்.

33. மிடி - வறுமை. அடகு – ஈடாக. மன்னன் தன் உயிர்க்குப் பதிலாகச் சிறுவன் உயிரைக் கொடுக்கத் துணிந்தான். ஆசை பேணி - ஆசை கொண்டு.

34. போயின சென்மம் - போன பிறப்பு. பேயினம் - பேய்வகை. இனம்-இன்னும். படும்பாடு - படும் துன்பம். இக் கொலையால் மறுபடியும் இப்பேய் (பிரமராக்கதன்) என்ன துன்பம் அடையுமோ என்று சிறுவன் நினைத்து நகைத்தான்.

35. தையலோர் பாகன் - உமாதேவியை இடப்பாகத்தில் உடைய சிவபெருமான். சிவன் பிரமனுடைய தலையைக் கிள்ளியபோது அந்தத் தலையின் ஓடு சிவன் கையில் ஒட்டிக்கொண்டது. திருமால் பெண்வடி வோடு வந்து பிச்சையிட்டான். அப்பொழுது அந்த ஓடு சிவன் கையை விட்டு நீங்கியது போல, வேதாளம் விக்கிரமகேசரியின் தோளிலிருந்து நீங்கியது. கரந்தது - மறைந்தது.

**பிரமராட்சதன் கதை முற்றும்.**

## 22. சிங்கத்தின் கதை

முருக வணக்கம்

1. பொய்ய ருனைப் போற்றி யனுதினம்
செய்யுந் தீவினை தீர்த்தெனை யாளுவாய்
ஐய னேயர னருள் பன்னிரு
கைய னேமுரு காகதிர் வேலனே.

வேதாளம் விளம்பிய இருபத்திரண்டாம் கதை

2. மன்னன் ஓடி மரத்தினில் ஏறியே
பின்னும் வாரிப் பிடித்து வருகையில்
பன்னி யேயிரு பத்திரண் டாங்கதை
தன்னைக் கேளெனச் சாற்று மலகையே.

3. நற்கி ராம மனைத்திலும் நல்லதோர்
அக்கி ராரம் விசால வகரத்தே
சக்கி ராயுதன் தாள்மற வாதவன்
மெய்க்கி ராமணி விட்டுணு சுவாமியே.

4. துய்ய விட்டுணு சுவாமியென் போன்மலர்த்
தைய லன்பில் தழைத்துடன் வாழுநாள்
செய்யு மாதவந் தன்னுற் சிறுவர்கள்
உய்ய நால்வரு கந்திடத் தோன்றினர்.

5. மைந்தர் நால்வரும் மாமறை ஓதியே
சிந்தை யாரச் செபங்களில் விஞ்சியே
உய்ந்த காலையி லோர்சில நாளின்மேல்
தந்தை வானுல கேறினன் றனரோ.

6. ஞால மேற்றுன்பம் நால்வரு மெய்தியே
பாலர் தாதைக்குப் பண்ணினர் நீர்க்கடன்
மேலுந் தானங்கள் வேதியர்க் கீந்துதான்
சாலக் கிராம மதிலிருந் தார்களே.

7. பெருகு மாற்றின் பெருக்கது போலவே
வருமவ் வாழ்வும் வறுமையுந் தொந்தமாய்த்
தரும வேதியர் தாம்சில நாளெலாம்
விரிவில் வாழ்ந்து மிடியினை எய்தினர்.

8. ஆவ தோர்மிடி தன்னில மூந்நூநாள்
பூவில் நால்வரிற் போந்தங் கொருவன்றான்
மேவு மிந்த மிடியிலு மிவ்வுயிர்
சாவ தேயென்று தான்துணி வெய்தினன்.

9. தவத்தில் மேவியே தான்மரித் தார்க்கலால்
அவத்தில் மாய்ந்தவர்க் கார்க்குங் கதியிலை
விபத்தி யீதென வேண்டியே மூவரும்
நிபத்தி யாமுரை செய்து நிறுத்தினர்.

10. வாடியே நாளும் வறுமையில் நொந்தவர்
தேடியே புண்ணிய தீர்த்தங்க ளாடவே
கூடி னரவர் கூடிய நால்வரும்
ஓடி னர்பர தேச முலகினில்.

11. எண்ணெழு தேசங்கள் எங்கணுஞ் சென்றுதான்
புண்ணிய தீர்த்தங்கள் பூசுர ராடியே
கண்ணி லேகண்ட வித்தைகள் கற்றவர்
நண்ணி யோரிடம் நால்வரு நண்ணினர்.

வேறு

12. மற்றவர் நால்வரும் வந்து கூடியே
கற்ற வித்தைகள் கழறி நின்றனர்
சிற்றவை குற்றங்கள் தெரியு ருமலே
பற்றியே சோதனை பார்க்க வெண்ணினர்.

13. மடங்கலொன் றநேகநாள் மரித்த என்பினை
அடங்கலும் கூவைசெய் தவய வஞ்செயத்
தொடங்கின னொருவனச் சோரி வார்தசை
யுடம்பினில் நரம்பெழ வொருவன் பண்ணினன்.

14. மண்டிய தோலுடன் மயிரு மாக்கையும்
பண்டையி லுருவென வொருவன் பண்ணினன்
கண்டினும் நவமெனக் கருணை கூர்ந்துயிர்
உண்டென வருளின னொருவ னன்றரோ.

15. சிங்கமு மெழுந்துகண் சிவந்து வேகமாய்
அங்குவால் முறுக்கியே அவரை நோக்கியே
துங்கவந் நால்வரைக் கடித்துக் கொன்றுடன்
அங்கனே விழுங்கியவ் வனத்திற் புக்கதே.

16. தீமையி னூர்க்குயிர் நன்றி சீரியோர்
ஆமெனச் செய்யினு மதுவு மிப்படி
மாமறை யோர்கொலை வழக்கி லார்க்கதோ
நேமிகொள் மன்னவா நிகழ்த்து பாவமே.

17. கூறிய வலகைக்குக் கொற்றவன் கூறுவான்
பூருவ மரித்ததும் பொருந்திப் பூசுரர்
ஆருயி ரளித்தது மாண்டெ ழுந்ததும்
தேறுமோ நன்றியைச் சிங்க மானதே.

18. வாரியே என்பினை வகுத்து ரூபமாய்த்
தாரையாம் நரம்புதோல் தரிக்கச் செய்யினும்
பாரிலிம் மூவரைப் பகர லாகுமோ
ஆருயி ரளித்தவர்க் காகும் பாவமே.

19. ஆடவர் உயிர்தனை வளர்க்க ஆதவன்
நாடொறும் வந்துபோம் நலத்தைப் போலவே
நீடிய வலகையும் நிருபன் சொல்மகிழ்ந்
தோடியே தருவின்மீ துறைந்தி ருக்குமே.

ஆக விருத்தம் 783.

## அருஞ்சொற்பொருள்

1. பொய்யன் நான் - யான் பொய் மிகுந்தவன். உனைப் போற்றி- உன்னைத் தொழுது. தீவினை - கொடுஞ் செயல். அரன் - சிவன். ஆர் அருள் - பொருந்திய அருள்.

2. வாரி - எடுத்து. பன்னி - மீண்டும் மீண்டும் சொல்லி.

3. கிராமம் - சிற்றூர். அகரம் - அக்கிரகாரம், பிராமணர் வாழும் சிற்றூர். சக்கிராயுதன் - சக்கரம் என்னும் ஆயுதத்தை ஏந்திய திருமால். கிராமணி - கிராமத்தலைவன்.

4. மலர்த்தையல் - மலர் போன்ற மென்மைத் தன்மை வாய்ந்த மனைவி, உய்ய-உலகத்தில் பிழைக்க. உகந்திட - (பெற்றோர் மனம்) மகிழ.

5. மாமறை - சிறந்த வேதம். சிந்தை - மனம். விஞ்சியே - மேற்சென்று. உய்ந்த - வாழ்ந்திருந்த. வானுலகு ஏகினன் - இறந்தான்.

6. ஞாலம் - உலகம். தந்தை இறந்ததால் மைந்தர் நால்வரும் துன்பம் அடைந்தனர். நீர்க் கடன் - இறந்த தந்தைக்குப் பிள்ளைகள் செய்ய வேண்டும் இறுதிச் சடங்குகள்.

7. தொந்தம் - பற்று, பிடிப்பு. விரிவு - செல்வ வளம். ஆற்றில் சிறிது காலம் வெள்ளப் பெருக்கம் தோன்றும்; பின்பு நீர் வற்றிவிடும். அது போலத் தந்தை இருந்த வரையில் மைந்தர் செல்வச் சிறப்புடன் வாழ்ந்தனர்; தந்தை இறந்த பிறகு வறுமையை அடைந்தனர்.

8. நால்வருள் ஒருவன், வறுமையில் வாடுவதைவிட இறப்பது நல்லது எனத் துணிந்தான். பூ - பூமி.

9. அங்ஙனம் இறக்க விரும்பியவனை நோக்கி, "தவத்தில் பொருந்தி இறப்பவரே நற்கதி அடைவர். வீணே உயிரை மாய்ப்பவர் நற்கதி அடையார்" என்று கூறி, மற்ற மூவரும் அவனது எண்ணத்தை மாற்றினர். அவம் - வீண் முயற்சி. கதி - பேறு. விபத்தி - வேற்றுமை, துர்ப்பாக்கியம். வேண்டியே - முயற்சியைக் கைவிடும்படி வேண்டியே. நிபத்தி - உண்மை, உயிர் என்றும் உள்ளது, அழிவில்லாதது.

10. நால்வரும் புண்ணிய தீர்த்தங்களில் நீராடச் சென்றனர்.

11. எண்ணெழு - ஐம்பத்தாறு. பூசுரர் - நிலத்தில் வாழும் தேவர்கள், பிராமணர். நால்வரும் தங்கள் யாத்திரையில் பல வித்தைகளைக் கற்றுக்கொண்டனர்; பின்பு ஓரிடத்தில் ஒன்று கூடினர்.

12. அவர்களுள் ஒவ்வொருவரும் தாம் தாம் கற்ற வித்தைகளை மற்றவர்களுக்கு எடுத்துக் கூறினர்; பின்பு தாம் கற்ற வித்தைகள் எந்த அளவு பயன் தரும் என்பதைச் சோதித்துப் பார்க்க விரும்பினர். கழறி - கூறி. சிற்றவை - சிறியவை.

13. மடங்கல் - சிங்கம். மரித்த - இறந்த. கூவை - குவியல். அவயவம் - உடலின் உறுப்புக்கள். சிங்கம் ஒன்று நெடுநாட்களுக்கு முன்பு இறந்துவிட்டது. நால்வரும் அதன் எலும்புகளைக் கண்டனர். நால்வருள் ஒருவன் அதன் எலும்புகளைக் கொண்டு தான் கற்ற வித்தையால் சிங்கத்தின் உறுப்புக்களைப் படைக்கத் தொடங்கினன். மற்றொருவன் சிங்கத்திற்கு உரிய இரத்தம், சதை, நரம்பு இவற்றைத் தான் கற்ற வித்தையால் படைத்தான். சோரி - இரத்தம். தசை - சதை.

14. மூன்றுமவன் சிங்கத்திற்குரிய தோல், மயிர், முழு உருவம் ஆகியவற்றைத் தான் கற்ற வித்தையால் ஆக்கினன். நான்காமவன் தான் கற்ற வித்தையின் துணையைக் கொண்டு அதற்கு உயிரை உண்டாக்கினன். ஆக்கை-உடல். கருணை கூர்ந்து-அருள் உணர்ச்சி கொண்டு.

கொண்டு. அன்று - அந்நாளில். அரோ - அசை. கண்டினும் - கண்டு இ(ன்)னும் - முன்செய்தவற்றைக் கண்டு அதனினும்.

15. எழுந்து - உயிர் பெற்று எழுந்து. இவரை - தன்னைப் படைத்த நால்வரை. துங்க - பரிசுத்தமான. புக்கது - நுழைந்தது. உயிர்பெற்று எழுந்த சிங்கம் தன்னைப் படைத்த நால்வரையும் கொன்று தின்றுவிட்டுக் காட்டிற் புகுந்தது.

16. தீமையினர் - தீயவர், கெட்டவர். சீரியோர் - மேன்மக்கள். 'மேன்மக்கள் தீயவர்க்கு உதவி செய்தல் கடமையே ஆயினும், அவ்வுதவியால் அவர்கள் பெருமை இழப்பதோ, அழிவதோ உறுதி. சிங்கத்தை உயிர்ப்பித்த முயற்சியில் பாவம் யாரைச் சேரும்?' என்று வேதாளம் விக்கிரமாதித்தனை வினவியது. நிகழ்த்து - சொல். நேமி - சக்கரம், ஆட்சிச் சக்கரம்,

17. பூருவம் - பழைமை. மரித்து - இறந்து. சிங்கம் தான் முதலில் இறந்தது என்பதையும் பின்பு நால்வரும் தன்னை எழுப்பினர் என்பதையும் அறிந்து நன்றி தெளியக் கூடுமோ? தேறுமோ - ஆய்ந்து அறியுமோ.

18. 'முதல் மூவருக்கும் பாவம் இல்லை. சிங்கத்திற்கு உயிர் கொடுத்தவனுக்கே பாவம் சேரும்', என்று விக்கிரமாதித்தன் விடையளித்தான். பகரல் - சொல்லுதல்; பாவம் செய்தவர் என்று சொல்லுதல். அளித்தவர் - கொடுத்தவர்.

19. ஆடவர் - ஆண்மக்கள்: இங்கு இச்சொல் உயிர்களை உணர்த்த வந்தது. ஆதவன் - சூரியன். நிருபன் - அரசன். சூரியன் உயிர்களை வளர்ப்பதற்கு நாள்தோறும் வந்து வந்து போகிறான். அது போலவே வேதாளம் கதையைச் சொல்லிச் சொல்லி முருக்க மரத்தில் ஏறிக் கொண்டது.

சிங்கத்தின் கதை முற்றும்.

---

## 23. கூடுவிட்டுக் கூடுபாய்ந்த கதை

முருக வணக்கம்

1. ஆலமா யமன்வரி லடியிணை சாருநாள்
நீலமா மயில்மிசை நீயும்வந் தாளுவாய்
வேலனே விசாகனே வீர சூரர்தம்
காலனே குமரனே கந்த சுவாமியே.

வேதாளம் விளம்பிய இருபத்து மூன்றும் கதை

2. துன்னிருள் தன்னிலே தொடர்ந்து பற்றியே
தன்னிரு தோள்மிசை கொண்டு தான்செல
முன்னினி யிருபத்து மூன்றெனுங் கதைதனை
மன்னுடன் அலகையும் வழியிற் கூறுமே.

3. கலிங்கதே சந்தனிற் கவிஞர் போற்றவே
அலங்கிருத மானதோ ரகரந் தன்னிலே
இலங்கிய செல்வமும் இயல்பும் வண்மையும்
துலங்குமோர் அந்தணன் சோம சுவாமியே.

4. மாமறை யோனுடை மனைவி நாமமும்
கோமதி யென்றுல கோர்கள் கூறுவர்
பூமிசை யவர்கள்தம் புண்ணி யத்தினால்
ஏமுறு பாலகன் இன்புறத் தோன்றினன்.

5. சாலவே தந்தையுந் தாயு மைந்தன்றன்
கோலங்கண் டுருகவே வளர்ந்த கொள்கைதான்
ஞாலமோர் குடையுற நற்கு ணத்தினோர்
போலுமற் றவர்கள்தம் புகழும் போன்றதே.

6. வலதுட னஞ்செனும் வயதில் தாதையும்
குலமதன் தொழில்தனக் குள்ள வேதமும்
கலைகளுந் தெரியவே கருதி மைந்தனைப்
பலகலை யாவையும் பயிற்று வித்தனன்.

வேறு

7. நேரிய செந்தமிழ் நீடுகி ரந்தம்
ஆரிய நாகரம் அரிய தெலுங்கே
பாரிய கன்னடம் பலகலை யோதிச்
சீரிய கல்வி தெரிந்திடு நாளில்.

8. * மறையவ ளுஞ்சிறு வன்பத போதம்
பெறுகதி யற்றிடு பிரமலிபி யாலும்
தறுகணர் தாமொரு தத்ததி னுலும்
குறையுயிர் ஆகியே குமரன்ம ரித்தான்.

9. [1] அந்தண னும்மனை யாளும ரற்றி
மைந்தனு டன்பல வாசனை கற்றே
உய்ந்தருள் பாலரை ஊரிடை கண்டே
சிந்தையில் நொந்துயிர் தீமெழு கானுர்.

10. அகிலொடு கட்டை அடுக்கி யெடுத்தே
பகலிடை வேதியர் பாடை அமைத்தே
முகிலென அழுது முழுக்கொடு சேயைத்
திகிலொடு சுடலை யிலேகொடு சென்ருர்.

11. விழியெதிர் பாலனை விறகினில் இட்டே
செழியச டங்குகள் செவ்வன செய்தே
தழுவினர் வேதியர் தங்களி லேதான்
அழுதிடும் போதிலோர் அருள்முனி வந்தான்.

12. வேதியர் துயரமும் விஞ்சிய பாலன்
சாதலும் விறகிடைச் சவமது வென்றே
தீயினை யிடுகிற செயலையும் நாடி
மாதவன் அங்கு மனங்கழி வானுன்.

13. அயனுடைக் கையில் எழுது மெழுத்தால்
வயதொரு நூறுள மைந்த னிடத்தே
வியனுறு தத்து விளைந்தது வென்றே
இயல்புடன் முனியு மெழுப்ப நினைந்தான்.

14. சிந்தையில் மந்திர செபங்கள் பகர்ந்தே
மைந்த னுடற்குளே மாமுனி புக்கான்
உய்ந்திடப் பாலகன் உயிரை அளித்தே
தந்தனு டற்கொரு சார்பென விட்டான்.

---

* தெளிவில்லை.
[1] இப்பாடல் இரண்டாம் ஏட்டிலிருந்து சேர்க்கப்பெற்றது.

15. சீருயிர் பெற்றே சிறுவன் எழுந்தான்
சோர்வுறு தாதை சுதனுட னேதான்
ஆரெமை நேரென ஆடின ரப்போ
ஏருறு முனியு மிருந்தழு தானே.

16. விம்மிய தாதையும் மெய்ப்புதல் வனுமே
செம்மையி லாடின செய்திய தேனோ
அம்முனி யக்கண மழுதது மேனோ
நம்முட னேபகர் நரபதி யென்றே.

17. அலகை யுரைத்திட வரசனு மப்போ
நலது வழக்கென நகையுரை செய்தே
தலையை யசைத்திவை தன்னையு சாவி
உலகிலுள் ளோரென வுள்ள துரைப்பான்.

18. முனியுயி ரானது முதுவுடல் விட்டே
புனையிள வுடலில் புகுதலி லாடுங்
கனிவுறு முதுவுடல் கைக்கொள லாலே
அனையதோர் பாலகன் ஆருயிர் அழுமே.

19. காவலன் அங்கது கட்டுரை செய்தே
தீவினை மானிடர் சென்ம மெடுத்தே
போவன மீள்வன புன்பிற விகள்போல்
மேவிய வலகையு மீண்டது தருமேல்.

ஆக விருத்தம் 802

## அருஞ்சொற்பொருள்

1. ஆல மா எமன் - விஷம் போன்ற பெரிய எமன். அடியிணை- இரண்டு பாதங்கள். ஆளுவாய் - என்னை ஆட்கொள்வாய். விசாகன் - முருகனுக்கு ஒரு பெயர். சூரர் - சூரன் முதலியோர், காலன் - எமன்.

2. துன்னு - நெருங்கிய. மன் - மன்னன்.

3. அலங்கிருதம் - அழகு, அலங்காரம். இலங்கிய - விளங்கிய. துலங்கும் - விளக்கமடையும்.

4. சதிர் - அழகு.

5. சால - மிகவும், கோலம் - அழகு. குழந்தை, நற்குணத்தினோர் புகழ் போலவும் தாய் தந்தையர் புகழ்போலவும், வளர்ந்தது.

6. வலம் - வெற்றி. தந்தை தன் மைந்தனுக்கு ஐந்தாம் வயது முதல் வேதம் முதலிய பல கலைகளைக் கற்பித்தான்.

7. கிரந்தம் - நூல். ஆரிய நாகரம் - ஆரிய மொழியிலுள்ள நாகர எழுத்தில் அமைந்த நூல்கள். சிறுவன் தமிழ், தெலுங்கு, கன்னடம் முதலிய மொழிகளில் உள்ள பல கலை நூல்களையும் கற்றான்.

8. போதம் - அறிவு. பிரமலிபி - பிரமன் எழுதிய எழுத்து. தத்து - ஆபத்து. பிரமன் எழுத்தினாலும் தத்தினாலும் சிறுவன் இளம் பருவத்திலேயே இறந்துவிட்டான்.

9. அந்தணன்-சோம சுவாமி. மனையாள்-கோமதி, வாசனை-கல்வி. உய்ந்தருள் - வாழ்கின்ற. இறந்த மைந்தனுடைய பெற்றோர் அம் மைந்தனுடன் படித்த சிறுவர்களைக் கண்டு தம் மகன் இறந்துவிட்டானே என்று எண்ணித் தீயிலிட்ட மெழுகைப் போல உள்ளம் கரைந்தனர்.

10. முகிலென அழுது - மேகம் நீரைப் பொழிவதுபோல மிகுந்த கண்ணீரை விட்டு அழுது. முழுக்கொடு - மைந்தன் உடம்பை நீராட்டி. திகில் - அச்சம்.

11. விழியெதிர் - தம் கண்ணெதிரே. செழிய - செம்மையான.

12. விஞ்சிய-பல கலைகளிலும் மேன்மையுற்ற. சவம் - உயிரற்ற உடல். நாடி-ஆராய்ந்து. மாதவன்-முனிவன். கழிவானான்-வருந்தினான்.

13. பிரமன் எழுதியபடி சிறுவனுக்கு நூறு வயது உண்டு. ஆனால் ஒரு தத்துவினால் இந்த இறப்பு நேர்ந்தது என்பதை முனிவன் உணர்ந்து மைந்தனை எழுப்பத் துணிந்தான்.

14. முனிவன் தன் தவமகிமையால் மைந்தன் உடலில் புகுந்தான்; மைந்தனது உயிரைத் தன் உடலில் புக விட்டான்.

15. சோர்வுறு - மனத்தளர்ச்சியுற்ற. சீர் உயிர் - சிறந்த உயிர். சுதன் - மகன். உயிர் பெற்று எழுந்த மைந்தனும் தந்தையும் தமக்கு நிகர் யாருமில்லை என்று கூத்தாடினர். அதே சமயத்தில் முனிவன் அழுதான்.

16. விம்மிய - அழுத. பகர்-சொல்வாய். 'தந்தையும் மகனும் மகிழ்ச்சியால் கூத்தாடியது ஏன் ? அதே சமயத்தில் முனிவன் அழுதது ஏன் ?' என்று வேதாளம் வேந்தனை வினவியது.

17. நலது - நல்லது. உசாவி - ஆராய்ந்து. உலகில் உள்ளோர் என - உலகிலுள்ள அறிஞரைப்போல. உள்ளது - உண்மையை.

18. முது உடல் - கிழ உடல் புனை - அழகிய. கனிவுறு - மூப்பினால் கனிந்த. முனிவனது உயிர் சிறுவன் உடலில் புகுந்த மகிழ்ச்சியால் கூத்தாடியது. சிறுவன் உயிர் பழுதுபட்ட உடலில் புகுந்துவிட்டதால் நீண்ட நாள் அதனில் இருக்க முடியாதென்று எண்ணி அழுதது.

19. புன் பிறவி - அற்பமான பிறவி. தீவினை செய்த மக்கள் பிறப்பதும் இறப்பதும் போல வேதாளம் அரசனை விட்டு மரத்தில் ஏறிக் கொண்டது.

கூடுவிட்டுக் கூடுபாய்ந்த கதை முற்றும்.

## 24. முறை தெரியாக் கதை

முருக வணக்கம்

1. நத்தியே நாவிலுனை நித்தமோ தேனுனது
நட்பினல் நீறு மணியேன்
செத்தையே யானதொரு குற்றமோ ராதுகதி
செப்பிநீ யாள வருவாய்
உற்றவே தாகமம் நித்தநா வுரைசெயும்
ஒப்பிலா நீள்க லையுமே
கற்றவே லாகவுரி பெற்றபா லவெனது
கர்த்தனே யாறு முகனே.

வேதாளம் விளம்பிய இருபத்துநான்காம் கதை

2. தத்தியே மீளவு மரத்தின்மீ தேறிமன்
னதட்டியே வீர முடனே
கைத்துவாள் கொண்டுதான் பிடித்துநீள் தோளின்மிசை
கட்டியே யோடி வரவே
வித்தையே பாரிலொரு சித்திரமே யானவனை
விரிப்பனுன் கேளி தெனவே
பத்தியா யேயலகை பற்றியே யோதுமிரு
பத்துநா லாங்க தையையே.

வேறு

3. மருமலர்ச் சோலை தானும்
வயலும்வா விகளுஞ் சூழ்ந்து
திருமகள் இருந்து வாழுந்
தட்சிண தேசந் தன்னில்
புரமதில் விஞ்சு காம
புரமெனும் பதியி லேதான்
தருமனென் றொருமன் னன்றான்
தாரணி தன்னை யாள்வான்.

4. சுந்தரத் தோளான் அந்தத்
தொன்னகர் மன்னன் தேவி
சந்திர வதனை யென்பாள்
தவத்தினிற் பெற்ற தையல்

இந்திரா ணியையே ரான
    இலாவண பதிதான் என்னும்
செந்திரு வனைய மாதைச்
    சிறப்புடன் வளர்க்கு நாளில்.

5. யானைதேர் புரவி காலாள்
    அமைச்சரும் மருங்கு சூழ
ஏனையாஞ் செல்வ மேவி
    இருந்தர சாளு மன்னன்
தானதன் மங்கை விட்டுத்
    தாழ்வழி நடக்கை யாலே
பானுவைக் கண்டு நீங்கும்
    பனியெனத் திருவும் போனாள்.

6. உடலினை விட்டு நீங்கும்
    உயிரது போலும் பூவின்
மடலினை விட்டு நீங்கு
    மணமது போலு மோதக்
கடலினை விட்டு நீங்குங்
    கப்பலே போலு மாங்கே
அடல்புனை சேனை யெல்லாம்
    அரசனை விட்டுப் போன.

7. ஒதுங்கியே இளமை கண்டே
    உடனுறை பிணிகள் எல்லாம்
விதங்கொண்டு மூப்புக் காலம்
    மேலிட்டு நலிவ தேபோல்
பதுங்கியே யொன்னார் வந்து
    பதியையுங் கொண்டார் பண்டு
மதங்கொடு வாழ்ந்த மன்னன்
    வறுமைக்கே உறையு ளானான்.

8. அன்புடன் மன்னர் எல்லாம்
    அடிதொழ தகேகஞ் சேனை
தன்பொருட் டாக வாழ்ந்து
    தாரணி தன்னை ஆண்டோன்

பின்புனுஞ் சோற்றி னுக்கும்
புடைவைக்குங் கதியி லாமல்
துன்பினில் அழிந்து நொந்து
துணைவியை நோக்கிச் சொல்வான்.

9. விறகினை ஒடித்துக் கூறி
விலையது வாங்கும் போது
இறைவனைப் பாரீர் என்றே
இந்நகர் நகைக்கு மென்று
அறியொணுக் கொடிய தான
அன்னிய தேசத் தெய்தி
வறுமையைத் தள்ளி நாமும்
வளர்க்கலாம் வயிற்றை யென்ருன்.

10. நன்னுதல் அதுதான் கேட்டு
நன்றிது கரும மென்ருள்
மன்னனுந் தேவி தானும்
மகளுமிம் மூவ ருந்தான்
அந்நிய தேசம் நோக்கி
அடவியில் எய்துங் காலை
துன்னியே சோரர் வந்து
சுற்றிலும் வளைத்துக் கொண்டார்.

11. ஆடைகள் பறித்த போதில்
அரசனுங் கொடேமென் றேதான்
கூடமல் லாடும் போதிற்
கொன்றனர் அவனை ஆங்கே
தோடவிழ் குழலார் தங்கள்
துகிலெலா மூரிந்து கொண்டே
யோடினர் கள்வர் அஞ்சி
யொருபெரு வரையின் மீதே.

12. கலையினைப் போக்கி வந்த
கணவனை இழந்து நெஞ்சங்
குலைகுலைந் தஞ்சி வேருேர்
குறைதுகி லரையிற் சுற்றித்

தலையினின் விதியி னாலே
தாயுடன் மகளும் கூடி
வலையினிற் சிக்கித் தப்பு
மானென வனத்திற் சென்றார்.

13. காவலன் தேவி யான
காட்சியும் வாழ்ந்த வாழ்வும்
மேவலர் செகுத்த வாறும்
மிடியினால் நொந்த வாறும்
மேவுறும் பழியும் மன்னன்
இறந்தது மெண்ணி யெண்ணிப்
பூவையர் மறுகிப் போயோர்
பொழிலிடை யிருக்குங் காலை.

14. திண்டிறற் புரவி யானை
தேருடன் காலாள் சூழச்
சண்டசிங் கன்றான் என்னுந்
தராபதி மகனுந் தானும்
மண்டியே கானில் வேட்டை
வந்தவர் உலாவும் போது
கண்டெனு மொழியார் போன
காலடி கண்டு நின்றார்.

15. சிற்றடி யொன்றும் நீண்டு
சிறந்தடி யொன்றுங் கண்டே
பொற்றொடி மார்க ளென்று
புதல்வன்தா தைக்குச் சொல்வான்
குற்றடி யான மானைக்
கொடுத்தரு ளெனக்கு நீளம்
உற்றடி யுனக்கென் றோத
வொப்பினா னடிப்பின் வந்தார்.

16. வந்தவர் சோலை தன்னில்
மங்கையர் தம்மைக் கண்டார்
பிந்துசிற் றடியுந் தாயும்
பெருத்தடி மகளு மாச்சு

முந்தியங் குரைக்கை யாலே
மொழியது தவறு மற்றுன்
தந்தையும் பெண்ணைச் சேர்ந்தான்
தனயன்மற் றவளைச் சேர்ந்தான்.

17. சேர்ந்தவர் நகரந் தன்னில்
சேயிழை யாரைக் கொண்டு
போந்தனர் மருவி யேதான்
பூவையர் வாழு நாளில்
வாழ்ந்திரு வோர்கள் தாமும்
மைந்தரைப் பெற்றூர் பின்பு
ஆய்ந்திடு முறைதான் ஏது
அழைத்திடு முறைதான் ஏதோ.

18. உரையென அலகை கேட்க
வொன்றெழி யாமற் சொன்ன
நரபதி யுசாவிப் பார்த்து
நாரியர் தோற்ற முன்னுய்
மருவிய முறையைச் சற்றும்
மனத்தினில் ஒதுக்கொண் ணுமல்
தெரிவரி தென்று கூறித்
திகைக்கவே தாளஞ் செப்பும்.

19. மனத்துடை ஆண்மை யாலும்
வழக்கறி விசாரத் தாலும்
கனத்ததோர் புத்தி யாலுங்
காவலர் உனக்கு நேரார்
முனிக்கணந் தேவர் தாமும்
மொழியிலிம் முறையைக் காணுர்
உனக்கிது தெரியு மோவென்
றுரைத்ததவ் வலகை தானே.

ஆக விருத்தம் 821.

## அருஞ்சொற் பொருள்

1 நத்தி - விரும்பி. செத்தை - அற்பம். வேதாகமம் - வேதம் + ஆகமம். ஆகமம் - சமய சாத்திரம். கர்த்தனே - கடவுளே. விற்பன - திறமையுடையவனே.

2. கைத்து - மனங்கசந்து, மனம் வருந்தி. ஒவ்வொருமுறையும் வேதாளம் இங்ஙனம் ஓடி மரத்தில் ஏறுகிறதே என்று மனம் வருந்தி. விரிப்பன் - விரித்துச் சொல்லுவேன். பத்தி - அன்பு, பற்றுள்ளம்.

3. மரு - வாசனை. தட்சிணம் - தெற்கு. காமபுரம் - ஓர் ஊர். தருமன் - காமபுரத்தை ஆண்ட அரசன் பெயர்.

4. சுந்தரம் - அழகு. தொன்னகர் - பழைமையான நகரம். சந்திரவதனை - அரசியின் பெயர். தையல் - பெண், மகள்; அவள் பெயர் இலாவணபதி என்பது. திருவனைய - இலக்குமி போன்ற.

5. காலாள் - காலாட்படை வீரன். மருங்கு - பக்கம். ஏனையாம் செல்வம் - பிற செல்வ வகைகள். பானு - சூரியன். நாடாள வேண்டிய மன்னன் நெறி தவறி நடந்ததால், சூரியனைக் கண்டு நீங்கும் பனிபோல, அரச போகம் அவனை விட்டுநீங்கியது.

6. அடல் - வலிமை. அரசனை விட்டுச் சேனைகள் நீங்கினமைக்கு இச்செய்யுளில் மூன்று உவமைகள் தரப்பட்டுள்ளன. அவை படித்து இன்புறத்தக்கன. உடலினை விட்டு நீங்கும் உயிர் போலவும், மடலை விட்டு நீங்கும் மணத்தைப் போலவும், கடலினை விட்டு நீங்கும் கப்பலைப் போலவும் அரசனை விட்டுச் சேனைகள் நீங்கின. ஓதம் - ஈரம்.

7. நலிவது - துன்புறுத்துவது. மூப்புக் காலம் - முதுமைப் பருவம். பதி - ஊர். பண்டு - முன்பு. மதம் - மமதை. உடம்பிலுள்ள நோய்கள் இளமைக் காலத்தில் அடங்கியிருக்கும்; முதுமைக் காலத்தில் வீறு கொண்டு எழுந்து உடலை வாட்டும். அதுபோல, அரசன் ஆட்சி யில் இருந்த பொழுது அவனுக்கு ஆகாதவர் பதுங்கியிருந்தனர்; அவனை விட்டுச் சேனை விலகியதும் நகரத்தைக் கைப்பற்றிக்கொண்டனர். அதனால் வறுமை மன்னனைப் பற்றிக்கொண்டது.

8. துணைவி - மனைவி. மன்னர் பலர் அடி தொழ, தன் பொருட் டுப் பெருஞ்சேனை இருக்க, நாட்டை ஆண்ட மன்னவன், நாடு இழந்த பின்பு உண்ணும் சோற்றுக்கும் உடுக்கும் ஆடைக்கும் வழி இல்லாமல் துன்புற்றான். புடைவை - ஆடை. கதி - வழி.

9. இந்நகர் - இந் நகரமக்கள். நகைக்கும் - நகைப்பர். அறி யொணா - அறிய முடியாத. 'நமது நாட்டில் நாம் விறகினை ஒடித்து விற்போமாயின் நாட்டு மக்கள் நம்மைப் பரிகசிப்பார்கள். ஆதலால் இவர்கள் அறியக்கூடாத வேறு நாட்டுக்குச் சென்று வேலை செய்து நாம் நமது வயிற்றை வளர்க்கலாம்,' என்று மன்னன் தன் மனைவியிடம் கூறி னான். கணவனது நன்மை அவன் மனைவி மக்களைச் சாரும் அவ்வாறே அவனது தீச்செயலின் பயனும் அவனை மட்டுமன்றி அவன் குடும்பத் தையும் பாதிக்கும் என்பது இங்கு அறியத்தகும். மன்னனது தவறான

ஒழுக்கம் அவன் வாழ்வை பாழ்படுத்தியதுடன் அவன் குடும்பத்தார் வாழ்வையும் பாழ்படுத்திவிட்டதைக் காண்க.

10. நன்னுதல் - நல்ல நெற்றியை உடையவள், மன்னன் மனைவி; சந்திரவதனை. அடவி - காடு. துன்னி - நெருங்கி, சோரர் - கள்வர். 'துன்பம் தொடர்ந்து வரும்' என்பது போல அரசன் வறிய நிலையில் வேறு நாடு நோக்கிச் செல்லும் வழியில் ஒரு காட்டில் கள்வர் வளைத்துக் கொண்டனர்.

11. கொடேம் - கொடுக்க மாட்டோம். மல்லாடுதல் - தடுத்து எதிர்த்தல். தோடு அவிழ் குழலார் - இதழ் விரிந்த மலர்களை அணிந்த கூந்தலையுடைய பெண்கள்; அரசியும் அவள் மகளும். துகில் - ஆடை. வரை - மலை. எதிர்த்த அரசனைக் கொன்றுவிட்டனர். அவர்கள் உடுத்தியிருந்த ஆடைகளைத் தவிர வேறு இல்லாமையால் கள்வர் அவற்றை உரிந்து கொண்டனர்; குலைகுலைந்து - இரட்டைக்கிளவி. வலையில் அகப்பட்டுப் பின்பு தப்பும் மான்களைப் போல அரசியும் மகளும் கள்வரிடமிருந்து தப்பிப் பிழைத்துக் குறைத்துகிலுடன் ஒரு காட்டு வழியே சென்றனர்.

13. செகுத்த-பகைவரைப் போரில் அழித்த, அங்ஙனம் சென்ற போது அரசி தான் மன்னன் மனைவியாயிருந்த நிலையையும், வாழ்ந்த வாழ்க்கையையும், பகைவர் தம்மீது பழிதீர்த்துக்கொண்டதையும், மன்னன் இறந்ததையும், எதிர்காலத் துன்பத்தையும் எண்ணித் தங்கள் விதியை நொந்தபடி சென்றாள். பூவையர் - அரசியும் மகளும். பொழில் - சோலை. காலை - பொழுது.

14. திண் - திண்மை, வலிமை. திறல் - வலிமை. திண்திறல்- மிக்க வலிமை. மண்டி - நெருங்கி. கண்டு - கற்கண்டு. மொழியார் - சொற்களைப் பேசும் அரசியும் மகளும், தாயும் மகளும் சென்ற வழியில் சண்ட சிங்கன் என்ற அரசனும் அவன் மகனும் தம் பரிவாரங்களுடன் காட்டில் வேட்டையாட வந்தனர்; தாயின் காலடிச் சுவட்டையும் மகளின் சுவட்டையும் கண்டனர்,

15. பொற்றொடி - பொன்னால் செய்யப்பட்ட வளையல். பொற்றொடி மார் - பொன் வளையல் அணிந்த மகளிர். சிற்றடி - சிறுமை+ அடி, சிறிய பாதம். குற்றடி-குறுமை+அடி, குறுகிய பாதம். காலடிகளைக் கண்ட மகன் தந்தையைப் பார்த்து 'சிறிய காலடி உடையவளை நான் மணப்பேன், பெரிய காலடி உடையவளை நீ மணந்து கொள்.' என்று தந்தையிடம் கூறினான். தந்தையும் அதற்கு இணங்கினான். பின் இருவரும் அந்த அடிச்சுவடுகளைப் பின் பற்றி அவற்றுக்கு உரியாரைக் காணச் சென்றனர்.

**16.** மொழியது - முன்பே தந்தையும் மகனும் உறுதி செய்து கொண்ட சொற்படி. சிறிய பாதச்சுவடு தாயைச் சேர்ந்தது; பெரிய பாதச் சுவடு மகளைச் சேர்ந்தது. சிறிய பாதச் சுவட்டுக் குரியவளை (தாயைத்) தான் முன்பே சொன்னபடி மகன் மனைவியாக ஏற்றுக் கொண் டான்; பெரிய பாதச் சுவட்டுக்குரியவளை (மகளை)த் தான் முன்பே சொன் னபடி தந்தை மனைவியாக ஏற்றுக்கொண்டான். தனயன் - மகன்.

**17,** சேயிழையார் - செம்மையான நகைகளை அணிந்தவர்; தாயும் மகளும். அப் பெண்கள் இருவரும் பிள்ளைகளைப் பெற்றனர். இங்ஙனம் பிறந்த பிள்ளைகட்குள் என்ன முறை அமையும்? அவர்கள் என்ன முறை யில் ஒருவரை யொருவர் அழைத்துக்கொள்வர்? நீ பதில் சொல்," என்று வேதாளம் விக்கிரமாதித்தனைக் கேட்டது.

**18.** நாரியர் தோற்று முன்னுய் - தாயும் மகளும் தங்கள் கண்முன் தெரிவதற்கு முன்பு. மருவிய முறையை - மணம் செய்ய ஒப்பிய முறையை. ஒதுக்கொணுமல் - மனத்தில் வைத்து நினைக்க முடியாமல்.

**19.** வழக்கறி விசாரம் வழக்கினை அறிந்து ஆராயும் திறமை. கனத்ததோர் புத்தி - மிகுந்த அறிவு. நேரார்-நேர்+ஆர்-எவர் ஒப்பாவர்? ஒருவரும் ஒப்பாகார் என்றபடி. கணம் - கூட்டம். முனிவராலும் தேவ ராலும் இம் முறைவைப்பைக் கூற முடியாது என்று வேதாளம் வேந்த னிடம் கூறியது.

முறை தெரியாக் கதை முற்றும்.

---

## 25. விக்கிரமகேசரி கதை

முருக வணக்கம்

1. வெயில்மஞ்ச ளெனுமிவ்வுடல் மெய்யேயெனல் பொய்யே
தொயுமென் னுயிர் கஜௗவாரெவர் சொலுநீயல திலேயே
இயலேகடல் கிரியுந்துக ளெனவேசுரர் தொழவே
மயில்மேல்வரு குகனேசிவன் மகனேயறு முகனே.

வேதாளமும் விக்கிரமகேசரியும்

2. சேர்ந்தோர்கள்தன் வாழ்வேமிகு தீராஅதி சூரா
வேந்தேயெனப் புகழ்ந்தேவரு வேதாள மகிழ்ந்தே
போந்தேயுன் னுடன்மேவுவன் புவிமேலெனே விடுவாய்
ஆய்ந்தேனினி வருங்காரிய மதுகேளெனச் சொல்லும்.

3. அருமாதவ முடன்வேள்விசெய் யருகன்செயல் கேளாய்
பரிவாகிய வித்தியாதரர் பதமேபெற விதமாய்
நிருபாளனைக் கொடுவாவென நினையேவின்ன் இனிநாம்
வருவேளையில் எதிர்கொண்டுனே மகிழ்வான்மொழி
[புகல்வான்

4. நின்னலினி யென்வேள்வியு நிறைவேறின தென்றே
முன்னுதர வுடன்பேசுவன் மூழ்கென்றுனே உரைப்பான்
மன்னுபுனல் நீமூழ்கியே வரில்வேள்வியை வணங்காய்
என்னுவணங் கியபோதினில் இடுவன்பலி யுனையே.

5. பலியீந்தபின் அவன்வேள்வியைப் பரிவாகவே
[முடிப்பான்
மலரோன்சிவன் மால்வானவர் வருவார்கதி தருவார்
நிலேயாகவென் னுயர்தோள்மிசை நின்றேறுவ னன்றே
யுலகானவை யிரேழினு முறவேவரம் பெறுவான்.

6. தீதாகிய வருகன்னுனைச் செய்சூழ்ச்சியிற் சிக்கி
நீதானுயிர் போகாமலே நிலேயாயுல கினையாள்
தாதாவெனு மன்னுவவன் றன்னுலுனக் கென்னும்
வேதாளமும் போகும்வகை சொல்வேனென விளம்பும்.

7. அறியேனென வுரைமூழ்கெனில் அவன்மூழ்கிடில் [மூழ்கு
அருவேள்வியை வணங்கென்றிடில் வணங்காய்முடி [யுடையோய்
உறநீமுதல் வணங்கென்றுரை யுடனேயவன் வணங்கில்
விறல்வாள்கொடு பலியிட்டருள் மேலிப்பத முனக்கே.

8. மாட்டேனெனும் வேதாளமும் வருங்காரியஞ் சொலவே
கேட்டான்அதி சயித்தான்பினை கெட்டோமென [விட்டான்
கூட்டாயுற வதுபேசியே கோவும்மல கையுந்தான்
மூட்டாவரு கனல்வேள்வியின் முன்னாகின ரன்னார்

9. முன்னேமன் னன்வரவே எதிர்முகமா யலகையுந்தான்
பின்னேவர முனிகண்டதி பிரியம்மது வானன்
மன்னேயென துயிரேபுவி யருமாதவர் துணையே
அன்னேயெனப் புகழ்ந்தேகுறை யழல்வேள்வியை [முயன்றான்.

10. புவிமீதினில் மயானத்தில் பொடிக்கோலமும் வகுத்தான்
அவியாநரத் தயிலத்தசை யதில்தீப மெடுத்தான்
சுவையாகிய நிணமேகொடு தூபம்நிறை வித்தான்
சவமீதுயர் பெருவேள்வியிற் சார்ந்தாகுதி யீந்தான்

வேறு

11. அப்படி யருமை கோலி
யருகனுங் கோர மாகி
இப்படி மூன்று சாமம்
இயற்றினன் வேள்வி தன்னை
வைப்பெனும் வேதா ளந்தான்
வந்தெதிர் முன்னே நிற்கத்
துப்புடன் நாலாஞ் சாமந்
தோன்றிடக் கண்டு சொல்வான்.

12. இற்றையில் நின்தன் னாலீ
டேறிய திந்த வேள்வி
சொற்றது முடித்த மன்னா
சுகுணகம் பீர சூரா

பற்றல ரேறே யாண்மைப்
பார்வையே யென்று போற்றி
மற்றுநீ புனலில் மூழ்கி
வணங்குவா யென்று சொன்னான்.

13. அலகைமுன் சொன்ன வாறும்
அருகன்பின் னுரைத்த வாறும்
தலையது வந்த தென்று
தலையினைக் கம்பித் தேதான்
பலியினி யிடுகை திண்ணம்
பழுதிலை யென்றே யெண்ணி
நிலைபுனல் தன்னில் மூழ்க
நிருபனு மறியேன் என்றான்.

14. எழுந்துமுன் அருகன் மூழ்கி
இப்படி மூழ்கு என்றான்
செழுந்திறல் அரச னும்பின்
திறம்பட மூழ்கி வந்தான்
விழுந்துநீ வணங்கு என்றான்
வேந்தனு மறியே னென்றான்
தொழுந்திறல் காட்ட வேண்டித்
துணிவொடு வணங்கி னானே.

15. உருகிவே தாளஞ் சொன்ன
உரையினிற் சுழிவு போல
அருகனும் வணங்கிக் காட்ட
அறிந்தனன் அரசன் அப்போ
பரவுவேள் விக்கு நம்மைப்
பலியிட நினைந்தான் என்று
விரைவுடன் வணங்கி னோனை
வெட்டவாள் உருவிக் கொண்டான்.

16. மன்னனுந் தன்னைக் கொல்ல
வந்ததோர் பசுவைக் கொல்வ
தென்னவே யுரவோர் சொன்ன
வேத்தினை மனத்தில் எண்ணிப்

பின்னையங் கவனை வெட்டிப்
பிளந்துமார் பினுக்குள் வீரல்
தன்னுடன் சோரி வாரித்
தசைப்பலி திசையில் ஈந்தான்.

17. இடமுடன் வேதா ளந்தான்
செய்வன வெல்லாஞ் செப்ப
முடுகிய வேள்வி தன்னை
முடித்துமன் னவனும் நின்றான்
அடவியில் நிறைந்து வானோர்
பூமழை பொழிந்தார் ஈசன்
உடனயன் மாலுந் தோன்றி
யுகந்துவந் தாங்கே நின்றார்.

18. ஈசனங் கெருதின் மேலும்
இயலரி கருடன் மேலும்
வாசவன் களிற்றின் மேலும்
மலரயன் அன்ன மேலும்
ஆசையில் உள்ள தேவர்
அனைவரும் வரக்கண் டேதான்
காசினி யரசன் பார்த்துக்
கனங்களி கூர்ந்து நின்றான்.

19. பூரித்தே யாக மெங்கும்
புளகித்து மயிர்கம் பித்து
நேருற்ற பிரிய மாகி
நிருபனும் விழிநீர் சோர
ஆரொப்பா ரென்னை யென்பன்
அலகையைத் துதிப்பன் வேள்வி
சீருற்ற பெருக்கம் பார்ப்பன்
தேவரைத் தொழுது நிற்பான்.

20. காலனை உதைத்த தாளும்
கையினில் மழுவு மானும்
சூலமுங் கண்கள் மூன்றும்
தோகையர் பாகந் தானும்

நீலகண் டமுமா யீசன்
நிற்கவே விடைமேற் கண்டு
மாலயன் தேடிக் காணு
வடிவினை வணங்கிச் சொல்வான்.

21. நக்கனே போற்றி தெய்வ
நாயகா போற்றி போற்றி
முக்கணு போற்றி போற்றி
முப்புரம் எரித்தாய் போற்றி
தக்கனை வென்ருய் போற்றி
சங்கரா போற்றி யென்றே
விக்கிரம கேச னுந்தான்
விரும்பியே போற்றி நின்ருன்.

22. மாலயன் முதலாய் நின்ற
மற்றுள சுரரை யெல்லாம்
சாலவே வணங்கி வேந்தன்
தனித்தனிப் போற்றி நின்ருன்
சீலமும் அவன்தன் அன்பும்
சேவகத் தனமும் நோக்கி
ஆலமுண் டருளு மீசன்
அரன்மகிழ்ந் தருளிச் செய்வான்.

23. பொன்னெத்த குணத்தி னலும்
புகழ்புனை சதிரி னலும்
பண்ணுற்ற வாய்மை யாலும்
பழுதில்லா மொழியி னலும்
நின்னெப்பார் உலகி லுண்டோ
நிருபனே என்று நித்தன்
உன்னியே உனக்கு வேண்டும்
வரத்தினை உரைத்தி யென்ருன்.

24. உயர்தவ முயன்ற ஞானத்
துயர்ந்தமா முனிவ ரேனும்
நொய்தினி லணுகொ ணத
நும்பதம் பணிந்தேன் என்ருன்

செய்தபுண் ணியத்தி ஞலே
 தேடியே அயனும் மாலும்
எய்தொணு வடிவுங் கண்டேன்
 இதனினும் வரமே தென்ருன்.

25. வேதன்மால் முதலா யுள்ள
 விண்ணவர் கூட்ட மெல்லாம்
போதவே மன்னன் தன்னைப்
 புகழ்ந்துநல் வரங்க ளீந்தான்
நீதிவே தாளந் தன்னை
 நித்தனும் நோக்கி யீரேழ்
ஆதியா முலகைக் காட்டி
 அரசனைக் கொணர்வாய் என்ருன்.

26. தூய்யமா முனிவர் போற்றச்
 சுரரெலாந் திரண்டு சூழச்
செய்யமா மறைகள் ஆர்ப்பச்
 சிவகணத் தவர்கள் வாழ்த்த
வெய்யவர் பொன்ற வெள்ளை
 விடையின்வா கனத்து மீதே
தையலோர் பாகன் போயே
 தான்சிவ லோகம் புக்கான்.

27. கண்டகண் ணிமைகொட் டாமற்
 கரங்குவித் ததுவாங் காமல்
அண்டரைத் துதித்து வாழ்த்தி
 அன்பினல் பணிந்து போற்றிப்
பண்டுசெய் தவத்தி ஞலே
 பரமனைப் பணிந்தோ மென்று
திண்டிறல் மன்னன் ஆங்கே
 செயசெயென் றருளி நின்ருன்.

28. பெண்ணொரு பாகன் நீயே
 பிரியமாந் தந்தை தாய்நீ
பண்ணிய பாக்கி யம்நீ
 பரிவுள தெய்வம் நீயே

கண்ணெதிர் உன்னால் இந்தக்
காட்சிகள் கண்டேன் என்று
புண்ணிய வேதா ளத்தைப்
புகழ்ந்தவன் தழுவிக் கொண்டான்.

29. மருப்புடைத் தருமேல் கங்குல்
வழியினில் வரப்போ கத்தான்
திருப்பியான் உன்னை நோவு
செய்தவே தனைக ளெல்லாம்
பொருப்புநேர் புயனே நீதான்
பொறுத்தருள் என்றே போற்றி
விருப்புடன் அலகை தானும்
வேந்தனைத் தழுவிற் றங்கே.

30. வாசவன் தன்னின் மேலாம்
மன்னவன் தன்னை நோக்கிப்
பேசியே வேதா ளந்தான்
பெருக்கவே கருணை கூர்ந்து
காசினி யீரேழ் தன்னைக்
காட்டியே மீள்வன் என்று
நேசமாய்த் தன்தோள் மீது
நிருபனை யெடுத்த தாங்கே.

---

பின்வரும் செய்யுள் முதல் ஏட்டுப்பிரதியில் செ. 29ஐ அடுத்து உள்ளது.

தனக்குநேர் இல்லா மன்னன்
தனைப்பின்னும் அலகை கூறும்
மனத்திலே பொய்யா வண்மை
வாய்மையால் ஆண்மை தன்னால்
கனக்கவுன் னால்நீ செய்த
காட்சியால் வரங்கள் பெற்றாய்
உனக்குநான் உதவி செய்த
தொன்றுண்டோ நன்றி தானே.

கீழ்வரும் செய்யுள் இரண்டாம் ஏட்டுப்பிரதியில் செ. 30ஐ அடுத்து உள்ளது.

சிகமிக நல்லோர் செய்த செய்ந்நன்றி குன்ற மற்றான்
முகமலர்ந் தவர்கள் மற்று முறைமைகள் செய்வ தேபோல்
இகலுட னேமு வெட்டுத் திசைகளைச் சுமந்தான் தன்னைத்
தகையுடன் தாங்க வென்று தாளிணை எடுத்த தாங்கே.

31. மங்கைபங் காளன் பாலர்
மாங்கனி பெறுதற் காக
இங்கினி யுலக மேழு
மொருநொடி வருக என்றான்
ஐங்கர னரனைச் சுற்ற
அம்புவி வலமா மஞ்ஞை
இங்குவே தாள மொப்ப
இறைவனுங் கந்தன் போன்றான்.

32. அந்தந்த வுலகு தன்னில்
அரியன வெல்லாங் காட்டித்
தந்துநற் பெரியோர் ஈந்த
தனித்தனி வரங்கள் எல்லாம்
இந்தமன் னவனும் பெற்றங்
கீரேழு புவியும் பார்த்துப்
பைந்தமிழ் புகழும் பண்டைப்
பதிட்டமா நகரம் புக்கான்.

33. கடையினி லிருபத் தைந்தாங்
கதையுமுன் கதைய தாயே
புடையினில் விளங்கி நீயிப்
புவிதனைப் புரந்து பின்னை
அடைசிவ லோகத் தென்றே
அரசனை வைத்து வாழ்த்தித்
திடமுடன் வேதா ளந்தான்
சின்மொழி பகரும் ஆங்கே.

---

இப்பாடல் செ. 33க்குக் கீழே முதல் ஏட்டுப்பிரதியில் மட்டும் உள்ளது.

விடத்தை யுண்டவர் உரைத்த நன்கதை
விருத்த மிங்கிது திருத்தமாய்
நடத்து மென்றவர் படித்து வந்தவர்
நவப்பெ ரும்பொருள் விரித்தபோ
திடத்துடன் பவிசு தனைப்பொருந்துவர்
செகத்தில் விஞ்சிய சுவர்க்கமே
கிடைத்தி டும்பரம நட்புறுஞ்சிவ
கதிப்ப தந்தனில் இருப்பரே.

*34. செய்யபொன் மேனி யீசன்
திடுக்கெனத் தன்னைச் சாபம்
செய்யவே வந்த அத்தம்
செய்தியு நம்ப தாகத்
துய்யதோர் மொழியின் வாய்மை
விளங்கிடக் குரிசி லுக்கே
ஐயம தறவே செய்தி
யாவையு மவனுஞ் சொன்னன்.

*35. விக்கிரம கேசன் ருனும்
விளம்பிய மொழியைக் கேட்டே
ஒக்குமென் றகங்கு ளிர்ந்தே
உற்றகம் தலைய சைத்தே
இக்குமால் இந்த வாறு
யாவரே யறிய வல்லார்
மிக்கவே தாளந் தன்னை
வினவியே புகழ்வ தானன்.

36. மனத்தி லங்கவை மகிழ்ச்சி கொண்டுடன்
அகத்தி லுய்ந்திடு மனித்தர்க்கும்
அனைத்து மிங்கறி விப்ப வர்க்கும்நலம்
அளிக்கு மென்கதை விளக்கமாய்
எனப்ப கர்ந்தரச னைப்புகழ்ந் தினியெ
னக்கு முன்னுடைப் பொருட்டினல்
வினைத்தி றங்களும் விட்ட வென்றிறை
மெச்ச நின்றுவிடை பெற்றதே.

†37. வேதாளந் தானு மப்போ
வேந்தனை யனுப்பிக் கொண்டு
போதக மகிழ்ந்து தானும்
புந்தியில் கபடில் லாமல்

---

*34, 35 ஆம் செய்யுட்கள் முதல் ஏட்டுப் பிரதியில் இல்லை. கதையின் தொடர்ச்சி கருதி இவை இரண்டாம் ஏட்டிலிருந்து இங்குச் சேர்க்கப்பட்டுள்ளன.

†இது இரண்டாம் ஏட்டுப் பிரதியில் உள்ளது.

*தாதாகீ யாகி ஈரேழ்*
*தாரணி தன்னில் வாழ்ந்து*
*நாதாந்த சிவலோ கத்தை*
*நயந்திரு வென்னப் போனன்.*

**நூலாசிரியர் கூற்று**

38. *கருத்தி னன்பொடு கறுப்ப னிங்கருள்*
**கவிக்க ளஞ்சியன் கவிப்பிரான்**
*உருத்தி ரன்தரு மயிற்கு கன்றனை*
*உளத்தி லிங்கெணி விளக்கமாய்*
*அருத்தி விஞ்சுமல கைச்செ ழுங்கதை*
*யனைத்தை யுங்கலை யகத்தியன்*
*திருத்து செந்தமிழ் உரைத்த னன்ஒரு*
*தினத்தி லைம்பது விருத்தமே.*

---

கீழ்வரும் (1), (2), (3) ஆகிய மூன்று செய்யுட்களும் செ. 36க்குக் கீழே முதல் ஏட்டுப்பிரதியில் மட்டும் உள்ளன.

(1) தலத்தி லங்கலகை யிற்பொ ருந்துடல்
தரித்தி ருந்தமை யகற்றியே
நலத்தி லந்தண னெனச்சி றந்தபின்
நலத்தில் இங்குடல் படைத்தனன்
புலத்தி யன்தமி ழகத்தி யன்புகழ்
வசிட்ட னும்புடை யிருக்கவே
வலத்தி லண்டர்கள் துதித்தி டுஞ்சிவன்
முன்னர் மற்றிவன் எய்தினன்.

(2) அருட்பெ ருங்கட லெனச்சி வன்சபை
அகத்தி ருந்தரு ளிடத்திலே
பொருட்க ரந்தவரி னுற்ற வன்செயல்
பொறுத்தி டும்பிழை யென்கெனே
வருத்த மன்றியார் பொறப்ப தந்தனில்
மலர்சொ ரிந்துகை குவித்தபேர்
சிரித்த வன்பொய் அனைத்து மன்பொடு
திருத்தி நம்பருரை செப்புவார்.

(3) உழைத்தி லன்பிலவ புத்தி கொள்கையொத்
தடைந்த வனையங்கு மெச்சியே
பிழைத்த வன்செய லிறுத்து வந்தது
பிணைப்பெ ருந்துயர் அகற்றென
அழைத்து முந்தியப யஸ்த மங்கருளி
அத்த ரும்பரிவு பற்றினர்
இழைத்த பண்டைநல முற்றி ருந்தனன்
இரக்க மெண்சிவ னிடத்திலே.

39\. பலித்து கந்ததுன் முகிப்பெ ரும்பெயர்
படைத்து வந்தவரு டத்திலே
நலத்தி லங்குகன் னியிற்பு குந்திடு
தினத்த திங்களொரு பத்தின்மேல்
சொலத்த குந்தன் கரத்தி னங்கெதிகள்
துற்றி டும்தசமி பெற்றநாள்
கலைப்பெ ருங்கதை விருத்த மிங்கிது
கவிக்க ளஞ்சியன் முடித்ததே.

வேறு

40\. அண்ணலா ரன்று மைக்கே
அருளிய கதைநா லாறும்
மண்ணினிற் புலவர் கேட்க
*கணக்கமார் புளோன்உ ரைத்த
†எண்ணூற் றறுபத்து நான்கேயாக
இசைந்ததோர் விருத்தந் தன்னைப்
பண்ணுடன் படிக்க வல்லோர்
பரகதி அடைவர் தாமே.

ஆக விருத்தம் 865

## அருஞ்சொற்பொருள்

1\. வெயில் மஞ்சள் - மஞ்சள் வெயில். இது மிகச் சிறிது நேரமே தோன்றி மறைவது ; நிலைபற்றது. அதுபோல் இவ்வுடல் சில ஆண்டுகள் இருந்து மறைவது. எனவே இதனை மெய் என்று சொல்லுதல் பொய்யாகும். தொயும் - தடுமாறும். துகள் - பொடி. இயலே............ துகள் என - முருகன் கிரவுஞ்ச மலையைப் பிளக்கவும், கடலை வற்றச் செய்யவும் வேல் எறிந்தான்.

2\. சூரன் - வீரன். சூரா - வீரனே. தீரா - தீரனே. போந்து - வந்து. மேவுவேன் - பொருந்துவேன். இனி வருங் காரியம் - இனி நிகழப் போவது.

---

* இவ்வரி தெளிவில்லை.

† நூலாசிரியர் கூற்றுப்படி 864 செய்யுட்கள் இருத்தல் வேண்டும். ஆனால், இங்குக் கிடைத்த இரண்டு ஏடுகளிலும் இரண்டொரு செய்யுட்கள் கூடியும் குறைந்தும் இடம் பெற்றுள்ளன.

3. அருகன் - சாந்த சீல முனிவன். 'அம்முனிவன் வித்தியா தரர் பதத்தை அடைவதற்காக என்னைக் கைப்பற்ற விரும்புகிறான். அதனால்தான் என்னைப் பிடித்து வரும்படி உன்னை ஏவினான். நம்மை எதிர் கொண்டு உபசார வார்த்தைகள் பேசுவான்' என்று வேதாளம் இனி நடைபெறப் போவதைக் கூறத் தொடங்கியது. நிருபன் - அரசன். கொடுவா - கொண்டுவா. நினை - நின்னை, உன்னை. மகிழ்வான் - பாராட்டுவான். மொழி - உபசார வார்த்தை.

4. ஆதரவு - அன்பு. மூழ்கு - குளத்து நீரில் மூழ்கு. 'அம் முனிவன், உன்னால்தான் தன் வேள்வி நிறைவேறியது என்று ஆதர வுடன் பேசுவான் ; உன்னை ஒரு குளத்தில் மூழ்கு என்று சொல்லுவான்; முழுகி வந்த உன்னை வேள்வியை வணங்கச் சொல்வான் ; அங்ஙனம் நீ வணங்கும் போதில் உன்னைப் பலியிடுவான்' என்று வேதாளம் விக்கிர மாதித்தனிடம் கூறியது.

5. மலரோன் - பிரமன். மால் - திருமால். வானவர் - தேவர். கதி - பதம். உற - பொருந்த. 'முனிவன் உன்னைப் பலிகொடுத்துத் தன் வேள்வியை முடித்துக்கொள்வான். பிரமன், திருமால், சிவன் ஆகியவரும் தேவர்களும் தோன்றி அவனுக்கு உயர்பதவி தருவார்கள். அவன் அதன் பயனாக என்தோள்மீது அமர்ந்து பதினான்கு உலகங்களிலும் சுற்று வான்' என்று வேதாளம் கூறியது.

6. தீதாகிய - தீயவனாகிய. தாதா - வள்ளல். என்னும் - என்ன பயன். போகும் வகை - நிகழ்ச்சி போகும் முறைமை. விளம்பும் - சொல்லும். 'நீ முனிவன் சூழ்ச்சியிற் சிக்காமல், உன் உயிரை இழக் காமல் இவ்வுலகத்தை ஆள்வாயாக ! இனி நிகழ்வதைச் சொல்வேன் கேள்' என்று வேதாளம் கூறியது.

7. என - என்று. வணங்காய் - வணங்காதே. உற - (தலை நிலத்தில்) பொருந்த. உரை - சொல்வாய். விறல் - வலிமை. 'முனிவன் உன்னைக் குளத்தில் மூழ்கச் சொல்வான் ; மூழ்கும் முறை அறியேன் என்று சொல் ; அவன் மூழ்கிக் காட்டுவான்; பின்பு நீ மூழ்கு; மூழ்கி வந்தவுடன் உன்னைத் தன் வேள்வியை வணங்கச் சொல்வான் ; வணங்கத் தெரியாது என்று சொல். அவன் வணங்கிக் காட்டுவான். அப்பொழுது நினது வலிய வாளைக் கொண்டு அவன் தலையை வெட்டி வீழ்த்து. அவன் அடைய விரும்பும் உயர்பதம் உனக்குக் கிடைக்கும்' என்று வேதாளம் வேந்தனிடம் விளம்பியது.

8. மாட்டேன் - உன்னோடு வர மாட்டேன். பினை - பின்னை. கெட்டோம் - அழிந்தோம். (முனிவன் சொற்படி நடப்பின் அழிவோம்) விட்டான் - முனிவன்மீது கொண்ட மதிப்பை விக்கிரமாதித்தன் விட்டு விட்டான். முட்டாவரு கனல் வேள்வி - வேள்விக் குழியிலிருந்து

நெருப்பு வானத்தை முட்டி எரிகிறது. அன்னூர் - விக்கிரமாதித்தனும் அலகையும். வேதாளம் கூறிய விவரங்களைக் கேட்ட விக்கிரமாதித்தன் அதிசயித்தான் ; முனிவன் சொற்படி நடந்தால் அழிவோம் என்று எண்ணினன், பின்பு அவனும் வேதாளமும் நெருங்கிய உறவினர் போல் பேசிக்கொண்டு வேள்விக் குழிக்கு முன் வந்து சேர்ந்தனர்.

9. மன்னே - அரசனே. அன்னே - அன்னை போன்றவனே. அழல்-நெருப்பு. மன்னனையும் வேதாளத்தையும் கண்ட முனிவன் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்து மன்னனைப் பலவாறு புகழ்ந்தான்.

10. மயானம் - சுடுகாடு. முனிவன் சுடுகாட்டில் பிணச்சாம்பலைக் கொண்டு கோலமிட்டான் ; நெருப்பில் வேகாத பிணத்தின் சதையை அகலாக வைத்து இரத்தத்தை நெய்யாகக் கொண்டு விளக்கேற்றினன்; கொழுப்பைக் கொண்டு தூபம் நிறைவித்தான். பிணத்தின்மீது இருந்து கொண்டு தன் வேள்விக்குரிய ஆகுதியைக் கொடுத்தான்.

11. வைப்பு - சேமநிதி. முனிவன் மூன்று சாமம் வேள்வி செய்தான். நான்காம் சாமத்தில் வேதாளம் அவன்முன் வந்து நின்றது.

12. சுகுணம் - நற்குணம். ஏறு - ஆண் சிங்கம். வேதாளம் முன்பு சொன்னபடியே, முனிவன் மன்னனைப் புனலில் மூழ்கச் சொன்னன்.

13. தலைஅது - தலைக்கு ஆபத்து. கம்பித்து - அசைத்து, பழுதிலை - குற்றமில்லை. 'புனலில் மூழ்கு' என்று முனிவன் சொன்னவுடன் அரசன் வேதாளம் கூறியது உண்மை என்பதை உணர்ந்து, அதன் அறிவுரைப்படியே நடக்கலானன்.

14. செழுந்திறல் - செழுமையான வலிமை. திறன் - முறைமை.

15. உருகி - அன்பாய். வணங்கினேனை - வணங்கிய முனிவனை.

16. உரவோர் - அறிஞர். வேத்து - விதி. தன்னைக் கொல்ல வந்த பசுவைக் கொல்வது முறையாகும் என்று பெரியோர் கூறிய விதியினை வேந்தன் மனத்தில் எண்ணினன் ; அதனல் தன்னைக் கொல்லச் சூழ்ச்சி செய்த முனிவனை வெட்டி அவனது மார்பினைப் பிளந்தான்; அவனது ஈரலை இரத்தத்துடன் எடுத்துப் பலியிட்டான்.

17. மன்னன் இங்ஙனம் வேதாளம் சொன்னபடியெல்லாம் செய்து வேள்வியை முடித்தான். அவ்வளவில் தேவர் பூமழை பொழிந்தனர், மும்மூர்த்திகள் மகிழ்ச்சியோடு அவன்முன் தோன்றினர்.

18. கனம்களி - மிக்கமகிழ்ச்சி. கூர்ந்து - பொருந்தி, அடைந்து. வாசவன் - இந்திரன். களிறு - ஆண்யானை.

19. மும்மூர்த்திகள், இந்திரன், தேவர் முதலியோரைக் கண்ட காவலன் மகிழ்ச்சிக் கண்ணீர் விட்டுத் தொழுதான் ; அலகையைத் துதித்தான் ; தன்னைப் பாராட்டிக்கொண்டான்.

20. காலன் - யமன். மழு - ஓர் ஆயுதம். தோகையர் - உமா தேவியார். இவர் சிவபெருமானது இடப்பாகத்தில் அமர்ந்துள்ளார். கண்டம் - கழுத்து. நீலம் - விஷம். இச்செய்யுளில் சிவபெருமான் காட்சி கொடுத்தது வருணிக்கப்பட்டுள்ளது.

21. நக்கன் - ஆடை அற்றவன். போற்றி - வாழ்க. முப்புரம் - மூன்று நகரங்கள்; பொன், வெள்ளி, இரும்பு இவற்றாலாகிய நகரங்கள்.

22. சீலம் - ஒழுக்கம். சேவகத்தனம் - பணிபுரிதல்.

23. பொன்ஒத்த குணம் - பொன்போன்ற குணம். நாம் பொன்னை விருப்பப்படி வளைக்கலாம். அதுபோல் அவரவர்க்கேற்றபடி நடந்து கொள்ளும் தன்மை உடையவரைத் 'தங்கக்கம்பி' என்று கூறுதல் மரபு. பழுதில்லா மொழி - சொல்தவறுமை. நித்தன் - எப்பொழுதும் இருப்பவன், அழிவில்லாதவன்.

24. நொய்தினில் - எளிதில். இதனினும் வரம் ஏது - யான் கேட்கத்தக்க வரம் வேறு ஏது.

25. வேதன் - பிரமன். விண்ணவர் - தேவர். (விண் - ஆகாயம்). சிவபெருமான் வேதாளத்தை நோக்கி, 'இவ்வரசனுக்குப் பழமையான உலகங்களைக்காட்டி அழைத்துவா' என்று ஆணையிட்டான்.

26. துய்ய - தூய்மையான. பொன்ற - அழிய. வெய்யவர் - கொடியவர். தையல் - உமாதேவி.

27. இச்செய்யுள் விக்கிரமாதித்தனுடைய இறைப்பற்றை நன்கு உணர்த்துதல் காண்க.

28. பெண் - உமாதேவி. 'தேவர்களையும் மும்மூர்த்திகளையும் யான்கண்டு வழிபடும்படி செய்த பெருமை உனக்கே உரியது, உன் சொற்படி நடந்ததால்தான் இப்பேறு எனக்குக் கிடைத்தது' என்று கூறி வேந்தன் வேதாளத்தைத் தழுவிக்கொண்டான்.

29. மருப்பு - கொம்பு. நோவு செய்த - மனம் நோகும்படி செய்த. வேதனை - துன்பம். பொருப்பு நேர் - மலையை ஒத்த. புயனே - தோள்களை யுடையவனே.

'ஒவ்வொரு கதைக்கும் நீ விடை கூறியவுடன் நான் உன்னைவிட்டு ஓடி மரக்கிளையில் தொங்கினேன். நீ மீண்டும் வந்து என்னைப் பிடித்துத் தூக்கிச் சென்றாய். நான் இங்ஙனம் பல முறை உனக்குத் துன்பத்தைக் கொடுத்தேன். நீ அதனைப் பொறுத்தருள்' என்று வேதாளம் கூறி வேந்தனைத் தழுவிக்கொண்டது.

30. வாசவன் - இந்திரன்; சிவபிரான் ஆணைப்படி வேதாளம் மன்னனைத் தன் தோள்மீது எடுத்துக்கொண்டு ஈரேழு உலகங்களையும் சுற்றிவரப் புறப்பட்டது.

31. ஐங்கரன் - ஐந்து கைகளையுடைய விநாயகர். ஒரு மாங்கனிக் காக முருகன் மயில்மீது ஏறி உலகங்களைச் சுற்றிவந்தான். அது போல வேதாளத்தின்மீது ஏறி விக்கிரமாதித்தன் பல உலகங்களைச் சுற்றினான்.

32. ஈந்த - கொடுத்த. பைந்தமிழ் = (பசுமை + தமிழ்) - என்றும் செழிப்போடு விளங்கும் தமிழ். பதிட்ட மாநகரம் - விக்கிரம கேசரி என்னும் விக்கிரமாதித்தனது தலைநகரம்.

33. புடை - பக்கம். புரந்து - பாதுகாத்து. சின்மொழி - (சில + மொழி) சில சொற்கள்.

34. செய்ய பொன்மேனி - சிவந்த பொன்போன்ற உடல். அத்தம் - நேரம். கோவில் குருக்களாக இருந்த தான் வேதாளமான வரலாற்றை அது வேந்தனுக்குக் கூறியது.

35. இக்கும் - இருக்கும். இந்த வாறு - இப்படி.

36. மெச்ச - பாராட்ட. விடை பெற்றது - விடுதலை பெற்று நீங்கியது. 'இக்கதைகளைப் படிப்பவரும் பிறர்க்கு அறிவிப்பவரும் நலம் பெறுவர்' என்று வேதாளம் வேந்தனிடம் கூறி விடைபெற்றது.

37. புந்தி - புத்தி. கபடு -வஞ்சகம். நாதம் + அந்தம் = நாதாந்தம். நாதாந்த சிவலோகம் - நாத தத்துவத்துக்கு மேற்பட்ட சிவன் உறையும் இடம். நயந்து இரு - விரும்பி இரு. வள்ளலாகிய நீ பதினான்கு உலகங்களிலும் வாழ்ந்து சிவலோக பதவியை அடைய விரும்பியிரு.

38. கறுப்பன் - நூலாசிரியருடைய தந்தையார் பெயர். கவிக் களஞ்சியன், கவிப்பிரான் - ஆசிரியருடைய பட்டப் பெயர்களாக இருக்கலாம். மயிற்குகன் = மயில் + குகன். அருத்தி - அன்பு. விஞ்சு- மேம்படுகின்ற. அகத்தியன்.........உரைத்தனன் - அகத்திய முனிவரால் வளர்க்கப்பட்ட தமிழ்மொழியில் நான் இக்கதையை இயற்றினேன் என்று ஆசிரியர் கூறுகின்றார்; நாள் ஒன்றுக்கு ஐம்பது விருத்தங்களாக இந்நூலைப் பாடியதாகக் கூறுகின்றார்.

39. துன்முகி வருடத்திலே, கன்னி மாதம் என்னும் புரட்டாசி மாதத்தில், முதல் பத்துநாள்களுக்குமேல், தசமி திதியில் கவிக்களஞ்சியன் என்னும் புலவர் இக்கதை நூலைப் பாடி முடித்தார்.

40. அண்ணலார் - சிவபெருமான். அன்று + உமைக்கே = அன்றுமைக்கே. உமைக்கு - உமாதேவிக்கு. நாலாறு - இருபத்து நான்கு. இந்நூலாசிரியர் தாம் எண்ணூற்றறுபத்து நான்கு கவிகளை இயற்றியதாகக் கூறுகின்றார். பண்ணுடன் - இசையுடன். பரகதி - மேன்மையான பதவி.

**விக்கிரமகேசரி கதை முற்றும்.**

# செய்யுள் முதற்குறிப்பகராதி

[எண் - பக்க எண்]


அகிலவுலகந்தனை 10
அகிலொடு 203
அங்கவன்தான் 103
அங்கவன் 123
அங்கவன்வந்திட 136
அங்கவர் 162
அங்கிரும்மென 54
அங்கிருவோர்களும் 99
அங்கியென 190
அங்குநோக்கி 140
அங்குற்றிட 38
அங்கேயவனுறை 126
அங்கேநவமான 25
அஞ்சியமன்னன் 190
அஞ்சுதல்இன்றி 8
அட்டமாதிரமும் 138
அட்டதிக்கெண்ணு 58
அட்டமியிற் 103
அடவியிற்புள் 137
அடைவுடன் 69
அண்ணலாரன்று 224
அண்ணன்சிர 39
அண்டர்கோனை 138
அத்திதத்தியே 75
அத்தினம் 102
அதிர்ந்துநிலை 121
அந்தணன் 3
அந்தமாகாவலாளர் 6
அந்தநாள்வரை 12
அந்தநளனை 103
அந்தமன்னவனை 70
அந்தமன்னவன் 86
அந்தவரசன் 120
அந்தவாறங்கு 135
அந்தணக்குமரன் 161
அந்தநன்னகரினில் 149
அந்தநன்னகருளோர் 114
அந்தந்தவுலகு 221
அந்தணனும் 203
அந்தணகுமாரனு 190
அந்தணர் 175
அந்தியிற்பஞ்ச 153
அந்நகர் 162
அந்நகர்தன்னில் 98
அந்நகரடையவும் 115
அப்பதியில் 10
அப்படியே 37
அப்படி 215
அப்பொழுதலகை 115
அப்பொழுது 87
அப்போ 44
அம்முனி 189
அமைத்தவன் 30
அம்புவி 101
அயனுடை 203
அரசன் 37
அரசனுந்தேவி 87
அரசனேதிட 176
அரசனுக் கலகை 193
அரம்பை 76
அரியே வரசன் 25
அரிந்தானுயிர் 39
அரிவைகூறும் 64
அரிவையே 80
அரிவையை 27
அரிவைபோ 135
அரிவைதன் 141
அருகனிவ்வாறு 7
அருகனேவ 65
அருக நினைந்திடும் 180
அருச்சுன 47
அருமறை 173
அருமாமறை 125
அருமாதவ 214
அருந்தவத்திடை 181
அருள்விஞ்சிய 40
அருளுடை 29
அருவிசார்வரை 180
அல்லிற் செல்வர் 38
அல்லின் 49
அல்லினில் 78
அலகை முன் 216

அலகை யுரைத்திட 204
அலவா மென்பது 119
அவ்வேள்வியை 125
அவசரகாரர்கள் 36
அவஞ்செய்துயர் 69
அவனுண்டவர் 40
அவனியை 152
அழகுபெற்ற 20
அற்றை நாளில் 77
அறிவிலா மன்னன் 14
அறிவிலே முன்பு 115
அறியேனென 215
அறிவுடைய 10
அறுசீர் 119
அன்னவன் 46
அன்னமிந்த 48
அன்னமன்னவ 53
அன்னமுங்கறியும் 91
அன்னமும் 93
அன்னவன் 112
அன்னகானகமெலா 136
அன்னதே 175
அன்னையாள் 26
அன்னையு மகளுமாக 172
அன்னையும் பிதாவும் 28
அன்புடன் 207
அன்றிவனை 141
அன்றி ராவணன் 90
அன்றுங்குளிகை 126
அன்றுதானவ் 3
அன்றையிலெலும்பு 141
ஆகமது 11
ஆகையால் 165
ஆசை 135
ஆடரவி 102
ஆடல் 90
ஆடவர் 199
ஆடைகள் 208
ஆண்டுபத்தாக 5
ஆண்டு 135
ஆண்டொ 174
ஆதரவால் 97
ஆதியந்தமில் 2
ஆதியானடை 56
ஆதியெனு 191
ஆமாறுதெரி 25
ஆமென வலகை 83
ஆமெனவரு 152
ஆய்ந்த நம் 150
ஆய்ந்தவே 165
ஆய்ந்துநீர் 32
ஆயது 115
ஆயதோர் திரு 53
ஆயதோர் காலை 68
ஆரண நூலும் 36
ஆர மாலையை 14
ஆரநாவிடை 89
ஆரிய காவலாள 32
ஆரிருள் 30
ஆரெனக் கடிது 111
ஆரெனவலகை 156
ஆரெனமன்ன 189
ஆரையுங் கொல்பவ 111
ஆரொருத்த 140
ஆலமாயெமன் 202
ஆவதோர் 198
ஆழ்கடல் 169
ஆழியின் 60
ஆருகிய 44
ஆனதோர் 156
ஆனைகள் 133
இக்கணம் 79
இக்கழு 172
இக்குறிகள் 11
இங்குநீ 29
இத்தலமெண்ணு 59
இந்த மாலையை 15
இந்தவாறுரை 23
இந்த மதன 76
இந்த மன்னனை 136
இந்தவித 163
இந்திராதிப 20
இப்படிக்குயிர் 13
இப்பாரெண் 27
இயற்கையில் 215
இரணியபுர 164
இரவிற்றனியே 26
இரவூடினி 43
இருந்துபின் 29
இருந்தோரனை 40
இருவரந்நகர் 12
இருவரு மனதொன் 124
இருவரு மிசைந்த 48
இருவருந் தழுவி 184

இருவர் நிற்க 176
இலகுகண 141
இன்புள்ள பாலனு 100
இன்னதென் 132
இன்று கணவன் 141
இனத்தினர் 170
ஈங்கினித் 153
ஈசனங் 217
ஈதலாமலே 16
ஈந்தனமெனக்கவுரி 101
ஈந்தனமென 115
ஈந்தனமெனக்கரு 142
உகமதாகிய 52
உசத்தியில் 120
உடலினை 207
உடலுடனேயுறை 98
உமைக்கது 101
உயர்தவ 218
உரக 61
உரகன்றனக்காய் 142
உருகிய 93
உருகி வேதாளம் 216
உரையினு 112
உரையென 210
உலகினிலே 33
உள்ளவாறு 78
உற்றமலர் 87
உறுதி 48
உன்னு 49
எங்களதூரிலும் 27
எங்களோடுற 137
எங்குமமைச்சர்கள் 98
எண்ணி 90
எண்ணெழு 198
எண்ணெண 164
எண்டி 53
எதிர்கொண் 124
எந்தா 25
எந்தை 64
எழுந்துமுன் 216
எழுந்துமைந்த 22
என்மயற் கொண்ட 135
என்றனைத் தந்தை 136
என்றனர் 150
என்றிருந்து 138
என்றுமிப்பாறை 136
என்று தன் 134
என்று கூற 64
என்று மன்ன 64
என்று காளி 55
என்னவே தெரி 54
என்று மன்னவன் 17
என்றே மன்ன 45
என்னமே நல்லி 135
எனக்கொரு 150
ஏகி மன்னனும் 14
ஏகிய 11
ஏத்திமன் 122
ஏந்திழை 113
ஏராரு மிரணிய 27
ஏரார் வயல் 42
ஏவமற 11
ஏற்றமாதிங் 48
ஏற்பவர் 132
ஏறுமயிலும் 10
ஒக்கவே 185
ஒதுங்கியே 207
ஒப்பாதுயர் 27
ஒப்பி 77
ஒருகையில் 5
ஒரு சொல்லார் 82
ஒருவனு 188
ஓங்கிய 188
ஓங்க 175
ஓடியங்கரிவை 22
ஓடியபரியின் 59
ஓடியமங்கை 114
ஓடியங்கழைத்தார் 183
ஓதிய தாதை 123
ஓதிய வணிகனை 150
ஓதுமக்கதை 3
ஓதுந்தொழில் 27
ஓதுமங் நகரிலே 67
ஓமென்றுநல் 40
கங்குல்தான் 184
கசிந்து புவி 120
கஞ்சமலர் வாவி 10
கஞ்சமலர் 86
கடித்தவக்கனி 6
கடையினி 221
கண்டகன் 219
கண்டனன் மங்கையை 189
கண்டனன் கண்ணிற் 182
கண்டவுடன் 120

| | |
|---|---|
| கண்டவள் | 102 |
| கண்டது | 69 |
| கண்டுதான் | 28 |
| கண்ணி | 64 |
| கண்ணிலார் | 68 |
| கண்ணொடு | 183 |
| கந்தமத | 101 |
| கத்தனுயர் சட்டமுள | 10 |
| கந்தனுயர் வள்ளி | 121 |
| கரத்தில் | 61 |
| கரத்தினில் | 184 |
| கருத்தினன்பொடு | 223 |
| கரும்புமத | 11 |
| கல்லையிற் பொதிந்த | 92 |
| கலிங்கதேச | 202 |
| கலுழனுமம் | 142 |
| கலையிலேறு | 61 |
| கலையிழந்த | 91 |
| கலையினை | 208 |
| கவலை நெஞ்சமாய்க் | 16 |
| கழுவினை | 114 |
| கள்வனே | 113 |
| கள்வனுக்கு | 113 |
| களவில் | 176 |
| கற்பதரு | 142 |
| கற்றவர் | 133 |
| கன்னிகை நீயும் | 115 |
| கன்னிகை யிவள் | 172 |
| கன்னிதாதை | 136 |
| கன்னியர்கள் | 120 |
| கன்னியான | 78 |
| காக்கு முயற்சி | 97 |
| காசினியில் | 104 |
| காண்டலும் | 76 |
| காதற் பரிவா | 26 |
| காமநோயில் | 63 |
| காம பாணத்தில் | 173 |
| காயமாகி | 175 |
| காரணாகலை | 2 |
| காரளக மீதிலுறை | 11 |
| காரான குழல் | 86 |
| காரிகை யலங்கா | 79 |
| காரியங்களும் | 75 |
| காரிகையவனை | 113 |
| காலனை உதைத்த | 217 |
| காலிலுங் கையிலும் | 161 |
| காலையும் மாலையும் | 99 |
| காவலன் காவலோரை | 6 |
| காவலன் விரித்து | 72 |
| காவலனுரைத்து | 64 |
| காவலற்கு | 136 |
| காவலன் அங்கது | 204 |
| காவலன் தேவி | 209 |
| காற்படிகன்றான் | 60 |
| காற்றின்முன் | 137 |
| கானகம் | 171 |
| காணார்குழல் | 127 |
| கானிடை நடந்து | 133 |
| குகனையுந் தசரதன் | 149 |
| குஞ்சரம் நடந்து | 121 |
| குடமேவுந்திரு | 119 |
| குணமுட | 114 |
| குரும்பை | 62 |
| குருவைமுன் | 80 |
| குலமுனி | 122 |
| குற்றமே | 32 |
| குறிப்பை | 13 |
| கூடி | 13 |
| கூடியிங்நால்வர் | 72 |
| கூறிய சங்கு | 137 |
| கூறிய வலகை | 199 |
| கூறும் | 26 |
| கொஞ்சுநற்கிளி | 170 |
| கொஞ்சுமதி | 190 |
| கொடியெ | 55 |
| கொடுந்தொழில் | 92 |
| கொடுத்தனள் | 170 |
| கொண்ட | 23 |
| கொம்பனை | 80 |
| கொம்மையா | 111 |
| கொள்ளியொன் | 8 |
| கொற்றவனு | 101 |
| கொற்றவன் | 193 |
| கோடேறி | 67 |
| கோடுகொடு | 120 |
| கோலி | 89 |
| சக்ரவா | 7 |
| சங்கரன்சிவ | 2 |
| சங்கந்தவழும் | 96 |
| சசியெனுந் | 121 |
| சதுர்வேதிய | 42 |
| சத்தியோர் | 69 |
| சதிருடன் | 81 |
| சதுரணாகிவாழ் | 75 |

சத்திபராபரை 99
சந்திரப் பிரபனென் 174
சற்றும்நெஞ் 160
சாந்தசீலன்தான் 7
சாலவே 202
சாற்றி 3
சாற்றிதென்று 17
சிகர 75
சிக்கிய 114
சிங்கமு 199
சித்தசன் 136
சிந்துவிற் 5
சிந்தைகளி 189
சிந்தையில் 203
சிரித்து 56
சிலருயர்ந் 160
சிலையோன் 49
சிவனடி 149
சிற்றடி 209
சிறந்த 56
சிறியார்கட் 105
சினத்தையுஞ் 165
சீத்தரு 69
சீரணி 151
சீரிய 97
சீரிதாகவித் 1
சீருடன்தனை 1
சீருலவு 46
சீருடன் 174
சீருயிர் 204
சீற்ற 13
சீறிவரு 46
சுந்தரத் தோளான் 206
சுரனையின் 169
சுருதி 49
சூத்திர 72
சூதினிற்றேற்ற 161
சூரனுனென்றும் 49
செகவேந்துடை 39
செட்டியங் 71
செப்பிய 82
செய்யபொன் 222
செய்யமாயன் 2
செல்வா 43
சென்றதோர் 112
சேர்ந்தவர் 210
சேர்ந்தோர்கள் 214
சேவகர் 155
சொல்லொணு 21
சொல்லலாமிகு 50
சொற்ப 49
சொற்பமாம் 150
சொன்னகுறி 12
சொன்ன 17
சொன்னஞானி 50
சொன்னதோர் 154
சோடிணே 99
சோமவேதிகை 54
சோலைமா 29
ஞாலமேற்றுன்பம் 197
ஞானமாகியுயர் 90
ஞானுபரமன் 125
தக்கவே 8
தக்கதோர் 61
தகவல்லது 126
தங்கள் 21
தங்கிய 81
தடுக்கொணு 151
தடுமாறு 187
தத்திய 99
தத்ததத்தனெனு 180
தத்தியே 206
தந்திரப் 68
தந்துநின்ற 14
தந்தைதா 21
தந்தையங் 47
தந்தை தாயர் 48
தந்தை தாய் 78
தந்தையை 112
தரணியெண் 169
தரவேறினி 39
தரித்திரம் 191
தரித்துட 68
தருக்குடன் 7
தருவினில் 8
தரும தத்தன் 77
தருகின்றே 105
தரும நீதியினுற் 154
தருமரூபமெனு 181
தருவெலாங் 151
தரையெண் மன்னவன் 132
தலமீதினிலென் 39
தவத்தில் மேவியே 198
தழுவிடத்தருமதத்தன் 81

